# ஆனந்தரங்கப் பிள்ளை

## நாட் குறிப்பு

## தொகுதி மூன்று

கலை பண்பாட்டுத் துறை
புதுவை அரசு
1998

# ஆனந்தரங்கப் பிள்ளை

# நாட் குறிப்பு




தொகுதி மூன்று

கலை பண்பாட்டுத் துறை

புதுவை அரசு

**1998**

☆ ஆனந்தரங்கப்பிள்ளை நாட்குறிப்பு (நகல் பதிப்பு) தொகுதி III

☆ மக்கள் பதிப்பு : ஜூன் 1998.

☆ விலை :

☆ வெளியீடு : கலை பண்பாட்டுத் துறை,
புதுவை அரசு.

☆ பதிப்பாக்க மேற்பார்வை : புதுவை மொழியியல் பண்பாட்டு
ஆராய்ச்சி நிறுவனம்,
புதுவை – 605 001.

☆ அச்சு : மோகனா பதிப்பகம்,
புதுச்சேரி.

☆ வெளியீட்டுக் குழு : திரு. கி. இராசாராம்
திரு. ஆனந்தரங்க ரவிச்சந்தர்
திரு. பிரபஞ்சன்
திரு. செபஸ்தியான்
முனைவர். எல். இராமமூர்த்தி.

பிரத்தியேகமான

ஆனந்தரங்கப்பிள்ளை

# தினப்படி சேதி குறிப்பு

சோஸ்த லிகிதம்

மூன்றும் புத்தகம்




விலை ரூ. 3

1950

# நூன்முகம்

சென்னை நகரத்தை, இங்கிலீஷ்காரருக்குத் திரும்பிக் கொடுப்பதற்கு, லபூர்தொனேக்கும் இங்கிலீஷ் குவர்னர் மோர்சுக்கும் உண்டான உடன்படிக்கையை இந்த மூன்ருவது புத்தக துவக்கத்தில், ஆசிரியர் விளக்குகிருர். எப்படி, புதுச்சேரியிலுள்ள வெள்ளையர்கள், அந்த உடன்படிக்கையை கிழித்தெறிந்தார்கள் என்பதையும் சொல்லுகிருர்.

லபூர்தொனேக்கும், துய்ப்ளேய்க்சுக்கும் நீ பெரியவன், நான் பெரியவனென்கிற விவாதம், எப்படி முற்றி சண்டையில் முடிந்ததென்பதையும், அந்த வீண் சண்டையால், பிரஞ்சுக்காரருக்கு விளைந்த தீமைகளை, வாசகர் உணர்ந்துகொள்ள முடிகிறது.

அந்தச் சண்டை ஏற்பட்டிராவிட்டால், லபூர்தொனே சில நாட்கள் தங்கியிருந்து, தேவனும்பட்டணம் கோட்டையை பிடித்திருப்பான். இங்கிலீஷ்காரரையும் தென் இந்தியாவிலிருந்து விரட்டி அடித்திருப்பான் என்பதை ஆசிரியர் சொல்லியிருக்கிருர்.

சென்னை நகர் பிடிப்பட்ட பிறகு, பிராஞ்சு ராணுவத்தார் அந்த ஊரிலும் சுற்று கிராமங்களிலும், அடித்த கொள்ளை எவ்வளவு வெட்கக்கேடானது என்பது தெளிவாகிறது. இங்கிலீஷ்காரருக்கும் பிராஞ்சுக்காரருக்கும் சண்டையானல், சுதேசிகளை கொள்ளையடித்துத் துன்புறுத்துவானேன்?

சனங்களின், அபாயகரமான கூக்குரல்களை கேள்வியுற்று ஆற்காடு நபாபு பிராஞ்சுக்காரர்கள்பேரில் சண்டைக்கு வந்தது நியாயமென்று தெரிகிறது.

அந்தச் சமயத்தில், புதுச்சேரிக்கு அருகாமையிலுள்ள பாளையக்காரர்கள், அவுல்தாரர்கள், ஜமீன்தாரர்கள் துலுக்கர்களோடு சேரவொட்டாமல், நடு நிலைமை வகிக்கும்படி செய்தது, ஆசிரியருடைய தனி முயற்சிதான்.

பிறகு, ஆற்காடு நபாபுடன் சமாதானம் செய்துகொள்வதற்கு ஆற்காட்டிலும், தண்டு வந்து இறங்கின மஞ்சகுப்பத்திலும் புத்தி சாதுரியமுள்ள தூதுவர்களை அனுப்பியும், தானும் தைரியமாய் நேரில் போய், துலுக்கர்களின் கோபத்தை தணித்து, பெரிய தொகையை வாங்கிக்கொள்ளலாமென்கிற ஆசையையும் குறைத்து சமாதானம் செய்வித்த மகிமை, ஆசிரியருடையது.

வியாபாரத்தில் மட்டுமல்லாமல், அரசியல் விஷயங்களிலும், பின் வருவதை ஆலோசித்து நடக்கிறதிலும், தனக்கு நிகரில்லாதவனாய் ஆசிரியர் விளங்கினர்.

ஆனந்தரங்கப்பிள்ளையை ஆலோசகராக வைத்து, அவர் ஆலோசனைகளை பின்பற்றியிராவிட்டால், துய்ப்ளேய்க்சினுடைய கீர்த்தி பிரசித்திருக்கிறது என்பது தெளிவாகிறது.

அபிஷேகப்பாக்கம், ஊத் மாதம் 5-ந் தேதி.

ஞானு தியாகு.



# ஆங்கில மொழி பெயர்ப்பாளர் குறிப்புகள்

| பக்கம் | வரி | மொழி | குறிப்பு |
|---|---|---|---|
| 54 | 36 | முகத்துவாரம்— | சென்னை கோட்டைக்குக் காலரைக்கால் மைல், தென்புறத்தில் ஓடும் கூவம் ஆறு. |
| 68 | 9 | முகத்துவாரம்— | இது; அடையாறு சமுத்திரத்தில் சங்கமமாகும் இடம். இப்போதையைவிட, அக்காலத்தில், அடையாறு அதிக விஸ்தாரமானதாயிருக்கவேண்டும். |
| 72 | 25 | டொரையாபு— | டூரியான் பழம். இது பலாஇனத்தைச் சேர்ந்தது. அசாம், பர்மா, மலேயா தேசங்களில் உற்பத்தியாகிறது. முதல் அதை சாப்பிட அரோசிகமாய்த்தான் இருக்கும். அதன் நாற்றம் சகிக்கமுடியாதது. பழகிவிட்டால், அதைச் சாப்பிட ஆவல் பெரிதாகிறது. |
| 226 | 30 | அங்கடியார்கள்— | இந்தப் பெயர், துளசி ஆன்கிரீசு என்ற ஒரு பிரபல கடல் கொள்ளைக்காரன் கூட்டாளிகளுக்கு இடப்பட்டது. இவன் ரங்கப்பிள்ளை எழுதின காலத்தில் தனது தகப்பன் மூத்த சகோதரன், இவர்கள் பாதையிலே சென்றபடியால், மலையாள துறை வியாபாரத்திற்கு அல்லல்களையும், ஆபத்துகளையும் விளைவித்துக் கொண்டிருந்தான். இதனை |

| பக்கம் | வரி | மொழி | குறிப்பு |
|---|---|---|---|
| | | | இங்கிலீஷ் கம்பனியாருக்குப் பெருத்த தொந்தரவுகள் ஏற்பட்டன. இவனுடையவும் இவனுடைய சகாக்களின் துர்ச்செய்கைகளுக்கு, 1756 ம் ஆ. பெப்ரியே மாதத்தில் ஒரு முடிவு ஏற்படுத்தப் பட்டது. கப்பல் படைத் தலைவன் வாட்சன், தரை படை தலைவன் ச்ளைவ் என்பவர்களுடைய கூட்டு முயற்சியாலும், தரை படை, கப்பல் படைகளுடைய முயற்சியாலும், அவனது பலமான கோட்டை பிடிப்பட்டதல்லாமல், கப்பல்களும் நாசமடைந்தன. அவனும் பிடிப்பட்டு மராட்டியரிடம் ஒப்புவிக்கப்பட்டான். இவர்கள் அவன் மறுபடியும் தின்மை செய்யாதபடி, வெகு ஜாக்கிரதையாய் காவல் புரிந்துவந்தார்கள். |
| 228 | 32 | கபாட்காரர்— | மராட்டியர் தேசத்தின் வடக்கே வசிப்பவர்கள். கடல் கொள்ளையை, தொழிலாகக் கொண்டவர்கள். |
| 246 | 2 | சவுரி— | குதிரைவால், அல்லது சவரிமான் வால் மயிரால் செய்யப்பட்ட சாட்டை, ஈக்களை துரத்த உதவியானது. |

# பொருளடக்கம்

## அதிகாரம் XXXI

அக்ஷய ஹு ஐப்பசிமீ 6உ (19-10-1746 முதல் — அக்ஷய ஹு ஐப்பசி 11உ (24-10-1746) வரை

சென்னையிலிருந்து கண்டால் குருவப்பசெட்டி எழுதிய கடிதத்தின் விபரம்: பெருங்காற்றுக்குமுன் துறையிலிருந்த கப்பல்களில் ஏழு. அவைகளில் ஐந்துக்குப் பெருத்த சேதம். சரக்குகள் ஏற்றியிருந்த இரண்டு மட்டும் தப்பித்துக்கொண்டது.— சேதப்பட்டவர்கள் 2000 பேர்கள். — உடைந்துபோன கப்பல்களை கோவைக்கு அனுப்பிவிட்டு, புதுச்சேரியில் தனக்கு சொந்தமான சாமான்கள், சரக்குகளை ஏற்றுமதிசெய்யத்தக்கதாய் கட்டுபோடும்படி, லபூர்தொனே உத்தரவிட்டார்.— சென்னை கோட்டையை ஆறு மாதத்திற்குள் பதினொன்றரை லக்ஷம் வராகன் கொடுத்து இங்கிலீஷ்காரர் மீட்டுக்கொள்வதென்றும் தவறினால் மறுபடியும் கேட்கக்கூடாதென்றும் உடன்படிக்கையானதாக லபூர்தொனே கடிதம் எழுதினான். ஆகையால் தற்காலம் பட்டணத்தை பரிபாலிக்க அலுவல்காரரை அனுப்பினார்கள். தெப்ரேமெனில் ஆசிரியர் தம்பியை அனுப்பும்படி குவர்னேருக்கு எழுதினதாக கண்டால் குருவப்ப செட்டி படத்தைப் பார்த்துத் தெரிந்துகொண்டு ஆசிரியர் தன் தம்பியை கஸ்திப்படுகிறார். லபூர்தொனே துபாசி கடைக்கார நைனியப்பனோடு ஆசிரியர் சம்பாஷணை. லபூர்தோனே லவில்பாக் இந்த இரு சகோதரர்களின் வியாபாரக் கூட்டாளி துய்புவாவுடன் ஆசிரியர் சம்பாஷணை. வந்தவாசி தக்கசாய்பு மகன் அல்லிநக்கிசாய்பு அனுப்பியவெகுமானம் அதற்குப்பதில் ஆசிரியர் கொடுத்த வெகுமானங்கள், அல்லிநக்கிசாய்பும் சந்தாசாய்பு மகனும் வந்தவாசிக்குப் போகிறபடியால் குவர்னருக்கு சலாம் சொல்லச்சொன்னார்களென்று துரையிடம் சொன்னபோது அவர் ஆச்சரியமடைந்து, அந்தப் பயணத்தை தடுக்க குவர்னர் சந்தாசாய்பு பெண்சாதியிடம் ஆசிரியரை தூதராயனுப்பியது. சென்னை குவர்னரும் சின்ன குவர்னரும்

தங்கள் விலையுயர்ந்த சரக்குகளை விற்பதாகவும். மற்றதுகளை லபூர்தொனே உத்தாரத்தோடு எல்லைகடந்துகொண்டுபோவதாகவும், கண்டால் குருவப்பசெட்டி எழுதிய இரண்டு கடிதங்கள் வந்தது. தோஸ்த்து அலிதன் மருமகன் அக்பர்சாய்பு வெகுமானங்களுடன் வரப்போவதாக முன் அறிவிப்புசெய்தான். குவர்னர் லகத்தினே பேரில் மிக்க கோபமாயிருக்கிறார். லபூர்தொனே குமஸ்தாக்கள் புடவை கட்டுகள் போடச் சொன்னது. சென்னையிலிருந்து தேவனும்பட்டணத்து இங்கிலீஷ்காரருக்கு தபால்கொண்டுபோனவர்களைப் பிடித்தது. குவர்னர் செட்டித்தெருவு கிழக்கே இருக்கும் துறையில் ரோப் தெஷலாரோடு வேலைபார்த்தது சென்னை குவர்னர் தான் எழுதிய சடன் சீட்டிலும் லபூர்தொனே கோட்டையை ஒப்புவித்த உடன்படிக்கையிலும் கையெழுத்துப் போட்டார்களென்றும் இதுகளெல்லாம் தெப்ரேமெனில் அனுமதியில் நடந்ததாகவும் கண்டால் குருவப்ப செட்டி கடிதம் எழுதினான். அரியாங்குப்பத்துக்கு 100 சிப்பாய்களை அனுப்பி சென்னையிலிருந்துவரும் ராணுவத்தை மறிக்கும்படி அனுப்பினார்கள்.

## அதிகாரம் XXXII

அக்ஷயளுூ ஐப்பசிமீ 12உ (25-10-1746) முதல்— அக்ஷயளுூ ஐப்பசி மூ 16உ (29-10-1746) வரை

லபூர்தொனே இங்கிலீஷ்காரரிடம் விருந்து சாப்பிட்டு கோட்டையை தெப்ரேமெனிவசம் ஒப்புக்கொடுத்துவிட்டுகப்பலேறி பயணம் போனதாகவும் தெப்ரேமெனில் கோட்டையை பரிபாலிப்பதாயும் இங்கிலீஷ்காரர் அவனுக்கு விருந்து செய்வதாயும் கண்டால் குருவப்பசெட்டி கடிதங்கள் எழுதினான். கனகராயமுதலியார் தம்பி உற்சாகத்துக்குக்காரணம் சொல்லி அது அவலமாய்ப் போகுமென்கிறார். சென்னை இங்கிலீஷ்காரரை இடைமறித்து அழைத்துவர சொல்தாக்கள் போனார்கள். லகத்தினேயைப் பிடித்துச் சாவடியில் வைத்தார்கள். துய்யாவுக்கு கடிதம் எழுத லத்தூய் வீட்டிற்கு ஆசிரியர் போனார். அன்வர்திகான் மகன் மாபூஸ்கான் சென்னைக்குப் போய் தொந்தரவு கொடுப்பதால் அவனிடம் ஆசிரியரை தூது போகும்படி குவர்னர் சொன்னார். தான் போவது உசிதமல்ல

வென்று ஆசிரியர் காரணங்களைச் சொல்ல, சாமர்த்தியமான மனிதனை தேடச்சொன்னார். பின்பு அவனுக்குக் கடிதமெழுது வது எப்படி என்று கேட்டுக்கொண்டுபோனார். பின்பு அப் படியே தெலார்ஷைகொண்டு பாரசீகமாடியில் கடிதங்க ளெழுதி, அதற்கு நகலெடுத்து, சம்பாதிராயனுக்கும் உசேன் சாய்புவுக்கும் அனுப்பினார்கள். ரகசியமாய் லபூர்தொனே அடுத்த கொள்ளையைப்பற்றி வெகுநேரம் பேச்சுநடந்தது. துறையூர் பச்சை கந்தப்பய்யருக்கு பொம்மையார்பாளையம் மடத்துக்கு அதிபதியாய் பட்டங்கட்டினார்கள். நபாபுக்கும் மாபூஸ்கானுக்கும். மிரட்டல் கடிதம் அனுப்பப்பட்டது. தம்பி திருவேங்கடப்பிள்ளை, சென்னைக்குப் போகமாட்டேன் என்று முறட்டுத்தனமாய் சொன்னதில், ஆசிரியருக்கு கஸ்தி. பெத்து நாயக்கன், சென்னையில் அடித்த கொள்ளைகள். லபூர்தொனே கம்பனி கப்பல்களெல்லாம், தன்சொல்படி நடக்கவேணுமென்று மந்திரி உத்தரவைகாட்டி ஏமாற்றியது. 150 துலுக்க சிப்பாய் கள் இங்கிலீஷ்காரரால் ஏவப்பட்டு, புறி மகனையும் கெர்மானை யும் பிடித்து மைலாப்பூருக்குக் கொண்டுபோனார்கள். அழி சப்பாக்கத்தில் துலுக்கர் தோரணம் கட்டினதை அழித்து, அவர்களை துரத்துவதற்கு, தானப்பமுதலியார் கேட்டுக்கொண் டபடி ராணுவத்தார் அனுப்பப்பட்டார்கள். துய்ப்ளேக்ஸ் பெண்சாதி மாபூஸ்கானுக்கு கடிதம் எழுதி, ஆள்வசம் அனுப் புகிற சமயத்தில், ஆசிரியர் அது உசிதமல்லவென்று சொல்ல அவள் கோபித்துக்கொண்டது. காரைக்கால் வரிப்பணம் செலுத்த, தானப்பமுதலியாரும் ஆசிரியரும் நாலுமாத தவணை கேட்டது.

## அத்தியாயம் XXXIII

அக்ஷய ஞு ஐப்பசி மீ 17உ (30-10-1746) முதல் அக்ஷய ஞு ஐப்பசி மீ 23உ (5-11-1746) வரை.

சென்னையில், துலுக்கர் அட்டூழியங்களை அடக்க, பரிதி தலைமையில் 500 ராணுவத்தார் அனுப்பப்பட்டார்கள். பிறகு முத்தையப்பிள்ளையும் அனுப்பப்பட்டார். மாபூசுகானுக்கு மிரட்டல் கடிதம். அரியாங்குப்பத்திலிருந்த ராணுவத்தாரை விழுப்புரத்துக்கு அனுப்பியது. மைலாப்பூர் பாளையக்காரன் கடிதம். தஸ்தகிரி சாயபு கடிதம். கொலாத்திரி ராஜாவின்

தூதுகோஷ்டி வந்தது. மாபூசுகான் பட்டாளம், காஞ்சிபுரம் வழியாய் சென்னைக்குப் போனது. அப்துல்கலீல் கடிதம். விழுப்புரத்துக்குப் போன ராணுவத்தார், எதிரி பலத்தைப் பார்த்து, பயந்து திரும்பிவிட்டார்கள். புய்சி தன் சொந்தமாய் காங்குப் புடவை ஜாபிதா கொடுத்தது. தோஸ்த் அலிகான் பெண்சாதி, குவர்னருக்கு வரிசை அனுப்பியது. மாபூசுகான், நுங்கம்பாக்கத்து ஏரிக்கரையில் கூடாரம் அடித்துக்கொண்டு தன் பட்டாளத்தை, முகத்துவாரத்தை வெட்டிவிடச் செய்த போது, லத்தூஷ் 50 பிரான்சு சிப்பாய்களைக்கொண்டு, அவர்களைச் சுட்டு வீழ்த்தியது. மற்றவர்கள் ஓட்டம் பிடிக்கவே, அவர்களை துரத்திக்கொண்டுபோனபோது, மாபூசுகான் பயந்து ஆனையின்பேரில் ஏறி ஓட்டம் பிடித்தது. சதுரங்கப்பட்டணம் வழியாய் தான் சென்னைக்குப் போகப் போவதாயும், தன்னோடு ஆசிரியரும் வரவேண்டுமென்றும் குவர்னர் அழைத்தார். அப்துல் சலீலே கட்டாயம் பிடிக்கவேணுமென்று கருதி, அரியாங்குப்பத்திலிருந்தும், உழவர்கரையிலிருந்தும், விழுப்புரத்துக்கு ராணுவத்தார் பயணமானார்கள். முத்து வேங்கடபதி ரெட்டியார் பயமடைந்தது. செஞ்சி கில்லேதார் நசுமுகை தீன்சாயபு. அப்துல்சலீலோடு சேருவதற்கு விழுப்புரத்துக்குப் பயணமான சேதி கேட்டு, அவனையும் பிடித்துவரும்படி, குவர்னர் கட்டளையிட்டார். மாபூசுகனுக்குக் கடிதம் கொண்டு போன கிரிஸ்துவ முத்து திரும்பி வந்து சொன்ன சேதி. வெகு நேர்த்தியானது. ஆசிரியர் அம்மான் நாராயணப்பிள்ளை கொண்டுவந்த கஸ்தியான சேதி.

## அத்தியாயம் XXXIV

அக்ஷய ஹு ஐப்பசி மீ 24உ (6-11-1746) முதல் அக்ஷய ஹு கார்த்திகை மீ 6உ (18-11-1746) வரை.

புதுச்சேரியிலுள்ள வெள்ளைக்காரர் அனைவரும், மூன்று கோவில் பாதிரிமார்களும், சேர்ந்து மகாநாடு கூடி, லபூர் தோனே இங்கிலீஷ்காரருக்கு எழுதிக்கொடுத்த உடன்படிக்கை தேச துரோகமானபடியால், செல்லத்தக்கதல்லவென்று, மேல் ஆலோசனை சங்கத்தாருக்கு ஒரு விண்ணப்பம் எழுதினார்கள். அப்துல் சலீலே பிடிக்கப்போன சேவகர்கள் வாசல்படியில் சப்தம் செய்ததால் அவன் கோவணத்தோடு.

ஓடி பெண்பிள்ளைகள் அறையில் ஒரு பெட்டியில் ஒளிந்து கொண்ட சேதியைக் கேட்டு, குவர்னர் அவனுக்கு ஒரு கடிதம் எழுதினர். அந்தக் கடிதத்தில் எழுதியது: இங்கிலீஷ்காரர் தங்கள் வீட்டில் ஒளிந்திருப்பதாக கேள்விப்பட்டு, கலாட்டா நடந்ததை கேள்வியுற்று விசனமடைகிறேன். ஆசிரியர் அரியாங்குப்பம் போய், பிடித்துக்கொண்டுவரப்பட்டவர்களை விடுவித்தது. கில்லேதார், சாகீர்தார்மான சுபேதாரர்களுக்கு, குவர்னர் எழுதிய சுற்றுக் கடிதம். பராதி. தனது சிறிய பட்டாளத்தோடு, சென்னைக்குப் போகும்போது, மைலாப்பூர் முகத்தவாரத்தண்டையில் பங்களாவில் இருந்த மாபூசுகானை தாக்கினார்கள். அப்போது துலுக்கர் பயங்கண்டு அலங்கோலமாய் ஓடினார்கள். மாபூசுகான், தப்பித்து ஆனையின்பேரில் ஏறி ஓடி தப்பித்தது அதிசயம். குவர்னர் பெண்சாதியுடன் ஆசிரியர் சம்பாஷித்தது. சந்தாசாயபு மகள் கலியாணத்திற்கு, குவர்னர் வரிசை அனுப்பியது. கனகராயமுதலியார் வீட்டை கலியாணத்திற்கு வாங்கிக் கொடுத்தது. தானப்பமுதலியாரைப்பற்றி சர்ச்சை. நிசாமுக்கும், இமாம்சாயபுக்கும் கடிதம். உசேன் சாயபு, சென்னை கோட்டையைத் திரும்ப கொடுக்கும்படி எழுதின கடிதத்திற்கு, பிரான்சு ராசா உத்தரவில்லாமல் அப்படி நடத்த இயலாதென்று மறுமொழி. தேவனும்பட்டணம் குவர்னர் பீதியடைந்தவன், சற்று தைரியம் அடைந்தான். ஓடிப்போன சனங்களும் திரும்பி வருகிறார்கள். சென்னை வர்த்தகர்களை, புதுச்சேரிக்கு வந்து ஸ்தாபிதம் செய்ய அழைப்பு. சந்தாசாயபை விடுதலைபண்ண பிரயாசைப் படும்படி மகமதலிகான் கடிதம் சந்தாசாயபு மகள் கலியாண முஸ்திப்பு. ஆற்காடு நபாபு இடத்தில் வக்கீலாயிருக்கும் சுப்பய்யன் கடிதம் வந்தது. அதில், மராட்டியர் வராமல் தடுப்பதற்கு, சிறிது ராணுவத்துடன், கிருஷ்ணா நதிகரைக்குப் போய் இருந்த நபாபு இளைய குமாரன் முகமதலிகான், திரும்பிவந்த சேதி எழுதியிருந்தது. திமிறி கில்லேதாரன் கடிதம். தேவனும்பட்டணம் இங்கிலீஷ்காரர் தைரியங்கொண்டு, செஞ்சியில் தங்கியிருந்த தங்களவர்களை மீட்டுக்கொண்டுவந்தது.

## அத்தியாயம் XXXV

அக்ஷயவருஷ கார்த்திகைமீ 12உ (19-11-1746) முதல் அக்ஷயவருஷ கார்த்திகைமீ 21உ (3-12-1746) வரை

சிதம்பரம் கில்லேதார்முகம்மது தாமியான் கடிதம் வந்தது. சந்தாசாயபு விடுதலையைப்பற்றி அநேக மராட்டிய தலைவர்களுக்குக் குவர்னர் கடிதம் எழுதினர். ஆற்காட்டில் வக்கிலா

யிருக்கும் சுப்பய்யன் கடிதம்: அதில் சண்டையில் சிறைபிடிக்கப்பட்ட மூன்று பிரான்சுக்காரரைப்பற்றி தகவல். ரசாத்கான் மருமகன்: கான்பகதூர் ரஹீம் சபல் அலிகான் கடிதம். மீர்குலாம் உசேன் மகன் கடிதம். இமாம்சாய்பு மகன் கேட்டுக்கொண்டபடி, அவனுக்குப் பதினையிரம் ரூபாய் உண்டி அனுப்பியது. பழைய செஞ்சி கில்லேதார் கடிதம். வேலூர் சதாக்சாய்பு கடிதம். தஞ்சாவூர் கேசவராயன் மராட்டியக் குதிரைவீரர்களை அனுப்புகிறதாகக் கடிதம் எழுதினுன். வேண்டாமென்ற பதில். தேவனும்பட்டணம் கோட்டையைப் பிடித்து அன்வர்திகானுக்கு ஒய்வுகொடுப்பதாகச் சுப்பய்யனுக்குக் கடிதம்; அப்படியே உசேன்சாயபுக்கும் கடிதம் எழுதப்பட்டது. சென்னை குவர்னர் பெண்சாதி பெண்கள் சின்னதுரை இவர்கள் வந்தார்கள். எதிரேபோய் அவர்களை அழைத்துவந்து குவர்னர் வீட்டுப் பக்கத்திலே குடி ஏற்றி மரியாதை செய்ததை ஜனங்கள் வெகுவாய் மெச்சினுர்கள். அன்வர்திகான் இளைய குமாரன் முகம்மதல்லிகான் குவர்னருக்கு மறுமொழி கடிதம். தேவனும்பட்டணம் கோட்டைக்கு அருகிலிருந்த வீடுகளை இடித்து கோட்டையை பந்துதோபஸ்து செய்தது. கூடலூர், மஞ்சகுப்பம் சனங்கள் ஊரைவிட்டு ஓடினது. மைலாப்பூரில், பராதிராணுவத்தார்பனிரெண்டுலக்ஷம் வராகன் சரக்குகளைக் கொள்ளையடித்தபடியால் அவர்கள் திரும்பி புதுச்சேரிக்கு வரும்போது சுங்கவரியை கட்டும்படி ஏற்பாடுசெய்தது. சுங்கவரி எஜமான் லெமோன், பராமுகமாய் இருந்தது.சந்தாசாய்புமகன் அமாதிசாய்புவைமராட்டியரிடமிருந்து விடுதலைசெய்ய காசிதாஸ் புக்கான்ஜி, தோஸ்து அலிகான் பொண்சாதியிடம் ஐந்து லக்ஷம் ரூபாய் வாங்கிக் கொண்டு மீட்காமலிருந்தது. ஆபிதுசாய்பு வேலூரில் கொல்லபட்டது. அந்த ஐந்துலக்ஷம் ரூபாயை வாங்கிக்கொடுத்தால் கால்பாகம் ஆசிரியருக்குக் கொடுப்பதாகச் சொன்னது. காசிதாசு புக்கான்ஜி குமஸ்தா அரிசிங்கு புதுச்சேரிக்கு வந்திருப்பதால் அவனைப்பிடித்து காவலில் வைக்க ஆசிரியர் யோசனைசெய்வது. குவர்னர் தடுத்தது. சந்தாசாயபுவை விடுவிக்கும்படி பாவ அமுசத்தி ராசாபண்டிதர் ரகோஜி போன்சலா இலாபத்தே இங்கு பாஜிராவ் ஸ்ரீமதி ராயன் சாகுராசா: இவர்களுக்குக் குவர்னர் எழுதின கடிதங்களை தாயாரித்தது.

## அத்தியாயம் XXXVI

அக்ஷய ௵ கார்த்திகை ௴ 23உ (4-12-1746) முதல் அக்ஷய ௵ மார்கழி ௴ 2உ (13-12-1746) வரை.

ஆற்காடு வக்கீல் சுப்பய்யன் கடிதமும், உசேன்சாயபு கடிதமும் வந்தது. அதுகளில் சென்னப்பட்டணம் கோட்டையைத் தாக்கக்கூடாதென்றும், கெர்மான் முதலான மூன்று வெள்ளைக்காரரை விடுவித்து அனுப்புவதாகவும் எழுதியிருந்தது. ஆற்காடு நபாபைப்பிடித்துக் காவல் வைக்கும்படி, சந்தாசாயபு பெண்சாதியைக்கொண்டு மமூதல்லிகானுக்குக் கடிதம் எழுதும்படி குவர்னர் சொன்னார். சென்னை குவர்னர் மகன் ஐந்து வயது பிள்ளைக்கு, கண் முழிகள் வெளியில் வந்து மெத்த சங்கடமாய்ப்போனது. துய்ப்ளேய்க்சும் அவர் பெண்சாதியும் பிள்ளையருகிலே இருந்தது. சந்தாசாயபு குடும்பத்தாருக்குப் புதுச்சேரியை நபாபு தாக்கப்போவதாக மிரட்டல் கடிதம் உசேன்சாயபு எழுதினான். முகமதலிகானுக்குச் சிநேகிதபாவனையாய் குவர்னர் எழுதின கடிதம். புதுச்சேரி வடக்கிலும் தெற்கிலும், வெள்ளை சிப்பாய்கள் நடமாடுவதால், சனங்கள் பீதியடைகிறார்கள். உசேன்சாயபுக்கு, அவன் குமஸ்தா நாகோசி பண்டிதனைக்கொண்டு, எழுதுவித்தது. மூன்று வெள்ளைக்காரர்களையும் விடுவித்தபடியால், அவர்கள் இறந்து விட்டார்களென்று எண்ணிக்கொண்டோம். சந்தாசாயபு விடுதலைப்பற்றி, அவர் மகனுடன் குவர்னர் சம்பாஷித்தார். பராதி சென்னையிலிருந்து புதுச்சேரிக்கு வருகிற வழியில் மாபூசுகான் பட்டாளம், சுற்றிக்கொண்டது. எதிரிகளை துரத்திவிட்டு, சதுரங்கப்பட்டணம் வந்தான். உசேன்சாயபுக்குக் கடுமையான கடிதம் அனுப்பியது. வேட்டவலம், பண்டாரி மகனுக்குக் கடிதம். பராதி கொள்ளையடித்த சொத்துக்களை, துலுக்கர் பிடுங்கிக்கொண்டது. காவேரிபாக்கம், மாயிமண்டலம், தூர்க்கம், கலவை. ஆரணி கில்லேதாரர்கள் பதில் எழுதி அனுப்பினார்கள். இமாம்சாயபு மகன் எழுதிய கடிதம். சதுரங்கப்பட்டணத்திலிருந்து, தோணிகள் வழியாய், கொள்ளையடித்த சாமான்கள் சில, தட்டுமுட்டுச் சாமான்கள் தமிழ் சிப்பாய்கள் வந்திறங்கினார்கள். ஒலாந்துக்காரன் கோட்டையை அடைத்துக்கொண்டானாம். பராதியும் அவனுடன் போன ராணுவத்தாரும் வந்தார்கள். பராதிக்கு முகத்தில் உற்சாக

மில்லை. கொள்ளையடித்த பண்டங்களை பறிகொடுத்தபடியால் துரைக்கு ஏன் உற்சாகமில்லை? தன்னுடைய பங்கும் சேர்த்து எதிரி கொண்டுபோனபடியாலா? ஆற்காடு வக்கீல் சுப்பய்யன் கடிதம். அதில் உசேன்சாயபு சொன்ன சேதியையும், வேறொன்றுமில் என்று வெள்ளையனையும் காவலில் வைத்திருப்பதாயும் அறிவித்தான். உசேன்சாயபுக்குச் சில விஷயங்களை சொல்லும்படி வக்கீல் சுப்பய்யனுக்குக் குவர்னர் கடிதம். முகமதலிகான் தேவனாப்பட்டணத்தை நோக்கி வருவதாக வதந்தி. வந்தவாசி, சேத்துப்பட்டு, வேலூர், சாத்துக்கடை கில்லேதார்கள் மறுமொழி கடிதங்கள். வழுதாவூர் கோட்டையைத் தன் வசம் பண்ணும்படி முகமதலிகான் கேட்டதாயும், தான் மறுத்ததினால், கோபங்கொண்டு போனதாயும், வழுதாவூர் கில்லேதார் கடிதம்.

## அத்தியாயம் XXXVII

அக்ஷய ஹு மார்கழி மீ 3 உ (14-12-1746) முதல் - அக்ஷய ஹு மார்கழி மீ 14 உ (25-12-1746) வரை.

மமூதலிகான் பட்டாளம், திருவனந்தபுரமிருந்து மஞ்சகுப்பம் வந்தது. பெண்ணையாற்றுவரை புதுச்சேரி பாதையில் இறக்கும்படி சொன்னதற்கு அவன் பயந்து, திரும்பினபோது, திருப்பாப்புலியூர் வரைக்கும் இறக்கினார்கள். அவன் பேரில் சண்டைசெய்ய பராதியைப் போகும்படி ஏவினார்கள் அவன் சிப்பந்திகள், அவனிடம் மனஸ்தாபமாயிருந்தவர்களை குவர்னர் சமாதானப்படுத்தினார். அழிசபாக்கம் வரையில் மகமதலிகான் பட்டாளம் வந்தபடியால், அரியாங்குப்பத்திலிலிருந்த சேகவர்கள் அவர்களைத் துரத்தி மரிகிருஷ்ணாபுரம் வரையில் போகவிட்டு வந்தார்கள். மறுதினம் மரிகிருஷ்ணாபுரத்தில், பூரி தலைமையிலிருந்த பிராஞ்சு பட்டாளத்தை, இங்கிலீஷ்காரருக்கும் முகமதலிகான் பட்டாளமும் சேர்ந்து முறியடித்து தவளகுப்பம்வரையில் துரத்திக்கொண்டுவந்துவிட்டார்கள். சாமான்கள் ரஸ்துகள் வெகு சேதம். சென்னை குவர்னர் மோர்சு தேவனாம்பட்டணம் துரைகளுக்கு எழுதிய கடிதம் வழியில் மறித்துவிடப்பட்டது. அழிசபாக்கம் சூரியப்பிள்ளை ராணுவத்திற்கு கூலியாட்களை அனுப்பாததால், அவனை அழைப்பித்து தன் பக்கம் வேணுமென்று ஆசிரியர் கருதினார். பிராஞ்சுக்காரருக்கு அனுதாபம் காட்டுகிற கில்லேதாரர்கள்

கிராமங்களில் பிராஞ்சு ராணுவத்தார் கொள்ளையடிக்காமலிருப்பதற்கு, ஒவ்வொருத்தருக்கும் குவர்னர் முத்திரைப்போட்டதுணுக்குக் கடிதம் அனுப்பப்பட்டது. குவர்னர் அரியாங்குப்பம் போய், மாயே ராணுவத்தில் இரண்டு சமேதாருக்கு, அவர்கள் வீரத்துடன் சண்டையிட்டதற்காக சாலுவை, கத்தி, கைதுப்பாக்கி முதலானதுகளை வெகுமானம் செய்தார். மகமதலிகான் ராணுவத்தில் காயம்பட்டவர்கள் அநேகம் இறந்துபோனதாயும் எப்போதும் 500 குதிரை சிப்பாய்கள் தயாராய் ஓட்டம்பிடிக்க முஸ்திப்பாய் இருப்பதாகவும் சேதி. மகமதலிகான் ராணுவத்தினர் பிரஞ்சுக்காரர் கூட சண்டையிடும்போது, இங்கிலிஷ்காரர் கோட்டையில் பதுங்கிக்கொண்டமையால், மகமதலிகான் கோபித்துக்கொண்டான். மாபூசுகான் சாத்தங்சேரி பனையூர் பக்கமிருப்பதாக சேதி. தேவனாம்பட்டணம் கொத்தளங்கள் எப்படி கட்டப்பட்டிருக்குதென்று, ஆசிரியர் குவர்னருக்கு எடுத்துச் சொன்னது. மகமதலிகான் சமாதானஞ் செய்துகொள்ள கடிதத்திற்கு குவர்னர் தக்கவிதமாய் மறுமொழி எழுதினது. சென்னையில் உணவு பஞ்சமேற்பட்டிருப்பதால் கன்னூர்பேட்டை பென்ஞ்த்தூர் இந்த இடங்களிலிருந்து நெல் வரவழைத்து மூன்றரை படிக்கு விற்கும்படி குவர்னர் உத்தரவிட்டார். நஷ்டத்தை தான் ஒத்துக்கொள்வதாகச் சொன்னார்.

## அத்தியாயம் XXXVIII

அக்ஷய ஹு மார்கழி மீ 15உ (26-12-1746) முதல் அக்ஷய ஹு மார்கழி மீ 27உ (7-1-1747) வரை.

மாபூசுகானும் அன்வருதீகானும் உத்திரமேரூர் சாலபாக்கத்தில் வந்திருப்பதாக பெருமுக்கல் மியான் சாய்பு கடிதத்தால் தெரியவந்தது. 25 இங்கிலீஷ் கப்பல்கள் தலைச்சேரியில் வந்திருப்பதாக வதந்தி. மாபூசுகான் தண்டுடனே முகமதலிகான் தண்டுடனே சேர திருப்பாதிரிப்புலியூருக்கு வந்ததாக சேதி வந்தது. தேவனாம்பட்டணம் கோட்டையைப் பிடிப்பதற்கு குவர்னர் பாதிரி ஆசிரியர் ஆலோசனை செய்தார்கள். மாபூசுகான் தண்டு, மகமதலிகான் தண்டோடு மஞ்சகுப்பத்தில் கட்டிவிட்டது. தன் சொல்லை பிள்ளைகள் கேளாதமையால் சென்னை கோட்டையை விட்டுவிடும்படி ஆலோசனை கொடுத்தது

அன்வருதிகான் எழுதிய கடிதத்திற்கு தனது அரசன் உத்தரவில்லாமல் செய்யக்கூடாதென்று குவர்னர் மறுமொழி வேதபுரி ஈஸ்வரன்கோவிலில் நரகல்போட்டிருக்கப்பட்டது, அதைப் போய் பார்த்தவிடத்தில் சம்பாகோவிலார் முயற்சியால் செய்யப்பட்டதென்று ஏற்பட்டது. புதுவருஷ ஆசிகளை ஆசிரியர் குவர்னருக்கு சொன்னதுமல்லாமல் சம்பாகோவிலாரை கண்டிக்கவேணுமென்று கேட்டுக்கொண்டார். புதுவருஷ ஆசி சொல்ல, சம்பாகோவிலுக்கு மிசியொனேர் கோவிலுக்கும், தானப்ப முதலியார் வீட்டுக்கும் ஆசிரியர் விஜயம் செய்தார். வருஷ பிறப்புக்காக மகாநாட்டார் குவர்னரை கண்டது. நவாபு பிள்ளைகள் இருவரும் ஆற்காட்டில் இல்லாமையால், ராஜகாரியங்கள் கெட்டுப்போகிறதென்றும், ஆனபடியால்ஒருவாறு சமாதானஞ் செய்துகொண்டு திரும்பி வரும்படிக்கும் அன்வருதிகான் கடிதமெழுதினதாக, பெருமுக்கல் மியான் சாயபு கடிதம் அனுப்பினான். மாபூசுகான், மகமதலிகான் படையிலும், சம்பள பாக்கிக்காக குதிரை ராணுவத்தார் குழப்பம் செய்தார்கள், அன்வருதிகானுக்கு 200 மாம்பழம் வக்கில் சுப்பய்யனுக்குத் தெரியாமல் அனுப்பினது. மாபூசுகானும் அப்துல் சலிலும், இன்னம் தனக்கு இணங்காமையால் அவர்களை சரிப்படுத்த இன்னம் நாலு நாள் அவகாசம் கேட்டு அன்வருதிகான் எழுதின கடிதம்.

## அத்தியாயம் XXXIX

அக்ஷய ஷு மார்கழி மீ 28 உ (8-1-1747) முதல் அக்ஷய ஷு தை மீ 13 உ (22-1-1747) வரை

வேட்டவலத்துப் பாளையக்காரன் பெரிய ஐயாவுக்கு மொகாலயர் தண்டுபேரில் சண்டை செய்ய வெகுமானம் அனுப்பியது. ஆலத்தூர் வெங்கடாசல நாய்க்கனுக்கு, அக்காரணத்திற்காக வேட்டுக்குக் கடுதாசியும் பணமும் அனுப்பியது. தேவனாம்பட்டணம் குவர்னர், முன்பு புடவைகளை சலவை செய்யாமல் நிறுத்தி, இப்போது அவசரமாக அதுகளை சலவை செய்து, கட்டுபோடச்செய்வதற்கு என்ன காரணமிருக்குமென்று ஆசிரியரும் குவர்னரும் ஆலோசித்தது. சரக்குகள் எடுபட்டுவிட்டால் தேவனாம்பட்டணம் கோட்டையைப் பிடித்தது என்ன லாபம் என்றார் குவர்னர். அன்வருதிகான் தன் மக

களை உடனே புறப்பட்டு வரும்படிக்கும், தான் யோசி புதுச்சேரியில் சமாதானஞ் செய்துகொள்வதாகவும் கடிதம் எழுதினன். சிவனு ரெட்டியால், பிராஞ்சு ராணுவத்துக்கு உண்டான சங்கடங்கள். லபூர்தோனே எழுதிக்கொடுத்த உடன்படிக்கையை, நப்னேய்க்ஸ் கிழித்தெறிந்தது பிசகென்று தெமாரே ஆசிரியரிடம் எண்பித்தது. அரியாங்குப்பம் கோவிலில் இருந்த சவ பல்லக்கை அரும்பாத்தை பரசுராமப்பிள்ளை வீட்டருகில் போட்டிருந்தமையால், சம்பாக்கோவில் சுவாமியார் விண்ணப்பம். மொகலாயர் தண்டு திரும்பிப் போகாமலிருப்பதற்கு ஆசிரியர் ஆட்சி செய்கிறார் என்று தானப்பமுதலியார் குற்றச்சாட்டு. சென்னை துறைக்கு தொர்த்வேன் கப்பல்கள் மூன்று, லபூர்தோனே கப்பல் ஒன்று வந்து பிடித்தது. அதில் கார்த்தம் பழங்கள் விசேஷமாய் வந்தமையால், அன்வருதிகான், மாபூசுகான், முகமதலிகான், ஆர்காட்டில் அன்வருதிகான் உசேன் சாய்பு இவர்களுக்கு ஷை பழங்களை குவர்னர் அனுப்பினர். பறங்கிப்பேட்டை அவல்தார் சேக் ஆமது அருமாத்தப்பிள்ளை சாவடிக்கு வந்தார். கெர்மான் இன்னும் மூன்று வெள்ளைக்காரர்கள் ஆற்காட்டில் காவலில் வைக்கப்பட்டிருந்தார்கள். முகமதாக்கல் என்பவனோடு, புதுச்சேரிக்கு வந்தார்கள். வெள்ளைக்காரரெல்லாம் குதூகலமாயிருந்தார்கள். மொகலாய தண்டுகளை மஞ்சக்குப்பத்திலிருந்து அப்புறப்படுத்த கெர்மான் வகைராக்களை இட்டுவந்த முகமதாக்கலுக்குப் பதினாயிரம் ரூபாயும், 2500 ரூ. சாமான்களும் கொடுப்பதாக, ஆசிரியர் பேசி முடித்தார். பறங்கிப்பேட்டை அவல்தாரன் சேக் அமது வசம் முகமதலிகானுக்கு அனுப்பிய கடிதம். அதில் தேவனாம்பட்டணம் கோட்டையை மாத்திரம் தான் சிலநாள் வைத்திருந்து கொடுப்பதாயும், கூடலூர் அதைச் சார்ந்த கிராமங்களை இப்போதே கொடுப்பதாயும் ஆனல் அதுகளை இங்கிலீஷ்காரருக்கு கொடுக்கக்கூடாதென்றும் உடன்படிக்கை எழுதி குவர்னர் கொடுத்தார். சேக் அமதுக்கும், முகமதலிகானுக்கும் கொடுத்த வெகுமதிகளின் விபரம்.

## அத்தியாயம் XL

அக்ஷய ஹ தை மீ 14 உ (23-1-1747) முதல் அக்ஷய ஹ தை மீ 30 உ (8-2-1747) வரை.

முகமதியர் பட்டாளத்தில் எந்த நேரத்திலும், சமாதான பேச்சே நடமாடுகிறபடியால், மகமதலிகான் உள் கருத்தை சூசித்து, ஆசிரியர் குவர்னரோடு சம்பாஷிக்கிறார். இங்கிலீஷ்

காரருக்குச் சொந்தமாகிய தலைச்சேரியை, 6000 அங்காரிய ரோடு சேர்ந்து சண்டையிடுவதற்காக, இரண்டு கப்பல்களை முஸ்திப்பு செய்கிறார்கள். ஐம்பதாயிரம் ரூபாய் கடன்கேட்டு சந்தாசாய்பு குவர்னருக்கு எழுதிய கடிதம். ஆற்காடு நவாபை ராணுவத்தோடு தன்னிடம் வரும்படி நிஜாம் கட்டளை அனுப்பியதாக, குலாப்சிங் கடிதம். சென்னையிலிருக்கிற வெள்ளையர்கள், அடுத்த கிராமங்களை அழிக்காதிருக்கும்படி அன்வருதிகான் உசேன் தயாருகானுக்குச் சொன்னதாக, இவர் மகமதாக்கலுக்கு எழுதினார். மகமதாக்கல் குவர்னருடன் சம்பாஷித்தது. இவர் கொடுத்த சாராயம், தனக்கு இரவில் சந்தோஷத்தை கொடுப்பதாகச் சொன்னது. அரியாங்குப்பத்துக் கோட்டையிலிருந்த வெள்ளை ராணுவத்தாரை புதுச்சேரிக்குத் திரும்பிவரும்படி உத்தரவு செய்ய குவர்னர் அரியாங்குப்பத்துக்குப் போனார். சந்தாசாய்பு மகனும் சிநேகிதர்களும் கப்பல்களை பார்வையிடப்போனார்கள். புகையிலை வெற்றிலை குத்தகைதாரன் வாசுதேவ ஐயர் பிராதை குவர்னர் ஏற்றுக்கொண்டார். அரியாங்குப்பம் கோட்டையிலிருந்த வெள்ளை ராணுவத்தார் வருகை. உசேன் சாய்பு ஸ்தானுபதி முகம்மதுதவக்கால், மூன்று வெள்ளையரை திருப்பி அனுப்பியதற்காக, அன்வருதிகானுக்குக் கொடுக்கவேண்டிய சன்மானங்களைப்பற்றி குவர்னருடன் விவாதம். சென்னை உதவி குவர்னரும், இன்னும் சில இங்கிலீஷ்காரரும் ஐரோப்பாவுக்குப் பயணமானார்கள். முகம்மதவக்கால் குவர்னரோடு பேசின விஷயங்களைப்பற்றி, உசேன் சாயபுக்கு எழுதின கடிதம். மகமதியர்கள் ராணுவத்தில் நடக்கும் விஷயங்களை அறிந்துவந்த வேவுகாரர்கள் சொன்ன சேதிகளைப்பற்றி, ஆசிரியருக்கும் குவர்னருக்கும் சம்பாஷணை. சென்னை குவர்னர் பெண்சாதி பிள்ளைகளைவிட்டுவிட்டு, தனியாய் தரங்கம்பாடிக்குப்போனார். முத்துமல்லா ரெட்டி, ஆலத்தூர் வெங்கடாசல நாயக்கன் செய்கிற அட்டூழியங்களைப்பற்றி பிராது அனுப்பினான். ஐதராபாத் நிஜாம் மகன் நாசர்ஜங் இரண்டு மனிதரை, சன்மானத்துடனும் பர்மனாவுடனும் அனுப்பினான். குவர்னர் ஆடம்பரத்துடன் எதிர்சென்று பெற்றுக்கொண்டார். அந்த ஆடம்பரத்தின் வருணனை. பிரான்சுக்காரரை ஐந்து லக்ஷ ரூபாய் கேட்கச் சொல்லி முகமதவக்காலுக்கு உசேன் சாய்பு கடிதம்.

மேல் சமுத்திரக் கரையோரம் நடமாடும் இங்கிலீஷ் கப்பல்களை பிடிக்க, ஐந்து கப்பல்களை சண்டைசெய்ய முஸ்திப்பு செய்து அனுப்பினார்கள். அங்கடியார்களுடைய உதவியையும் கேட் கப்பட்டது.

## அத்தியாயம் XLI

அக்ஷய ௵ மாசி மீ 1௳ (9-2-1747 முதல்—அக்ஷய ௵ மாசி மீ 11௳ (19-2-1747) வரை.

சென்னையில் உள்ள, தன் பெரிய தகப்பன் வீட்டையும் தோட்டங்களையும் காபந்து செய்யச்சொல்லி உத்தரவு அனுப் பும்படி, உசேன்சாயபு ஆசிரியருக்குக் கடிதம். இங்கிலீஷ் பட்டாள வீரர்களின் விண்ணப்பம், 6000 இங்கிலீஷ்காரர், தலச்சேரியிலுள்ள மூன்று பிரான்சு கப்பல்களை வளைத்துக் கொண்டதாக சேதிவந்தது. 200 துலுக்கக் குதிரைவீரர்கள் அழிசபாக்கம் வரையில் வந்து, கலாட்டா செய்ததை ஆசிரியர் மகமதாக்கலுக்குச் சொன்னது. பறங்கிப்பேட்டை அமல் தாரனும் கணக்கு வேலாயுதம்பிள்ளையும் அனுப்பிய கடிதங் களை, இங்கிலீஷ்காரர் வழியில் பிடுங்கி, மாபூசுகானிடம் கொடுக்க, மாபூசுகான், அவர்களைப் பிடித்துவரச்சொல்லி விலங்கிட்டுக் கோட்டையில் காபந்துசெய்ய உத்தரவிட்டான். துலுக்கர் பட்டாளத்தைச் சேர்ந்தவர்கள், ஊளிஞ்சிகுப்பத்தை யும், திருக்காஞ்சி கோவிலையும், சூறையாடி கோவில் கதவுக்கு முன்னால் சுவர் எழுப்புவதாயும் கேள்வியுற்று, பிரான்சு சேவ கர்கள் போனது. கர்னவால் பண்டிகை. மகமதாக்கலை துலுக்கர் படைவீரர்கள் அண்டையில் அனுப்பியது. மகம தாக்கலுக்கு உசேன்சாயபு கடிதம். மாபூசுகான் குதிரை வீரர்கள், அழிசபாக்கம், தேருவாகத்தம், திம்மநாய்க்கன் பாளையம், பூரணாங்குப்பம் கிராமங்களை சூறையாடினார்கள். மகமதாக்கல் திருக்காஞ்சி சமேதாரனைக் கண்டு பேசி, பின்பு மகமதலிகானையும் மாபூசுகானையும் போய்ப் பார்த்து, அவர்களுடன் சம்பாஷித்தான். அவர்கள் மறு மொழியை குவர்னருக்குச் சொன்னபோது, குவர்னர் மாபூசு கானை அழைத்துவரும்படி கேட்டுக்கொண்டார். வெள்ளை யர் கர்னவால் திருவிழா கொண்டாட்டம். அழிசபாக்கம் கிராமங்களைக் கொளுத்தின பேர்களில் மூன்று பேரைப்பிடித்த

காப்பிரிகளைக் கொண்டு அடிக்கவைத்து சிறைச்சாலையில் போட்டார்கள். மகமதாக்கல் மாபூசுகானிடமிருந்து திரும்பிவந்து, குவர்னருடன் சம்பாஷணை. ஆசிரியர் மாபூசு கானைக் கண்டபோது, இவன் செய்த மரியாதை கொடுத்த வெகுமானம். மாபூசுகான் புதுச்சேரிக்கு வந்த வைபவம். மாபூசுகான், குவர்னருக்கும், அவர் பெண்சாதிக்கும், மகளுக்கும் செய்த மரியாதையும் வெகுமானங்களும். மாபூசுகானும் குவர்னரும் தனிமையில் சம்பாஷித்தது.

## அத்தியாயம் XLII

அக்ஷய ௵ மாசி௴ 12௳ (20-2-1747) முதல் அக்ஷய ௵ மாசி௴ 15௳ (23-2-1747) வரை.

மாபூசுகான் குவர்னர் வீட்டில் தனிமையாய் அவருடன் சம்பாஷித்தார். பிறகு அவருடன், விடைபெற்றுக்கொண்டு தன் கூடாரத்துக்குப் போனார். அவர் பயணம்போன வருணனை அவருக்குக் குவர்னர் கொடுத்த வெகுமதி பொருள்களின் ஜாபிதா. மகமதலிகானுக்குக் கொடுக்கும்படி கொடுத்த, குவர் னர் வெகுமதி பொருள்களின் விபரம். வழியில் மகமதலி கான் தன் சகோதரனுக்கு எழுதிய கடிதத்தை மாபூசுகான் வாசித்து பிறகு அதை குவர்னருக்கு அனுப்பியது. அதைப் பார்த்துக்கொண்டு, மகமதலிகானை, புதுச்சேரிக்கு அழைத்து வரும்படி மகமதாக்கலை குவர்னர் அனுப்பியது. மகம தலிகான் சொல்லி அனுப்பிய மறுமொழி. மகமதலிகான் குவர்னருக்கு அனுப்பிய கடிதமும் வெகுமானங்களும். மாபூசு கான் வருத்தமாய் திரும்பிப்போன சேதியை மகமதாக்கலிடம் குவர்னர் கேட்டு கோபித்துக்கொண்டு பேசியது. ஆசிரியர் மகமதாக்கலை பாக்குக்கிடங்குக்கு அழைத்துவந்து, அவனைச் சமாதானப்படுத்தி அனுப்பியது. மறுநாள், ஆடம்பரமாய் மகமதலிகான் அனுப்பிய வெகுமானங்களைக் கொண்டுவந்து குவர்னர் எதிரில் வைத்தபோது. அதிலுள்ள சரக்கை தலைப் பாகையை குவர்னர் எடுத்து தன் சிரசில் வைத்துக்கொண்டார். அந்த வெகுமானங்களைக் கொண்டுவந்தவனுக்குக் குவர்னர் கொடுத்த சன்மானத்தின் விபரம். மகமதலிகான் வெகுமா னங்களை எடுத்துவந்தவனுக்குக் குவர்னர் சன்மான விபரம். நபாபு அன்வருதிகானுக்குக் குவர்னர் அனுப்பிய வெகுமான

விபரம். மகமதாக்கல் தன்னை ஏமாற்றிவிட்டதாக ஆசிரியரிடம் முறையிட்டுக்கொண்டது. அன்வருதிகானுக்கும் உசேன்சாயபுக்கும். சம்பதிராயனுக்கும் அனுப்புகிற வெகுமான பொருள்கள் லக்ஷம் ரூபாய் மதிப்புள்ளதென்று சொல்லி ஆசிரியர் அவனைச் சமாதானப்படுத்தியது. பின்னும் அவனை துரையிடம் அழைத்துப்போய் சந்தோஷமாய் பேசவைத்தது. இந்த வெகுமான பொருள்களின் ஜாபிதாவை மாபூசுகானிடம் சொல்லி அவன் அனுமதி பெற்றுவரும்படி குவர்னர் மகமதாக்கலை அனுப்பியது. மகமதலிகான், ஆசிரியருக்கு அனுப்பிய வெகுமான பொருள்களின் விபரம். மதனந்தபண்டிதர் குவர்னர் பெண்சாதி, ஆசிரியர் பேரில் கோபித்துக்கொண்டு செய்கிற விஷமகாரியங்களைத் தெரியவைத்தது. ஆசிரியர் அது விஷயம் சொன்ன பதில்.

## அத்தியாயம் XLIII

அக்ஷய ஸு மாசி மீ 16உ (24-2-1747) முதல் அக்ஷய ஸு மாசி மீ 18உ (26-2-1747) வரை.

அன்வருதிகானுக்கு அனுப்பின வெகுமான பொருள்களை, மாபூசுகான் ஒத்துப்பார்த்தபோது ஒரு நச்சுக்குழல் குறைந்தது. அதையும் ஒரு நவீன பெட்டி பழுதாயிருந்ததையும் மாற்றி அனுப்புவிக்கும்படி கடிதம் எழுதினது. ராணுவத்தை அழைத்துக்கொண்டு, மாபூசுகானும், மகமதலிகானும், சிதம்பரம் வழியாய் பயணமானது. நபாபுடன் சமாதானம் செய்துகொண்டதைப்பற்றி, சென்னையில், விழாக் கொண்டாடும்படி உத்தரவு. தேவனும்பட்டணம் துவிபாஷியோடு, மாபூசுகானும் அவன் தம்பியும் சம்பாஷித்தது. வேட்டவலம் பாளையக்காரனுடைய ராணுவத்தை அழைக்கும்படி கடிதம் எழுத உத்தரவு அன்வருதிகான் குமாரர்களோடு சமாதானம் செய்துகொண்டதை நாஜர்சங்குக்குத் தெரிவித்தது. வெகுமானங்களும் அனுப்பியது.

ஆற்காடு நபாபு பிள்ளைகள் திரும்பிப்போன பிறகு, முகமதாக்கல் புதுச்சேரிக்குவந்தது. புதுச்சேரியிலும், சென்னையிலும் விழாக் கொண்டாட முஸ்திப்பு செய்தது. முகமதாக்கலை தெலார்ஷ் அழைத்துப் பேசினானென்று கேள்விப்பட்டு, குவர்னர் கோபித்தது. அது சமயம், ஆசிரியர்பேரில், குவர்னர்

பெண்சாதி கேர்ள் சொல்லியது. பெரிய சாமர்த்தியமான புருஷனை, ஆசிரியர் தன்னை புகழ்ந்துகொள்ளுகிறது. பிரான்சு வியாபாரக் கப்பல்களை, அதுகளிலுள்ள சரக்குகளுடன் இங்கிலீஷ்காரர் பிடித்துக்கொண்டது முதல் நடந்த சம்பவங்களையெல்லாம், ஒன்றையும் விலக்காமலும், மிகை படுத்தாமலும் நடந்ததை நடந்தபடியே விபரமாய் எழுதியிருக்கிறார். தான் கேள்விப்பட்டதை எழுதாமல் தீர்க்க உண்மையை விசாரித்து சரித்திரம் எழுதுவதில், தான் சமர்த்தன் என்பதை ஆசிரியர் எண்பித்திருக்கிறார்.

## அத்தியாயம் XLIV

அக்ஷய ௵ மாசி ௴ 19௳ (27-2 1747) முதல் அக்ஷய ௵ மாசி ௴ 29௳ (9-3-1747) வரை.

வர்த்தகர்கள், தொழிலாளிகள், நாட்டாண்மைக்காரர்கள், குவர்னரைக் கண்டு மங்கள வாழ்த்து சொன்னார்கள். குவர்னர் வீட்டில் பகல், வெள்ளைக்காரருக்கு விருந்து. பகல் 3 மணிக்கு முகமது தாக்கலுக்கு வெகுமானம் கொடுக்கப்பட்டது. அதன் விபரம் சாயங்காலம் கோட்டைக்கோவிலில் நன்றியறிந்த பிரார்த்தனை நடந்தது. ஊர் முழுதும் விளக்குகள் சொக்கபானைகள். குவர்னர் வீட்டில் விருந்து, கூத்து, வாண வேடிக்கை, சங்கீதக் கச்சேரி. மகாநாட்டாரும் மற்றவர்களும் செய்த மரியாதை. பெருமுக்கல் மியான்சாய்பு குவர்னரைக் கண்டது. சென்னைத் துறையில் இங்கிலீஷ் கப்பல் சாமான்களுடன் வந்தது, அதை பிராஞ்சு உத்தியோகஸ்தர்கள் பிடித்துக்கொண்டது. உசேன் சாய்புக்கு அனுப்பிய வெகுமான பொருள்களின் விபரம். இமாம் சாய்பு அனுப்பிய அவாய் சாய்பு, சொக்கப்ப முதலி குவர்னரைக் கண்டார்கள். இமாம் சாயபுக்கு வெகுமானம் அனுப்பப்பட்டது. சென்னைக் கோட்டையில் நவாபு கொடியை போடச்சொல்லி உத்தரவு, முகம்மதாக்கல் பயணமானார். முகமதுதாவுக்கும் லவிலேத்துக்கும் உண்டான வழக்கில் தீர்ப்பு: வழுதாவூர் நவாப் கடிதத்திற்கு குவர்னர் பதில். முகம்மதாக்கல் சிபார்சு செய்ததால் வீரா நாய்க்கனையும் அவன் குடும்பத்தாரையும் புதுச்சேரியில் குடியிருக்க உத்தாரம் தரப்பட்டது சுன்னுத்து செய்த ஒன்பது பிராஞ்சு ராணுவத்தார்களில் ஆறு பேர் தேவனும்பட்ட

ணம் போகிறதாகக் கேள்விப்பட்டு, குவர்னர் அவர்களை அழைத்து வரும்படி சேவகர்களை அனுப்பச் சொன்னார். சென்னை துறைக்கு வந்த ஒரு இங்கிலீஷ் கப்பலை ராணுவத்தாரால் பிடிக்கச்செய்து அதிலிருந்த வெள்ளிக்கட்டிகளை பறிமுதல் செய்து கப்பலோட்டிகளையும் தலைவனையும் காவல் செய்தது. கஞ்சத்திலிருந்து பந்தருக்குப் போன ஒரு அரிசி கப்பல் பிடிக்கப்பட்டது. சென்னையில் செட்டிகள் வீதியில் 'வந்த கோமுட்டிகள் தடுக்கப்பட்டார்கள். சென்னை வர்த்தகர்கள், புதுச்சேரிக்குப் போகவேண்டுமென்றும் அவர்கள் சரக்குகள் புதுச்சேரிக்கு அனுப்பப்படுமென்றும் தண்டோரா போட்டார்கள். சிவனுகி ரெட்டி சமாதானம் பேச தூது அனுப்பியது. அவனுடன் ஆசிரியர் கலந்து, குவர்னரால் ஒரு குத்தகைபத்திரம் எழுதி அவனிடம் கொடுத்தது. வங்காளத்திலிருந்து வந்த போர்ச்சுகிஸ் கப்பலிலே, சந்தர்நாகூர் குவர்னர் வந்தார். உடனே சேவகர் மண்வெட்டிக்காரர் பொதிமாடுகள் முஸ்தீப்பு செய்ய குவர்னர் உத்தரவிட்டார்.

## அத்தியாயம் XLV

அக்ஷய ௵ மாசி ௴ 30௳ (10-3-1747) முதல் அக்ஷய ௵ பங்குனி ௴ 4௳ (14-4 1747) வரை.

தேவனாம்பட்டணத்தைப் பிடிக்க, சண்டை முஸ்தீப்புகள் செய்யப்படுகிறது. மேல் ஆலோசனை சங்கத்தார் கூடி தலைமை வகிக்கப் பராதியை நியமித்தார்கள். ஆனால் பிந்தின சிப்பந்திகள் பராதி தலைமையை ஏற்கவில்லை. ஆகையால் லத்தூர் தலைமை வகிப்பதென்றும், அவன் பராதி ஆலோசனைப்படி நடக்கவேண்டுமென்றும் முடிவு செய்யப்பட்டது. லத்தூரிடம் ஆலத்தூர் பாளையக்காரன் அனுப்பிய 200 ராணுவ வீரர்களை ஆசிரியர் ஒப்புக்கொடுத்தார். திருச்சினாப்பள்ளிக்குப் போன மாபூசுகான் திரும்பிவந்து இங்கிலீஷ்காரருக்கும் உதவிசெய்வானா என்பதைப்பற்றி, குவர்னருக்கும் ஆசிரியருக்கும் விவாதம் நடந்தது. பிராஞ்சு தேசத்தின் ராசாவின் சிற்றப்பன், எஸ்பாஞ் தேசத்து அரசனான அவன் இறந்த சேதி, சீர்மையிலிருந்து வந்த பத்திரிகைகளில் பிரசுரமாயிருந்தது. தேவனாம்பட்டணத்தைப் பிடிக்க பிரஞ்சுப் படை புறப்பட்டது. அதன் வருணனை. சண்டைசெய்ய எடுத்துப்போன ஆயுதங்கள்

விபரம். முதல் நாள் பெண்ணையாற்று வடகரையில் பிராஞ்சு பட்டாளமும், தென்கரையில் இங்கிலீஷ் பட்டாளமும், பிரங்கி பிரயோகம் செய்ததில் பிரஞ்சுக்காரருக்குச் சொற்ப சேதம். இரண்டாம் நாள் உப்பலவாடி கொத்தளத்தைப்பிரஞ்சுக்காரர்கள் பிடித்துக்கொண்டார்கள். ஆற்காடு நாவாப் முன்னிலையில் அவருக்குக் கொடுத்த வெகுமானங்களை வைத்த போது அவர் பார்வையிட்டு மெத்த சந்தோஷப்பட்டாரென்றும், ஒரு சமயம் நிஜாமோடு தனக்குச் சண்டைவந்தால் தனக்குச் சகாயம் செய்யவேணுமென்றும் கேட்டுக்கொண்டதாயும், தெலார்ஷ் கடிதம் எழுதினான். ஐதராபாத்தில் நிஜாம் அரண்மனை காவல்காரன் ஒருவன் கடன் கொடுக்க வந்த ஒருவனைக் குத்திப்போட்டதினால் விளைந்த சண்டை. உப்பலவாடி கொத்தளத்திலிருந்து, பிரஞ்சுராணுவம், மஞ்சகுப்பம் போய், கும்பினி தோட்டத்தையும் பிடித்த கேரத்தில், தேவனாம்பட்டணத்திற்கு. ஆறு இங்கிலீஷ் கப்பல்கள் வந்தது. அதைக் கண்டு பிராஞ்சு ராணுவம் பின்னடைந்து, புதுச்சேரியை நோக்கி வரும்போது, இங்கிலீஷ் ராணுவத்தார் 200 பேர் அவர்களை துரத்திக்கொண்டு மதிகிஷ்ணுபுரம்வரை வந்தார்கள். இங்கிலீஷ் கப்பல் வருகிறதைப் பார்த்து, புதுச்சேரி கோட்டையைக் காக்க பிராஞ்சுக்காரர் முஸ்திப்பு. இரண்டு இங்கிலீஷ் கப்பல்கள் வருவதைக் கண்டு பவழர்காட்டிலிருந்த இரண்டு கப்பல்கள் பயந்து சென்னைத் துறைக்கு ஓடிவந்தது. வேட்டைவலம் பண்டாரம் அனுப்பிய ராணுவத்தார் 200 பேர் வந்தார்கள். அவர்களுக்குச் சாகை சாப்பாட்டுக்கு வசதிசெய்து கொடுக்கப்பட்டது தேவனாம்பட்டணம் கோட்டையைப் பிடிக்கத் தவறிப்போச்சுதேயென்று, குவர்னர் துயரப்பட்ட போது, ஆசிரியர் அவருக்கு ஆறுதல் சொன்னது.






பிரத்தியேகமான

# ஆனந்தரங்கப்பிள்ளை

# தினப்படி சேதி குறிப்பு.

# சொஸ்த லிகிதம்

## மூன்றும் புத்தகம்

1746 ஆ அக்டோபர் மீ 19 உ அக்ஷய ஞ அற்பிசி மீ 6 உ புதவாரம்.

இற்றைநாள் நடந்த சமாசாரம் என்னவென்றால்: நேற்று ராத்திரி பதினொரு மணிக்கு மூசே லபூர்தோனே காகிதம் வந்ததற்கு இற்றைநாள் எட்டு மணிக்குக் கோன்சேல் கூடி காகிதமெழுதினார்கள். இன்னதென்று காரியம் வெளிப்படவில்லை, இனிமேல் வெளிப்படவுடனே எழுதுகிறேன். நாளது ஞ மீ 4 உ கண்டால் குருவப்பசெட்டியனுப்பின காகிதம் இற்றைநாள் பனிரெண்டு மணிக்கு வந்தது. அந்தக் காகிதத்திலே எழுதியிருந்த வயணம்: காற்றடியாததற்கு முன்னே சென்னப் பட்டணம் துறையிலே இருந்த கப்பலுக்கு வயணம்: பூர்போம் என்கிற கப்பலொன்று, லசில் என்ற கப்பலொன்று, நெப்த்தானென்கிற கப்பல் ஒன்று, பினிக்ஸ் எங்கிற கப்பல் ஒன்று, துய்க் தே ஓர்லியாமென்கிற கப்பல் ஒன்று; இதுகள் அல்லாமல் மரியசேரத்தூறுதென்கிற கப்பல் ஒன்று சென்னப் பட்டணம் ரேவிலே பிடித்துக்கொண்ட பிரேன்சேஸ் மாரியே என்கிற கப்பல் ஒன்று, கப்பல் ஏழும்; இதுகள் அல்லாமல் நாலு நாளைக்கு முன்பாகப் பிடித்துக்கொண்ட இங்கிலீசு சலுப்பு ஒன்று, ஆந்திரவேதி சலுப்பு ஒன்று, சில்லரைத் தோணிகள், சம்பானுகள் ஆறேழு உருப்படி ரேவிலே யிருந்

தது. இந்தப் பெருங்காற்றுக்கு துறைவிட்டுப் போன பிற்பாடு
மறுபடி நேற்றுச் சாயங்காலம் வரைக்கும் ரேவுக்கு வந்தது.
பூர்போமென்கிற கப்பல், கெப்புத்தான் என்கிற கப்பல், லசேல்
என்கிற கப்பல், பிரேன்ஸிஸ் மாரியாவென்கிற, கப்பல்தோணிசம்
பான் 2, ஆக உரு ஆறு வந்து துறைக்குச் சேர்ந்ததென்றும்,
வந்த உருவுகள், பாய் மரங்கள், சுக்கான்கள் உடைந்து
பீரங்கிகள் அனேகமாய் எடுத்துக் கடலிலே போட்டு, பின்
னையும் அனேகஞ் சாமான்களெல்லாம் எடுத்துக் கடலிலே
போட்டு முண்டம்போலே வந்து சேர்ந்ததென்றும், ஏற்றி
யிருந்த சரக்குகளிலே சேதமில்லையென்றும், உடைந்த உருவு
களிலே சரக்கில்லை வெறுங்கப்பலென்றும், சரக்கு ஏற்றி
யிருந்த கப்பல்கள் நெப்புத்தான் என்கிற கப்பலிலும் இங்கிலீசு
பிரேன்சேஸ் மாரியாவென்கிற கப்பலிலும் ஏற்றியிருந்ததாயும்
இந்த ரெண்டு கப்பல் சரக்குகளுக்கும் சேதமில்லாமல் மறுபடி
வந்து சேர்ந்ததாயும் உடைந்த கப்பல் பேர் துய்க் தே ஓர்லெ
யான்ஸ் என்கிற கப்பல் 6, பினிக்சு என்கிற கப்பல் 1,
மாரியாசெர்ந்தூறுது என்கிற கப்பல் ஒன்று, ஆந்தி
ரவெதி சுலுப்பு ஒன்று, இங்கிலீசுக்காரர் கையிலே நாலு
நாளைக்கு முன்னே பிடித்துக்கொண்ட சுலுப்பு 1, ஆக
சேதப்பட்ட உரு ஐந்து என்றும் மூசே லபூர்தொனே
சென்னப்பட்டணத்திலேயிருந்து கப்பல்களை மாத்திரம்
கோவைக்கு மாத்திரம் அனுப்புகிறதாயும், அப்பால் தை
மாதத்திலே கப்பல்கள் கூட மூசெ லபூர்தோனேகூடப் பயணம்
சாகிப்போகிறதாயும் மூன்று கப்பலும் ரெண்டு சுலுப்பும்
கோவளம் ரேவு முதல் மயிலாப்பூர் ரேவுக்குள்ளாக உடைந்த
திலே இரண்டாயிரம் மனுஷர் மட்டுக்கும் சேதமுண்டு என்றும்
கப்பலுடைந்த விடத்திலேயிருந்து ஒருத்தன் . வந்தவன்
சொன்னானென்றும் காட்டுக்கப்பலிலேயும் மனுஷர் சேதம்
விஸ்தாரமுண்டென்றும் திருவீதி சேஷாசல செட்டியை அவன்
தாயாதிமார் செட்டிமகன் பூந்தமல்லி திவானத்திலே சொல்லித்
தழைஞ்சதின்பேரிலே ஆற்காட்டுக்குப் போகிறதாய் காஞ்சி
புரம் போய்ச் சேர்ந்தார்களென்றும், லபூர்தோனே லவீல்பாகு,
துபாசி குடைக்கார நயினியப்பன் பங்காள குமரன் இவர்கள்
ரெண்டு பேரும் புதுச்சேரியிலே மூசே லபூர்தோனேக்குக் கூட்டு
கிற சரக்குகளைக் கட்டுப்போட்டு அவன் சொந்த உடுபாவனை
தட்டுமுட்டும் கட்டுப்போட்டு இங்கேயிருந்து சீர்மைக்குப் பய

ணமாய்ப் போகிற கப்பலிலே ஏற்றியனுப்பச்சொல்லி மூசே லபூர்தோனே போகச்சொன்னதாகவும் நயினியப்பனும் குமரனும் வருகிறார்களென்றும் குருவப்பசெட்டி எழுதியனுப்பினான். குருவப்பசெட்டிக்குப் பதில் உத்திரவு எழுதியனுப்புவித்தோம். மற்றபடிக்கு இன்றைவரைக்கும் சென்னப்பட்டணத்து சகலாத்துக்கட்டு ஏற்றிவந்தது துறையிலே இன்றையவரைக்கும் ஐனூறுகட்டு இறங்கினதாய்ச் சொன்னார்கள். பங்களாவிலேயிருந்து துரையுடனேகூட வந்த முறிதாசு என்கிறவனை கோட்டைக்கு 13½கோடி நெடுமுழும் இருபத்தாறு கோடி கிலம்புரியும் கொண்டுபோய் சின்னதுரைக்குக் காண்பித்துப் போட்டதாகவும் அதற்குச் சின்னதுரை ஒலாந்தாப் புடவை விலைகூட்டிக்கொடுப்பேன் என்று சொன்னாரென்றும் இவன் ஒன்பதேகால் புடவை விலை கூட்டித்தரவேண்டுமென்றும் சொன்னானென்றும் சின்னதுரை சம்மதியில்லாமல் விலை தீரவில்லை. அப்படித்தானே யிருக்கிறதாய் கோட்டைராமய்யன் கபுறு சொல்லியனுப்பினான்.

1746 ஆ அக்டோபர் மீ 20 உக்கு அக்ஷய ளு அற்பசி மீ 7 உ

இற்றைநாள் வியாழக்கிழமை ராத்திரி பதினொரு மணிக்கு மூசே லபூர்தோனே காகிதம் வந்ததற்கு நேற்றையதினம் கோன்சேல் கூடின சேதி அறியவேணுமென்று எழுதியிருக்கிறதே இற்றைநாள் மூசே பனோ பாக்குக்கிடங்குக்குவந்து என்னுடனே சொன்னது: மூசே லபூர்தோனே எழுதின காகிதத்திலே சென்னப்பட்டணம் கோட்டையை மூசே தேப்பிறமேனி முதலான பேர்வசம் ஒப்புவித்துப் போட்டுவருகிறேனென்று அதற்குத்தக்க காரியக்காரரை யெல்லாம் அனுப்புவிக்கச் சொல்லி எழுதினதாகவும், இதல்லாமல் சென்னப்பட்டணம் கோட்டை மறுபடியும் இங்கிலீசுக்காரருக்கு மாசி மாதத்திலே கொடுத்துவிடுகிறேனென்றும், இதற்குள்ளே செப்பனிட்டுக் கொள்ள வேண்டிய காரியமெல்லாம் செப்பனிட்டுக்கொள்ளுகிறதென்றும், அதற்கு இன்ன நேரத்திற்கு அவ்விடத்துக் காரியங்களுக்கு மூசே பேறுதல்மே, மூசே பிறியேர், கோசு, தெ லசால், பனோ, தேபறேன் (M. M. Barthélemy, Bruyeres, Gosse de la Salle, Panon, Desfresnes) முதலாகியவர்களையும், பின்னையும் நாலுத்த ரெண்டு பேரை அனுப்பத்தக்கதாக நேற்றையதினம் கோன்சேல் பண்ணி எங்களை இன்றைக்குப்

லோகெல்சோல்லிச் சொன்னார்கள். மாசி மாதத்தில் இங்கிலீசுக் காரருக்குக் கோட்டை கொடுக்கிறதற்குக் குவர்னதோர் சம்மதித்தாரா? என்று கேட்டேன். இந்நேரத்துக்கு இப்படிச் சொல்லுகிறார்கள்; இனிமேல் என்னமாய் நடத்துவார்களோ தெரியாது. எது மெய். இது மெய்யென்று கெட்டியாய்ச் சொல்லுகிறதற்கு இப்போது போகிறதற்குள்ளே என்ன நடக்குதோ, எப்படியறியலாம். உமக்கு ஏதாகிலும் சென்னப் பட்டணத்திலிருந்து அனுப்பவேண்டிய சரக்குகளுண்டானாலும் அல்லது பின்னையேதாகிலும் காரியமுண்டாயிருந்தாலும், எழுதியனுப்பினாலும், இப்போது சொன்னாலும் நல்மன துடனே செய்தனுப்புகிறேனென்று சொன்னதற்கு நான் உபசாரமாய்ச் சொல்லி அப்படியே காரியமுண்டாயிருந்தால் எழுதியனுப்பிவிடுகிறோமென்று சொல்லி, குவர்னதோர் வீட்டுக்குப் போனவிடத்திலே குவர்னதோர் கோன்சேலிலே யிருக்கிறாரென்று சொன்னார்கள். மறுபடி கோன்சேல் கலைய நாலுநாழிகை செல்லுமேயென்று யோசனைபண்ணி, பாக்குக் கிடங்கே வந்து உட்கார்ந்தேன். இன்றையதினம் கோன்சேல் கூடின சாடை பார்த்தால் சீர்மைக்கு எழுதுகிற காகிதங்களும் கணக்குகளும் பார்த்துக் கையெழுத்துப் போட்டு அனுப்புகிற சாடைபோல் காண்கிறது. மசுக்கரைக்கு ஆன சரக்குகளெல்லாம் நாளைநன்றைக்குக் கப்பல் அனுப்புகிறதாய் யோசனைபண்ணித் தீர்த்து மசுக்கரைக்கு ஆன சரக்குகளெல்லாம் ஏற்றித் தயார்பண்ணுகிறார்கள். அந்தக் கப்பலிலே சீர்மைக்கு அனுப்புகிற காகிதங்களும் கூட அனுப்புகிறதானபடியினாலே சீர்மைக் காகிதங்கள் முஸ்திதுபண்ணுகிறதற்குக் கோன்சேல் கூடி கையெழுத்துப் போட்டுப் பத்தரை மணிக்குக் கோன்சேல் கலைந்து அவரவர் வீட்டுக்குப் போனார்கள்.

இற்றைநாள் சாயங்காலம் நாலு மணிக்குக் கோன்சேல் கூடி மூசே பெடுத்தல்மெயி, பிறியேர், புறேக்குய்றேர், துறுவாவ், பிறியேர், தெபேறேன், லசேல், கோஸ் என்று புதுதாய் வந்திருக்கிற யகரு கோன்சேல்காரர்களையெல்லாம் பயணம்பண்ணி, அவர்களுக்கு இன்ன உத்தியோகம் என்று நேமித்து அனுப்பினார்கள். அவர்களும் இற்றைநாள் ஐந்தரை மணிக்குச் சாகிப்போனார்கள். மூசே லபூர்தோனே ஐந்தாறு நாளைக்குள்ளே கோட்டையை மூசே தெப்றேமேனியிடம் ஒப்புவித்துப்போட்டு. கோவைக்கு இம்வெறனாரிடம் வேண்டிய

கப்பல்களையெல்லாம் சாகிவித்துக்கொண்டு பயணம் போகிற தாய் எழுதி அனுப்பினதாய் மூசே மீரா சொன்னான். இங்கிலீசுக் காரர் உடம்படிக்கை என்னமாய்ப் போச்சுது என்று கேட்ட தற்கு விற்றது விற்றதுவே பதினொரு லக்ஷம் வராகனும் செலுத் தினால் ஆறு மாதத்திற்குள்ளாகக் கொடுத்துவிடுகின்றதென் றும் இல்லாவிட்டில் கவலையில்லையென்றும் தீர்த்துக்கொண்ட னர்கள். கோட்டைக்குள்ளேயிருக்கிற சருவ சோபானமும் எடுத்துக்கொள்கிறதுபோலே யாச்சுதே, இனிமேல் சீர்மையிலே யிருந்து பணம் வந்து அப்பாலே கொடுக்கவேணும் அல்லவென்ற கப்பல்கள் வந்தாலும் உங்கள் கப்பல்கள் வந்தாலும் கண்டுபிடித் தாலும் பணம் போனதுதானே. ஆனபடியினாலே அவர் களுக்குப் பணம் வரப்போகிறதில்லை. பணம் கொடுக்கப் போகிறதுமில்லை. கோட்டையை நீங்கள் கொடுக்கத்தக்கது மில்லை அல்லவென்று இங்கிலீசு கும்பினீர் பேரிலே உண்டிகை கொடுத்தால் காவல்காரர் கையிலே வாங்கின உண்டிகை செல்லாதென்றும், அந்தப்படிக்குப் போன ஹூ இங்கிலீசுக் காரர் சீர்மையிலே அந்தப்படி நடப்பித்தார்களென்றும், அதனாலே உண்டிகை வாங்கி மோசம் போகிறதில்லையென்றும் இப்படியாக மூசே மீரா சொன்னான். மூசே பறேவை மாத்திரம் துரை நிறுத்தினாரென்றும் சொன்னான். ஏழு (7) உ கண்டால் குருவப்பசெட்டி எழுதின காகிதம் இற்றைநாள் ராத்திரி வந்து சேர்ந்தது. அந்தக் காகிதத்திலே எழுதியிருந்த வயணம்: மூசே தெப்பிறமேனி தன் துபாசி கந்தப்பனுடனே சொன்ன தாய் மூசே லபூர்தோனே ஐந்தாறு நாளைக்குள்ளே கோவைக்கு (Goa) போகிறதாயும் கோட்டையைத் தன் வசத்திலே ஒப்பு வித்துப்போட்டுப் போகிறபடியினாலே மேசை சாமான் எல் லாம் முஸ்தீதுபண்ணச் சொல்லச்சொன்னதாயும் சிரஞ்சீவி தம்பி திருவேங்கடத்தை மூசே தெப்பிறமேனி தானே துரைக்கு எழுதி யனுப்புவித்து அழைப்பிக்கத் தக்கதாகப் பண்ணு கிறதென்று கந்தப்பன் சொன்னான் என்றும் இந்தப்படிக்கு உங்களுக்குத் தரவானால் அந்தப்படி செய்விக்கிறேனென்றும் இந்தப்படி காகிதம் தம்பி திருவேங்கடமும் நீரும் பார்த்துக் கொண்டு இது உத்தாரம் எழுதியனுப்பச்சொல்லி எழுதி என் தம்பி திருவேங்கடத்துக்கு முப்பத்துநாலு முப்பத் தைந்து வயதாகியும் திரவியத்திலே ஆசக்தியில்லாமலும்

உத்தியோகத்திலே சேர்வையில்லாமலும் உத்தியோகமென்றால் ஒரு வெள்ளைக்காரரிடத்துக்குப் போய் வருகிறதற்குக் கூட பயத்தை உண்டாக்கின சுவாமியை வெறுக்கவேணுமென்று பாக்கிய அதிருஷ்டத்தை நிந்திக்கவேணுமேயல்லாமல் அவனை யொன்றுஞ்சொல்ல நியாயமில்லை. ஏனென்றால் இந்தக்காலத்துப் பிள்ளைகள் ஐந்து வயதானால் உத்தியோகமுஞ் சேர்வையும், திரவியம் சம்பாதிக்கிற கானக்ஷயும் நெறுடும் அவர்கள் மனது கோசரமாய் அங்கே நடக்கிறதுகளைப் பார்க்கிறதிலேயும் கேட்கிறதிலேயும் அதியாச்சரியமாயிருக்கிறது. அப்படியிருக்க முப்பத்தைந்து வயது உள்ளவன் நன்றாய்ப் படித்தவன், மகா புத்திசாலி, மறமி பார்வைக்குப் பிடிப்பட்டவன், அந்தகாரன் யோகசாலி இப்படி நல்ல குணங்களை எல்லாம் ஈசுவரன் வைத்தும் பாக்கியவசத்துக்கு ஆக ஒரு தைரியத்தையும் உத்தியோக சேர்வையும் வைக்காமல் போனபடியினாலே எனக்கு உத்தியோகம் சருவாத்துமனாக வேண்டாம். வீட்டுக்குள்ளே யிருக்கிறேனென்று சொல்லத் தக்கதாகப் புத்திவந்திருக்கிறதே. அது என்னுடைய பாக்கிய நத்ஸாவம் இன்னும் நாலு ஆறு மாசமிருக்கிறபடியினாலே குபேரன் பட்டணம் கைவசமாய் அவிழக்கூட விடாமல் பலவந்தமாய் உத்தியோகம் கவையில்லையென்று தட்டிக்கொண்டு வந்தது வெட்டியாய் என் மனதிலே எண்ணிக்கொண்டதென்ன வென்றால்: பாக்கிய நற்காலம் 38 வரைக்கும் எழுதியிருக்கிறபடியினாலே இப்படி நடந்தது என்று எண்ணிக்கொண்டேனேயல்லாமல் அவனைத் தொட்டுச், சிறிது கடந்ததாய்ப் பண்ணிக்கொண்டதில்லை.

இற்றைநாள் சென்னப்பட்டணத்துக்கு ஒரு கப்பல் போச்சுது. காற்றிலே அடிபட்ட கப்பல்களிலேயிருக்கிற கட்டுகளை யிறக்கி வரப் போச்சுதென்று சொன்னார்கள். மூன்று நாளாய் கோன்சேலுக்குச் சின்ன துரை வரவில்லையென்று சொன்னார்கள்.

1746 ஆ ஒக்தோபர் ௴ 21 உ க்ஷய ௵ ஐப்பசி ௴ 28 உ சுக்கிரவாரம்

இற்றைநாள் துரையவர்களிடத்துக்கு நான் போகாமல் பாக்குக் கிடங்கிலேதானேயிருந்தேன். ஏனென்றால், குவர்னதோர் எட்டரைமணி மட்டுக்கும் நித்திரைபோனபடியினால், அப்பால் எழுந்திருந்து கோன்சேல் கூடிக் கலைந்து பிற்பாடு அவர்

கள் காம்பிருவிலேயிருந்து காகிதம் எழுதிக்கொண்டிருந்தபடியினாலே நான் பாக்குக்கிடங்கிலேதானேயிருந்தேன். அங்கேயிருக்கும்போது மூசே லபூர்தோனே, லவீல்பாகு அண்டைக்குச் சென்னப்பட்டணம் போயிருந்துவந்த ஷியார் துபாசி குடைக்கார நயினியப்பன் என்கிறவன் வந்தான். எப்போவந்தீர்கள் என்று குசலப்பிரசினை வினவி, மூசே லபூர்தோனே, லவீல்பாகு சுகமாயிருக்கிறார்களா என்றுகேட்டு, அப்பால் சென்னப்பட்டணத்தில் காற்றடித்ததும் சேதம்வந்ததும் கேட்டதற்கு முன் எழுதியிருந்த வயணப்படிக்குத்தான் காற்றடித்ததும் பட்டணம் கொள்ளைபோன சாடையும் சொல்லி அப்பால் நீங்கள் மூசே லபூர்தோனேக்குக் கூட்டுகிற சரக்கு நிமித்தியம் என்னைப் போய்க் கட்டுப்போடச் சொல்லச்சொன்னான். நல்லதுஎன்று அந்தச்சேதி தம்பியவர்களுடனே சொல்லி உங்களுக்கு எழுதியனுப்பச் சொன்னதற்கு மறுஉத்தரவு வந்ததாய்க் கண்டால் குருவப்பசெட்டி என்னுடனே சொன்னது. பாதி சரக்குத் தயாராயிருக்கிறது. மற்றப்பாதி சரக்கும் தைமீ கடைசாரத்துக்கு. ஆனால் அனுபாசமாய்க்கூடிப்போமென்று சொல்லி உம்முடனே சொல்லச் சொல்லிச் சொன்னாரென்று சொன்னார். அப்படி வெள்ளைக்காரருக்குச் சொல்லப்போனால் நன்றாயிராதென்று அதற்கு மார்க்கமாய் என்னைப் போய் சரக்குகள் எல்லாம் பார்த்துக் கட்டுப் போடச் சொன்னதற்குச் சரக்குகள் எல்லாம் தயாராயிராது. மழைக்காலமானபடியினாலே பணம் கொடுத்துக் கொஞ்ச நாளானபடியினாலேயும், அவசரம்பண்ணினால் சாயமும் புடவையும் வளப்படாது என்று மார்க்கமாய்ச் சொன்னேன். அதற்கு அவர் சொன்னது: தைமாதத்திலே நான் மசுக்கரைக்குப் போகும்போது கொடுக்கத்தக்கதாக முஸ்திதுபண்ணுவிக்கச்சொல்லு என்றுசொன்னார். இப்பவும் மூசே துபுவாப்க்ரு எழுதிவந்ததானபடியினாலே உங்களுக்குச் சொல்லி யனுப்பினான். நீங்களிப்போது கண்டு பேசவேண்டாம். நான் போய்ச் சொல்லி தைமாதத்திலே கொடுக்கத்தக்கதாகப் பண்ணுவிக்கிறோம் என்று சொன்னார். அதற்கு நான் உபசாரமாய்ச் சொல்லிப் போகச் சொன்னேன். அப்பால் சென்னப்பட்டணத்துக்கும் செங்கழுநீர்ப்பட்டுக்கும் காகிதமெழுதியனுப்பிவிட்டு, பனிரெண்டு மணிக்கு வீட்டுக்கு வந்தேன். அப்பால் சாயுங்காலம் நித்திரை

பண்ணி எழுந்திருந்து வண்ணான் துறைக்குப் போய் சலவைப புடவை விசாரித்துவிட்டு அப்பால் சலவை கெட்டிக்கிற இடத்துக்கு வந்து அங்கே கெட்டினைக்காரரை திட்டமாய் ராத்திரி முப்பதுமிருந்து கொட்டச் சொல்லி அவ்விடத்திலிருந்து நல்லன் முதலி கிடங்குக்கு வந்து விசாரித்துவிட்டு ஏழு மணிக்கு வீட்டுக்கு வந்தேன். நான் வீட்டுக்கு வந்ததும் ஏழரை மணிக்கு குடைக்கார நயினியப்பன் வந்து சொன்னது: மூசே துபுவாவுடனே காங்குப் புடவைச் சேதி சொன்னேன். அதற்கு அவன் சொன்னது: ஒக்தோபர் ௴ 10 ௳ யிலே கொடுக்க உடம்படிக்கைச் சீட்டு எழுதிக் கொடுத்திருக்கக் கொடுக்காமற்போகக் காரியமென்னவிருக்கிறதென்று அவர் கேட்டார். இப்போதே கேட்டாலும் கொடுத்து விடுவார்கள். நாணயமாய்ச் சரக்குஇராது. வெளியிலே பாளையக்காரர் சுபாவமானபடியினாலே காரிக்கம் வராமல் நின்றது என்று அதற்குத்தக்க உத்தரவாய்ச் சொன்னேன் என்று சொல்லி, அப்பால் இந்தச் சேதி மூசே லபூர்தோனேக்கும் சொன்னதற்கு அவர் தை மாதத்திலே கொடுக்கச் சொல்லிச் சொல்லச் சொன்னார் என்று அப்பால் இப்போது போகிற மார்க்கமில்லை என்று அதற்கு என்ன சாடை சொல்லவேணுமோ அந்தச்சாடை சொன்னதின் பேரிலே அவன் எனக்கானால் எழுதிவரவில்லை. அதற்கென்ன மெள்ளப் பார்த்துக்கொள்ளுவோம். இப்போது சத்தியாய் வந்திருக்கிற மூசே ரோசுத்தேனுக்கு மாத்திரம் ஐந்தாறு கோடி கொடுக்கச் சொல்லு என்று சொன்னதாகவும், அதற்குப் பத்துகோடி வேணுமானாலும் வாங்கிக்கொடுப்போம் என்று சொன்னதாகவும்,. அதற்கு அவன் சம்மதித்திருக்கிறானென்றும், நீங்கள் ஒருதரம் காலத்தாலே வந்துகண்டு பேசிப்போக வேணுமென்றும் சொன்னதற்கு நானும் நல்லதென்று சொல்லிப் போகச்சொன்னேன். அப்பால் அருணாசல செட்டி வந்து மசுக்கரைக்குக் கப்பல்கள் போகிறதாய்க் காணவில்லையென்று சொல்லி மூவாயிரத்து இருநூறு ரூபாய் கொண்டு வருகிறேனென்று சொல்லிவிட்டு, பின்னையும் சென்னப்பட்டணத்துக்குத் துரை போவார், நீங்களும் போகவேண்டியிருக்கும் என்று நானாவிதமான பேச்சுப் பேசிவிட்டுப் போனான்...

1746 ஆ ஒக்தோபர் மீ 22 ௳ க்ஷய ஞூ அற்பிசி மீ 9௳ சனிவாரம்

இந்த நாளில் காலத்தாலே மூசே துபுவா வீட்டுக்குப் போனவிடத்திலே மூசே துபுவா சொன்னது: மூசே லவில் பாதுள்ளனை புரோக்குய்ரேராக்கி எழுதியனுப்பிவித்து இவ் விடத்திலேயிருக்கிற தட்டுமுட்டு எல்லாம் பணம் காசு உள் பட நயினியப்பன் ஒப்புவிக்கிறுன். நான் ஒப்புக்கொண்டு மற்றச் சரக்குகளையெல்லாம் நான் ஒப்புக்கொள்ளவேணும். உன் சரக்கும் என் வசத்திலே ஒப்புவிக்கச் சொல்லி உனக்கும் காகிதம் வந்தது என்று என் கையிலே கொடுத்தான். அதை நான் படித்துப் பார்த்தேன். அப்பால் மூசே துபுவா, உன் சரக்குக்கு நீ யெழுதிக் கொடுத்த உடம்படிக்கையிலே தவணை சமீபமாய்விட்டது. கப்பல் பயணத்துக்குக் கொடுக்கவேணும் என்று சொன்னுன். அதற்கு நாவிருந்துகொண்டு, இவர் பணம் தை மாதத்திலே என்று முன்னுலே கேள்விப்பட்டேன். இதல் லாமல் கொடுத்து கொஞ்ச நாளைக்குள்ளே சரக்கு கூடுகிறது ரொம்ப பிரயாசமானபடியினுலேயும், பாளையக்காரர் கலாபத் திஞலேயும் அவசரப்பட்டால் சரக்கு நாணயப்படாது என்று சென்னப்பட்டணத்துக்கு மூசே லவில்பாகுக்குச் சொல்லி யனுப்புவித்ததற்கு அவரிருந்துகொண்டு தை மாதத்திலே ஒப்புவிக்கச்சொல்லியனுப்பினுரென்று நானும் சொன்னேன். அவரும் நல்லதென்று சொல்லி மூசே ரேசுத்தேனுக்குச் சிறிது காங்குப் புடவை கொடுக்கவேண்டியிருக்கிறது. அதுவாகி லும் கொடுக்கவேணுமென்று சொல்லி, அப்பால் மூசே ரேசுத் தேனை கேட்டவிடத்திலே நீங்கள் கொடுத்த மட்டுக்கும் கட்டுப்போட்டுக்கொள்ளுப்படி சொன்னுன். ஆனபடியினு லே நீங்கள் கொடுத்தமட்டுக்கும் கொடுங்களென்று கேட்டார். அதன்பேரிலே நயினியப்ப முதலியும் நானும் யோசனைபண்ணி கூடியிருக்குதென்று சொல்லாமற்போனுல் நன்ருயிராதென்று நாற்பது கோடி காங்கும், ஒன்பது கோடிகாரிக்கமும், பதினுறு கோடி கிண்டனும் கொடுக்கிறதாய்ச் சொன்னேம். உங்கள் வீட்டிலே கட்டுப்போட்டு அனுப்பிவிடு என்று மூசே துபுவா சொன்னுன். நானும் நல்லதென்று வந்தேன். ஆனுலிந்த வேளையிலே நயினியப்புமுதலி ரொம்பவும் உபகாரம் பண் ணினதற்கு நாம் அவருக்குப் பாத்தியமாயிருக்கிறேம். அங்கே

யிருந்து அனுப்புவித்துக்கொண்டு பாக்குக்கிடங்குக்கு வருகை யிலே ஒன்பதரைமணி வேளையுண்டு. அப்பால் குவர்னதோர் கோன்சேல் கூடி மசுக்கரைக்குப் போகிற கப்பலுக்குச் சீர் மைக்கு அனுப்புகிற காகிதங்கள் எல்லாம் பார்க்கிறதும் கை யெழுத்துப் போடுகிறதும் நாளது வரைக்கும் அனுப்ப வேண்டிய கணக்கெல்லாம் பார்த்துக் கையெழுத்துப் போட்டு அனுப்புகிற வேலையினிமித்தம் கூடிக்கொண்டு கோன்சேல் பண்ணுகிறதாய் தோற்றிற்று. அந்தப்படி கோன்சேல்கூடி கலந்து அவரவர் வீட்டுக்குப் போனார்கள். இந்நாள் நவமியானபடியினாலே அற்பிசி மீ முதல் பெருங் காற்று மழையும் துவக்கினவுடனே தென்றல் காற்று திரும் பினது இன்றைகாலமே வரைக்கும் அடித்து அப்பால் வாடை திரும்பி மூசாப்பாய் மப்பும், மழையும், காற்றும் உறங்கண்ட படியினாலே குவர்னதோர் பனிரெண்டு மணிக்குப் கப்பல் காரரையெல்லாம் கப்பலின் பேரிலே ஏறச் சொல்லி அந்த க்ஷணமே ஏற்றியனுப்பிவிட்டார். இற்றைநாள் காலத்தாலே பண்ணினகோன்சேலிலே சீர்மைக்கு அனுப்புகிற காகிதங் களுக்கும் கணக்குக்கும் மசுக்கரைக்கு அனுப்புகிற காகிதங் களுக்கும் கப்பலுக்கும் என்று அவ்வே எழுதினேன். இத்து டனே கூட சாங்தோர் என்கிற கப்பல் கொம்மாந்தான் மூசே தொடுத்தேலன் கப்பலுடனே கூடவந்த மூன்றுகப்பலும் அச் சையிலே போய் இமறெவனரிடச் சொல்லியும் அச்சைராசா வின்பேரிலேயும் அந்த ராச்சியத்திலே வர்த்தகரின் பேரிலே யும் வரவேண்டிய பணமும், பிரான்சு கும்பினீருக்கு வரவேண் டியதும், பின்னையும் பிரான்சு சாதியாருக்கு வரவேண்டியதுங் கேட்டு வாங்கச் சொல்லியும், இதல்லாமல் ரக்தாக்ஷி ஷூ த்தில் பவோரியே என்கிற சீர்மைக்கப்பல் அச்சைத் துறையிலேயிருக் கையிலே இங்கிலீசு சண்டைக்கப்பல்மேஸ்தர் பற்னெத்து, மேத் தர் பெத்தோம் வந்து மார்கழி மீ 1 உ யிலே பிடித்தபோது அச்சை ராசா தனது துறையிலே பிடிக்கிறது நியாயமல்ல வென்று கண்டிப்பாய் பேசாதேபோனார் என்கிறதினாலே அதற்கு அவனை சிக்ஷித்து அந்தக் கப்பலுக்குள்ள கிரயம் கேட்டுவாங்கச்சொல்லியும் கொடாமற்போனால் சண்டை பண்ணச்சொல்லியும் அக்டோபர் மீ ஆதியிலே மாயே பிடித்து வந்த மூன்று கப்பலையும் பயணம்பண்ணிப் [ போகச்சொல்லி கோன்சேல் தீர்த்துப்போகச்சொல்லி உத்தாரங்கொடுத்தார்க

ளென்றும் இதனலே வாடைக்காற்று முசாப்புங்கண்டாப் போலே கப்பிந்தான்மாரெல்லாம் பயணமாய் ஏறினர்கள். நாளைய ராத்திரிக்குக் கப்பல்கள் மூன்றும் அச்சிக்குச் சாகிப் போகுதென்று மூசே புசி என்னுடனே சொல்ல, அதற்கு நான் நீர் மசுக்கரைக்குப் போகவில்லையாவென்று கேட்டதற்கு அற மனே என்கிற மூசே லபூர்தோனே ஸ்தா துரு கப்பல்களிலே ஒரு கப்பல் மசுக்கரைக்குப் போகிறது. ஆனல் அப்படியினலே ராசிகமுண்டாயிருக்குமென்று குவர்னதோர் சனேர்மீ தைமதாத் திலே போகச்சொன்னரென்று சொன்னன். ஆனல் துரை கொடுத்த லீஸ்துபடிக்குச் சரக்கெல்லாம் தயாராய் இருக் கிறது. இருபத்து நாலு குஞ்சப் புடவை மாத்திரம் வரவேணும். அதுவும் நாலு மூணு நாளையிலே வந்து சேருமென்று சொல்லி அப்பால் சென்னப்பட்டணம் மற்ற தேவனும்பட்டணம் சேதிகளெல்லாம் சொல்லிக்கொண்டிருந்தோம்.

இற்றைநாள் காலத்தாலே வந்தவாசி தக்கா சாயபு மகன் அல்லிநக்கி சாயபு எனக்கு ஒரு சிரொப்பாவும் அப்பாவுக்கு ஒரு சிரொப்பாவும் அனுப்பி உம்முடைய வீட்டுக்கு சாயுங் காலம் வந்து அனுப்புவித்துக்கொண்டு போகிறேனென்று சொல்லியனுப்பினன். இவன் நாக்கைப் பூச்சி இரை கொடுத்து வாளை மீன் கொண்டு போகிறவன் இது அறிந்து நாலு நாளாய் கூடாதென்று சொல்லிக்கொண்டிருந்த விடத்திலே இற்றைநாள் பலவந்தமாய் அமானித சுப்பிரமணி யன் மாரிபத்திலே யனுப்பிவித்ததை தள்ளப்போகாது என்று வாங்கிக்கொண்டு கிசுமத்துக்காரருக்கு ஆறு ரூபாயும் மறு படியும் பாக்லைக்கு மேலாக வீட்டுக்கு வந்த விடத்திலே அல்லிநக்கி சாயபுக்குக் கொடுத்தது மட்ட சகலாத்து சிப்பம் சிகப்பு 1, பிஸ்தாயி 1, நாலு கிசம் மொகமல் கூட 56 வராகன் கொள்விலையாச்சுது. அவன் கொடுத்த சிரொப்பா விலை 150 ரூபாய் விலை பாணித்தோம். சந்தா சாயபு மகன் கூடவந்தபடியினலே அவனுக்கு ஒரு சிகப்பு மட்ட சகலாத்து சிப்பங்கொடுத்தோம். சற்று நேரம் கேவலம் உபசாரம் பேசிக்கொண்டிருந்து அனுப்புவித்துக்கொண்டு போனர்கள் அப்பால், சாயுங்காலம் துரை வீட்டுக்குப் போய் அல்லிநக்கி சாயபு சந்தா சாயபு மகன் ரசா சாயபும் திவான் சாயபும் கூட நாங்கள் வந்தவாசிக்குப் போகிறோம். எங்கள்

சலாஞ் சொல்லி ஊருக்குப் போய்வாரேமென்று வாசற்படிக்குப் பர்வானு வாங்கிவரவேணுமென்று நம்முடைய வீட்டுக்கு வந்த பேர் சொன்னபடியினுலே துரையண்டைக்குப் போய்ச் சொல்லி உத்தரவு சொல்லிவரவேணும் என்று புறப்பட்டுப்போகச்சே தஷமாம் நூற்றிப்பதிமூன்று சொல்தாதுகளும் மூசே பொக்காஷு என்கிற கப்பித்தானும் ஒரு அன்சேனும் கூடப் போகிறுர்கள் இவர்கள் எங்கே போகிறுர்கள் என்று கேட்டால் இன்னவிடத்துக்குப் போகிறுர்களென்று தெரியாது. ராத்திரிக்கு நம்முடைய சாவடிக்குப்போய் அங்கே யிருக்கச் சொன்ஞர்கள். அப்பால் சொல்லியனுப்புவிக்கிறேமென்று துரையவர்கள் சொல்லியனுப்பினதாய் பிறகே போகிறவர்கள் சொன்ஞர்களினிமேலின்னவிடத்துக்குப் போகிறுர்களென்று வெளியானபிறகு வயணங்கள்கண்டு எழுதுகிறேன். அப்பால் நான் துரைவீட்டுக்கு வந்தவுடனே துரை துவானுக்குப் போயிருந்தார். அவர் ஆறரை மணி அடித்த பிற்பாடு கடுதாசி ஆட்டத்திலே உட்கார்ந்தார். அப்போது போய் சலாம்பண்ணி உடனே எங்கு வந்தாயென்றுகேட்டார். அல்லிகக்கி சாய்பு சந்தா சாயபு குமாரர். திவான்சாயபு வந்தவாசிக்குப் போகிறதாய் உங்களுக்குச் சலாம்சொல்லி உத்தாரங்கேட்கச் சொன்ஞர்கள் என்று சொன்னேன். அதற்கு துரை ஆரிடத்திற்குப் போகிறுர்கள் என் போகிறுர்கள் என்று கேட்டார். தயக்கா சாயபு மகனும் திவான்சாயபும் அவர்கள் வந்தவாசி ஆற்காட்டிலே யிருக்கிறவர்களானபடியினுலே ஒருத்தர் வந்தவாசிக்கும் ஒருத்தர் ஆற்காட்டிற்கும் போகிறுர்கள். சந்தாசாயபு மகன் மமூதல்லிகான் பெரிய தகப்பனுனபடியினுலே அவனையழைக்க வேண்டியவிகிதம் அப்பால் சபுத்தரல்லி பெண்சாதி யிருக்கிறுள். தாயக்கா சாயபு பெரிய மனுஷன் இருக்கிறுன். அவனையழைக்கவேண்டிபோகிறுனென்று சொன்னதற்கு துரை யிருந்துகொண்டு சந்தாசாயபுக்கும் நன்மையில்லாமையாயிருக்கச்சே சந்தாசாயபு மகனை நபாபு மனுஷர் கண்டால் விடப்போகிறதில்லை என்று என்னமாயிருக்குதென்று கேட்டார். அதற்கு நான் சொன்னது: அதுமாத்திரம் முன்னே திருச்சிராப்பள்ளியிலே சந்தாசாயபு இருக்கச்சே அவர் பெண்சாதியின்பேரிலே அவரவருக்கு உண்டிகை எழுதிக்கொண்டு கொடுத்ததுண்டு. அந்தப்பணம் இந்தம்மாள் கொடுத்த

தில்லை. அவர்களுக்கு இதோ அதோவென்று ரெண்டு மாசம் இழுக்கடித்தபோது இதற்குள்ளே திரிச்சிராப்பள்ளிக் கோட்டை மராட்டியர் வசம் ஆயிப்போனபடியினாலே இந்தக் கடன்காரருக்கு எல்லாம் கொடாமல் கோட்டை போய் விட்டதே பெரிய சாடையாய் வைத்துக்கொண்டு தள்ளி விட்டார்கள். இப்போது அவர்கள் பத்து லக்ஷம் ரூபாய்க்காரர் வந்து ஏக வேளையிலே மூசே தும்மா உடனே சொல்லிக் கொண்டதற்கு அவர்களை உட்டாயிச்சு, திரிச்சிராப்பள்ளி கோட்டையிலே சேவித்த நீங்கள் கோட்டைப் பிடிபட்டுப்போன மட்டுக்கும் கவையில்லை யென்று மூசே. தும்மா சொல்லிப் போகச்சொன்னார். அப்போது அவர்கள் போகிற தில்லையென்று சந்தாசாயபு பெண்சாதி வீட்டு தெருவடியிலே போய் உட்கார்ந்துகொண்டு போகிறதில்லையென்று தொந்தரை பண்ணிக்கொண்டிருந்தார்கள். அப்போது சந்தாசாயபு பெண்சாதி தும்மாவுக்குச் சொல்லியனுப்பினாள். அப்போது சொல்தாதுகளை யனுப்பி குண்டுக்கு வெளியே யனுப்பிவிடச் சொன்னபடிக்கு யனுப்பிவிட்டார்கள். அதிலே சிறிதுபேரை, நிசாம் வந்தபோது பட்டாணியரை கேட்டதற்கு மேலே துரத்திவிடச் சொன்னபோது துரத்திவிட்டார்கள். சிறிதுபேர் தஞ்சாவூர் மைசூர் அந்தவட்டாரங்களுக்குப் போனவர்கள் சிறிது பேர். இப்போதிப்போது ஆர்க்காட்டிலெ வந்திருக்கிறார்கள் அவர்களறிந்தாலும் மோசந்தான் என்று சொன்னதற்கு மெய்தான், நீ போய் சந்தாசாயபு பெண்சாதிக்கு நம்முடைய சலாம் சொல்லி நாம் சொன்னதாய், நீ என்னுடனே சொன்ன நியாயமெல்லாம் அவளுக்குச் சொல்லிவாவென்று போகச்சொன்னார். அந்தமட்டுக்கும் சந்தாசாயபு மகன் மற்றுமுள்ள அல்லிநக்கி தீவான்சாயபு இவர்கள் பயணம் சாகிப்போனார்கள். அப்பால் சந்தாசாயபு பெண்சாதி வீட்டுக்குள்ளே படுத்துக்கொள்ளப் போனார்களென்று சொல்லிப் போட்டார்கள். இனிமேலிதற்கு எப்படி யோசனை யென்று பார்த்து, பின்னையொருவிதமாய்ச் சொன்னால் வாசற்படியிலே எப்படி விட்டார்களென்று பிராது வரும் பேச்சு விஸ்தரித்து நடக்கும் என்று யோசனைபண்ணி அவர்களுடனே சொன்னதற்கு கலியாணக் கவைக்கு வாலாயமாய்ப் போய் அழைக்கவேண்டியதென்று சொல்லி தீவான் சாயபு அல்லிநக்கி சாயபும் போனார்களே, பேர் அவர்களாயிருக்கிறது.

நாம் வந்தவாசி மட்டுக்கும் மறைவாய்ப்போய் வரரேமென்று சொல்லிப்போனதாய் உபசாரமாய்ச் சொன்னாப்போலே சொல்லிப் போவோமென்று யோசனைபண்ணி அந்தப்படிக்குச் சொல்லிப்போட்டேன். இதல்லாமல் அல்லிதொஸ்த்துகான் உமக்கு வெகுமானம் அனுப்பவேணுமென்று பத்து நாளாய்ச் சொல்லுகிறான். வராமல் போய்விட்டோமென்று அட்டிபண்ணிக் கொண்டு வாரதாய் சொன்னேன். நல்ல காரியம் பண்ணினாய் எனக்கு இருக்கிற அலுவல் தெரியுமே அதனாலே எல்லாக் காரியமும் கப்பல்கள் போனபிற்பாடு பேசிக்கொள்ளுவோமென்று சொன்னார். நல்லதென்று சலாம்பண்ணிப்போட்டு எட்டரை மணிக்கு வீட்டுக்கு வந்தேன்.

இற்றை நாள் சாயங்காலத்துக்குள்ளாக கண்டால் குருவப்பசெட்டி சென்னப்பட்டணத்திலேயிருந்து அனுப்பின காகிதங்கள் இரண்டு வந்து வாசித்துக்கொண்டு அதிலே எழுதியிருந்த வயணம் மேஸ்த்தர் மாசு (M. Morse) குவர்னதோர் கையிலே அயிரம் மணங்கு பட்டுநூல் இந்துராசியிருந்ததாகவும் அதிலே முந்நூறு மணங்கு லாலாப்பேட்டையாரும் அந்திசெட்டி சின்னப்பச்செட்டியும் முப்பத்தொரு வராகன் விலைக்கு வாங்கினதாயும் ஆறு மீ தவணையென்றும் மேஸ்த்தர் மான்சன் சின்ன கப்பித்தானது ஐம்பது மணங்கு அந்த விலை அந்த விலைக்கு, அந்த கெடுவுககு, அந்த வர்த்தகருக்கு விற்றார்களென்றும் மற்றது அந்த எல்லை தாண்டிக் கொண்டுபோய் வைத்திருக்கிறார்களென்றும் இந்தப் படிக்கு அவரவர் எல்லைகடக்க அவரவர் சரக்கை மேஸ்த்தர் மாசைக் கேட்டு அவரவர் லபூர்தோனை உத்தரவு வாங்கி அப்பால் அனுப்பிப் போடுகிறார்களென்றும் பின்னையும் காரியங்களெல்லாம் தப்பிப்போகுது என்றும் முசே லபூர்தோனை போகிறதற்குள்ளே தாண்டப்போட்டுப்போகிறதாய்க் காணுதென்றும் எழுதின காகிதங்கள் பார்த்துக்கொண்டோம்

*1746* ஆ ஒத்தோபர் மீ 23உ அக்ஷய ஞூ அய்பிசி மீ 10உ ஆதிவாரம்

இற்றைநாள் ஆதிவாரமானபடியினாலே துரை கோயிலுக்குப் போயிருந்து எட்டுமணிக்கு வீட்டுக்குவந்தார். பின்னை வேறதிசயம் கேட்கப்படவில்லை. பாக்கு கிடங்கிலே பனி

ரெண்டுமணி மட்டுக்கும் இருந்துவிட்டு வீட்டுக்குப் போனேன் அப்பால் மத்தியானத்திற்குமேல் சாயங்கால பரியந்தம் நித்திரைபோய் சாயங்காலம் கிடங்கிற்கு வந்து ராத்திரி பத்து மணி மட்டுக்கும் இருந்து மூசே தேப்பிரமேவிக்கு ஒன்பது கட்டும் மூசே லபூர்தோனேயிக்கு பனிரெண்டு கட்டும் ஆக இருபத்தொருகட்டுக்கு எண்பத்து நாலுகோடி ஒன்பது கால் காங்கு கிழவுகட்டுப்போட்டு வீட்டுக்குப் போனேன்.

இற்றைநாள் குருவப்பசெட்டி யெழுதியனுப்பின காகிதத்திலே மேஸ்த்தர் மாசு ( M. Morse ) முகாந்திரமாய் அவ்விடத்து வர்த்தகர் அவரவர் தங்கள் தட்டுமுட்டுகளெல்லாம் மூசே லபூர்தோனே கையிலுத்தரவு வாங்கிக்கொண்டு அனுப்பிவிடுகிறனென்றும் இந்தச் சாடைபார்த்தால் மூசே லபூர்தோனே போகிறதற்கு முன்னேதானே சமஸ்தமும் சமஸ்தமானபேரும் அவரவர்கள் கொஞ்சநஞ்சயிருக்கிற தங்கள் தட்டுமுட்டுகளெல்லாம் சிலவிலே தாண்டவித்துக்கொண்டு போகிறார்களென்றும் மூசே லபூர்தோனே போகிறதற்கு முன்னேதானே சமஸ்தமும் வெளிப்படுத்திப்போட்டு சொல்லி தீர்த்துப் போடுவோமென்று மேஸ்த்தர் மாசு யோசனைபண்ணி வர்த்தகருக்கு எல்லாம் சொல்லி அவரவர்கள் தட்டுமுட்டுகளை சமஸ்தமும் அப்பால் படுத்திவைக்கிறதாகவும் இனிமேல் தம்பி திருவேங்கடம்பிள்ளை வருகிறதினலேயும் ஒன்றும் காரியமில்லையென்ருப்போலேயும் மூசே லபூர்தோனே நாலு மூணு நாளைக்குள்ளே ஏறிப் போகிறனென்றும் ஏறிப்போகச்சே தெப்பிறமேனிவசம் ஒப்புவித்துப்போட்டுப் போகிறனென்றும் இப்படியாக கடுதாசியிலே ராயசம் வேங்கடாசலய்யன் ஆசீர்வாதம் சொல்லச் சொன்னர் என்றும் இந்தப்படிக்காக எழுதியனுப்பின காகிதம் வந்து சேர்ந்தது. நேற்றையதினம் இருந்த முசாப்பும் காற்றும் நின்று வெய்யில் காய்ந்தது. ராத்திரி மின்னலும் மப்புமாத்திரமும் இடியுடனேகூட உண்டாயிருந்ததேயல்லாமல் மழைச்சாடையில்லை ஏனென்றால் வாடைக்காற்று உறமில்லாமல் காற்றுக்கச்சானய் வாரபடியினலே இந்தப்படிக்கு இன்றையவரைக்குமிருக்கிறது. நாளைக்கு என்னமாய் நடக்குமோ தெரியாது. இற்றைநாள் காலத்தாலே தொஸ்தல்லிகான் மருமகன் அக்பர்சாயபு பேட்டிக்கு வரச்சொல்லுருனென்று கோவிந்தராவுவந்து சொன்னன். சாயங்காலம் வந்து உங்களுக்கு ஏற்றவெகுமானம்

எடுத்துவைத்து நாளைக்கு அழைப்பிப்பானென்று சொல்லிப் போட்டுப்போனான். வேலூர் ரசல்விகான்சாயபு மனுஷன் மமூதுசயி என்கிறவன் அக்பர்சாயபு பிறகே வந்திருக்கிற கபுறும் சொன்னான்.

இற்றைநாள் சாயங்காலம் ஐந்தரைமணிக்கு முசே லகந்தினேயும் ஷெ பிறகே பேர்விளங்கன் ஒரு வெள்ளைக்காரனும் வந்து துரையைக்கண்டு பேசிப்போட்டு அவன் விடுதிக்குப் போனான். துரை லக்கத்தினே பேரிலே மிகுந்த கோபமாயிருக்கிறார்.

1746 ௵ ஒக்தோபர் ௴ 24 உ அக்ஷய ௵ அற்பசி ௴ 11உ சோமவாரம்.

இற்றைநாள் காலத்தாலே துரையவர்கள் சத்து முசாப்பாயிருந்தபடியினாலே படுத்துக்கொண்டிருக்கச்சே போட்டுக் கொள்ளுகிற நெடுங்கால் சட்டை இரொப்பதோ சாம்புறு குல்லாவுடனே பல்லக்கின்பேரிலே ஏறிக்கொண்டு செட்டித் தெருவுக்கு நேராயிருக்கிற கடற்கரை சின்னவாசல்படியிலே போயிறங்கி அதற்கு நேராயிருந்து கப்பலுக்குச் சலங்குகள் விடுகிறபடியினாலே அங்கே போயிருந்து சலங்குகள் சீக்கிரம் துக்குத்தள்ளிவித்து அங்கே யிருந்து துவானுக்குப்போய் விசாரித்துப்போட்டுச் சென்னப்பட்டணத்திலிருந்து காத்துக்கு அடிபட்டு கம்பங்கள் பாய்மரங்கள் தெறிச்சு மறுபடி ஆனைப்போலே ஒரு சின்னக்கம்பம் வைத்துகொண்ட கப்பல் கம்பத்துக்காணுதென்று வருகிற பூறபோம் என்கிற கப்பலைக்கண்டு அதற்கு அனுப்பவேண்டியதும் துறைக்கு நேராக வரும்போது அதற்குச் சலங்குமத்ததுகளும் அனுப்பச் சொல்லிப் போட்டுவீட்டுக்கு வந்தார். நான் வாடிக்கைப்படிக்குப் பாக்குக் கிடங்கிலேயிருந்தேன் இதிலே முசே அுபுவாவும் ரேசுத்தேனும் கிடங்கிற்கு வந்தார்களென்று வந்து கபுறு சொன்னதின்பேரிலே நானும் புதுத்தெருவிலே யிருக்கிற நம்முடைய புடவைக்கிடங்கிலேயிருக்கிற இரண்டுபேர் வெள்ளைக்காரரண்டைக்கு வந்து எத்தனையோ உபசாரமாய்ச் சொல்லிச் சலாம்பண்ணி பேசிக்கொண்டிருந்ததிலே வந்த வெள்ளைக்காரர் புடவை பார்க்க வேணுமென்றும் இதேது கட்டுகளென்றும் கேட்டவர்களல்ல;

எத்தனைக் கட்டுக் கூடுமென்று கேட்டார்கள். இருபத்துநாலு கட்டு, இருபத்தைந்து கட்டு, முப்பது கட்டு கூடுமென்று சொன்னதற்கு வயணம் கேட்டு எழுதிக்கொண்டு, கட்டு மேலே மார்க்குப் போடுகிறதற்கு வயணமும் சொல்லிவிட்டுப் போகையிலே கட்டுக்காரர் வேணுமே அனுப்புங்கோளென்று சொன்னதற்கு, என்னாலே ஒரு கட்டுக்காரனுகிலும் சம்பாதிக்கமாட்டேன். நீ வேணுமென்ருல் ஐம்பது பேராகிலும் அகப்படுவார்களென்றும் சொல்லிவிட்டு அனுப்புவித்துக் கொண்டு போய்விட்டார்கள். அப்பால் நயினியப்ப முதலி கூடின மட்டுக்கும் கட்டுப் போட்டுவிடுங்கோளென்று சொல்லிவிட்டுப்போய்க் கட்டுகளுக்கும் உள்ளே போடுகிறதற்குக் காகிதங்கள் அனுப்புவித்த வயணம்: ஒன்பதுகால் காங்குக் கிழுவு கட்டு 12, காங்கு சிலர்புரிகட்டு 6. ஒன்பது காரிக்கன் கட்டு 10, புதுச்சேரி கிண்டன் கட்டு 2, ஆக முப்பது கட்டுக்குச் சீட்டு அனுப்பினுர்கள். நேற்றுப் போட்ட பனிரெண்டு கட்டுக்கும் கடுதாசியைச் சொருகி மற்றப் பதினெட்டுக் கட்டுக்கும் கடுதாசி போட்டுக் கட்டுக்கட்டச் சொல்லிவிட்டு நான் பாக்குக்கிடங்குக்குப் போனேன். இதிலே சென்னப்பட்டணத்திலிருந்து மேல்வழியாய் இரண்டு சேவகர் தேவனும்பட்டணத்திலிருக்கிற இங்கிலீசுக்காரருக்கு ஏழெட்டுக் காகிதங்கள் முத்திரை போட்டது கொண்டு போகிற இரண்டு சேவகரையும் ஆலங்குப்பத்தண்டையிலேயிருக்கிற கும்பினீர் சேவகர் பிடித்துக்கொண்டு எங்கே போகிறீர்களென்று கேட்டார்கள். நாங்கள் தஞ்சாவூருக்குப் போகிரோம். சம்புதாசு மனுஷர் என்று சொன்னுர்களாம். அவர்களைப் பிடித்துக்கொண்டு துரையண்டையிலே கொண்டு வந்துவிட்டார்கள். அந்த வெள்ளைக்காரர் எழுத்திலே மேல் விலாசம் எழுதியிருக்கிற காகிதங்களைப் பார்த்து மறுபடி அந்தச் சேவகர் கையிலே கொடுத்துத் தேவனும்பட்டணத்து இங்கிலீசுக்காரருக்கு ஆச்சே, நீங்கள் எப்படி போய்ச் சொன்னீர்களென்று கேட்டார். நாங்கள் பயந்து சொன்னேமென்று சொன்னுர்கள். நல்லது, போங்களென்று ஒரு சேவகனையும் ஒரு சேர்வைக்காரனையும் கூட்டிக்கொண்டு குண்டுக்கப்பாலே கொண்டுபோய் விட்டுவிடச் சொன்னுர்

சொன்னமாத்திரத்திலே அவனிருந்துகொண்டு என்ன சொன்னான். அதன்பேரிலே மறுபடியும் அந்த இரண்டு சேவகரையும் அழைப்பித்து அவர்கள் கையிலேயிருந்த காகிதங்களை வாங்கிக்கொண்டு இரண்டு சேவகரையும் சாவடியிலே கொண்டுபோய்க் காவல்வைக்கச் சொன்னார். மற்றப்படி அதிசயம் ஒன்றுமில்லை. கப்பல்களுக்குச் சாமான்கள், அரிசி, கோழி முதலான ஆடுகளேற்றுகிறதும் மசுக் கரைக்குச் சாமான்கள் அனுப்புகிறதுமாக இந்த வேலையைச் சுறுக்காய் நடத்தச் சொல்லி, துரையிந்த அலுவலும் தாம் எழுதுகிற காகித அலுவலும் சென்னப்பட்டணத்து அலுவலின் பேரிலேயிருக்கிறார். ஆனபடியினாலே பனிரெண்டு மணி மட்டுக்கும் பாக்குக் கிடங்கிலேயிருந்து அப்பால் புடவைக்கிடங்குக்கு வந்து கட்டுகளைச் சீக்கிரமத்துக்குப் போடச் சொல்லி விட்டு வீட்டுக்குப் போனேன். அப்பால் மூசே தெப்பிறமேனிக்காக நேற்று போட்ட ஒன்பது கட்டு காங்கு, ஒன்பது கால் கிழுவு முப்பத்தாறு கோடியும், மூசே கோய்னே வசத்திலே கொண்டுபோய் ஒப்புவித்துப்போட்டு வரச்சொன்னோம். அந்தப்படிக்குப் புடவை பார்த்து, கட்டு ஒன்பதும் போட்டுக் கொள்ளும்போது புடவையைப் பார்த்து நன்றாயிருக்குதென்று சொல்லி ராமய்யனை என்ன விலையென்று கேட்டானாம். அவர் எனக்கு விலை தெரியாதென்று சொன்னாராம். அதன்பேரிலே பின்னை என்ன சொன்னானோ. விலை விசாரி என்று சொன்னாப் போலே இருந்தது என்றும்;

அப்பால் தடி அருணாசலசெட்டியண்டையிலேயிருக்கிற குட்டை செட்டிப்பையன் நாமம் போட்டிருக்கிறவனும் சின்ன பரசுராமனும் அங்கேயிருந்தானாம். அந்த தடி அருணாசலம் மனுஷன் குட்டைநாமம்போட்ட சின்னப்பையன் சின்ன பரசுராமனுடனே சொல்லி மூசே கோய்னேயுடனே சொல்லச் சொன்னானாம். இந்தப் புடவை காங்கு இந்த டவு, எங்கள் கையிலேயிருக்கிறது. நாங்கள் தானேமென்று சொல்லச் சொன்னானாம் அந்தப்படிக்குச் சின்னபரசுராமன் சொன்னதற்கு என்ன விலையென்று கேட்டானாம். அதற்கு இருபத்தேழு வராகன் சொன்னானாம். ஆனால் ஒன்பது கால்புடவை யல்லவென்று சொல்லி இது ஒன்பதுகால்புடவை சாயம், நல்லசாயம் என்று சொன்னானாம். அதற்கு அந்தப் புடவைகளை யழைப்பிக்கச் சொன்னால்

இப்போதுதானே யழைப்பிக்கிறேன் என்று சொன்னானும். இப்போது கவையில்லை பின்னை யாகுதென்று சொன்னானும். அதற்குச் சின்ன பரசுராமன் இரண்டு புடவை யழைப்பிக்கிறேன் பாரென்று சொன்னதற்கு நாளைக்கு ஆகுதென்று சொல்லிப் போகச்சொன்னான் என்று மிப்படி நடந்ததென்று கோட்டைகட்டு மேஸ்திரி லக்ஷ்மணன் வந்து என்னுடனே ராத்திரி ஏழு மணிக்கு நான் புடவைக் கிடங்கிலே தினசரி யெழுதியிருக்கும்போது சொன்னான். அந்தப்படிக்கு இந்தத் தினசரியிலே எழுதிவைத்தேன். ஆனால், வர்த்தக நியாயத்துக்கு ஒருத்தருடைய புடவை பார்க்கும் போது ஒரு வர்த்தகன் வந்தால் புடவை வாங்கிக்கொள்ளுகிறவனிதென்ன விலை யென்று கேட்டால், எங்களுக்குத் தெரியாதென்று சொல்லுவார்கள். பெரிய வர்த்தகனாக இருக்கப்பட்டவன் அப்படியல்லவென்று கேட்டார்களேயானால், போக்காய்ச் சொல்லித் தப்புவித்துக்கொள்ளுவானேயல்லாமல் சொல்லான். அப்படியும் வெள்ளைக்காரன் கேளாமலிருக்கும்போது பலவந்தமாய் தடி அருணாசலசெட்டி மனுஷன் சொன்னதென்னவென்றால்: கும்பினீர் பணம் சின்ன பரசுராமன் கொள்ளையிடுகிறான். அந்த ஆங்காரமும் உற்சாகமும் அதிலே இவனுக்கும் புடவை போடுகிறதற்குள்ளே பங்கானபடியினாலே அந்தக் கொள்ளை இன்னையும் பாகம் படுகிறபடியினாலே சரீரசுமரணை தெரியாமல் சொன்னான். இவர்கள் கொள்ளையிடுகிற கொள்ளை மூசே துய்ப்ளேய்க்கு அறியானென்று இருக்கிறான். அவன் அறிந்து மிருக்கிறான். இனிமேல் சிறிது காரியங்களும் நடக்க இருக்கிறது. இது அறியாமல் சின்ன பரசுராமன் தலைகீழே நடக்கிறான். பின்னையும், அனேகங் காரியத்திலே இப்படி நடத்துகிறபடியினாலே அதியுற்சாக பதனகேத்து என்கிற நியாயம் தோற்றாமல் நடக்கிறான். இனிமேல் சுவாரசியம் தெரியும்.

இற்றைநாள் பனிரெண்டு மணிக்கு வந்த டபாலிலே சென்னப்பட்டணத்திலிருந்து நாளது அற்பிசி மீ 8 உ (22 nd october) கண்டால் குருவப்பசெட்டி எழுதின காகிதம் வந்தது. எழுதியிருந்த வயணம் (8உ) சாயுங்காலம் சென்னப்பட்டணத்திலே நடந்த வர்த்தமானம் என்னவென்றால்: இங்கிலீசு குவர்னதோர் மூசே மாசு (Mr Marse) முதல் கோன்சேல்

காரர் பேரும் மூசே லபூர்தோனே யண்டைக்கு வந்து தாங்கள் கொடுக்கவேண்டிய பணத்துக்குக் கடன சீட்டெழுதிக் கொடுத்து உடம்படிக்கைப் பண்ணியும் இன்னமும் என்ன உண்டோ அதெல்லாம் எழுதி கையெழுத்துப் போட்டுக் கொடுத்ததாகவும், அதன்பேரிலே மூசே லபூர்தோனே கோட்டையை அவர்களுக்கு விற்ற விலைக்கிரயக் காகிதத்திலே கையெழுத்துப் போட்டுப் பின்னையும் என்ன உபாயம் உடம்படிக்கைகள் பேசிக்கொண்டார்களோ அதுகளெல்லாம் மூசே லபூர்தோனே கையெழுத்துப்போட்டு இவர்கள் கைக் காகிதமும் அவர்கள் கைக்காகிதமும் ஒருத்தருக்கொருத்தர் வாங்கிக்கொண்ட பிற்பாடு இருபத்தொரு பீரங்கி சுட்டுச் சந்தோஷமாயிருந்தார்களென்றும், இந்த உடம்படிக்கைகள் நடக்கையிலே மூசே தெப்பிறமேனியை அழைக்கவுமில்லை. அழைத்தாலும் இவன் போகவும் போகானென்றும், மூசே தெப் பிறமேனியைத் தவிர நடப்புவித்தானென்றும், தம்பி திருவேங் கடம் வந்தபிற்பாடு பதினைந்து காகிதம் எழுதினதற்கு ஒரு உத்தரவாகிலும் வரவில்லையென்றும் இப்படியாக எழுதியனுப் பினான். இனிமேல் நடக்கிற சேதி மூசே லபூர்தோனே ஏறிப் போனபிற்பாடு மூசே துய்ப்ளேக்சு நடத்துகிற சாடையறிய வேணும்.

இற்றைநாள் ராத்திரி ஐம்பது பேர் மாயே சிப்பாய்களும் செம்மடுத்தேன் என்கிற ஒபிசியேலையும் அரியாங்குப்பத்துக்கு அனுப்பினார்கள். இந்தச்சாடை என்னவென்றால்: சென்னப்பட் டணத்திலே யிருந்துவருகிற நூறு சொல்தாதுகளையும் மறித் துக்கொண்டுவருகிற நிமித்தியம் என்று சொன்னார்கள். அவர் கள் அவ்விடத்துக்கு வருகிற சாடையாயல்ல. அவர்கள் தேவ னும்பட்டணத்துக்குப் போகிறவர்கள் மேலைவழியாய் வந்து தேவனும்பட்டணம் சமீபத்திலே வரும்போது பாதை சரி யாய்க்கூடுமே, அங்கேயிருந்து அவர்களை மறித்துக்கொண்டு வாவென்று சொன்னார்கள்.

1746ஆ ஒக்தோபர் மீ 25உ க்ஷய வரு அற்பிசி மூ 12உ மங்களவாரம்

இற்றைநாள் காலத்தாலே சென்னப்பட்டணத்துத் தபா லிலே ஒன்பது மணிக்குத் துரையவர்களுக்குக் காகிதம் வந்தது அத்துடனே கூட எனக்குக் கண்டால் குருவப்பசெட்டி எழு

தின காகிதம் காளது மீ 9உ எழுதின காகிதம் ஒன்றும் 10உ எழுதின காகிதம் இரண்டும் ஆக மூன்று காகிதங்களும் வந்தன. அந்தக் காகிதங்களிலே எழுதியிருந்த வயணம்: இங்கிலீசுக்காரருக்கு முசே லபூர்தோனேக்கு விருந்து பண்ணினதும் அப்பால் முசே தேப்பிறமேனிகூட விருந்து சாப்பிட்டுச் சாயங்காலம் நாலு நாழிகை தேசகாலம் ஒப்பு உடம்படிக்கைப் பண்ணிக்கொண்ட காகிதம் எல்லாம் படித்துக் காண்பித்தும் அப்பால் இறங்கிவந்து காளது மீ 10உ (23உ அக்டோபர் மீ) ஞாயிற்றுக்கிழமை காலமே கோட்டையை முசே தேப்பிறமேனி வசம் ஒப்புவித்தும் கோட்டை காலமே கோட்டையை முசே தேப்பிறமேனி வசம் ஒப்புவித்ததும் கோட்டை ஒப்புவித்தாப்போலே இருபத்தொரு பீரங்கி போட்டதும் அப்பால் பத்தரை மணிக்கு முசே லபூர்தோனே லசீப் என்கிற கப்பலின்பேரிலே ஏறிப் போனதும் அப்போது இருபத்தொரு பீரங்கி போட்டதும் அன்று சாயுங்காலம் வரைக்கும் கப்பல் தெரிகிற சேதியும் முசே தேப்பிறமேனிக்கு அதிகாரம் நடக்குதென்றும், முசே தேப்பிறமேனிக்கு இங்கிலீசுக்காரர் இரண்டுவேளையும் விருந்து பண்ணுகிறார்களென்றும் இது முதலாகிய சேதி எழுதி வந்தது. இதல்லாமல், பின்னையும் பல சேதியும் எழுதிவந்தபடியினாலே அந்த மூன்று காகிதமும் தெலுங்கிலே எழுதிவந்தபடியினாலே அந்தக் காகிதத்திலேயிருக்கிறபடிக்கு தன் கீழே மூன்று காகித வயணமும் தெலுங்கிலே எழுதியிருக்கிறது.

1746 ஆ ஒக்தோபர் மீ 25 உக்கு அக்ஷய ஹ அற்பிசி மீ 12 உ மங்களவாரம்.

இற்றைநாள் ராத்திரி பத்து மணிக்கு நல்லதம்பி செட்டி, அருணாசல செட்டி என்னுடனே வந்து சொன்னது: கனகராய முதலி தம்பி தானப்பமுதலி என்கிறவன் நாலைந்து நாளாய் உற்சாகமாயிருக்கிறான் என்றும் இது ஏதோ ஒரு சாடையில்லாமலிந்த உற்சாகம் வராதென்றும் சொன்னான். அதற்கு நான் சொன்னது: அது ஒன்றுமில்லை. இனிமேல் அந்தக் கூட்டெழுத்து வெளியாய்ப்போம் என்று சொன்னேன். அப்படியா என்று போட்டுப் போனான். அவன் உற்சாகமாய்த் திரிகிற சாடையென்னவென்றால்: இந்தக் கப்பல்களுக்குச் சரக்கு அலுவல் நிமித்தியமும் துரையிருக்கிற அலுவல் விசனமும் சென்னப்பட்டணத்திலே முசே லபூர்

தோனே நடத்துகிற சங்கதியைத்தொட்டு அவருக்குக் கோன்சேல் கூட்டவும் இதற்குயோசனை பண்ணவும் காகிதம் எழுதுகிறதும் பெரியவேலை விசனமாயிருக்கையிலே நான் போவானேனென்று பாக்குக்கிடங்கிலேதானேயிருப்பேன். கவையானால் அழைப்பாரென்று போகிறதில்லை. இந்தச்சாடையினாலேயும் சீர்மைக்குக் காகிதங்கள் எழுதியனுப்புவார்களே ஒருத்தருக்குக் கொடுக்கிற சாடையானால் இந்த மட்டுக்கும் கொடுத்தல்லோ எழுதவேணும். இப்போது கொடுக்கிற சாடையில்லாதபடியினாலே காகிதத்திலே எழுதின சாடை காண்பிக்கவில்லை என்கிற யோசனைபண்ணிக்கொண்டு, இதனாலேதானே உத்தியோகம் கைக்கு வந்ததாய் எண்ணிக்கொண்டு, தான் உற்சாகமாய் எளிச்சியப்பனை ஏறக்குறைய வைததும் நைக்கன்றை எடுத்து விட்டதும் இது ஒருக்காலும் இந்த உற்சாகம் நில்லாது. அதுகிறமேன தெரியும்.

இற்றைநாள் ஒன்பது மணிக்கு இங்கிலீசுக்காரர் சிறிதுபேர் கூடலூருக்குப் போகிறோமென்று வந்தவர்கள் சிறிதுதூரம் சொல்தாதுகளும் சிறிது இங்கிலீசுக்காரரும் வந்து மேல்வழியாகத் திருப்பிக்கொண்டு மேல் வழியாகக் கூடலூருக்குப் போகிறதாய்ச் சேதி கேட்டு, குவர்னதோர் முன் அற்பிசி மீ 9 உ சனிவாரம் நூற்றுச் சில்வாணம் சொல்தாதுகளையனுப்பி அவர்களப்படி கூனிமேடுமட்டுக்கும் வந்தல்லோ அப்பால் திரும்பவேணுமென்று யோசனைபண்ணி, கூனிமேட்டுக்கு வருகிற கபுறு முன்னதாய் வந்தவுடனே இந்த தாஷ்மான் போய் மறித்து அழைப்பித்துக்கொண்டு வரப்போனதற்கு அவர்கள் இந்தப் பாதையே வாராமல் மேலாகப் புறப்பட்டுக் கூடலூருக்குப் போன சேதி கேட்டு நேற்று ராத்திரி ஐம்பதுமாயே சிப்பாயும் ஒரு ஒபிசியேலையும் அரியாங்குப்பத்துக்கு அனுப்புவித்ததற்கு இன்றைக்குக் காலத்தாலே தபால் வந்தவுடனே மறுபடியும் ஐம்பது சிப்பாய்களையும் ஒரு ஒபிசியேலையும் அரியாங்குப்பத்துக்குப் போய் அரியாங்குப்பத்திலேயிருந்து கூடலூருக்கு மேலே வழியாய் வருகிற வழியாயிருக்கிறதற்குச் சமீபத்திலே போயிருந்து மறிக்கத்தக்கதாக ஆலோசனை பண்ணினார்கள். அதிலே இந்த சிப்பாய்களையும், ஒபிசியேலையும் அனுப்பினார்கள்; என்ன நடக்குமோ தெரியாது. ஏனென்றால் வருகிறவர்களும் ஆயுதபாணிகளாய்

நூறு பேர் மட்டுக்கும் வராப்போலே ஆச்சுது அவர்களை மறித்துப புதுச்சேரிக்குக் கொண்டுவரவேணுமென்றால், ஒரு கை பாராமல் சமமாய் வறப்போகிறதில்லை. ஆனபடியினாலே என்னமாய் நடக்குமோ அறியவேண்டியது.

1746 ஆ ஒக்தோபர் மீ 25உக்கு அக்ஷய ஸு அற்பிசி மீ 12உ மங்களவாரம்

முசே லந்நாசு வீட்டுக்குப் போய் முசே தும்மாவுக்கு எழுதுகிற காகிதம் சீக்கிரமத்துக்கு எழுதுவிக்கச் செல்லிச் சொல்லப் போனேன். அவன் பெண்சாதியைக் கலியாணம் பண்ணினபடியினாலே அந்த மயக்கத்திலே இந்தக்காகிதம் எழுதுகிறதற்குக் கூடாமல் அடிக்கடி அவளைப்பார்க்கிறதே நேரமல்லாமல் இந்தக் காகிதத்திலே நினைவு இல்லை. அந்தச் சாடையெல்லாம் கோபாலய்யன் வந்து அடிக்கடி சொல்லவும் அறிந்திருந்தேன். நானுகிலும் பிரத்யக்ஷமாய்ப் பார்த்துப் பனிரெண்டு மணி மட்டுக்கும் இருந்து அவன் தான் சவாது எழுதினதைப் பெயர்த்து எழுதுகிறதற்கு ஒரு வெள்ளைக்காரனை யனுப்பச் சொன்னபடியினாலே அனுப்புகிறோமென்று சொல்லிவிட்டு வந்து சாயங்காலம் ஐந்தரை மணிக்கு மினோ என்கிற சொல்தாதுவைக் கோபாலகிருஷ்ணய்யன் பிறகே கூட்டியனுப்பிவிட்டு நான் பாக்குக் கிடங்கிலிருந்தாப்போலே மதிலோரமாய்ப் புறப்பட்டு வீட்டுக்கு வந்தேன். புர்போம் என்கிற கப்பல் வந்து துறைபிடித்துப் பதினொரு பீரங்கிச் சுட்டார்கள். கோட்டையிலேயும் பதினொரு பீரங்கிச் சுட்டார்கள். நெப்தூன் என்கிற கப்பலும் சமீபத்திலே வந்ததாய்ச் சொன்னார்கள். அதிலே ஆயிரத்தி ஐந்நூறு கட்டு சென்னப்பட்டணத்துப் புடவைக்கட்டுகள் ஏற்றினது காற்றுமழையிலே நனைந்ததுமாய் அதையினிமேல் இறக்கிப் புதுச்சேரியிலே சலவைக்கு விடவேணுமென்று முசே லக்நற்றினே என்னுடனே சொன்னான். முசே துபுவாயிருந்துகொண்டு எவ்வளவு கட்டுக் காணுமென்று கேட்டார். அது, லக்கத்றினே சொன்னது சகலாத்துக்கூட இரண்டாயிரத்தி ஐந்நூறு கட்டு காணுமென்று சொன்னான்.

அந்த இங்கிலீசு சொல்தாதுகளும் இரண்டு பேர் பல்லக்குக்காரரும் இற்றைநாள் காட்டராம்பாக்கத்துக்கு நேராய் வருகையிலே நம்முடைய சாவடியிலிருந்த பிரான்சு சொல்தாது

கள் போய்ப் பிடித்துவந்தார்கள். இந்த இங்கிலீசுக்கார சொல்தாதுகளையெல்லாம் மேற்குக் கோட்டை வாசற்படி கிடங்கிலே வைத்ததாய்ச் சொன்னுர்கள். வந்தவர்களின்னுர் என்று ஏற்படவில்லை.

இதெல்லாம் புர்போம் என்கிற கப்பலிலேயிருந்து இருபத்தைந்து பேர் இங்கிலீசு சொல்தாதுகளை இறக்கினுர்கள். அவர்களை இஸ்தாவிலே கொண்டுபோய் வைத்தார்களென்று சொன்னுர்கள்.

இற்றைநாள் ராத்திரி ஏழரை மணிக்கு முசே லக்கந்தினேயைக் கொண்டுபோய்க் கோட்டையிலே காவல் வைத்தார்கள். சென்னப்பட்டணத்திலிருந்து கரைவழியாய் வந்த இங்கிலீசுக்கார சொல்தாதுகளை நம்முடைய ஊர் சொல்தாது போய்ப் பிடித்துவரும்போது அவர்கள் தங்களுக்கு முசே லபூர்தோனே பசுப்பொடுத்து இருக்கிறதென்று சொன்னதற்கு அதைச் சூத்திலே துடைத்துப் போட்டுவிடச் சொன்னுர்களென்று சொன்னுர்கள்.

1746 ஆ ஒக்தோபர் மீ 26 உ க்ஷய அக்ஷய ஐப்பிசி மீ 13 உ புதவாரம்.

இற்றைநாள் காலத்தாலே சென்னப்பட்டணத்திலிருந்து கண்டால் குருவப்பசெட்டி யனுப்பின காகிதம், இற்றைநாள் காலத்தாலெ வந்தது. அந்தக் காகிதத்திலே எழுதியிருந்த படிக்கு எழுதின வயணம்: இற்றைநாள் காலத்தாலெ கோன்சேல் கூடினுர்கள். என்னை யழைப்பித்துக் குவர்னதோர் ஆர்க்காட்டு நபாபு அன்வறதிகான் மகன் மாபூசுகான் சென்னப்பட்டணத்தின்பேரிலேபோய் ராசகாரியம் பண்ணுகிறதாய்ச் சிறு குதிரைக்காரரையனுப்பினதாய் அவர்கள் வந்து மயிலாப்பூர் அந்த வட்டாரங்களிலே வந்திறங்கி, சென்னப்பட்டணத்துக்குள்ளே வெளியிலேயிருந்து ஒருத்தரும் போக ஒட்டாமலும் உள்ளேயிருந்து தட்டுமுட்டுக் கொண்டுபோகிறவர்களை விடுகிறுளென்றும் சற்றே தொந்தரைபண்ண நினைத்திருக்கிறுன். அதற்கு மா.பூசுகான் அண்டைக்கு நீ போக வேணுமென்று சொல்லவந்தார். நீங்கள் கோபமில்லாமல் கேட்கிறதானுல் எனக்குத் தோன்றினது ஒரு வார்த்தைச் சொல்லுகிறேன் என்று சொன்னதற்கு, அவர், சும்மா சொல்

லென்று சொன்னார். அதற்கு நான் சொன்னது: அவனுடைய நினைப்பு சென்னப்பட்டணத்திலே வெகு திரவியம் எடுத்துக் கொண்டுபோனதாய் நினைத்துக்கொண்டுதான் அதற்குத் தக்கதாகத் திரவியம்கிரகிக்கவேணுமென்றும் இந்த ஏற்பாடு எடுத்து நடத்துகிறான். இப்படிப்பட்ட வேளையிலே என்னைப்போலொத்தவன் போனால் ரங்கப்பன் துரைக்கு ரொம்பவும் ஆவசிகன் என்று சமஸ்தமான சனங்களும் அறிந்திருக்கிறதுமல்லாமல் புதுச்சேரி பட்டணத்துக்குள்ளே இருக்கிறதற்குள்ளே மாற்றுயரியவன் என்றும், இவனைத் தவிர வேறேயில்லையென்றும் அவர்களுக்கெல்லாம் தோற்றியிருக்கிறபடியால் நான் போனவுடனே என்னைச் சென்னப்பட்டணத்துச் சம்மதி தீர்த்தாலேயல்லாமல் போகவேண்டாமென்று ஒரு தொந்தரையாய்ச் சொன்னனேயானால் அப்போது ரொம்ப வருத்தமாய்க் காணும். அதனாலே அப்போது அவன் சொன்ன படிக்கெல்லாம் கேட்க வேண்டியிருக்கும். இதல்லாமல் பின்னையும் ஒரு சாடை சொல்லுகிறேன். என்ன சாடையென்றால், தாங்கள் சென்னப்பட்டணத்தின்பேரிலே கலாபம் பண்ண வேணுமென்று நினைத்த மாத்திரத்திலே இவர்கள் மனிதரை அனுப்ப நினைத்தமட்டுக்கும், மனிதரை யனுப்பினமட்டுக்கும் இவர்கள் பயந்தவர்கள். இன்னும் சற்றுசாடைபண்ணினால் இன்னும் வேறேவேறே நடக்கும், பத்துப் பணம் வாங்கலாம் என்று யோசனைபண்ணுவார்கள். ஆனபடியினாலே இரண்டு காரியத்திலே பார்த்தாலும் இளப்பமாய்க் காண்கிறது அப்பால் உங்கள் சித்தத்திற்கு எப்படி தோற்றுகிறதோ அப்படி பாரென்று சொன்னேன். அதற்குத் துரை யிருந்துகொண்டு மெய்தான் அனுப்புகிறது யுத்தமல்ல ஒரு பார்ப்பானாகிலும் பின்னை யாராகிலும் ஒருத்தர் கெட்டிக்காரனைப் பார். அவ்விடத்திற்கு அனுப்புகிறதற்கு என்று சொல்லிவிட்டு அப்பால் சென்னப்பட்டணத்துக் காரியத்திற்குப் பேச்சு மூச்சு நடக்கிற வேளை, பாரீஸ் காகிதங்கள் வரும். அவர்கள் அவ்விடத்திலே சமீபத்திலே வந்திறங்கினால் போய்ப் பேசவேண்டி யிருக்கும். இதுகளுக்கு உன் தம்பி பிறசே போகிறதற்குக் கெட்டிக்காரனாக ஒருத்தனைப் பார் என்று சொன்னார். அதற்கு என் தம்பியினாலே இந்த வேலைகளிலே பேசி நிருவாகம்பண்ணத் தெரி

யாது. இப்படிப்பட்ட சமயத்துக்கெல்லாம் அங்கே துரைத்தனக்காரனுக்குக்கூட யோசனை சொல்லத் தக்கவனு யிருக்க வேணும். உங்களைப்போலொத்தவர்கள் இருக்கிற விடத்திற்குக் கையிலே ஆகாதவனிருந்தாலும் உங்கள் யோசனையினலேயும் நீங்கள் நடத்துகிற சாடையினலேயும் கெட்டிக்காரனென்றெண்பித்திருக்கும். அந்த இடம் அப்படி இல்லாததினலே கெட்டிக்காரனகப் போகவேண்டுமென்று சொல்லுகிறேன். அப்பால் உங்கள் சித்தம் எப்படியோ அப்படி நடத்துகிறது தானென்று சொன்னேன். அதற்குத் துரை இந்த ஊரிலே அம் மாத்திரம் கெட்டிக்காரன் ஆர் இருக்கிருர்கள். யோசனை பண்ணிப் பார் என்று சொன்னுர். உங்களுக்குத் தோற்ருததா, நீங்களறியாததா, நான் அறியப்போகிறேன் என்று சொன்னேன். உங்கள் தர்பிக்கு மாத்திரம் கெட்டிக்காரன் வேறே விசாரித்துப் பார். இவ்விடத்தில் காணேன். நீயும் யோசனை பண்ணிவந்து சொல்லென்ருர். அதற்கு நானிருந்துகொண்டு மூலம்போலே கண்டு போராடும், எப்போதும் அது சென்னப் பட்டணத்துக்குப் போய் வந்த பிற்பாடு போராடிக்கொண்டிருக்கிறது சென்னப்பட்டணத்திலே யிருந்துவந்த பிற்பாடு வெளியே புறப்பட்டதில்லை. அப்பால் உங்கள் சித்தம் என்று சொன்னேன். அதற்கு எனக்குத் தெரியும் நல்லது ஒரு பார்சு படிக்க எழுதக் கெட்டிக்காரனைப் பார். அல்லவென்று இந்த வூரிலே பின்னையாராகிலும் சமர்த்தனுக இருப்பான் என்று கண்டு எனக்குச் சம்மதியாக யிருக்கிறவனுகப் பார்த்து வந்து சொல்லு என்று சொல்லிப் பின்னையும் ஆர்க்காட்டுப் பேச்சும் முசே லபூர்தோனே சென்னப்பட்டணத்திலே நடப்பித்ததும் அவன் பணம் சுத்திக்கொண்டுபோன சாடையும் துரை சிறிது நான் சிறிது சொல்ல இப்படி இரண்டு மூன்று நாழிகை நேரம் பேசிக்கொண்டிருந்தோம். அதெல்லாம் எழுத வேணுமானுல் இருபது காகிதமாகிலும் செல்லும். இதல்லாமலும் இதற்கு முன்னேயும் அனேக விடத்திலே எழுதியிருக்கிற படியினலேயும் இரண்டு பேச்சுமாத்திரம் எழுதினேன். அப்பால் என்னையழைத்து உன்னுடனே சொன்ன காரியம் மனதிலே வைத்து முஸ்தீதுபண்ணு என்று சொல்லிவிட்டுப் போவென்று சொல்லிப் போனுர். நான் சலாம் பண்ணிக்கொண்டு வாசல்படிமட்டுக்கும் வந்தவுடனே இவர் கோன்சேல்காரருடனே கூட்டத்துக்குப் போனுர். போனவர் திரும்ப

யும் என்னை வந்து அழைத்தார். அழைத்து நபாபுக்கும் ஷெகுமாரனுக்கும் மாபூசுகானுக்கும் காகிதமெழுதுகிற தெப்படி எழுதவேணுமென்று கேட்டார். அதற்கு எனக்குத் தோற்றினபடிக்குச் சொன்னேன். அப்படிதான் எழுதவேணுமென்று ஒத்துக்கொண்டு இந்தப்படிக்கு நான் எழுதுவிக்கிறேன் என்று சொல்லிவிட்டு, கோன்சேல் கூடியிருக்கிற விடத்துக்குப் போனார். சீர்மைக்குப் போகிற காகிதங்களுக்கெல்லாம் கையெழுத்துப் போடுகிறதற்குக் காகிதங்களெல்லாம் ஆன்வலோப்பிலும் போடுகிறதுமாயிருந்தது. நான் அனுப்புவித்துக் கொண்டு பாக்குக்கிடங்கிற்கு வந்து விட்டுக்கு வந்தேன். அப்போது பனிரெண்டு மணி வேளை.

சாயுங்காலம் ஐந்தரைமணிக்கு என்னையழைப்பித்து, தாம் நபாபுக்கு எழுதினதும் மாபூசுகானுக்கு எழுதின காகிதமும் எனக்குப் படித்துக்காண்பித்தார். அது வெகு நேர்த்தியாயிருக்கிறதென்று சொன்னேன். அதற்குச் சற்று ஸ்தவுத்தியமாகவும் சொன்னபிற்பாடு, இது மூசே தீலார்சைக் கொண்டு எழுதுவிக்கிறேன் என்று சொன்னார். அப்படிதான் செய்யவேண்டியதென்று சொன்னேன். அதன் பிற்பாடு மூசே தீலார்சை அழைக்கச்சொல்லி உத்தாரங் கொடுத்தார். அவர் வந்த பிற்பாடு அவர் கையிலே பிரான்சிலே எழுதியிருக்கிற நபாபு அன்வறதிகானுக்கும் மாபூசுகானுடைய இரண்டு காகிதமும் கொடுத்து, பார்சிலே எழுதுவிக்கச் சொல்லி, மதனுந்தபண்டிதனையும் கூட்டிவிட்டார். அவர்கள் எழுதிக்கொண்டிருக்கையிலே திரும்பியும் என்னை யழைப்பித்து ஆர்க்காட்டிலே நபாபு மகன் மாபூசுகான் நடத்துகிறதைப் பேசிக்கொண்டிருக்கும்போது சம்பதிராயனுக்கும் உசேன் சாயபுக்கும் எழுதி நபாபுக்கும் மாபூசுகானுக்கும் எழுதின காகிதத்திற்கு நகலும் அதிலே போட்டு அனுப்புகிறது யுக்தமென்று சொன்னேன். அப்படியே செய்யென்று சொன்னார். அதன் பிற்பாடு வெளியே வந்து மதனுந்த பண்டிதனை அழைப்பித்துச் சம்பதிராயனுக்கும் உசேன் சாயபுக்கும் இரண்டு காகிதம் எழுதி நபாபுக்கும் மாபூசுகானுக்கும் எழுதின காகிதத்துக்கும் நகலும் எழுதி அந்தக் காகிதத்திலே, போட்டு அனுப்பவேணுமென்றும் அந்தப்படிக்கு முஸ்தீது பண்ணச்சொல்லச் சொல்லிவிட்டு வெளியிலே உட்கார்ந்தேன் இதிலே திரும்பியும் துரை என்னை யழைக்கிறார் என்று வந்து

அழைத்தார்கள். துரையண்டைக்குப் போன மாத்திரத்திலே மூசே லபூர்தோனேயும் ஙவீல்பாதும் நடப்பித்ததும் பெருங் காற்றடித்ததும் சுவாமி, லபூர்தொனே பண்ணுகிற அக்கிரமத் துக்காகக் காற்று மழையை அழைப்புவித்து ஆக்கினை கொடுத் தார் என்று சொன்னார். இதிலே மூசே ஒகே என்கிறவன் வந் தான். அப்போது நான் சொன்னது: பட்டணத்துச் சனங்கள் சொல்லுகிற வார்த்தை கேட்கவில்லையே! அதைக் கேட்டால் மெத்த விந்தையாயிருக்கும் என்று சொன்னேன். அதெப்படி யென்று மூசே ஒகே கேட்டான். மூசே துய்ப்ளேக்கு சாந்துபோ லொத்த மனதைப் புண்ணாக்கி யவருக்கு வேசடை கொண்டு வந்துவிட்டபடியினாலே இந்தக் காற்றைக் கொண்டுவந்து, இந்தக்காற்று முன்னிலையாய் ஆக்கினை கொடுத்தாரென்றும் இங்கிலீசுக்காரர் இதற்கு முன்னே நடப்பித்ததற்கு அவர்க ளுக்குக் கொடுத்த ஆக்கினைதான் உமக்கு நன்றாய்த் தெரிந்தி ருக்கிறதே. இனிமேல் மூசே லபூர்தோனேக்கு வரப்போகிற ஆக் கினையை நீங்கள் அறியப்போகிறீர்கள் என்றும் பட்டணத் திலே ஒருத்தருக்கொருத்தர் பேசிக்கொள்ளுகிறார்களே நாம் இப்படி ஆக்கினை கொடுப்போமென்று சுவாமி அறிவிக் கிறாரென்றும் பேசிக் கொள்ளுகிறார்களென்றும் சொன் னேன். அப்பால் மூசே ஒகேயைச் சென்னப்பட்டணத்துக்குச் சலங்குப் பயணம்பண்ணி யனுப்பச் சொல்லிவிட்டு மூசே லபூர்தோனே துபாசி சென்னப்பட்டணத்துக்குப் போனவன் வந்தானாவென்று கேட்டார் வந்தானென்று சொன்னேன். இனி மேல் சிறிது விந்தையள் நடப்பிக்கிறேன். அந்தச் சம்மதியெல் லாம் நீ நன்றாய்ப் பார் என்று சொன்னார். எவர்கள் தப்பு நடந் தார்களோ அவர்களுக்கு சுவாமி ஆக்கினை கொடுப்பாரென்று சொன்னேனே என்று சொல்லிப் பின்னையும் அநேக விதமாய் இந்தப் பேச்சை இரண்டு நாழிகை தேசகாலம் பேசி, பிற்பாடு முத்தியப்பன் என்னமாயிருக்கிறான் என்று கேட்டார். நம்மு டைய தயவுக்குப் பாத்திரனாய் இருக்கிறார் என்று சொன்னேன். அவன் என்னை மோசம் பண்ணிவிட்டுப் போனதற்கு என்ன ஆதாயம் வந்ததென்று கேட்டார். இத்தனை அவஸ்தையும் கஸ்தியும் அனுபவித்ததுதான் ஆதாயம் என்று சொன்னேன். ஆனாலுன்னை ஆயிரம் தரம் எழுதச் செய்து அனுப்பச் சொன் னேன். நீயும் உன்னாலேயான பிரயாசையெல்லாம் பார்த்தா லும் வராமல் போனாலே இப்போது மெத்த நேர்த்தியான சங்க

தியின்பேரிலே வந்தானே என்று கேட்டார். அவனுக்குத் துரதிர்ஷ்டம் போராடும்போது ஏன் வரவொட்டும்? இப்போது அவனுக்கு நல்ல அதிர்ஷ்டம் இப்போதுதான் வந்ததென்று சொன்னேன். அதெப்படி என்ருர். உம்முடைய மனதிலே எப்போது அவனை நினைக்கத் திறம் வந்ததோ சுவாமி அவனுக்கு நல்ல காலம் காண்பிக்கிறதற்கு அடையாளம் என்று இப்படி ஸ்தவுத்தியமாய் அநேகமுண்டு. நான் சொன்னதும் அவர் சொன்னதும் கடைசியிலே உன்பேரிலே இருக்கிற பக்ஷத்திலே உங்களவர்கள் அவரென்ன நடத்தினாலும் மனம் பொறுக்க வேண்டியிருக்கிறது என்று சொன்னார். நான் உம்முடைய அடிமை. குடும்பத்துடனே இருக்கிற நானபடியினாலே எங்களை ரக்ஷிக்கிற கடமை உமக்கு என்று மிகுந்த உபசாரம் சொன்னேன். இதிலே முசே துபுவா வந்தான். சீக்கிரமத்துக்கு ஆற்காட்டுக் காகிதத்தை எழுதுவித்துப் பயணம் பண்ணியனுப்பிச் சென்னப்பட்டணத்திற்குப் போகிறதற்கு மனுஷரை அனுப்புகிறதற்கு எத்தனம்பண்ணி முஸ்தீதுபண்ணு என்று சொன்னார். அந்த மட்டுக்கும் நான் வீட்டுக்கு வந்தேன். சென்னப்பட்டணத்துக்குத் தம்பியை திருவேங்கடத்தின் பிறகே போகிறதற்கு ஒரு பார்சினீசை முஸ்தீதுபண்ணுவித்தேன்.

இற்றைநாள் ராத்திரி மசுக்கரைக்கு இங்கிலீசுக்காரரது பங்கோவிலிருந்து வந்ததைப் பிடித்து மாத்துரு என்கிற கப்பலை மசுக்கரைக்குச் சீர்மைக் காகிதங்கூட கொடுத்தனுப்பிப் பயணம் அனுப்பினார்கள்.

*1746* ஆ ஒக்தோபர் மீ *27* உ க்ஷய அக்ஷய ஞூ அற்பிசி மீ *14* உ வியாழக்கிழமை.

இற்றைநாள் நடந்த காரியம் என்னவென்ருல்: காலமே சாமத்துக்குள்ளே பொம்மையாபாளையத்து பாலய்யர் மடத்துச் சமஸ்தானத்திற்குத் துறையூரிலிருக்கிற பச்சை கந்தப்பய்யர் பழனியிலே ஒரு தபசியாயிருந்தவரை அழைத்துக்கொண்டு வந்து இன்றையதினம் காலை ஐந்தரை நாழிகைக்குப் பட்டங் கட்டினார்கள். முன் வைகாசி மீ 11உ (27 மே மீ) காலம் பண்ணிப்போன பாலய்யர் விவேக சூனியமாயிருந்திருக்கிறபடியினாலே குட்டித்தம்பிரான்களெல்லாம் தலைக்குத் தலை பெரியதனம்பண்ணி மடத்தை வாழ வைத்தார்கள்.

இற்றைநாள் அந்த இடத்துக்கு இப்பட்டங் கட்டின பாலய்யர் நடத்தையும், விவேகமும், யோகமும், திட்டமும் இனிமேல் அறியவேண்டியது. இதற்கு நாம் போகவேணு மென்றிருந்தோம். இவ்விடத்து அலுவலிலே இரண்டு கிசம் சிகப்பு சகலாத்து ஆறுமுகம் பண்டாரம் வசம் கொடுத் தனுப்பினோம்.

இற்றை நாள் காலத்தாலே துரை யென்னை யழைத்து, பார்சினிசு ஒருத்தனை முஸ்தீதுபண்ணச் சொன்னேனே, அந் தப்படி முஸ்தீதுபண்ணினையா என்று கேட்டார். முஸ்தீதாயி ருக்கிறான் என்று சொன்னேன். இவனைச் சம்பாதித்தும் ஙிரி கையில்லை. இவனுக்குப் பறங்கிப்பேச்சுத் தெரியாதே, உன் தம்பி வியாதியாயிருக்கிறான் என்று சொன்னையே இனிமேல் ஒருத்தன் கெட்டிக்காரனாய்ப் பறங்கிப்பேச்சு அறிந்தவனாக வல்லோ தேடவேணும் இதற்கெப்படி மார்க்கம். விசாரி என்று சொன்னார். நல்லதென்று விசாரிக்கிறோமென்று சொன்னேன். அப்பால் சற்று நேரம் பொறுத்து, திரும்பியும் என்னை யழைத் துச் சென்னப்பட்டணத்துப் பாளையக்காரர் தனத்துக்கு முத் தியப்பனையனுப்பலாமா வென்று கேட்டார். அனுப்பவாம். அவ னும் பாத்திரந்தானிந்த இடத்துக்கு என்று சொன்னேன். அப்பாலவனைக் கண்டுபேசி இனம்பண்ணு என்று முஸ்தீதாய் இருக்கச்சொல்லென்று சொல்லி அறுபது சேவகரை வைக்கச் சொல்லென்று சொன்னார். அதற்குப் பணம் நீ கொடு என்று சொன்னார். அதற்கு நான் சொன்னது: சென்னப்பட்டணத் துப் பாளையக்காரன் பலத்தவன் சுத்துப்பேட்டிலே இருக்கிற பாளையக்காரரெல்லாம் பலத்தவர்கள். அவர்களெல்லாம் இவனுக்குப் பந்துக்களானபடியினலே அவர்கள் சோருவரி பண்ணுவார்கள். அதற்கு நான் அறிந்த மட்டுக்கும் சொல்லு கிறேன் என்று சொன்னேன். நல்லதுதாவிந்தச் சமயத்துக்குப் போனால் அவ்விடத்துக் காரியத்துக்குத் தக்கதாய் பார்த்துக் கொள்ளுவோம் என்று சொன்னார்கள். நான் ஒரு வார்த்தை மனுபண்ணிக்கொள்கிறேன். தயவுபண்ணிக் கேட்கவேணும் என்று சொன்னேன். நல்லது சொல்லென்று சொன்னார். முத்தியப்பன் போய் சும்மா வந்தால் நன்றாயிராது. எப்போதும் முன்னிருந்தபடிக்கானால் கவையில்லை. மத்திய சிறிது நாள் வெளியே போயிருந்து வந்தபடியினாலே அது ஒரு இகழியாய்

இருக்குமென்றும் தோற்றுதென்று சொன்னேன். நல்லது போனால் அவனுக்கேற்ற உத்தியோகம் அத்தாக்ஷி வராதென்று சொன்னார். அதன்பேரிலே நான் வெளியே வந்து அருணாசலசெட்டியை அழைத்துத் துரை என்னுடனே சொன்ன சேதியும் சொல்லி முத்தியப்பிள்ளை சென்னப்பட்டணத்துக்குப் போகிறதற்குச் சம்மதிபண்ணிக்கொண்டுவா என்று சொல்லி யனுப்பினேன். அவர் முத்தியப்பிள்ளை யண்டைக்குப் போய் நான் சொன்ன சேதியும் தம்பி திருவேங்கடம் சென்னப்பட்டணத்துக்குப் போகிறதில்லை யென்று உட்கார்ந்துகொண்டிருக்கிறான். அவனுக்குச் சென்னப்பட்டணத்துக்குப்போகத் தக்கதாகத்தெரியச்சொல்லச்சொல்விச் சொல்லியனுப்பினேன். அந்தப்படிக்கு அவனுக்கும் சொல்லி மறுபடி அருணாசலசெட்டி என்னுடனே வந்து சொன்னது: முத்தியப்பிள்ளைக்குச் சொன்னவிடத்திலே சென்னப்பட்டணத்துக்குப் பெரிய துபாசித்தனத்துக்குத் தானே போகத் தக்கதாகப் பார்க்கிறது நல்லது, அதற்கு இமிடாத பக்ஷத்துக்குப் பாளையக்காரத்தனத்துக்குத் தானே பார்க்கிறதுதான் எல்லாவற்றிற்கும் துரையுடனே நல்லதென்று சொல்லிவிட்டு வீட்டுக்கு வந்தவுடனே நானும் வீட்டுக்கு வந்து கண்டு பேசிக்கொள்ளுகிறேனென்று சொன்னதாய் வந்து சொன்னான். தம்பி திருவேங்கடத்துக்குச் சொன்னவிடத்திலே அவன் சம்மதிக்கிறதாய்க் காணவில்லை. லோகத்தினுடைய ஆசைவிட்டு விரத்தியாய்ப்பேசுகிற பேச்சாயிருக்கிறது. அதற்கும் முத்தியப்பிள்ளையவர்கள் சொன்னது: நான் வந்து தம்பி திருவேங்கடத்துக்கும் சம்மதியாய்ச் சொல்லுகிறேனென்று சொன்னதாக அருணாசலசெட்டி வந்து சொன்னான். அதன் பிற்பாடு துரை அண்டைக்குப்போய் முத்தியப்பன் சம்மதித்து நீங்கள் எந்தப் புத்தி சொன்னால் அந்தப் புத்திப்படிக்குக் கேட்கிறோம் என்று சொன்னார் என்று உபசாரமாய் வரச்சொன்னதாய்ச் சிறிது வார்த்தைச்சொன்னேன். நகைத்து, நல்லது அந்தப்படிக்குச் சேவகர் மற்றப்பேரை சிக்கிரமத்துக்கு முஸ்தீதுபண்ணி அந்தக் காரியத்தின்பேரிலே திருஷ்டிவைத்துப் பார்த்திரு என்று சொல்லிவிட்டு,மறுபடியும் நபாபுக்கும் ஷெ மகனுக்கும் (மாபூசுகான்) உசேன் சாயபுக்கும், சம்பதிராயனுக்கும் காகிதமாச்சுதாவென்று கேட்டார், ஆச்சுதென்று சொன்னேன். வக்கீல் சுப்பய்யனுக்கும் காகிதம் எழுதியனுப்பச்சொல்லிச் சொன்னார். அந்தப்படிக்கு எழுதி

நபாபு உசேன் சாயபு, சம்பதிராயன் மூன்றுபேர் காகிதம் ஒருத்தன் கையிலேயும், அப்பால் மாபூசுகானுக்கு எழுதின காகிதம் ஒருத்தன் கையிலேயும் கொடுத்து மாபூசுகான் ஆற்காடுவிட்டு எங்கே இருந்தாலும் கொண்டுபோய் கொடுக்கச் சொல்லியும், மற்ற மூன்றுபேர் காகிதமும் ஒருத்தனை ஆற்காட்டிலே கொண்டுபோய் இருக்கச்சொல்லியும் இந்தப்படிக்குத் திட்டம் பண்ணி அனுப்பிப்போட்டுத் துரைக்கும் கபுறு சொன்னேன். இந்தக் காகிதத்திலே எழுதின சேதி என்னவென்று உங்கள் கொடிபோட்ட கப்பலைப் பிடித்துக்கொண்டதற்கு உங்கள் நிமித்தியம் எங்கள் வசம் சிறிது சண்டைக்கப்பலை யனுப்பி, அந்தக்கோட்டையை வாங்கி, தம்முடைய நிசான்போட்டு, சிறிது நாளைக்குப் பிறகு உங்கள் வசத்திலே ஒப்புவித்துப்போடச்சொல்லியும் அந்த மட்டுக்கும் என் வசத்திலே வைத்துப்போட்டுப் போனதாகவும், இதல்லாமல் போனவருஷம் வந்தபோது நீராய் பலவந்தமாய் இங்கிலீசுக்காரர்பேரிலே சண்டைபண்ணச்சொல்லியும் அதற்கு என்ன மற்றது பண்ணவேணுமோ அந்த மற்றதெல்லாம் பண்ணுகிறோமென்றும் இந்த ராச்சியத்திலே இங்கிலீசுக்காரரையே வைக்கப்போகாது உங்கள்கொடி எங்கும் பறக்கவேணுமென்றும் பின்னையும் நீர் சொன்னபேச்சும் தை மாதத்திலே யும்முடைய குமாரன் மாபூசுகான் வந்தபோது சொன்ன வார்த்தையும் மறந்துபோட்டு இப்படி இங்கிலீசுக்காரருக்காக உம்முடைய குமாரன் என் தமையன் மாபூசுகான் மற்றது பண்ணி நடத்துகிறது மெத்த ஆச்சரியமாயிருக்குதென்றும், பிரான்சுக்காரர் எப்போதும் சௌகரியவந்தர்கள் என்றும் அவர்களுடனே யுத்தம் பண்ணுகிறதற்கு ஒருத்தருக்கும் அசாத்தியமென்றும் இப்போது இங்கிலீசுக்காரர்பேரிலே காண்பிக்கப் பராக்கிரமத்தை யும்முடைய குமாரன்பேரிலே எங்கே காண்பிக்கிறார்களோ என்று எனக்கு மெத்தமாயிருக்கிறது என்றும் அல்லவென்றும் நீங்கள் தூரத்துயோசனை பண்ணாமல் நடத்தினீர்களேயானால் உங்களுக்கும் எங்கள் சௌகரிய பராக்கிரமம் பரிசையும் கொடுத்து அப்பால் சென்னப்பட்டணத்தையும் கோட்டையூர் சமஸ்தமும் படுசூரணம் பண்ணிப் பூமியோடே பூமியாக்கி அப்பால் நடக்கவேண்டியதும் நடத்தவோ, இது பிரத்தியக்ஷமாய் நீங்கள் பார்ப்பீர்கள்

என்று கடினமாகிய உத்தரவாய் தகப்பனுக்குக குமாரன் எழுதுகிற சாடையா யெழுதி அப்பால் மாபூசுகானுக்கும் தமையனுக்கும் எழுதுகிற சாடையாயெழுதி நபாபுக்கு எந்தச் சுறுக்கு எழுதியிருக்கிறதோ அந்தச் சுறுக்குதான். ஆனால் இதிலே ஒன்று அதனம். உடைந்துபோன கப்பல் பார்க்கப் புறப்பட்டீர்களென்றும் அது என்ன பிரயோசனம். உடைந்து போன பலகையிலே என்ன அகப்படப்போகுதென்று எழுதி அப்பால் நீர் சென்னபட்டணத்தின்பேரிலே எங்கள்பேரிலே ராசகாரியம் பண்ணத்தக்கதாகவும் இங்கிலீசுக்காரருக்கு மற்றதாய்க் கோட்டை வாங்கிக்கொடுக்கத் தக்கதாகப் புறப் பட்டீரென்று கேள்விப்பட்டோம் என்கிற சொல் அதனமா யெழுதப்பட்டிருக்கும். மற்றது எல்லாம் நபாபுக்கு எழுதின காகிதம் கண்டிப்புதான். உசேன் சாயபுக்கும், சம்பதிராயனுக் கும், எங்களுக்கும். உங்களுக்கும் வெகு நாளாய் சிநேகமாய் இருக்கிறபடியினாலே நபாபு குமாரன நடப்பிக்கிறதற்கு ஒரு பொல்லாப்பு வராமல் அவனைக் காத்துக்கொள்ளவேண்டி யவனுக்குத் தெரியச்சொல்லிப் போகாதபடிக்கு நிறுத்தச் சொல்லியும், ஆப்பித்திகரித்துச் சிநேக மரியாதையாய் எழுதின தாய் எழுதியனுப்பினேன்.

*1746* ஆ ஒக்தோபர் மீ *27*உ க்ஷய ஹூ அப்பிசி மூ 14உ வியாழக்கிழமை.

மயிலாப்பூர் அமுலதாரனுக்கு ஒரு காகிதம். தாங்கள் மனுஷர் போக்குவரத்தாய் இருக்கிற பேர்களைத் தொந்தரவு பண்ணினால் சிநேகத்துக்கு விரோதம் வருமென்றும் அப்பால் நடக்கிறது தெரியுமென்றும் கண்டிப்பாய் எழுதி டபாலிலே கொடுத்து மயிலாப்பூர் அமுல்தாரனுக்கு அனுப்பச்சொன்னார். அந்தப்படிக்கு அனுப்பிவிட்டேன்.

அப்பால் வீட்டுக்கு வந்தபிற்பாடு முத்தியப்பிள்ளையவர் களும் வந்தார். அருணாசல செட்டி வந்தவன் தம்பி இருக்கிற வீட்டிலே போய் எனக்குச் சொல்லியனுப்பினவுடனே நானும் அவ்விடத்துக்குப் போனேன். அப்பால் முத்தியப்பிள்ளையவர் களுக்குத் துரையவர்கள் சொன்னதும் அது நான் சொன்னது முன் எழுதியிருக்கிற சாடைப்படிக்குச் சமஸ்தமும் துரைக்கும் எனக்கும் நடந்த சமாசாரம் எல்லாம் சொன்னேன். அவர் உங்களுக்கு எப்படி சம்மதியோ அப்படி நடத்திக்கொள் ளுங்கோளென்று சொன்னார்.

அப்பால் பேச்சுப்பேச்சாய் பேசச்சே தம்பி திருவேங்கடமிருந்துகொண்டு நான் சென்னப்பட்டணத்துக்குப் போகிறதில்லை யென்றும், அதற்குத்தக்க விரக்குத்திப்பேச்சுமாய்ப் பேசினதற்கு அப்படி சொல்லவேண்டாமென்று என்ன சொன்னாலும் அப்பால் சுறுக்காய் எதிர்த்துக்கூடப் பேசினான். இதுவரையிலே என் முன்னே ஒருக்காலும் பேசினவனல்ல. நம்முடைய வேலைக்குத் தக்கதாயிருக்கிறது. இப்போது இவன் எதிர்த்துப்பேசுகிறதும் என்று சொல்லி அப்பால் முத்தியப் பிள்ளையவர்கள் அருணாசலசெட்டியைத் தெரியச்சொல்லச் சொல்லினான். ஸ்நானம்பண்ணிச் சாப்பிடப்போனேன். சாப்பிட்டுவருந்தனியும் அவர்கள் தெரியப்படச்சொல்லிப் பேசாரி என்னண்டைக்கு வந்து என்னசொன்னாலும் கேட்கவில்லை. நீங்களினிமேல் விஸ்தரிக்கவேண்டாம் என்று சொல்லிப் போட்டு முத்தியப்பிள்ளையும் அருணாசலசெட்டியும் போனார்கள். ஆனால், என்னை ரக்ஷிக்கும்பொருட்டுப்போலே தோற்றுதேயல்லாமல் அவரவருக்கு ஆசையும் பாசமுமில்லைப்போலே காண்கிறது எனக்குக் கால் சுவஸ்தப்பட்டால் இவனும் எதிர்த்துப்பேசான். உத்தியோகச்சோர்வையும் உண்டாயிருக்கும். இன்னம் அந்த சேஷமிருக்கிறபடியினாலே யவனுக்கு ஒருக்காலும் இல்லாத புத்தியெல்லாம் இப்போது வந்தது என்று எண்ணிக்கொண்டேன்.

சாயுங்காலம் வந்து சொன்ன கபுறு என்னவென்றால்: அச்சைக்கு என்று பாயெடுத்து ஐந்து கப்பல்சாரும் மசேலபூர் தோனே சென்னப்பட்டணத்திலிருந்து வருகிறவனைப் போய் காண்பித்துக்கொண்டு அவன் பிறகே வந்தான். அந்த இரண்டு கப்பல் இங்கேயிருந்துபோன கப்பல்கள் ஐந்து ஆக ஏழு உருப்படியும் காண்பித்து வீராம்பட்டணத்துக்கு நேராய்க்கொண்டு போய் வைத்துப் பிடித்தார்கள் என்று துரை சேவகன் சொன்ன கபுறு வந்தது.

1746 ஆ ஒக்தோபர் மீ 28 உ க்ஷய வருஷம் ஐப்பசி மீ 15 உ வெள்ளிக்கிழமை

இற்றைநாள் காலத்தாலே குவர்னதோர் வீட்டுக்குப் போனவிடத்திலே சென்னப்பட்டணத்திலிருந்து டபாலிலே வந்தது. அங்கே துலுக்கர் மனுஷர், வண்ணாந்துறையிலே கொள்ளையிட்டதும், அங்கே யிருந்தவனைப் பிடித்து அடித்த

தும், இதல்லாமல் வந்திருக்கிற குதிரைக்காரன் பண்ணுகிற லூட்டியும் இது எழுதிவந்தது. இதல்லாமல் முசே லயூர் தோனே அச்சிக்குப் புதுச்சேரி கோன்சேலியர்கள் பயணம் பண்ணினதைப் போகவேண்டாமென்று தன் பிறகே லயூர் தொனே வரச்சொல்லுகிறதும் இதுகளுக்குப் பெடுத்தெலேன் முதலான கப்பல் கப்பித்தான்மார் எழுதுகிற காகிதத்துக்கு ஆகவும் கோல்சேல் கூடினார்கள். ஏழுமணி நேரத்தே கூடினார்கள். அப்போது கோன்சேல் தீர்ந்தபிற்பாடு கோவிலுக்குப் போய் பூசைகேட்டுவந்து கப்பே குடித்து மறுபடியும் கோன்சேல்கூடி பனிரெண்டுமணிமட்டுக்கும் கூடியிருந்து சென்னபட்டணத் துக் காகிதமும் கப்பலுக்குக் காகிதமும் அனுப்பினார்கள். இதற்குள்ளே ஒருதரம் கோன்சேல்கூடியிருக்கச்சே என்னை மதனந்தபண்டிதனையும் துரை அழைக்கச்சொல்லிக் கேட்ட வடணம்: மிரசுசாலிபெக் என்கிறவன் நபாபு உடைய உறவின் முறையானுவென்று கேட்டார். பெக்கு என்றும் மிரசா என் றும் பேருடையவர்கள் மொகல் சாதி, நபாபு சாதி, செக்கு சாதி இவர்களுக்கும் அவர்களுக்கும் சம்பந்தம் நடவாதென்றும் மதனந்தபண்டிதன் சொல்லுகிறதாய்ச் சொன்னேன். பின்னை யாரவர்கள் என்று கேட்டால் நபாபு அண்டையிலே சமேத் தாரிலே இரண்டு மூன்று பேர்கள் அண்ணன் தம்பிமார்கள் இருக்கிறார்கள் என்று சொல்லி அதிலே ஒருத்தன் அப்துல் சலீ லண்டையிலே விழுப்புரத்திலே உத்தியோகம் பண்ணுகிற தாக மதனந்தபண்டிதன் சொன்னபடிக்குச் சொன்னேன். நல்லதென்று சொல்லி, இங்கேயிருக்கிற துலுக்கரிடத்திற்குப் போய் விசாரித்து வரச்சொல்லிச் சொன்னார். அந்தப்படிக்குப் போய் வந்து முன் சொன்னபடிக்குத்தானே சொன்னான். அந்தப்படிக்குத் துரையுடனே சொன்னேன். அவர் காரியம் இன்னதென்று சொல்லாமல் பேர்மாத்திரம் ஆனாலும் நான்கு தரம் மூன்றுதரம், நான்கு மூன்று விதமாய் வந்து கேட்டார். அப்படி பேருண்டாயிருக்குமென்று சொன்னோம் அப்பால் பனிரெண்டு மணிக்கு அரியப்பமுதலிக்குப் பிறந்திருந்த பிள்ளை மூன்று வயதாவது செத்துப்போய்விட்டபடியினாலே நானும் தானப்பமுதலியும் வந்து உபசாரஞ்சொல்லிவிட்டு வீட்டுக்கு வந்தேன்.

அப்பால் மத்தியானத்துக்குமேலாக குவர்னதோர் அழைப் பித்துச் சென்னபட்டணத்தண்டையிலே இறங்கியிருக்கிற

மீர்சவிபேக்குக்கு ஒரு காகிதம் எழுச்சொன்னார்கள். தான் வந்து இவ்விடத்திலே முகதாவிலே பேசிக்கொண்டு போக வேணுமேயல்லாமல் இவ்விடத்திலே சோரரவரி பண்ணுகிறது நியாயமல்ல. அப்படி நடப்பித்தால் அதைத்தொட்டுப் பொல்லாப்பு வருமென்று காகிதமெழுதி பாசில்மமுது கையிலே கொடுத்தனுப்பினேன்.

முத்தியப்பிள்ளையவர்கள், சேவகர் அறுபதுபேரைக் கூட்டச்சொல்லி நூற்றைம்பது ரூபாய் வீரராகு கொண்டு போய்க் கொடுத்துவிட்டு வந்தான். அவரும் சிறிதுபேரை முஸ்தீதுபண்ணினோமென்று சொல்லியனுப்பினார்.

சென்னபட்டணத்திலே இருந்து 12உ கண்டால் குருவப்பசெட்டி எழுதின இரண்டு காகிதங்கள் இற்றை நாள் வந்ததை இதன் கீழே காகிதத்திலே எழுதியிருக்கிறபடிக்கு எழுதினோம்.

இற்றைநாள் முசே லபூர்தோனே கப்பல் லசீலிலே பதினைந்து பீரங்கி போட்டான். கரையிலேயும் பதினைந்து பீரங்கி போட்டார்கள். அப்பால் முசே லபூர்தோனே இறங்கவில்லை. லபூர்தொனே தட்டுமுட்டு, பின்னையும் கப்பல்காரர் தட்டு முட்டுகள் சமஸ்தமும் காபிரிகள் உள்பட ஏற்றிக்கொண்டான்.

*1746*-ம் ஆ ஒக்தோபர் மீ *29*உக்கு அக்ஷய ஹு அர்ப்பிசி மீ *16* உ சனிவாரம்

இற்றைநாள் காலமே ஐந்துமணிக்கு ஒரு படகின்பேரிலே சென்னபட்டணத்திலே கொம்மாந்தானாயிருந்த தெப்பிறமேனியும் கடற்கரையிலிருந்த முசே கோந்தலேநும் வந்து சேர்ந்தார்கள். இவர்கள் வந்த காரியம் என்னவென்று பார்க்கும்போது இதிலே தெப்பிறமேனி, துபாசி கந்தப்பன் வந்தான். அவனை என்ன, முசே தெப்பிறமேனி வந்தவரலாறென்னவென்று கேட்டதற்கு, புதுச்சேரியிலிருந்து முசே தூப்ப்ளேக்ஸ் குவர்னதோர் வரச்சொல்லிக் காகிதம் எழுதியனுப்புவித்தார். அந்தக் காகிதம் முந்த நாள் ராத்திரி பத்துமணிக்கு வந்ததே, வந்த அப்போதுதானே தோணி முஸ்தீதுபண்ணி ஏறி இன்றைக்கு இருட்டோடே வந்து சேர்ந்தோம். முசே புரி மகனைப் பிடித்துக்கொண்டுபோன சேதி யென்னவென்று கேட்

டதற்கு அவனைப் பிடித்துப் போகிறார்களென்று மூசே துய்ப்ளேக்ஸ் உடன் பிறந்தான் மகன் மூசே கேர்சாமையும் மூசே கோசையும், முப்பது மாயே சிப்பாய்களையும் கூட்டி அவர்கள் பேரிலே கையாடவேண்டாம் நல்ல பேச்சாயவர்களுக்குத் தெரியப்படச்சொல்லி யழைத்துவரச்சொல்லி யனுப்பினதாயும் இவர்கள் போனவுடனே முப்பதுபேர் குதிரைக்காரரும், ஐம்பது கால்நடை சேவகரும் வந்து வளைத்துக்கொண்டு தள்ளிக் கொண்டுபோகச்சே நாங்கள் கையாடுவோமா என்று எத்தனை விதமாய்க் கேட்டாலும் புதுச்சேரி குவர்னதோர் உத்தாரமில்லை, அப்படியிருக்க, நான் உத்தரவு கொடுக்கப் போகாது என்று மூசே தெப்பிறமேனி சொன்னபடியினாலே போன ரெண்டு வெள்ளைக்காரரும் மாயே சிப்பாய்களும் கூப்பிடாதே அவர்கள் பிறகே போனார்கள். அவர்கள் கொண்டு போய் மயிலாப்பூரிலே மூசே புரி மகனுடனே கூட இவர்களையும் வைத்தார்கள். இதல்லாமல் பெத்துநாயக்கன் பண்ணுகிற கிலாறுதான் ஊரிலே கொள்ளையிடுகிறது. வண்ணான் துறையிலே புடவை திருடினது. இதுவுமல்லாமல் பிரான்சுக்காரர் மனுஷர்களைக் கண்டால் பிடிக்கிறதும் அடிக்கிறதுமாக நடத்துகிறதெல்லாம் அவன்தானென்று வெகு சாக்கெல்லாம் வெளிப்பட்டுப்போச்சுதென்றும், இன்னும் கொஞ்சம் நஞ்சமிருக்கிறதற்கு அவர்கள் வந்து பேசுகிறார்கள். இதிலே இவன் புறப்பட்டு வந்துவிட்டானென்றும் இனிமேல் என்ன நடக்குமோ தெரியாது. இப்போதானாலும் பத்துப்பணம் விஸ்தாரமாய்ப் பின்னையும் அவ்விடத்திலே மாசு (M Morsei முதலானபேரை காவல் வைத்திருக்கிற சம்மதி முதலானதெல்லாம் சொன்னான். மலைக்கொழுந்தன் பத்துப்பணம் விஸ்தாரமாய்ச் சம்பாதித்தானென்றும் சொன்னான். எல்லாவற்றிற்கும் தம்பி அண்டைக்கு வந்து தெரியப்படச்சொல்லிப் போகத்தக்கதாகச் சொல்லுகிறேனென்று சொல்லிப்போனான்.

இற்றைநாள் இதல்லாமல் கந்தப்பன் சொன்னது: வண்ணான் துறையிலே திருடினவர்கள் பெத்துநாயக்கன் மனுஷன் ஆனபடியினாலே திருடினவர்களுக்குள்ளே ஒருத்தன் அகப்பட்டவன் பெத்துநாயக்கன் மனுஷன் என்றும் அவன் சொன்னபடியினாலே பெத்துநாயக்கனைப் பிடித்துக் காவல் வைக்கவேணுமென்று நினைத்தமாத்திரத்திலே அந்தச் சேதியவன் அறிந்து

சைதாப்பேட்டை மயிலாப்பூர் போய்ச்சேர்ந்தானென்றும், பின்னையும் சென்னப்பட்டணத்துக்குப் போவதிலே பத்துப் பணம் எல்லாரும் கிரகித்தார்கள். நானும் தம்பி திருவேங்கடம் பிள்ளையவர்களும் ஒரு காசும் அறியோம். அதிலேயும் எனக்கு ஏதாகிலும் சத்து ஒட்டினது கொள்ளையுடைமையிலே உண்டு அவருக்கு. ஆனால் கடலைத்தின்று கை கழுவினாப்போலே வந்தார் என்று சொல்லிவிட்டுப் போனான்.

இற்றைநாள் காலத்தாலே மூசே தேப்பிரமேனி சென்னப் பட்டணத்திலேயிருந்து வந்தவன் துரையைக் கண்டு பேசிவிட்டு வீட்டுக்குப் போனபிற்பாடு கோன்சேல் கூடினார்கள். சென்னப் பட்டணத்துமேலே துலுக்கர் பண்ணுகிற ராசகாரியத்துக்கு நிமித்தியமும் மூசே லபூர்தோனே இவ்விடத்துக்கு மூசே தோடு தெலேன் கப்பலுடனே கூடவந்த மூன்று கப்பலையும், மூசே லபூர்தோனேயோடே கூடவந்த கப்பலிலே வீசு என்கிற கப்பலும் சேன்லூய் என்கிற கப்பலையும் முன் அச்சைக்குப் பயணம் பண்ணினதை இவன் நிறுத்தின பிறகே கோவைக்கு வரச்சொல்லிச்சொன்னதற்குக் கோன்சேல், புதுச்சேரி கோன் சேல்படிக்கு நாங்கள் கேட்கவேணுமே என்று கேட்டதற்குக் கும்பினீர் கப்பல்களெல்லாம் என் ஒடுதிப்படி நடந்துகொள்ள சொல்லி மினிஸ்தர்கள் உத்தாரப்படிக்கு நடந்துகொள்ளுகிறீர் களோ என்று அவன் கப்பல் கப்பித்தான்மார்களெல்லாம் தன் கப்பலிலே அழைப்பித்துக் கோன்சேல்பண்ணி கேட்டவிடத் திலே மினிஸ்தர்கள் ஒடுதிப்படி உம்முடைய உத்தாரப்படியே நடத்துகிறோமென்று சொல்லி அவன் பிறகே கோவைக்குப் போகத்தக்கதாகப் புதுச்சேரி கோன்சேலுக்குக் காகிதம் எழுதினபடியினாலே அதற்குப் புதுச்சேரி கோன்சேல் ஆலோ சனைபண்ணி உங்களுக்கு எப்படி சம்மதியோ அப்படி நடப் பித்துக்கொள்ளுங்கள். நாங்களும் சேர்மைக்கு எழுதியனுப்பு கிறோம் என்று எழுதியனுப்பிவிட்டதாயும், அதன்பிற்பாடு பின்னையும் கோன்சேல் பண்ணிக்கொண்டிருந்தார்கள். இப்படி இருக்கச்சே கண்டால் குருவப்பசெட்டி எழுதியனுப்பின காகிதம் வந்தது. அந்த வயணப்படிக்குக் கீழே எழுதியிருக் கிறது.

இற்றைநாள் கோன்சேல்கூடி இருக்கச்சே சென்னப் பட்டணத்திலே பறங்கிப்பேச்சு, துலுக்குப்பேச்சுப் பேசுகிறவ னாகக் கெட்டிக்காரனாக ஒருத்தனை அனுப்பவேணுமென்றும்

உன் தம்பிக்குத்தான் சரீரம் சுவஸ்தமில்லையே யாரை அனுப்பலாமென்று கேட்டார். யாரை அனுப்பலாம், ஒருத்தரைப் பார்த்துச் சொல்லுகிறேன் என்று சொன்னேன். அதற்குத் துரை இருந்துகொண்டு முத்தியப்பனை அனுப்புவித்தால் துலுக்குப்பேச்சுக்கு மாத்திரம் சினப்பையனை அனுப்புவோமென்று சொல்ல வந்தார். முத்தியப்பிள்ளையவர்கள் இதற்கு நாலு நாழிகைக்கு முன்பாக இந்தூர் தோரணம் கட்டச் சொல்லியும், ஊரை முற்றுகைப் போடச்சொல்லியும் சென்னப்பட்டணத்தண்டையிலே நூறு நூற்றியைம்பது குதிரைக்காரர் வந்து சென்னப்பட்டணம் முற்றுகைப்போட்டு வெள்ளைக்காரர் முசே புரி மகன் முசே கேர்சாம், கோசு மூன்றுபேரையும் பிடித்துக்கொண்டுபோன சேதி: இப்படி கலாபமாய் இருக்கிறபடியினாலே இங்கேயிருந்து போகிற தாவு மான பிறகேயல்லோ போகவேணும். அது எனக்குச் சம்மதியாயிருக்கவில்லை என்றும், எல்லாவற்றிற்கும் தாங்களிப்படி வரச்சே வந்தால் கண்டு பேசிக்கொள்ளலாம் என்றும் அதற்கு முன்னே நான் போகிறதாய்த் துரையுடனே சொல்லவேண்டாம் என்று அருசனுலசெட்டியுடனே சொல்லியனுப்பினபடியினாலே இதை ஒரு மார்க்கமாய்ச் சொல்லுவோம் என்றும் முத்தியப்பன் சேவகருக்கு அங்கங்கே எழுதியனுப்பி இருக்கிறான். அவர்கள் வந்துசேர இரண்டுநாள் செல்லும். அவர்களும் வந்துசேர்ந்தவுடனே முத்தியப்பன் போகிறானேயல்லாமல் இப்போது சத்தியாய்ச் சென்னப்பட்டணத்திலே எங்கள் தம்பி பிறகே போன ரங்கப்பச்செட்டி இருக்கிறான். அவனுக்குத் துலுக்குப்பேச்சும் தெரியும், பறங்கிப்பேச்சும் தெரியும் என்றும் அவனல்லவே தண்டிவேலி தண்டி துலுக்கர் சம்மதி நன்றாய் அறிவானென்றும் சொன்னேன். தவாலியாவென்று கேட்டார் ஆமென்று சொன்னேன். ஆனாலவன் கெட்டிக்காரன் தான். அவனை எழுதியனுப்புவோமென்று கோன்சேல்கூடி எழுதுகிற காகிதத்திலே ரங்கப்பச்செட்டியென்று அங்கே இருக்கிறான், அவனை வைத்துக்கொண்டு துபாசித்தனம் பண்ணிக்கொள்ளச் சொல்லி கோன்சேல் காகிதத்திலே எழுதினார்கள். இதிலே துரை எழுந்திருந்து இப்பால் வந்து என்னைக் கேட்டது சென்னப்பட்டணத்தின்பேரிலே இந்த இங்கிலீசுக்காரருடைய யோசனையின்பேரிலேதானே இந்தத்

துலுக்கர் நடத்துகிறதென்று கேட்டார். ஆமென்று சொல்னேன். இதற்கு எப்படி யோசனை யென்று கேட்டார். இங்கிலீசுக்காரரை யெல்லாம் இந்த வூரின்பேரிலே துலுக்கரைக் கொண்டு ராசகாரியம் பண்ணுகிறீர்களே, ஆனாலுங்களை யெல்லாரையும் இத்தனை நாளும் மரியாதையாய் வைத்திருந்தோம் இனிமேலுங்களை ரொம்ப அவமரியாதைபண்ணுவோமென்று மேஸ்தர் மாசு முதலானபேரை சத்து சக்குதிபண்ணினால் அதன்பேரிலே யவர்கள் துலுக்கருக்கு அப்பா ஐயா வென்றும் எழுதிக்கொள்ளுவார்கள். தங்கள் பாளையக்காரனுக்கும் தாக்கீதுபண்ணிக்கொண்டு வெளியிலேயிருக்கிற குதிரைக்காரருடனே கூடிக்கொண்டு கலாபம் பண்ணுகிறவனையும் வேண்டாமென்று நிறுத்துவார்கள். எல்லாக் கலாபமும் மட்டுப்பட்டுப்போகும் என்று தோற்றுது என்று சொன்னேன். அப்போது தானே கோன்சேல் கூடியிருக்கிற விடத்துக்குப போய்ச்சென்னப்பட்டணத்துக்குப் போகிற காகிதத்திலே எழுதவித்துத் திரும்பியும் நானிருக்கிற சாலைக்கு வந்தார். அப்போது தானப்பமுதலி யிருந்துகொண்டு அரிசபாக்கம் முதலான கிராமங்களுக்கு மனுஷரை யனுப்பவேணும் என்று சொல்லோமென்று அழைத்தார். அந்தப்படி நல்லது என்று போய்ச் சொன்னதற்குச் சொல்லி அனுப்புவித்தோம். அவர்கள் வந்து தோரணம் வைத்தால் அறுத்துப்போடச்சொல்லியும் வந்து தோரணம் வைக்க வந்தவர்களைப் பிடித்துவரச்சொல்லி உத்தாரங்கொடுத்து அனுப்புவித்தோம் என்று சொன்னார்.

அப்பால் முன் இருட்டுடனே முசே தெப்ரமேனி வந்து சொன்னவுடனே தாமிருந்துகொண்டு நபாபு அன்வருத்திகான் வந்தபோது என்னைக் குமாரத்தி என்றுசொல்லி நீங்கள் இங்கிலீசுக்காரரை ஓட்டிவிட்டு உங்கள் நிசான் சென்னப்பட்டணத்திலே போடுங்களென்று என் கைமேல் கைபோட்டான்.

அப்படி இருக்கிறபடியினாலே நான் கடுதாசி எழுதியனுப்புகிறேன் என்று புருஷருடனே சொன்னாள். அந்தப்படிக்கு எழுதியனுப்பு என்று புருஷனும் பெண்சாதியும் இரண்டு பேரும் இருந்துகொண்டு மதனந்தபண்டிதனை ஆறுமணிக்கு அழைப்பித்து மாபூசுகான்பேருக்கு மதாம் துய்ப்ளேக்ஸ் காகிதமாய் ஒரு காகிதம் பட்டதும் கேட்டதும் இரண்டு காகிதம் சரியாய் எழுதிவைத்து இரண்டு படமும், இரண்டு பீங்கானும்,

நாலுகாசு பெருத அதுவும் கொடுத்து, தன் சொபுதாரரை அனுப்புவித்தான். அவன் சென்னப்பட்டணம் கொள்ளை யிட்டுப் பதினைந்துகோடி இருபதுகோடி வராகன் எடுத்துக் கொண்டார்கள் என்று அவன் கில்லைக்காரருக்கெல்லாம் எழுதி அனுப்புவித்துப் புதுச்சேரி குண்டுக்கிராமம் எல்லாம் பர்த்தி பண்ணிவிடச்சொல்லி அவருருக்குள்ளே ஒரு கட்டு விறகு வைக்காமல் தள்ளி முதலாய்ப் போகாமல் முற்றுகைப் போடச்சொல்லியும், சென்னப்பட்டணம் அந்தப்படிக்குத் தானே கிராமங்கட்டி முற்றுகைப் போடச்சொல்லியும் சென்னப்பட்டணத்தின்பேரிலே தான் வந்து சண்டைபண்ண வும் இந்தப்படிக்கெல்லாம் நடத்துகிறவன் புதுச்சேரி குவர்ன தோர் பெண்சாதி காகிதம் வந்ததென்றுப்போலே நிறுத்திப் போடுவானு என்று யோசனைபண்ணுமலும் இதல்லாமலும் துலுக்கரிலே பெண்டுகள் எழுதியனுப்புகிறது மெத்த இகழ்ச்சி யாய் இருக்கிறதென்றும் தோன்றுமல் பெண்சாதி சொன்னுப் போலே எழுதியனுப்பச்சொன்ன விவேகத்தை என்ன சொல்லப்போகிறேன் என்று இந்தப்படிக்குத் தன் சொபுதாரி கையிலே கொடுத்து மாபூசுகானண்டைக்கு மதாம் துய்ப்ளேக்ஸ் காகிதம் அனுப்புவிக்கப் போகச்சே என்னையழைத்து ரங் கப்பா, மாபூசுகானுக்கு நான் காகிதமெழுதுகிறதிலே காரியம் ஆமென்று சொன்னுன். அதற்குத் தடையான காகிதம் போகிறதுமாத்திரம் தடைபோன உத்தரக்ஷணம் திருப்பி யாகிலும் விட்டுவிடுவான். அல்லவென்று சண்டை பண்ணுகிறதை நிறுத்தியாகிலும் சமாதானம் பேசுவான். என்று சொன்னேன். என்னத்தைத் திருப்பிவிடுவான் என்று கேட்டான். அவன் தண்டையென்று சொன்னேன். அது மெய்தான் என்று சொன்னுன். ஆனுல், இப்போது துரை போடுகிற காகிதத்தைப் பார்த்துக்கொண்டு அப்பாலுங்கள் காகிதம் அனுப்பலாம். நீங்கள் கிழவனுக்கு எழுதியனுப்பி அவனைக்கொண்டு இவனுக்கு எழுதவேணும் என்று சொன் னேன். அதற்கு மாபூசுகானும் என்னை உடன் பிறந்தானென்று சொன்னுனிங்கே வந்தபோது. துரை காகிதம் போனுலென்ன என் காகிதம் போனுலென்னவென்று சொல்லி முகத்தைச் சற்று கடுகடுப்பாய்க் காண்பித்தான். ஆனுலிதைத்தொட்டு நம்முடையபேரிலே இவனுக்கு என்னத்திற்கு விசனம்தோற்ற

வேணும். எசமானுக்குத்தானே தோற்றுமல் செய்யச்சே நமக்கென்ன என்று அப்பால் கொத்தாலாயிரம் கோடியாலாயிரமென்று ஸ்தவுத்தியமாய்ச் சொல்லிவிட்டு வந்தேன். வந்தவுடனே துரையவர்களண்டை வந்து மாபூசுகான் வருகிற சேதியும், அப்பால் முசே கேர்சரமையும் கோசையும் பிடித்துக் கொண்டுபோன சேதியும் பேசியிருந்தார். அப்போது நான் ஒரு வார்த்தைச் சொன்னேன். மற்றபேர் யார் போனாலும் காரியம் வாய்க்கிறதில்லை. முன்னே சென்னப்பட்டணம் கோட்டை பிடித்தவுடனே சென்னப்பட்டணத்துக்கு ஒரு பயணம்போய் நடத்தவேண்டிய சம்மதிகளெல்லாம் ஒரு மாதம் இருந்து நடத்திப்போட்டு வருவோமென்று யோசனை பண்ணியிருந்தோம். அந்தப்படிக்குப் போகிறதற்கு அவ்விடத்துக் காரியங்களெல்லாம் முன் நட.

* 1746 ஆ அக்டோபர் மீ 29உக்கு அக்ஷய வஷ அப்பிசி மீ 16உ சனிவாரம்

இற்றை நாள் காலத்தாலே குவர்னதோரண்டைக்குப் போனவிடத்திலே நடந்த வயணம்: நேற்று ராத்திரி நபாபுக்கு எழுதின காகிதமும், மாபூசுகானுக்கு எழுதின காகிதமும் உசேன் சாயபுக்கு எழுதின காகிதமும் ஆற்காட்டு நபாபு அண்டைக்கும் உசேன்சாயபு அண்டைக்கும் போகிறதற்கு ஒரு சேவகனும் மாபூசுகான் காஞ்சிபுரத்தண்டையிலே வருகிறனென்கிற கபுறும் வந்நபடியினாலே அவனைத்தேடிக் கொண்டுபோய்க் கொடுக்கிறதற்கு ஒரு சேவகனும் இந்தப் படிக்கு இரண்டு சேவகரையும் பயணம் யனுப்புவித்தேன். மயிலாப்பூர் பவுஞ்சுதாரன் காகிதம் தபாலிலே கொடுத்தனுப்புவித்தோமென்றும் துரைக்குக் கபுறு சொன்னபிற்பாடு இப்புறம் வந்து உட்கார்ந்துகொண்டோம். அப்பால் தானப்ப முதலியை அழைத்து இமாம் சாயபு காகிதம் எழுதியனுப்பச் சொன்னார். அந்தப்படி எழுதியவர்கள் மனுஷன் சகலாத்துக் காத்துக்கொண்டிருக்கிற நூலுக்கன் கையிலே கொடுத்து அவர்கள் மனுஷன்கையிலே அவர்கள் எழுதுகிற காகிதத்துக்குள்ளே வைத்து அவர்கள் மோகர் வெளியே இருக்க இந்த முகர் தெரியாதபடிக்கு அனுப்பச்சொல்லி என்னுடனே சொன்னபடிக்குச் செய்து அனுப்புவித்தோம்.

---

* அசலில் குறித்த தேதி சரியான தேதி 17

இற்றைநாள் சாயங்காலம் விழுப்புரத்துக்குப் போன உசேன் வந்து சொன்ன கபுறு சொன்னோம். அதற்கு நாளைக்கு உத்தரவு சொல்லுகிறேனென்று சொன்னார்.

இற்றைநாள் மத்தியானம் மூசே பரிதீ யண்டைக்குப் போய காரைக்கால் குண்டுக் கிராமம் பணம் நொவெம்பர் மீ வாயிதாவுக்குச் செலுத்துகிற பணம் மார்ஸ் மீ த்திலே செலுத்துகிறோமென்று தானப்பமுதலி கூட நானும் போய்ச் சொன்னதற்குப் பேருக்கு ஆயிரம் வராகன் நெல் கொடுக்கிறதானால் மார்ஸ் மீ த்திலே விற்கிறவிலைக்கு அரைப்படி யதனம் கூட்டிக்கொடுத்து அளக்கிறதானால் அந்தப்படிக்கு மார்ச் மாதத்திலே மற்ற எழுநூற்றைம்பதையும் வாங்கிக்கொள்ளச்சொல்லி எழுதுகிறேன் என்று சொன்னார். அதற்குத் தானப்பமுதலி அளவு வாசியிலே நஷ்டம் வருமென்று சம்மதியாதபடியினாலே அப்படிச் சொல்லக்கூடாதென்று ஆலோசனைபண்ணிச் சொல்லுகிறோமென்று சொல்லிப்போட்டு வந்தோம். அப்பால் ராத்திரிக்கு நான் சேஷய்யங்காருடனே ஆலோசனைபண்ணி கொடுக்காவிட்டால் வெகு தொந்தரவு பண்ணுவானென்று யோசனைபண்ணி ராத்திரிக்குப் போய் அளக்கிறோமென்று சொல்லிவந்தோம்.

* 1746 ஆ அக்டோபர் மீ 30௳ அக்ஷய ௵ ஐப்பசி மீ 17௳ ஆதிவாரம்

இற்றைநாள் பொழுதுவிடிய ஐந்தாறு நாழிகைக்குச் சென்னப்பட்டணத்துக்குப் போகிறதற்காக மூசே பரிதீயை கொம்மாந்தானுக்கி வெள்ளைக்காரரிலே முந்நூறு மாயே சிப்பாய், சட்டைக்காரரிலே இருநூறும் ஆக ஐநூறுபேரும், தமிழர்கையிலே வாங்கிவந்த குதிரையிலே ஏழும், கும்பினீர் குதிரையள் மூன்றும் ஆக பத்துக்குதிரையுடனேகூட துலுக்கர் மற்றப்பேர் வந்தால் பேசுகிறதற்குக் கிரிமாசிபண்டிதனும் பாரிசுக்காகிதம் மற்றது படிக்கிறதற்கும் எழுதுகிறதற்கும் ஒரு காயித்துவானும் கூட கூட்டியனுப்புவித்தபடியினாலே இவர்களும் கூடப்போனார்கள். அப்பால் முத்தியப்பிள்ளை தாமும் போகிறோமென்று சொல்லியனுப்பினபடியினாலே துரையுடனே சொல்லி மூசே பரிதீ பேருக்கு ஒரு காகிதமுங் கொடுத்துப் போகச்சொன்னார். உம்மைக்கண்டு போகிறோமென்று சொல்லுகிறானென்றதற்கு அவன் சீக்கிரமத்துக்கு

* அசலில் எழுதிய தேதி ஆனால சரியான தேதி 18

முசே பரிதியைப்போய்ச் சேர்ந்தால் அவன் என்னைக்கண்டால் அவனுக்கு எத்தனை சந்தோஷமோ அதைப்பார்க்கிலும் நூறத்தனை சந்தோஷமென்று சொன்னர். ஆனல், நாற்பது சேவகருடனே இருபது நாழிகைக்குப் போனர்.

1746 ஆ நவம்பர் மீ 1உ க்ஷய ஞ அர்ப்பிசி மீ 19உ

இற்றைநாள் காலத்தாலே துரைவீட்டுக்குப் போனவிடத்திலே மயிலாப்பூர் அமுல்தாரன் காகிதம் பீர்சாதா தஸ்தகிரி சாயபு காகிதமும் வந்தது. அமுல்தாரன் காகிதத்திலேயிருந்த வயணம்: முன் என்னதிகாரம் மயிலாப்பூரிலிருந்தது. சிறிது நாளைக்குமுன்னே ஒரு சமேதரன் இருநூறு குதிரையுடனே மீர்சா ஆதி ஆஜிபேக்கு (Mirza Hadi Haji Beg) என்கிறவன் வந்திருந்தான். அவனுங்காட்டும் இப்போது பத்துப் பனிரெண்டு நாளாய் சுலுமிபண்ணிக்கொண்டு உங்கள் மனுஷனைப் பிடித்ததும் நடத்தின காரியமும் நபாபு மாபூசுகானும் இருநூறு சாயலும் வெகு பவுஞ்சுடனே வந்திருக்கிறர். இப்படி காபந்துகள் வந்து நடத்துகிற காரியத்துக்கு நான் செய்ய வேண்டியதென்ன, என்னைத்தொட்டு ஒரு பொல்லாப்பும் நடக்கத் தக்கதில்லையென்று எழுதிக்கொண்டான். தஸ்தகிரி சாயபு காகிதத்திலே எழுதினது: நான் லோகத்தைத் துறந்துவிட்டு மூலையிலே இருக்கிறேன். நானிந்த சோலியே அறியேனென்று எழுதினன். இதைப் படித்துச் சொல்லப் போனவுடனே இருநூறு சாயல் என்று சொன்னதற்கும் வெகு பவுஞ்சுடனே மாபூசுகான் வந்திருக்கிறன் என்று சொன்னதற்கும் எகத்தாளி பண்ணினர்.

அதன்பேரிலே டபால்சேவகன் சொன்னதாய் தேவனும் பட்டணத்திலிருந்து நாலாயிரம் பேருண்டு. இதிலே சிறிது பேர் சட்டைக்காரர், சிறிதுபேர் வெள்ளைக்காரர், சிறிது பேர் தமிழ்ச் சேவகரிப்படி நானுசாதியுமாய் நாலாயிரம்பேர் சென்னப்பட்டணத்துக்குப் போனதாய்க் கபுறு வந்ததாய்ச் சொன்னர். சொன்னப்போலே ரோசம்பண்ணி இப்படியில்லாத் தப்புக் கபுறு வந்து சொன்ன டபால்காரனை இரண்டு காதுகளையும் அறுத்து நூறடி அடித்து ஊர் கடத்தித் துரத்திவிடவேணும். இருநூறு முந்நூறு பேர் போனல் இதை நாலாயிரம் பேரென்று சொன்னனென்று சொன்னர். அதிலே நானிருந்துகொண்டு அவன் சொன்னது

அப்படி ரெட்டிப்புச் சொன்னுன். நானுங்களுடனே அவன் சொன்ன தொகைக்குப் பாதி சொல்லேனென்று சொன்ன வுடனே இதை இப்படியென்று யோசனைபண்ணுமல் நீ யென்னுடனே வந்து சொன்னதற்கு உன்னை என்ன செய்ய வேணுமென்று அப்பால் நாங்களிப்பால் புறப்பட்டு வந்துவிட் டோம். துரை யென்னைமாத்திரம் அழைத்து விழுப்புரத்துக் காக நேற்றைய யோசனைப்படிக்கு அரியாங்குப்பத்திலே போயிருக்கச் சொன்ன பேரை விழுப்புரத்திற்குப் போய் அப் துல் சலீலைப் பிடித்துவரவேணும் மாபூசுகான் வந்து நம் முடையவர்கள் அகப்பட்டவர்களை ரொம்பவும் இம்சை படுத்துகிருனென்றும், பின்னையும் அனேகம் லூட்டி பண்ண நினைத்திருக்கிருன். முன் போன மனுஷர் அங்கே யிருக்கிருர்களே இவ்விடத்திலே யிருந்து இரண்டுபேரை யனுப்பி முசே மர்த்தேன் (M Martin) என்கிற ஒபிசியேல் அரி யாங்குப்பத்திலிருக்கிருனே அவனை விழுப்புரத்துக்குப்போகிற தற்குக் காகிதமெழுதிக் கொடுக்கிறேனென்று இவர்களிந்தக் காகிதங்கொண்டுபோய் மர்த்தேன் (M. Martin) கையிலே கொடுத்து விழுப்புரத்துக்கு வழிகாட்டச்சொல்லென்றுசொன் ஞர். அதின்பேரிலே கோபாலகிருஷ்ணய்யனையுங் கூட்டி யனுப்புவித்தோம். விழுப்புரமட்டுக்கும் முசே மர்த்தேனை யிட்டுப்போகிறதற்கு வீரப்பனையுங்கூட்டி யனுப்புவித்தோம்

அப்பால் துரை என்னை அழைப்பித்து மாபூசுகானுக்கு ஒரு காகித மெழுதியனுப்பச்சொன்ன வயணமென்னவென்ருல் எங்கள் மனுஷருகப்பட்டவர்களை யடிக்கடி மிரட்டுகிறதும் கொல்லுகிருேமென்று இப்படி கஷ்டப்படுத்துகிருர்களாம். இது உமக்கு நல்லதல்ல. நான் உம்முடைய தம்பியானபடியினுலே யும் உமக்குப் பழியில்லாமல் சொல்லுகிறேன். உங்கள் வமி சத்தார் துலுக்கக் கூட்டம் சென்னப்பட்டணத்திலேயும் புதுச் சேரியிலேயுமாய்வெகுபேர் இருக்கிருர்கள். அவர்கள் மூன்று பேரையும் ஏதாகிலும் நடத்தினுல் இத்தனையாயிரம் துலுக் கருக்கும் மோசம் வரும். இதல்லாமல் வெகு சனங்கள் செத்து இரத்த ஆறு ஓடும். இதுகளை நினைக்கிறதற்கு மார்க்கமெப்படி யென்ருல், நீர் ஏதாகிலும் மனதுவைத்து அந்த மூன்று பேரை யும் பிடித்த சமேதாரனையுங்கூட கூட்டிச் சென்னப்பட்டணத் துக்கனுப்பி என் அண்டைக்கு அதற்கேற்ற மாற்றுப்பேர் மனு

ஷர்களை அனுப்புவித்தால் நல்ல மார்க்கமாய்ச் சமாதான மாய்ப் போமென்று எழுதச் சொன்னார்.

அதன்பேரிலே சென்னப்பட்டணம் டபாலிலே வந்த பனிரெண்டு காகிதமும் பாரீஸாயிருந்தபடியினாலே அதைச் சூரத்துக்குப் போகிறதென்று மேல் விலாசமெழுதி இருக்கு தென்று சொன்னதற்குப் பார்க்கச்சொன்னவிடத்திலே அச்சையிலேயிருந்து சூரத்துக்குப் போகிற காகிதங்களென்று சொன்னோம். நல்லது உன்கையிலே வைத்திருந்து சூரத்துக்குக் காகிதங்கள்போனால் கொடுத்தனுப்பென்று சொன்னார். அப்பால் கொலத்திரி ராசாவுடைய வக்காலத்து வந்து வித்துவான் பட்டன் வந்து கண்டான். இவர்களுக்குச் சமயம் தெரியவில்லை. அவர்கள் ராசா துரைபேருக்கு அனுப்பின இரட்டை ஓலையை என்கையிலே கொடுத்து அந்த ராசாவுடைய காரியம் எங்களுக்குத் தெரியும். ஞாதிகளுடைய விரோதத்தினாலே இவர்கள் நம்முடைய ஆதரவைப் பிடித்துக்கொண்டு ஞாதிகளுக்கு ஆதரவாயிருக்கிற இங்கிலீசுக்காரரையுந்துரத்தி, தங்கள் சீர்மையையுங் கட்டிக்கொண்டிருக்கிற ஞாதிகளைத் துரத்திவிட்டு, தங்கள் ராச்சியம் தாங்கள் கட்டிக்கொள்ள வேணுமென்றும் வந்திருக்கிறார்கள். நல்லது அவர்களுக்கு நீ சொல்லுகிறது இங்கிலீசை துரத்திவிட்டு அவர்களிருந்த ஸ்தானத்தைக் கட்டிக்கொள்ளுகிறோம் உங்களுக்கும் ஆதரவுபண்ணுகிறோம். நீங்களும் ராணுவம் மற்றதெல்லாம் சேர்த்து பகையாளியைச் செயிக்கிறதற்கு என்ன பிரயத்தனம் உண்டோ அந்த எத்தனம்பண்ணிக்கொண்டிருக்கச் சொல்லென்று சொன்னார். அந்தமட்டுக்கும் அவர்களுடனே சொல்லுகிறோமென்று சொல்லிவிட்டு முத்துகிருஷ்ணசெட்டியார் மகன் சோபனத்துக்கு வந்து அங்கேயிருந்து வீட்டுக்குப் போனோம்.

துறையூர் பச்சகெந்தய்யா, பாலைய சுவாமிக்குப பட்டங் கட்டுவித்து மறுபடியும் துறையூருக்குப் போகவேணுமென்று அனுப்புவித்து நம்முடைய ஊருக்குள்ளே வருகிறதற்கு வாசற் படிக்குச் சீட்டு வாங்கிக்கொடுத்தோம். அவரும் ஊருக்குள்ளே வந்தார். பகலுக்குமேலாக மூன்றுமணிக்குக் குவர்னதோரழைப்பித்து வில்லியநல்லூரிலேயிருக்கிறவர்களையெல்லாம் பிடித்துவர வேணுமென்று சமாசாரம் நேற்றையதினம் அழைப்பிக்கச் சொன்னபடிக்கு அழைப்பித்தாயாவென்று கேட்டார். அழைப்

பித்தேன். விசேஷித்துக் குதிரைகளில்லே, பத்துப்பனிரெண்டு குதிரைகள்மாத்திரம் கட்டியிருக்கிறதென்று சொன்னேன். நாற்பது ஐம்பதுபேருக்குண்டு கும்பல் சேவகரென்று சொன்னேன். ஆனுல், அவர்களேயும் பிடித்துவருவோமென்று சொன்னூர். அதற்குள்ளே நான் சொன்னது: வில்லியநல்லூருக்கு அப்துல் சலீல் தோரணம் வைக்கச்சொல்லியும் ஊருக்குப் போகிற ரஸ்துக்களே தடைபண்ணச்சொல்லியும் எழுதி வந்தது. மீரு உசேன்கானுக்கும் நபாபுடைய தாக்கிது வந்தது. அதற்கெல்லாம் வில்லியநல்லூர் அமுல்தாரன் அப்துல் சலீலுக்கு எழுதினது: கிராமம் சப்திபண்ணி முற்றுகைப் போட்டுவிடுகிறதற்கு பொல்லாதவர்கள் விழுந்து தொந்தரவு பண்ணுவார்கள். ஆனபடியினலே நீங்கள் தானே விஸ்தாரமாய் குடிக்கு அழைப்பித்துக்கொண்டு சப்திபண்ணுங்களென்றும் எங்களாலே ஆகாதென்றும் எழுதிவிட்டார்கள். வழுதாவூர் மீரு உசேன்கானும் மீர்கத்துக்குச் சப்திபண்ணுகிறதற்கு விஸ்தாரம் பவுஞ்சுவேணுமென்றும் நம்முடைய ஆயம் அவர்கள் ஊரிலே இருக்கிறபடியினலேயும், வெகு தொந்தரவு பண்ணுவார்களானபடியினலேயும் கிராமம் சப்தி பண்ணுகிறதும் முற்றுகைப் போடுகிறதும் உமக்கு யுக்தமாய்க் காணவில்லேயென்றும், அப்பால் நீங்கள் எப்படி நடந்துகொள்ளுகிறீர்ளோவென்றும் எழுதியனுப்பினீர்கள். அதனுல் எப்படியிருக்கிறதோ அப்படியே இருக்கிறதென்று சொன்னதற்கு ஆனுலவர்களே ஏன் பிடித்துவரவேணும் என்று நிறுத்திவிட்டார்.

அப்பால் சென்னப்பட்டணத்திற்குத் துரை தான்போகவேணுமென்று நினேத்ததும் மூசே லபூர்நோனேயினுலே தடையாய்ப்போனதும் அவன் பண்ணின தொந்தரவையும் பேசியிருந்தோம். அப்பால்மொக்காவுக்கு ஒலாந்துக்கப்பல் வந்திருந்ததே அது தை மாதத்திலே பயணம்போகவேணும், அதற்கு முந்நூறுகோடி காங்குப் புடவை கூட்டவேணும். அது என்ன கோடி, இருபத்தெட்டு வராகன் விழுமாவென்று கேட்டார். ஒன்றேற இருபத்தொன்பது விழுமென்றுசொன்னதற்கு முந்நூறுகோடி பதினுயிரம்வராகன் ஆகுதென்றும் இரண்டுமாதம் பத்துநாள் கெடுவு இருக்கிறதே இதற்கு வராகன் தருகிறேன் என்றும் சொன்னூர். கும்பினீருக்கு நீரேதாகிலும் புடவை

போடவில்லையோவென்று கேட்டார். நூறுகோடி காங்குப் புடவையும் கிண்டன் ரவைசல்லா சுகிர்தமிதுகளிலே இருபது கட்டாக ஐம்பதுகட்டு போடுகிறதுதான் என்றுசொல்லி மூசே லேகு (M. Legou) சரீரம் சுவஸ்தமில்லாமலிருக்கிறாரே வந்த வுடனே அப்படிதானே போட்டுவிடுகிறேனென்று சொன் னேன். நல்லது அப்படி செய்யென்று சொன்னார்.

இராத்திரி ஒன்பதுமணிக்குச் சாப்பிடும்போது அழைத்து வில்லியநல்லூராரை எந்தடவும் பிடித்துவரவேணுமென்று சொன்னார். அப்போதும் அந்த நியாயந்தான் சொன்னேன். ஆனால், வேண்டாம் அப்துல் சலீல் வந்தால் பார்த்துக்கொள் ளுவோமென்று சொன்னார். அப்பால் பத்துமணி நேரத்துக்கு வீட்டுக்கு வந்தேன்.

*1746* ஆ நவம்பர் மீ 2உக்கு அக்ஷய ஞு அற்பிசி மூ 20உ புதவாரம்.

இற்றைநாள் காலத்தாலே வெங்கடாசலய்யன் வந்தார். தன் தமையன் காஞ்சிபுரத்திலேயிருந்து வந்தான். அவன் சொன்னது: புதவாரம் சாயங்காலம் மாபூசுகான் பவுஞ்சு நானூறு குதிரையும், ஆயிரம்பேர் ஸ்தோமமும், நாலைந்து பீரங்கியும், எழெட்டுபத்து ஆனையுடனே காஞ்சிபுரத்துமேலே வந்தான். வந்தவன் நில்லாமல் அப்பால் பாலமுத்துராமு செட்டியார் சத்திரத்திலே போயிறங்கினானென்றும், சென்னப்பட்டணத்தின்பேரிலே சண்டைக்குப் போகிறான் என்றும், பின்னையும் பாளையக்காரருக்கும், கில்லேதாரர்களுக் கும் அவரவர் பவுஞ்சுடனேகூட மைலாப்பூர் வந்துசேரச் சொல்லியும் இப்படியாக எழுதியனுப்பி நாளையதினம் ஸ்ரீ பெரும்புத்தூரிலேயிருந்து அப்பால் அவ்விடம்விட்டு நாளை நன்றைக்குச் சென்னப்பட்டணம் பேரியிறங்குவார்களென்றும் சொன்னார். அப்துல் சலீல் காகிதம் துரைபேருக்கு ஒரு காகித மும் தானப்பமுதலியாருக்கு ஒரு காகிதமும் வந்தது. துரை பேருக்குவந்த காகிதத்திலே இப்பவும் சம்மதிபண்ணுகிறோம். அதைக்கொண்டு மனதிலே தாங்கள் வைக்கவேண்டாம். நபாபுடைய ஊக்கம் பாதாராயிருக்கிறோம். நம்மாலே ஆனது சீக்கிரமத்துக்குச் சமாதானமாய்ப் போகவேணுமென்று சுவாமியைப் பார்த்து வேண்டிக்கொள்ளுகிறோம் என்றும், சிநேகம் விரோதம் வராமல் அனுகூலமாய்ப் போகவேணும்

என்றும், நம்மண்டையிலே மீர்காயென்று பெரிய மனுஷன் இருக்கிறுன். அவனை அனுப்பச்சொன்னல் அனுப்புகிறோம் என்றும் அவன் மாரிபத்திலே பேசலாமென்றும் எழுதினுன்.

தானப்பமுதலிக்கு எழுதின காகிதத்திலே வெள்ளைக்காரர் வெகுபேரிருக்கிறுர்களென்றும் அவர்கள் உயித்தியத்தின் பேரிலே இருக்கிறவர்களல்லாமல் பின்னையொன்றும் தெரியாது. இந்தச் சேதியை துரையவர்களுக்குச் சொன்னல் அவர்கள் அறிந்தால் துரையவர்களுடைய உத்தாரத்திலேகூட வருகிற வர்களல்ல. அதனுலே சொல்லவில்லையென்று எழுதினீரே அப்படி சொல்லாமலிருப்பார்களா, வெள்ளைக்காரர் எத்தனை பேர் வந்தால்தானென்ன! எத்தனைபேரிருந்தால்தானென்ன! நபாபு......உத்தரவினுலே இதல்லாமல் பட்டாலே சாயப் போகிறதேயல்லாமல் எத்தனை காரியம் எப்படி வேண்டு மானுலும் அப்படி நடந்துபோமென்றும் இப்படியாக எழுதி இப்பவும் துரைபேருக்குக் காகிதம் அனுப்புவித்தோம். எப்படி சமாதானமாய்ப்பேசி தீர்த்துக்கொள்ளச் சொல் என்று எழுதியனுப்பினுன். அதற்குத் துரையுடனே சொன்னதற்கு மறு காகிதம் எழுதினதும் சொன்னதும் நாமெப்போதும் அவர் களுடனே நல்லதுக்காகத்தானே இருக்கிறேம். அவர்களபி காடித்து நடத்துகிறுர்கள். இது நடத்துகிறது நபாபு மாபூசு கான் வயதானபடியினுலே துர் அதிர்ஷ்டம் பாராமல் நடத்து கிறுர். நபாபு சாயபு அவர்கள் எங்கள்பேரிலே மிகுந்த பட்சம். அவரப்படிச் செய்கிறதில்லையென்றும் இப்பவும் தாங்கள் வந்தால் ரூபுரூபாய்ப்பேசி இதுகாரியமெப்படி நடத்தலாமோ அப்படி நடத்துவோமென்று எழுதியனுப்புவித்தார்கள்.

இப்படியிருக்கையிலே மூசே மடுந்தேனும், இருபத்தைந்து சொல்தாருகளும், இருபத்தைந்து சிப்பாய்களும், நயினுர் சேவகர் பத்துபேரும் போனவர்கள் விழுப்புரத்திற்கப்புறம் போய் அங்கே அப்துல்சலீ விருக்கிறதகோட்டையென்றும், இருநூறு முன்னூறு சேவகரிருக்கிறுர்களென்றும், மூன்று ஆனை யிருக் கிறதென்றும், ஆறேழு ஒட்டகமிருக்கிறதென்றும் இதற்கு முன்னூறுபேர் வந்தால் காரியம், இல்லாவிட்டால் காரியமில்லை யென்றும் ரங்கப்பன் மனுஷன் வந்து சொன்னுனென்றும், போன மனுஷர்களும் வேசாரியானபடியினுலே மறுபடியும்

அரியாங்குப்பம் வந்துசேர்ந்தோமென்றும் துரைக்குக் காகிதம் எழுதியனுப்பினான். அதன்பேரிலே துரையவர்களென்னை அழைத்துக் கோபமாய் முன்னே விடு என்று சொல்லிவிட்டு இப்போது கோட்டையென்று சொல்லி உன் மனுஷர் பொய்யாக்கிப் போட்டார்களென்று கோபமாய்ச் சொன்னார். கேட்க வேண்டியதுண்டு என் மனுஷர் வந்தபிற்பாடு சொல்லுகிறேன் என்று சொல்லி அப்பால் வைத்தியன் வீரப்பன் வந்தவர்களைக் கேட்டபிற்பாடு வெள்ளைக்காரன் பிரயத்தனத்தின்மேலே வந்துவிட்டானென்றும் சட்டைக்காரன் துபாசித்தனம் ஒன்று சொன்னால் ஒன்றுசொல்லி இப்படி வந்ததென்றும் வைத்தியன் பேரிலே சற்றுக் குற்றமுங் கண்டது. அந்தச் சாடையை துரைக்கு எச்சரித்தவிடத்திலே மடுத்தேனையும் தாஷ்மானையும் வந்துவிடச்சொல்லி எழுதினபோது துபாசித்தனம் பண்ணச் சட்டைக்காரனை கூட அழைத்துவரச்சொல்லி எழுதி அனுப்பினார்.

அப்பால் பகலைக்கு மேலாக நாலு மணிக்கு மடுத்தேனும் தாஷ்மானும் வந்தபிற்பாடு மேற்படி மடுத்தேனும் சட்டைக்காரனும் வைத்தியன் வீரப்பனை வைத்துக்கொண்டு நடந்தபிற்பாடு சட்டைக்காரனை காவல்வைத்து வைத்தியன் வீரப்பன் அவன் பேரிலேயுங் குற்றமுண்டு என்று துரை சொல்லிப் போகச் சொன்னார். அப்பால் தாஷ்மான் போனசாடை வெளியாக என்னவென்று கேட்டார். வெளியாகவில்லையென்று சொன்னார்.

இங்கிலீசுக்காரருக்கும் மாபூசுகானுக்கும் போக்கு வருத்துக் காகிதங்களைப் படிக்கச்சொல்லி மனுஷரை வைக்கச் சொன்னார். தொண்டமானத்தம் வெங்கடாசலய்யனையும் உசேன் சாமிநாதன் முதலானபேர்களுக்கு ஆறு பேருக்கு இருபத்து நாலு ரூபாயும் கொடுத்தனுப்புவித்தோம்.

இராத்திரி ஒன்பது மணிக்குத் துரையழைத்தனுப்புவித்துச் சென்னப்பட்டணம் மாபூசுகான் சம்மதியும் ராணுவக் குதிரைகளிருக்கிற சம்மதியும் கேட்டார். அதற்கு உத்தரவு சொன்னேன் விழுப்புரத்திலிருந்து யாராகிலும் வந்தார்களா வென்று கேட்டார். யாரும் வரவில்லையென்று சொன்னேன். அப்பால், சென்னப்பட்டணத்துக்குப் பேர்கிறதாய்ச் சிறிது சம்மதி நடக்கவேண்டிய சம்மதியெல்லாம் சொன்னார். அதற்கு நானும் உத்தாரங்களுஞ் சொன்னேன்.

இற்றைநாள் ராத்திரி ஒன்பதுமணிக்கு அழைத்தவில்லிய நல்லூராரை எப்படியும் பிடித்துத்தீரவேணும் என்று சொன்ன தற்குத் துடுக்குப் பண்ணுதமட்டுக்கும் இன்று வைத்துப்பார்க்க வேணுமென்று அப்துல் சலீல் காரியம் பார்த்துக்கொண்டு செய்யலாமென்றுஞ் சொன்னேன்.



*1746* ஆ நவம்பர் மீ 3உக்கு அக்ஷய, ஐப்பசி மீ 21உ வியாழக்கிழமை.



இற்றைநாள் காலத்தாலே ஆனைக்குட்டி ஏலம் போடுகிறார்களென்றும் போவோமென்றும் முசே தெப்பிரமேனி வீட்டுக்குப் போகையிலே அவனெதிராகவந்து ஆனைக்குட்டி இரண்டும் ஏலம் போடவில்லை. அப்பால் ஏலம் போடுகிறவன் (Cinnamon) ஓரப்புகளில் பட்டை பத்துப் பனிரெண்டு பாரமுண்டு. இரண்டு கட்டுக் கம்பாயம், நாலு பட்டுச் சுருட்டு என்று சொல்லி அது இரண்டும் ஏலம் போடவேணுமென்றும் சொன்னான். அந்தமட்டுக்கும் துரை வீட்டுக்கு வந்தேன். துரை கோன்சேல் கூடினார்கள்.. அப்பால் கோன்சேல் கலைந்த பிற்பாடு உசேன் சாயபுக்குமுன் சென்னப்பட்டணம் கோட்டை பத்தே ஆனபோது முபார்க்குப் பிரதி எழுதின தற்கு அவரிப்போது பதில் காகிதம் எழுதினார். அந்தச் சாடையை துரையுடனே சொன்னோம். வக்கீல் சுப்பய்யன் என்ன எழுதினானென்றும் கேட்டார் உசேன் சாயபு தான் எழுதச்சொன்னதாய் எழுதியனுப்பின வயணம்: மாபூசுகான் சென்னப்பட்டணத்தின்பேரிலே போனவனுக்கும் மனது சமாதானம் பண்ணச்சொல்லியும், நபாபுடனே சினேகம் வைக்கவேணுமென்றும் எழுதச்சொன்னதாக எழுதியிருக்கிறதென்றும், பின்னையும் தண்டு சமாசாரமும் சென்னப்பட்டணத்துக்குப் பீரங்கிகள் போகுதென்றும், திரிச்சிராப்பள்ளியிலே எட்டு பீரங்கி மலையாளத்தது இருக்கிறதென்றும், அதுகளெல்லாம் அழைக்கச்சொல்லியுமின்னுஞ் சிறிது குதிரை வைக்கிறோமென்றும் எழுதினதற்கு நபாபு வைக்கச்சொல்லி எழுதினானென்றும், எழுதினானென்றும் எழுதின வயணங்களெல்லாம் சொன்னதற்குச் சுப்பய்யனுக்கு மறுபடியும் எழுதச்சொன்ன தற்கு மாபூசுகான் மனது சந்தோஷமானதைச் சொல்லி உசேன் சாயபு சொன்னதாக எழுதினியே மாபூசுகான் அபிப்பிராயம் தெரிந்தல்லோ நாங்கள் பேசவேண்டும். அவர் அபிப்

பிராயம் இன்னதென்று கேட்டு எழுதச்சொல்லியும் இரண்டு பேர் மத்தியஸ்தர் வந்தார்கள். காவல்வைத்துக்கொள்ளுகிறது நியாயமா என்று கேட்கச்சொல்லி வயணமாய் எழுதச்சொல்லிச் சொன்னூர். அந்தப்படிக்கு எழுதியனுப்பினூர்கள்.

அப்பால் விழுப்புரத்துச் சேதி ஏதாகிலும் வந்ததாவென்று கேட்டார். ஒன்றும் வந்ததில்லையென்றும் சொன்னேன். முசே புய்சி ஒரு லீஸ்துரு கொடுத்தான். மசுக்கரைக்குச் சரக்குக் கூட்டச்சொல்லிச் சொன்னூனென்றும் சொன்னேன். அந்தப் படிக்கு லீஸ்துருப்படிக்குச் சரக்குக் கொடுக்கச்சொல்லி மோக் காவுக்கு தை மாதத்திலே போகிற ஒலாந்தா கப்பலுக்கு முன்னூறு கோடிக்குப் பதினூயிரம் வராகனுக்குச் சரக்குக் கூட்டச்சொல்லி ஐந்தாயிரம் வராகன் புதுச்சேரிப் பிறை வராகன் கொடுத்தார்.

அப்பால் சென்னப்பட்டணத்துக்குக் காகிதம் எழுதினூர். அப்போது என்னை அழைத்துச் சென்னப்பட்டணத்தார் சரக்கு எங்கெங்கே இருக்கிறதென்று கேட்டார். சைதாப்பேட்டை, கருக்கம்பாக்கம், பெரியமலை, சின்னமலை, மைலாப்பூர் இந்த வட்டாரங்களிலே இருக்கிறதாய்க் கபுறு கேட்டிருந்தேன் என்று அந்தப்படிக்கு கபுறுசொன்னேன். அந்தப்படிக்கு முசே பரிதிக்குக் காகிதம் எழுதினூர்.

பகலைக்கு மேலாக விழுப்புரத்திலிருந்து தர்மய்யன் வந்த சேதி: நாலு மணிக்குத் துரையவர்கள் அழைத்தனுப்பினூர். போனேன். போனபோது சொன்னதென்னவென்றால்: அங்கே நம்முடையவர்கள் போனதும் வந்ததும் ஒருத்தருக்குந் தெரியாது. அவன் எதாக்கிரமமாய் ஐம்பது அறுபது பேருடனேயிருக்கிறதாய்ச் சேதிவந்தது. நூறு பேருடனே யிருக்கிறதா யெண்ணிக்கொள்ளுங்கோளென்று சொன் னேன். அதன்பேரிலே ஐம்பது வெள்ளைக்காரரும், ஐம்பது சிப்பாயும், இருபது பாளையக்காரரும், சேவகர்களும் அனுப்பு கிறதாய் நாளை மத்தியானத்துக்குமேல் யோசனைபண்ணித் தீர்த்தார். அந்தப்படிக்கு முசே துக்கேனுடனே சொல்லி, பாதிபேர் ஒழுகரை, பாதிபேர் அரியாங்குப்பமிருந்து போகிற தாய்ச் சொன்னூர். நானும், எக்கியம், பட்டவைத்தியன் முதலானபேரை யனுப்பினேன். கபுறு நிமித்தியம் அப்பால் பொம்மய்யபாளையம் பாலையதம்பிரான் பட்டத்துக்கு

வந்தாரென்று அவர் அனுப்புவித்ததாய்ப் பழங்கள் சர்க்கரை கற்கண்டு கொண்டுபோய் வைத்து, பண்டாரங்களையும் விட்டுக் கபுறு சொல்லி, அவர்கள் மகமை சாவடியிலே வாங்குகிறது நின்றுபோச்சுதே, அதற்கு வாங்கிக் கொடுத்தேன். என்னைச் சாவடி அய்யருக்கு உத்தாரங்கொடுத்து வாங்கிக்கொள்ளச் சொன்னார்.

இராத்திரி எழுமரை மணிக்கு என்னை அழைப்பித்துச் சென்னப்பட்டணத்திலே எங்கெங்கே இங்கிலீசுக்காரர் பணம் வைத்தார்களென்று கபுறு கேட்டார். இரண்டொரு ஊரிலே இருக்கிறதாய்ச் சொன்னேன். ஒரு கிணற்றிலே வைத்ததாய்ச் சொன்னார்களென்று கேட்டார். கோட்டைக் குள்ளேயென்று கேட்டார். வெள்ளைக்காரர்களிருக்கிற கோட்டைக்குள்ளே என்று சொன்னேன். அப்பால் முசே புசிசேர்மையிலே அறுநூறு நாய்கள் இரண்டாயிரத்தைந்நூறு ஒலாந்தாக்காரரைக் கொன்ற கதைச் சொன்னார்.

*1746* ஆ நவம்பர் மீ 4 உக்கு அக்ஷய ஐப்பிசி மீ 22 உ சுக்கிரவாரம்

இற்றைநாள் காலத்தாலே வந்த சேதி: இங்கிலீசு டபால் காரர்களைப் போக்குவருத்துக் காசிதசாடை சொல்லத்தக்கதாக இனம் பண்ணிக்கொண்டு வந்தவனை மார்க்கப்படுத்தி அவனுக்கு ஐந்து ரூபாய்க் கொடுத்து அதற்கேத்த சேவகனையும், வெங்கடசாலய்யனையும் கூட்டியனுப்புவித்தோம். அப்பால் விழுப்புரத்துக் கோபாலகிருஷ்ணய்யனை அனுப்புவித்தோம்.

துரையண்டைக்குப் போனவிடத்திலே துரையிருந்து கொண்டு விழுப்புரத்திலே எத்தனைபேருண்டென்று கேட்டார். நூறுபேருண்டென்று சொன்னேன். அதற்குத் துரை இருந்துகொண்டு நானூறுபேரிருந்தாலும் ஐம்பது சொல்தாதுகள்போதும் என்று சொன்னார். நீயறியாதது ஒன்றும் இல்லையே. இந்த ராச்சியத்து மனுஷர் சாடையும் சேவகமும் என்று சொன்னார். அதற்குத் தக்க உத்தரவு பிரான்சுக்காரர் நூறு சொல்தாதுகளுண்டாயிருந்தால் ஆயிரம்பேருக்கும் போதுமென்று சொல்லி, பின்னையும் ஸ்தவுத்தியமாய்ச் சொன்னேன். இங்கிலீசுக்காரருடைய பணம் கிணற்றிலேயிருக்கிறதை ராத்திரி கேட்டேன் என்று சொன்னார். என்னுடனே அவசரம்

கிருஷ்ணய்யன் சொன்னபடிக்கு இங்கிலீசுப் பாதிரிகோவில் கிணற்றிலே என்று சொன்னேன். சென்னப்பட்டணத்திலே இருந்து வந்திருக்கிற செம்புப்பேச்சு பேசினேன்.

இற்றைநாள் ஐந்துமணிக்கு தொஸ்த்தலிகான் பெண்சாதி துரைக்கு இரண்டு பதக்கம் நடுநாயகம் ஒன்று, பச்சை வைத்ததும் ஒன்று, கெம்புவைத்ததுமிந்த இரண்டு பதக்கமும் கங்காசமுனிச் சரிகைக்காமேவார் இரண்டும், ஒடனி ஒன்றும், அத்தலாசு ஒன்றும், பாலாபந்தி இரண்டும், முக்கிஷாபாகை ஒன்றும். சரிகைக்காமேவாரிரண்டும் சரிகை போட்டது கொசுப்பேசு ஒன்றும் இதுகள் சுமார் ஆயிரம் ரூபாய்க்குப்பெறும், இதற்குப் பின்னையும் ஐம்பதுரூபாய் தனமேயல்லாமல் குறைச்சலில்லை. இதை இரண்டு தட்டிலே வைத்து முஸ்தீதுபண்ணுவித்துக்கொண்டிருந்தார்கள். நான் குவர்னதோர் வீட்டுக்குப் போய் அதற்குமுன்னே பகல்தானே மேளதாளம், தேவடியாள், ஈட்டிக்கழிகள் எல்லாம் முஸ்தீது பண்ணுவித்துக்கொண்டிருக்கச் சொல்லி நயினருக்கு நான் உத்தாரங்கொடுத்திருந்தபடிக்கு அவன் முஸ்தீதுபண்ணித் துரை வீட்டண்டையிலே வைத்திருந்தபடியினாலே குவர்னதோர் பல்லக்குச் சொபுதாரர்களும், நிசான்களும், கும்பினீர் சேவகரும், ஒரு சேர்வைக்காரனையும் கூட அழைத்துக் கொண்டு சந்தாசாயபு மகளுக்கு வந்து முன் எழுதப்பட்ட ரெண்டு தட்டிலே வைத்திருக்கிற புடவை தினுசும் பதக்கங்களும் குவர்னதோர் பல்லக்கிலே வைத்துக்கொண்டு மேளவாத்திய சம்பிரமத்துடனே கொண்டுவந்து துரை வீட்டிலே ஒப்புவித்தோம். துரை எதிராக வந்து வாங்கிக்கொண்டார். துரைமுன்னே வைத்தவுடனே இருபத்தொரு பீரங்கி போட்டார்கள் கூடவந்த ராகவ பண்டிதருக்கு பாக்கு வெற்றிலை பன்னீரும் கொடுப்பித்து உபசாரமான வார்த்தைச் சொல்லிவித்தவரை அனுப்பின உடனே குவர்னதோர் கடற்கரைக்குச் சவாரிபோனார். சவாரி போன விடத்திலே சென்னப்பட்டணத்திலேயிருந்து கட்டுமரத்திலே மூசே பெடுதெல்மி காகிதம் வந்தது. அதிலே எழுதியிருந்த வயணம்: மாபூசுகான் நுங்கம்பாக்கத்து ஏரிக்கரைமேல் கூடாரம் போட்டிருந்ததாகவும் அவர் பவுஞ்சு கப்பித்தான் தோட்டம் சுற்றிப் பிடித்துக்கொண்டிருந்தபடியினாலே முகத்துவாரம் வெட்டிவிட துலுக்கமனுஷர் போனதும், மாயே சிப்

பாய்கள் அதை விலக்கத்தக்கதாக ஐம்பது பேர்களை அனுப்பு விக்கையிலே துப்பாக்கியில் குண்டுபோட்டுச் சுடாமல் மருந்து மாத்திரம் போட்டுச் சுட்டுமிரட்டித் துரத்திவிடச்சொல்லச் சொல்லியனுப்பினதாகவும் இதல்லாமல் கப்பித்தான் தோட்டத்திலேயிருக்கிற துலுக்கர் பவுஞ்சு இப்பால் வராதபடிக்கு மூசே லந்நூரும் இருநூறு சொல்தாதுகளும் ஐம்பது மாயே சிப்பாய்களையும் எதிர்பாளையமிறங்கி யிருக்கிறபோது சொன்னாற்போலேயும் இப்படியிருக்கிற அவசரத்திலே முகத்துவாரத்து அண்டையிலே போன மாயே சிப்பாய்கள் குண்டு இல்லாமல் மருந்தைமாத்திரம் கெட்டித்திருக்கிற துப்பாக்கியை முகத்துவாரம் வெட்டுகிற துலுக்கர் மனிதரிலே சுட்டாற்போலேயும் அவர்களோடினார்களென்றும், அப்பால் துப்பாக்கியிலே குண்டு போடாத சாடை தெரிந்து மறுபடி வந்து வெட்டினார்களென்றும், மறுபடி சுட்டால் அவர்கள் போகாமலிருந்தார்களென்றும் அந்தச் சேதி வந்து மூசியே பெடுதல்மிக்கு சொன்னவிடத்திலேயவர்கள் கை மிஞ்சாமல் நாம் சண்டை பண்ணப்போகாது. முகத்துவாரம் வெட்டிவிட்டால் வெட்டிவிடட்டும் என்றும் சொன்னதாகவும் அதிகாலத்தாலே ஐந்துமணிக்குத் துலுக்கர் புவுஞ்சு கோட்டை நிறுத்தி மூலையிலே சிறிது பேர் வந்தாற்போலேயும் அவர்களைப் பார்த்துக் குண்டு போடாமல் இரண்டு பீரங்கி சுட்டாற்போலேயும் மூசே லந்நூர் இருநூறு சொல்தாதும் மாயே சிப்பாய்களும் ஐம்பது பேருடனே இறங்கியிருந்தவன் தன்னைச் சண்டைபண்ணச்சொல்லி அடையாளங் காண்பித்ததாக எண்ணிக்கொண்டு, கப்பித்தான் தோட்டத்திலேயும் அதற்கு மேல்பக்கத்திலேயும் இறங்கியிருந்த பவுஞ்சு பேரிலே போய் (20-உ) (நவம்பர் 2-உ) புதனன்று காலமே துப்பாக்கிகள் தீர்ந்தார்கள். கர்னைத்துக்கென்கிற தீ குடுக்கைகள் சுட்டுப்போட்டார்கள். இந்தச் சாடை சண்டை சுற்றிக்கொண்டதென்று கோட்டையின்பேரிலே யிருக்கிற சிறிது பீரங்கிகள் குண்டுபோட்டுக் கெட்டித்ததும், குண்டில்லாமல் கெட்டித்திருந்ததும் ஏகவேளையிலே சுட்டமாத்திரத்திலே கப்பித்தான் தோட்டத்திலேயும் அதற்குப் பிறகேயும் இருக்கிற கோவிலிலேயும் இறங்கியிருந்தவர்களுக்குக் கால்போனவனும் தலைபோனவனும், குதிரைகள் பேரிலே வரிக்குதிரையாய் ஏறிக்கொண்டு ஓடினவனும், சும்மா ஓடினவனும், குதிரைகள் செத்துமிப்படி நானு விதமாய் துலுக்கர் பவுஞ்சு முறிந்து ஓடி அப்

பால் மாபூசுகான் இறங்கியிருக்கிற பாளையத்தண்டையிலே விழுங்காட்டிலும் மாபூசுகானும் ஆனையின் பேரிலே ஏறிக் கொண்டு ஓடினனும். இந்தப்படி அவர்களோட இவர்கள் துரத்த ஐந்து நாழிகை மட்டுக்கும் துரத்தி, அப்பாலிவர்கள் துலுக்சர் பவுன்சிலே போட்டுவிட்டுப் போன தட்டுமுட்டுகள் சிறிது எடுத்துக்கொண்டு, அந்த ஈசுரன் கோவிலிலே போட்டிருந்ததைச் சிறிதைக் கொளுத்திப்போட்டு வந்ததாய்த் துரையவர்களென்னை ஆறு மணிக்குச் சரியாய்ப் போய் வீட்டுக்கு வந்தவுடனேயழைப்பித்து உற்சாகமாய்ச் சொன்னர்கள். அதற்கு நானும்முடைய யோகத்தினல் வந்த சத்துருக்கள் எல்லாம் நாசமாய்ப் போகிறதுதா னென்றும் முன்னே தானே சொல்லவில்லையா வென்றும், இதல்லாமல் மாபூசுகான் மலையாளந்துக்குப் போனபோது அங்கே அடிபட்டு இருபத்தைந்து குதிரையோடே வந்து, திருச்சிராப்பள்ளி வந்து சேர்ந்தான் என்றும், தஞ்சாவூர் சண்டையிலே போனதற்கும் அடிபட்டு ஓடிவந்ததுதான் நீங்கள் கேள்விப்பட்டிருக்கிறுப்போலேயாச்சுதே; மலையாளக்காரர்பேரிலே வடக்கே சண்டைபோடப்போனபோது அங்கேயும் அடிபட்டு ஓடிவந்து ஆற்காடு வந்துசேர்ந்தான் என்றும் இப்படி ஆறேழுவிடத்திலே அடிபட்டுவந்தது வாடிக்கைதான். ஆனபடியினலே இங்கேயும் அடிபட்டு ஓடிப்போனுனே, இனிமேல் புத்தி வந்து சமாதானம் பேசுவானென்றும் முன் சொன்னேனே அந்தப் படிக்குத்தானே நடந்துதே யினிமேல் அவர்கள் அப்பன் எழுதப்போகிறுன் நான் சொன்னுப்போலே கேளாதேபோனுயே போதும் வாயென்று எழுதப்போகிறுன். இவனும் சும்மாப் போனுல் எகத்தாளியென்றும், தகப்பனுருக்குச் சரீரம் சுவஸ்தமில்லையென்றும் பேரிட்டுக்கொண்டுபோகப் போகிறுனே என்று சொல்ல. அவருற்சாகமாய்ச் சிறிது வார்த்தை எகத்தாளியாய்ச் சொல்லி இப்படி நடந்தது அப்பாலெனக்கு குருவப்பசெட்டியார் அந்தச்சண்டை நடந்த சேதியை எழுதினன் அதுவும் நூறுபேர் சாவும் ஐம்பது அறுபது குதிரை சாவும் துரை சொன்னபடிக்குத்தானே எழுதினன். அந்தக் காகிதப்படிக்கு எழுதியிருக்குது பார்த்துக்கொள்ளவேண்டியது. அப்பால் துரை யென்னை அழைத்து ராத்திரி ஏழு மணிக்குச் சென்னப்பட்டணத்து மாபூசுகான் சண்டை சமாசாரஞ் சொன்ன பிற்பாடு, நான் ஐந்தாறு நாளையிலே

சென்னபட்டணம் போகவேணுமென்று சொன்னார். முன்னே தானே போனால் வெகு காரியமுண்டென்று யினிமேல் போனாலும் ஊரை சுஸ்தப்படுத்திச் சீக்கிரமத்துக்கு வரலாமென்றும் சொன்னதற்கு இங்கேயிருந்து புறப்படும்போது இருநாற்றைம்பது முன்னூறு சொல்தாதுகளுடனே புறப்பட்டு சதுரங்க பட்டணமட்டுக்கும் போகிறதற்குள்ளே சென்னபட்டண மிருந்து இருநாற்றைம்பது சொல்தாதுகள் சதுரங்கபட்டண மட்டுக்கும் வருவார்கள். அவர்களைக் கூட்டிக்கொண்டு சென்னபட்டணத்துக்குப் போவோம், நீயும் தயாராயிருவென்று சொன்னார். நல்லதப்பாவென்று சொன்னேன். அப்பால் எப்படியும் அப்துல் சலீலைப் பிடித்துத் தீரவேணும். அரியாங்குப்பத்துக்கு இருபத்தைந்து சொல்தாதுகளும், இருபத்தைந்து மாயே சிப்பாய்களும் நயினார் சேவகர் பத்து பேரும் அந்தப்படிக்குத்தானே ஒழுகரைக்கும் போயிருக்கிறார்களே ஒபிசியேலை யிருட்டோடே போய் இரண்டு இடத்துக்கும் போயங்கேயிருந்து நாளைக்குப் பகலைக்குமேலே புறப்பட்டு விழுப்புரத்துக்குப் போகச் சொல்லுகிறேனென்றும் சொன்னார். இன்றையதினமெங்கள் மனுஷர் வந்து ஒழுகரையிலிருக்கிற பேரை சமயமாயிருக்கிறது போவோம் வாருங்கோளென்றழைத்தால் உத்தாரமில்லை என்று சாற்சந்து சொன்னாலுமென்று சொன்னேன். இன்றையதினம் அனுப்ப மறந்து போனேன். நாளைப் பனிரெண்டடித்து ஒரு மணிக்குப் புறப்படச்சொல்லி எழுதுகிறேனென்று சொன்னார். நல்லது என்று சொன்னேன். அப்பால் ஒழுகரைக்கும் விழுப்புரத்திற்கும் வழி கேட்டார். அந்தப்படிக்கு எழுதி முசியே கோசினு (M. Caussinat) அரியாங்குப்பத்து வழியாய்ப் போகிறதற்கு மேற்கு வாசற்படியிலே யிருக்கிற ஒபிசியேல் முசியே ஒழுகரை வழியாய் போகச் சொல்லியும் ஒடுதி எழுதி கையெழுத்துப் போட்டு முசியே துக்கேன் (M. Duquesne) கையிலே கொடுத்து முசியே கோசினுவையும் மேற்கு வாசல் ஒபிசியேலையும் அழைத்துருபுருபாய்ச்சொல்லி ஒன்பதரைமணிக்கனுப்புவித்தார். நானுமனுப்புவித்துக்கொண்டு ராத்திரி பத்து மணிக்கு வீட்டுக்குவந்தேன்.

இரண்டு நாளாய் தானப்பமுதலி துரைவீட்டுக்கு வரவில்லை.

1746 ஆ நவம்பர் மீ 5உக்கு அக்ஷய ஞு அற்பிசி மீ 23உ சனிவாரம்.

இற்றைநாள் காலத்தாலே முந்தாம்நாள் வந்து முத்து வெங்கிடபதிரெட்டியார் நம்முடைய வீட்டுக்குவந்து தீவானத்தார் கலாபமாய் நடத்துகிறுப்போலே இருக்கிறதே ருஞ்சுக் குழந்தைகளிருக்கிறார்களே என்னவென்று கேட்டார். அப்படி பட்டணத்துக்குப் பின்னையும் சிரேயசேயல்லாமல் இதுகளைத் தொட்டுத்தொந்தரவு வரத்தக்கதில்லையென்று சொல்லி அப்பாலும் ஒருவேளை அப்படி ஏதாகிலும் தொந்தரவு வருகிற போது எங்களுடைய குஞ்சுக் குழந்தைகளுக்கு ஓத்தபடியாகுதென்று தைரியஞ்சொல்லி அவரை அனுப்பிவிட்டு நான் துரை வீட்டுக்குப் போனவிடத்திலே செஞ்சி கில்லேதாராயிருக்கிற நசுமொகதீன் சாயபு பதினலு குதிரையுடனேயும் இருபது முப்பதுபேர் ராணுவத்துடனேயும் விழுப்புரத்திற்கு அப்துல் சலீவின் அண்டைக்கு வந்திருக்கிற சேதியை துரையுடனே சொன்னதற்கு அவர் அப்துல் சலீலைப் பிடிக்கப்போகிற இரண்டு ஒபிசியேல்மாருக்கும் நசுமொகதீன் சாயபுவையும் கூட பிடிக்கச் சொல்லி, காகிதமெழுதி முசே துக்கேன் கையிலே கொடுத்து, பனிரெண்டடித்து ஒரு மணிக்கு அரியாங்குப்பத்திலிருக்கிறவர்களையும் ஒழுகரையிலிருக்கிறவர்களையும் பயணஞ்சாகி விழுப்புரத்துக்குப் போகச்சொல்லி யெழுதியனுப்பி, உன் மனுஷருக்கும் பத்திரமாய்ச்சொல்லி உள்ளே நம்முடைய வெள்ளைக்காரரைக்கொண்டு கொண்டுபோய் விட்டுவிடச்சொல்லி, அப்பால் இரண்டுபேரையும் பிடித்துவருவார்கள் என்று சொன்னார். நானும் உசேனையும் கோபாலகிருஷ்ணய்யன் அனுப்பின சேவகனுக்கும் எந்த ரூபமும் பிடித்து வரச்சொல்லியும் உசேனுக்கு நல்ல வெகுமானங்கள்கொடுத்து நல்ல உத்தியோகமும் வாங்கிக்கொடுக்கிறேனென்று உற்சாகம்பண்ணி, இவன் கிட்டப்போய்க் காட்டிக்கொடுக்கத்தக்கதாகத் திட்டம்பண்ணி அனுப்புவித்தேன். அப்பால் தொண்டமானத்தம் வெங்கிடாசலய்யன் வந்து தானனுப்பின மனுஷன் வந்து நசுமோகதீன்சாயபு செஞ்சிக்குப் பயணஞ்சாகிப்போகிறதாகி தயாராயிருக்கிறார் என்று கபுறு சொன்னான். அவனொரு

வேளை புறப்பட்டுப் போய்விட்டாலும் அப்துல் சலீலை எந்த ரூபத்திலேயும் பிடித்துவரச்சொல்லி, தொண்டமான்த்தம் வெங்கடாசலய்யனுக்குச் சொல்லி அவரையும் பனிரெண்டடித்து ஒன்றரை மணி வேளைக்கு அனுப்புவித்தேன். அப்பால் பரதேசிகள் பேசிறவர், வருகிறவர்கள், பின்னையும் பட்டணத்திலே போக்கு வருத்தாயிருக்கிறபேர்களுக்குத் தண்டவாளம், தபலை, செம்பு இதுகள் விடாதபடிக்கு 7, 8 நாளாய்க் கட்டாயிருக்கிறது. அதற்குச் சாவடியாருக்கு அந்தச்சாடை பார்த்துக்கொண்டு சீட்டுக் கொடுத்தனுப்பச்சொல்லி உத்தாரம் வாங்கிக்கொடுத்து அப்பால் கான் சாயபுக்கு வந்த அரிசி, பாய், நன்கொடையாய் விட்டுவிடச்சொல்லிச் சாவடியாருக்குச் சொல்லியனுப்பி அப்பால் துரைகள் கோன்சேல்கூடினபடியினாலே நாம் புறப்பட்டு வந்து பாக்குக்கிடங்கிலே யிருந்து அப்பால் வீட்டுக்கு வந்தேன்.

அப்பால் பகலைக்குமேலாக தோட்டத்துக்குப் போய் அவ்விடத்திலேயிருந்து துறையூரிலேயிருந்து புதிதாய்ப் பாலைய சாமி இடத்துக்குப் பட்டந்தரிப்பிக்கவந்த பச்சை கந்தய்யர், கம்பாலய்யர் வீட்டிலே இருக்கிறபடியினாலே அவரைக் காணவேணுமென்று இரண்டு கெஜம் சகலாத்துங் கொண்டுபோய் வைத்துத் தரிசனம்பண்ணிக்கொண்டு. இரண்டுநாழிகை தேச காலம் இஷ்ட லாபமாய்ப்பேசியிருந்து அவர் மகா காசியுகிரந்தமும் தமிழும் நன்றாய்ப் படித்திருக்கிறபடியினாலேயும் நல்ல வித்துவானானபடியினாலேயும் சாவகாசமாய்ப் பேசியிருந்து அவர் கையிலே அனுப்புவித்துக்கொண்டு துரை வீட்டுக்கு ஆறு மணி சாயங்காலம் வந்தேன்.

அப்பால், துரையவர்களிடத்துக்குப் போனவிடத்திலே நடந்த வயணம்: கும்பினீர் சேவகன் கிறிஸ்துவ மூக்து என்கிறவன் தான் காகிதம் மாபூசுகானுக்குக், கொண்டுபோகையிலே காஞ்சிபுரமார்க்கமாய்க் கொண்டுபோகச் சொன்னபடிக்குக் காஞ்சிபுரத்துக்குப் போகிறதற்குள்ளே மாபூசுகான் சென்னப்பட்டணத்துக்குச் சமீபத்தில் சண்டை போட்டுப் பட்டணத்து மேல்பாரிசத்திலேயிறங்கியிருந்தான். அவ்விடத்திலே கொண்டுபோய்க் காகிதங் கொடுத்தேன். கொடுத்தவிடத்திலே படித்துப் பார்த்துக்கொண்டு மறுகாகிதம் என் அருக்கான் கையிலே அனுப்பிவைக்கிறேன்; நீ போவென்றும் சொன்னப்போலேயும் பதில் காகிதமில்லாமல்

போகிறதெப்படி யென்று கேட்டவிடத்திலே, உனக்கென்ன பயம். நாம் காகிதம் பிறகேயனுப்புகிறோமென்று சொன்ன தாய்ச் சொல்லு போ வென்றவிடத்திலே வெளியே புறப் பட்டவுடனே முத்திரை தலைப்பாகைச் சட்டையைக்கூட பிடுங்கிக்கொண்டார்கள். அதன் பேரிலே மயிலாப்பூரிலே வந்து சம்பாகோவில் பாதிரியாரிலே யொருத்தர் தவிர மற்றப்பேரையெல்லாம் காவல் வைத்திருக்கிறது. அந்த ஒருத்தனுடனேயும் நடந்த சேதி சொன்னவிடத்திலே பழஞ் சோமனும் பாகையும் கொடுத்து இரண்டு பணமும் படி கொடுத்து இன்னொருதரம் போய்க் காகிதங்கேட்டு அதன் பிற்பாடு ஊருக்குப் போகலாமென்று சொன்னதாகவும், அதன்பேரிலே தான் மறுபடியும் மாபூசுகான் தண்டுக்குப் போனதாகவும், மாபூசுகானைக் கண்டவுடனே நான் முன்னே தானே என் மனுஷர் கையிலே அனுப்புகிறேன் போ வென்று சொன்னமாத்திரத்திலே கையை யிழுத்துவிடவந்தான் சோபு தாரன். அதன் பேரிலே நான் புறப்பட்டு மிட்டாய்க்கடைக்கு வருகையிலே கூடாரத்தண்டையிலே, மூசே சேர்சாமை காவல் வைத்திருக்கிறது. அவனுக்குக் கால்சட்டை, கமீஸ், குல்லா வுடனே அழுதவண்ணமாயிருக்கிறான். அவனைக் கண்டு பேச வேணுமென்று ரூம்கக்கீம் மகன் வந்து பேசவந்தால் இரண்டு பேச்சு பேசுகிறதற்குள்ளே அவனை அப்பாலே போகச் சொல்லி இவனை அங்கே இருக்கிற டவாயித்தர் தொந்தரவு பண்ணுகிறார்களென்றும் ஒரு வேளைக்குப் பீங்கானிலே கொஞ்சம் சோற்றைப்போட்டுக் கொஞ்சம் இறைச்சியும் போட்டுவைத்தால் அதைத் தின்னுவிட்டுக் கையைத் துடைத்துவிட்டு அழுதுகொண்டிருக்கிறான் என்று சொன் னான். இப்படித்தான் மிட்டாய்க்கடையிலே இருக்கையிலே முன்னிருந்த பவுஞ்சுபேரிலே பிரான்சுக்காரர் சொல்தா துகள் வந்து விழுந்து சண்டைபண்ணினது அவர்கள் நிற்க மாட்டாமல் புறப்பட்டு ஓடிவந்து மாபூசுகான் தண்டின் பேரிலே போய் விழுந்ததாகவும் அவர்களெல்லாம் ஓடின ஓட்டமும் மாபூசுகான் ஓடின ஓட்டமும் சொல்லிமுடியாது. அந்தச் சமயத்திலே நானும் ஓடிப்போய்விட்டேன். அப்பா லெனக்குத் தெரியாது. அவர்கள் சென்னப்பட்டணத்துக்கு மேற்கே காதவழியிலே போய் இறங்கினார்களென்று சொன் னார்கள். நான் மயிலாப்பூருக்கு வந்து சம்பாகோவில் பாதிரிக்கு

நடந்த சேதியைச் சொல்லி அவர் காகிதமொன்று இங்கே யிருக்கிற பாதிரியாருக்கு வாங்கிக்கொண்டு வரும்போது கோவளத்துக்கு நேராய் பாதிரியைக் கண்டேன். கண்டவுடனே அவருடனே நடந்த சேதியெல்லாம் சொல்லிக்கொண்டிருக்கையிலே கோவளத்துக் கில்லேதாரன் உடைந்துபோன கப்பல் மனுஷரையும் அனுப்பிவிட்டு, மரம் மட்டை கிடக்கிறதை யெல்லாம் எடுத்துப்போங்கோளென்றும் மகா வினயவிதமாய்ச் சொல்லி அனுப்புவித்ததாகவும் இது முதலாகிய சேதியெல்லாம் சொல்லி மூசே பரிதி காகிதம் துரைக்குக் கொடுத்தான் கொண்டுவந்தேன் என்று சொன்னான். அவனைச் சாப்பிடச்சொல்லி சாயங்காலம் போவோம் என்று சொன்னபடி முத்தை அழைத்துக்கொண்டு துரையவர்களண்டைக்குப் போய் ஆறரை மணி நேரத்திலே சொன்னவிடத்திலே, மாபூசுகான் ஓடினதும் கோவளத்துக் கில்லேதாரன் பிடித்த மனுஷரை விட்டனுப்பித் தட்டு முட்டு கூட எடுத்துக்கொண்டு போகச்சொன்ன சமாசாரங்களையெல்லாம் கேட்கச்சே பின்னையும் முன்னையுஞ் சந்தோஷந் தான். அப்பால் மூசே கெற்சாம் பேச்சு அவன் சொன்னபடிக்கு அவன் அழுகிறதும் அவனைப்படுத்துகிற கஸ்தியும் விலங்குபோட முஸ்தீதா யிருக்குதென்றும் சொன்ன சேதியைச் சொல்லாமல் பிரான்சுப்படை வந்தவர்கள் பின்னையுங் கால் நாழிகை வழி வந்தால் மூசே கெற்சாமைக் கொண்டுபோவார்கள் அது தப்பிப்போச்சுதென்று லகுவாய்ச் சொன்னேன். அவரும் விஸ்தரித்துக் கேட்கவில்லை. அப்பால் காம்பிருவிலே இரு வெளியே வந்தவுடனே செஞ்சிதார் கில்லேதாரன் நேற்று மூன்று மணிக்கு வந்தானே இன்றையதினம் காலமே பயணம்போகத் தக்கதாக முஸ்தீதாய் சேதிவந்ததென்று சொன்னதற்கு இன்ன காரியத்திற்கு வந்தானென்று தெரியுமா வென்று கேட்டார். அது தெரியாதென்று சொல்லி, கான்சாவுக்கு வந்த அரிசிக்கு உத்தரவுவாங்கிக்கொடுத்துவிட்டுப்பாக்குக்கிடங்கிலே வந்தவிடத்திலே அம்மாள் நாராயணப் பிள்ளையுடனே சேவகன் வந்தசேதி தெரிந்துகொண்டு வரச் சொன்னாளென்று சொன்னான். உங்கள் தமையன் மாபூசுகான் ஓடின ஓட்டமும் அவன் தண்டு முறிந்ததும் துரைக்குப் பிறகே காகிதம் அனுப்புகிறேன் என்று போகச்சொன்னதாகவும் இது முதலாகிய சேதியைச் சொல்லியனுப்பிவிட்டு வீட்டுக்கு

வந்தபிற்பாடு பத்துமணிக்கு நாராயணப்பிள்ளைவந்து அம்மாள் மாபூசுகானுக்குக் காகிதமும் எழுதி சிறிது பொன்னாலே பண்ணின தம்பலப்பட்டிக்கமும், ஒரு நேர்த்தியான வேலைசெய்த பொன்தகடு பொன்பிடிபோட்ட பெட்டியும், பொன்னாலே செய்த நகாசு வேலையாய்ச்செய்த பானந்தானும் இது வைக்கிற தட்டு ஒன்று இது சானூர்க்காசியிலே பண்ணினது ஐந்நூறு வராகன் பெறும் அதுவுங்கொடுத்துத் தன் சோபுதாரன் கையிலேயனுப்பினாள். அவனுடனேகூட சேவகனொருத்தன் போயிருந்தான். அவன் வந்து அம்மாளுடனேயும் துரையுடனேயும் சொன்னது: சண்டையான பத்தாம் நாள் தாங்கள் கூடாரத்திலேயிருக்கையிலே கொண்டுபோன தட்டு முட்டுகளையும் வைத்துக்கொண்டு காகிதமும் சோபுதாரன் கொடுத்தான். தட்டுமுட்டையும் காகிதமும் பார்த்துக்கொண்டு உங்களைத்தானே தான் மயிலாப்பூருக்குப் போகிறேன், அங்கே வாருங்கோளென்று கூட அழைத்து வந்தான். அவன் மயிலாப்பூரிலே இறங்கினவுடனே எங்கள் கையிலேயிருந்த தட்டுமுட்டுகளைக் கூடாரத்துக்குள்ளே வைக்கச் சொல்லி ஒரு சமேதாரனை அழைத்து இவர்கள் நாலுபேரையும் வெட்டிப்போடென்று உத்தாரங் கொடுத்தான். அந்தத்திரையை விட்டு அங்கச் சமேதாரனிப்புறம் வருகிறதற்குள்ளே இந்தப்பேச்சு சோபுதாரனுக்கு நன்றாய்க் கேட்டபடியினாலே என் காதிலேயும் கூலிக்காரன் காதிலேயும் சொல்லிவிட்டு அவனும் நாங்களும் ஓடிப்போனோம். அவன் கிழக்கே ஓடி ஒரு வீட்டிலே புகுந்துகொண்டாப்போலேயிருந்ததினாலே நாங்கள் சின்னமலைக்குச் செவ்வையாய் ஓடி அப்படியே மேல்வழியாய் வரும்போது புடவை சீலைகள் எல்லாம் பிடுங்கிக்கொண்டார்கள். சீவனைத் தப்பித்துக்கொண்டு வந்தோமென்று சொன்னார்களாம். அதற்குத் துரை முசியே கேஸ்சாமெங்கேயிருக்கிறானென்று கேட்டாராம். அங்கே காணோம், ஆற்காட்டுக்கு அனுப்பினதாய்ச் சொன்னார்களென்று சொன்னானாம். இந்தப் பேச்சு வெளியே சொல்ல வேண்டாமென்று திட்டம்பண்ணிப் போகச் சொன்னார் என்று நாராயணசாமிப்பிள்ளை வந்து சொல்லிப்போனான்.

1746 ஆ நவம்பர் மீ 6வ க்ஷய ஆ அற்பிசி மூ 24வ ஆதிவாரம்

இற்றை நாள் காலத்தாலே கோவிலுக்குக் குவர்னதோர் போயிருந்து வந்து வெள்ளைக்காரரிலே மகாநாட்டுக் கோன்சேலிலே மூன்று கோவில் பாதிரிகள் கூடினார்கள் என்றால் மற்றப்

பேர் கூடினார்களென்றெழுதவேண்டியதில்லையே. ஆனபடியினாலே இந்தக் கோன்சேல் கூடி என்ன யோசனைபண்ணித் தீர்த்தார்களென்றால் வெள்ளைக்காரர் மகாநாட்டில் கூடி குவர்னதோர் அவர்களையும் புதுச்சேரி கோன்சேலையும் கேட்டுக்கொண்டாப்போலே, அது என்ன வென்றால் மூசே லபூர்தோனே சென்னப்பட்டணத்திலே நடப்பித்த காரியங்களெல்லாம் நியாயந்தப்பிதமாகவும் சிறிது துரோகமாகவும் நடப்பித்த சங்கதிகளும் சத்துருவாகிய இங்கிலீசுக்காரருக்கு அனுகூலமாயிருந்து நடப்பித்த காரியங்களெல்லாம் பார்த்தால் பிராஞ்சு சாதிக்கு இருந்த துலுக்கராச்சியங்களுக்குள்ளேயிருக்கிற மேன்மைபாடுக்கும் கீர்த்திக்கும் பங்கமாயிருக்கிற காரியமானபடியினாலே சென்னப்பட்டணத்திலே இங்கிலிசுக்காரருக்கு மூசே லபூர்தோனே கொடுத்திருக்கிற உடன்படிக்கையெல்லாம் பரிகரித்துப் போடச்சொல்லி மகாநாட்டார் அனைவரும் பெத்திஸியோ மெழுதிக்கொடுத்துக் கேட்டுக்கொண்டதாகவும் அதற்குக் கோன்சேலிலே இந்த நியாயம் விசாரித்து மகாநாட்டார் கேட்டுக்கொண்டபடிக்கு மூசே லபூர்தோனே இங்கிலீசுக்காரருக்கு நடப்பித்த உடன்படிக்கைக் கவையில்லையென்று தீர்த்தார்கள் என்ற வெள்ளைக்காரர்கள் சொன்னார்கள்.

அப்பால் பத்து மணிக்குமேல் பதினொருமணிக்குள்ளே அப்துல்சலீலைப் பிடிக்கப்போனவர்களுடைய சுபுறு வந்தது. அங்கே போனவிடத்திலே ராத்திரி பத்து நாழிகைக்கு அப்துல்சலீல் சாப்பிட்டுக் கொஞ்சம் கச்சேரியிலே உட்கார்ந்து பேசிக்கொண்டிருக்கும்போது இரண்டு மூன்றுபேர் மித்திரசனத்துடனே யிருக்கக் கபுறு வந்து வெள்ளைக்காரருக்கு வந்து சொன்னவிடத்திலே வெள்ளைக்காரர் போய் வாசற்படியண்டையிலே நுழையப்போனாப்போலே வாசற்படியிலே யிருக்கிறவர்கள் கத்தி உருவினாப்போலே மூசே கோசினவும் வழுதாவூர் வாசற்படியிலே யிருக்கிற தடியனும் துப்பாக்கிக்காரரைச் சுடச்சொல்லி உத்தாரங்கொடுத்தபடியினாலே ஏகவேளையிலே ஒரு நிப்பரமாய் அப்துல்சலீல் வாசற்படியைப் பார்த்தாப்போலே சுட்டபடியினாலே அப்துல் சலீல் கச்சேரியிலிருந்தவன் தன் தலைப்பாய், நீமா கத்தி கட்டாரி, உக்கா, செபமாலை, கொரான் எல்லாம் வைத்துவிட்டுக் கோவணச் சீலையுடனே

உள்ளே பெண்டுகளிருக்கிற விடத்திலேயிருக்கிற பெட்டியிலே எப்படி அடக்கினுனே அடங்கினுன். போனவர்கள் விவேகிக ளல்லாதபடியினுலேயும், தந்திரமறிந்தவர்களல்லாதபடியினு லேயும், சண்டை காரியமல்லாமல் வேறே காரியமறியாதவர்க ளானபடியினுலேயும், துலுக்கர் வீடு சந்துசந்தாய் ஒரு வீட் டுக்கு இரண்டு வழியாயிருக்கிறபடியினுலேயும் அடயவளஞ் சானுகக் கட்டியிருக்கிறபடியினுலேயும் இவர்கள் தீவட்டி முத லான வெளிச்சத்துக்கு ஆதாரமாயிருக்கிற வலுவு கொண்டு போகாதபடியினுலேயும், பின்னையும் நாலைந்து நாழிகையிருந்து சாவகாசமாய்ப் பார்த்தபடியினுலேயும் அப்துல் சலீல் வீட் டைச் சுத்திக்கொண்டிருந்த மாயே சிப்பாய்களும் நயினுர் சேவகரும் கொள்ளையிடலாமென்று வீட்டைச் சுத்திக்கொண் டிருக்கிறதை விட்டுவிட்டு அப்துல் சலீல் வீட்டுக்குள்ளே கொள்ளையிடலாமென்று நுழைந்து அகப்பட்டதைச் சுத்தின படியினுலே அப்துல் சலில் தப்பி பெண்டுகளண்டையிலே யிருந்து போனுன். போன வெள்ளைக்காரர் நாலு மூலையும் பார்த்தோமென்று அவனுக்கு முன்னே ஓடிப்போனுன். இப்போது இங்கேயில்லை என்று சொல்லிவிட்டு அங்கே யிருந்த கிசு முத்தக்காரரையும் சேவகரையும் அவன் மேலே போட்ட ரீமா, கத்தி, கட்டாரி, உக்கா அவனுக் காத்திருந்த சுசினி அவன் கையிலேயிருந்த செபமாலை, கொருன் கூட அங்கேயிருந்த பேர், கத்தி, கட்டாரி, துப்பாக்கிகளும் எடுத்துக்கொண்டு, அங்கேயிருந்த கிசுமுத்தக்காரர் சேவ கர் இருபத்தொருபேரையும் பிடித்துக்கொண்டு அந்நேரமும் புறப்பட்டு அரியாங்குப்பம் வந்து சேர்ந்தார்களென்று வீரப் பன் வந்து சொல்ல, நான் துரைக்குக்கபுறு போய்சொன்னேன். அவனதற்குச் சொன்னது: தந்திரமுள்ள மனுஷராயனுப்பாத படியினுலே கெட்டுப்போச்சுதென்று மூசே துக்கேனையழைத்து வந்தவர்களை அரியாங்குப்பத்தில்தானே வைத்துப் பிடித்து வந்த கிசுமுத்தக்கார் சேவகரைத் தொட்டுக் காரியமென்ன, அவர் களுக்குச் சாப்பாடும் போடுவித்து அவர்கள் தட்டு முட்டுகள் எடுத்து வந்ததையும் மறுபடி கொடுத்து அப்படித்தானே அனுப்பிவிடச்சொல்லிச் சொன்னுர். அப்பால் இரண்டரை மணிக்கு என்னையழைத்து அப்துல் சலீலுக்கு ஒரு காகிதமெழு தச் சொன்ன வயணமென்னவென்றுல்: இங்கிலீசுக்காரர்களைப்

பிடிக்கவந்த எங்கள் மனுஷர் சொலுதாதுகள் தப்புக் கபுருய் இரண்டு பேர் பெரிய மனுஷர் இங்கிலீசுக்காரர் வந்து உங்கள் அரண்மனையிலே புகுந்தார்களென்று கபுறு கேட்டு வாசற்படிக்காரனைக் கேட்டவுடனே வாசற்படிக்காரர் இங்கே இங்கிலீசுக்காரருமில்லையென்றும் அதற்கு மார்க்க மாய்ச் சொல்லாமல் இங்கே வருகிறதேது போகிறதேது என்று கத்தி உருவினபடியினாலேயும் இவர்கள் புதுசாய் வந்து இந்த ராச்சியம் வழக்கம் அறியாதவர்களாயும் ஒரு துப்பாக் கிச் சுட்டாப்போலே சுடச்சொல்லிச் சைகையள் பண்ணுகிற தாய்க் காட்டுமென்று எல்லாரும் துப்பாக்கியைச் சுட்டார்கள். அதன்பேரிலே இவர்கள் இங்கிலீசுக்காரரிலே வராமல் நம் முடையபேரிலே கத்தியெடுத்து வெட்டார்களென்று உள்ளே வந்து சோதித்து இங்கிலீசுக்காரரைக் காட்டச்சொல்லி இருந்த மனுஷரைப் பிடித்து வந்தார்கள். அந்தச் சேதி நாம் கேட்ட வுடனே என் மனதுக்குத் தோற்றின கிலேசத்தை எழுதி முடியாதென்று அங்கே தப்புநடப்பித்த மனுஷரையெல்லாம் நாம் தண்டிக்கிற சேதி இனிமேலுங்களுக்கு வெளியாகு மென்று உங்களுக்கும் நமக்கும் இருக்கிற அண்ணன் தம்பி யைப் பார்க்கிலும் அதனமாய் நடக்கிற சினேகத்துக்கு இப் படிப்பட்ட காரியம் நடக்கலாமாவென்று இந்தமட்டுக்கும் நடந்ததும் அப்படித்தான். மேலும் சினேகம் உத்திரோத்தமாய் நடக்கிறதும் அப்படிதான். ஆனால், காரியக்காரரையும் தொட்டு ஒருவேளையிலே ஏக தேசத்திலே தப்பிதம் வரும்; வந்தால் மனம் பொறுக்கவேண்டியது கடனுமே யென்று இது மனம் பொறுத்துக்கொண்டு என்னிடத்திலே தயவுபண்ணுகிறதற்கு ஆயிரம் காகிதமாயெண்ணிக் கொள்ளவேணுமென்று பின்னையு முபசாரமாக எழுதச் சொன்னார். அந்தப்படிக்கு எழுதியான பிற்பாடு என்னைப்போய் அரியாங்குப்பத்திலிருக்கிறவர்களுக்குப் பிடித்துவந்த மனுஷர்களுக்கு மேலாகச் சாப்பாடும் போடுவித் துச் சொலுதாதுகள், சிப்பாய்கள், நயினார், சேவகர் கொள்ளை யிட்டுவந்த தட்டுமுட்டுகளையெல்லாம் அவரவருக்குக் கொடுத்துவிட்டு, பேருக்கு ஒன்றும் இரண்டும் ரூபாய்க் கொடுத்து அவர்களுக்கு இங்கிலீசுக்காரனைப் பிடிக்க வந்தபடி யினாலேயும் அவர்கள் தப்பு கபுறுகேட்டு வந்தபடியினாலேயும்

இப்படி நடந்தது என்று அப்துல் சலீல் சாயபுக்கு மிவருக்கும் அண்ணன் தம்பியென்று உறவும் சினேகிதமும் நடக்கிறதி ருலே இப்படி இனிமேல் வராது. இப்படி நடக்கத்தக்கது மில்லே. இது என்னமோ காலகெதியாய் நடந்ததைத்தொட்டுத் துரை மகா விசாரமாயிருக்கிறுர். இதல்லாமல் அங்கே யிருந்து வந்த வெள்ளேக்காரரை பெரியவாக்கினைபண்ணுவாரென்று அவர்களுக்கெப்படிச் சொல்லவேணுமோ அப்படிச்சொல்லி இந் தக் காகிதமும் கொடுத்து அவர்களிருபத்தொருபேரையும் அனுப்பிவிட்டு வாயென்று சொன்னுர். அந்தப்படி நான் போயங் கிருந்த முசே துக்கேனேயுங் கூட வைத்துக்கொண்டு முன்னெழுதப் பட்ட பேச்செல்லாம் சொல்லி நாற்பது ரூபாயும் அவர்களுக்குத் தக்கதாய்க் கொடுத்துத் துரை அப்துல் சலீலுக்கு எழுதின காகிதமுங் கொடுத்து அவர்களே அனுப்பிவிட்டு நானும் முசே துக்கேனும், கோசினுவும் வழுதாவூர் வாசற்படியிலே ஒபிசியே லும் துரையண்டைக்கு ஏழு மணிக்கு வந்து கபுறுசொல்லி வில்லியநல்லூர், கூடப்பாக்கம் முதலான கிராமங்களிலே இருக் கப்பட்ட ஜனங்கள் எல்லாம் இந்தச் சேதி கேட்டு ஓடிப்போன சேதியுஞ்சொல்லிவிட்டு வீட்டுக்குப் போனேம். துலுக்கர் தட்டுமுட்டு மறுபடி அனுப்பிவிட்ட லீஸ்துரு முசே துககேன் பிரான்சிலே எழுதின லீஸ்துரு காகிதம் துரை என் கையிலே கொடுத்தார். நான் மதனுந்தபண்டிதன் கையிலே கொடுத்துப் பத்திரமாய் வைக்கச்சொன்னேன்.

இற்றைநாள் ராத்திரி எட்டு மணி வேளேக்குச் சுப்பய்ய னுக்குக் காகிதமெழுதி வெள்ளேக்காரரை அழைக்கப்போன வெள்ளேக்காரன் செலவுக்கு ஆற்காட்டுக்கு ஐம்பது ரூபாய் முதலிட்டு, தறுவாடிகையிலே முதலிட்டு, உண்டிகை வாங்கி மதனுந்தபண்டிதன் அனுப்பினுன்.

1746 ஆ நவம்பர் மீ 7 உ க்ஷய வரு அற்பிசி மீ 25 உ

இற்றைநாள் காலத்தாலே நேற்றையதினம் குவர்னதோர் பிரான்செழுத்திலே கில்லேதார் சாகீர்தாரருக்கும் மன் சுபே தாரருக்கும் வயணமொன்றும் அவரவர் பேருக்கு வெவ்வேறே எழுதச்சொல்லி யெழுதிக்கொடுத்த பிரான்சு காகிதத்தைக் கொண்டுபோய் முசே லேம்பேரம் அண்டைக்குப் போய் நானும் மதனுந்தபண்டிதனும் போய் பிரான்சு எழுத்திலே எழுதி யிருந்ததைத் தெலுங்குபடுத்தி, அப்பால் பாரிசுபடுத்தி நக்கலு

மெழுதுவித்துத்திர பனிரெண்டுமணியாச்சுது. இதிலே எழுதி யிருக்கிற வயணம்: நபாபு அல்வருதிகானும் அவருடைய குமாரன் மாபூசுகானும் போனவருஷம் வந்தவிடத்திலே அவர் களாய் பலவந்தமாக எங்களை இங்கிலீசுக்காரர்பேரிலே சண்டைபோட்டு கோட்டை வாங்கிக்கொண்டு இங்கிலீசுக் காரரிந்த இந்தியாவிலே திரியாமல் நடத்தவேணுமென்றும், தாங்கள் இதற்கும் மற்றதற்கும் ஐயாயிரம் குதிரையும் பதினாயிரம் ஸேதுாமமுங் கொடுக்கிறோமென்று சொல்லி எந்த விதமும் இங்கிலீசுக்காரருக்குப் பிரதானமாயிருக்கிற சென் னப்பட்டணம் வாங்கி நீங்கள் பிரான்சு நிசான் போடச் சொல்லச் சொல்லி, பர்வசமத்தத்துக்குப் பெரியமனுஷர் முகாந் திரமாய்க் கொடுத்து நாங்கள் கோட்டைவாங்கின பிற்பாடு இப்போது மாபூசுகான் சென்னப்பட்டணத்தை மறுபடி இங்கி லீசுக்காரருக்குக் கொடுக்கச் சொல்லுகிறது அது நிமித்தியந் தான் தானே வந்திறங்கி சண்டை பண்ணுகிறதும் இதுமுத லான வயணங்கள் சமஸ்தமான பேருக்கும் அறிவிக்கும் பொருட்டும் எழுதின காகித மெழுதியிருக்குங்கா லின்றைய தினம் சமாசாரம் எழுதினதின் கீழே எழுதியிருக்கிறது. அதைப் பார்த்துக்கொண்டாலந்த நியாயந் தெரியும்.

இந்தக் காகிதம் பார்சிலே எழுதிவைத்தேனென்று அவர் கொடுத்த பிரான்சு காகிதத்தை அவர்கள் கையிலே கொடுத்து விட்டேன். அப்பால் சென்னப்பட்டணத்துச் சமாசாரமென்ன வரவில்லையென்று கேட்டார். ஊரிலேயானால் சொல்லுகிறது முசே பரதி போகையிலே சண்டை கொடுத்ததாகவும், மாபூசு கான் புறப்பட்டு ஓடிப்போய்விட்டதாகவும், மயிலாப்பூரைக் கொள்ளையிட்டுவிட்டுச் சென்னப்பட்டணம் போய்ச் சேர்ந்த தாய்ச் சொல்லிக்கொள்ளுகிறார்கள்.

ஊர்ச்சிதமாய் ஒரு மனுஷன்வந்து சொன்னதில்லை எழுதி வந்ததில்லை. இன்றையதினம் சேதி வருமென்று சொன்னேன். அப்படியிராது, சந்தியேதாகிலும் பேச்சுவார்த்தை நடக்க வேணும், அதனாலேயடிப்பட்டிருக்கவேணும். சேதி வருகிற தற்கு என்று சொல்லவந்தார். நாம் பின்னை வேறே சொல்ல லாகாதென்றும் அப்படித்தானாகவேணுமென்றும் சொன்னேன். அப்பால் நயினாரை அழைப்பித்துத் தாக்கீதாய் விழுப்புரத் திலே போனவிடத்திலே பல்லக்குக் கவசம் எடுத்து வந்ததை இந்தக்ஷணம் கொடுத்தாலாச்சுது இல்லாவிட்டால் அதற்குள்ள கிரயமாகிலும் கொடுக்கவேணுமென்று கண்டிப்பாய்ச்

சொல்லிவிட்டுப் போகச்சொன்னார். அப்பால் நான் சாப்பாட்டுக்கு அனுப்புவித்துக்கொண்டு வீட்டுக்குப் போய்ச் சாப்பிட்டுக் கை கழுவினவுடனே துரை சேவகன் வந்து அழைத்தான். சென்னப்பட்டணம் காகிதங்கள் வந்ததோவென்று கேட்டேன். ஆமென்று சொன்னான். அதன்பேரிலே இரண்டு மணிக்குத் துரைவீட்டுக்கு வந்தேன். வந்தவுடனே சென்னப்பட்டணத்துச் சமாசாரம் வந்தது.

நம்முடைய முசே பரீதியன் மாதுடனே போகையிலே மயிலாப்பூர் முகத்துவாரத்தண்டையிலே மாபூசுகான் தன் படையைக் கடற்கரையிலேயிருக்கிற பங்களாசுத்திலும் நாலு அந்தஸ்தாய்ப் பிரித்துத் துப்பாக்கிக்காரர், கத்திக்காரர், கசாய்க்காரர் இப்படி அணியணியாய் வைத்து நின்றவிடத்திலே முசே பரீதியும் அவர்கள் கிட்டேபோய் பனைமரத்தாலே வாடியடைத்து



அங்கே நின்று தன் பிறகே போன சொல்தாதுகளையும், மாயே சிப்பாய்களையும் நாலு பவுஞ்சாய்ப் பிரித்து அவர்கள் நாலு பவுஞ்சும் பேரிலேயும் போகச்சொல்லி, தான் முன் பவுஞ்சிலே நின்று, தானும் புறப்பட்டான். அந்தச் சமயத்தில் துலுக்கர் படையிலேயிருந்து மூன்று ராசகுர்பாணமும் நான்கு கசாயி லும் சுட்டார்களாம். அது இவர்கள் பேரிலேபடாமல் கடலி லேயும் ஆற்றிலேயும் விழுந்துபோச்சுதாம். அப்பால் வெள் ளைக்காரர்கள் துப்பாக்கிச் சுட்டார்களாம். சுட்டமாத்திரத் திலே அனேக பிணங்கள் விழுந்தன... தலைவிழுந்தால் கஷ்ட காலமாய் ஆயுசுகளில்லாமல்படிக்கு உயிர் தப்பித்து ஓடும்போது விழுந்து செத்தவர்களும் இந்தப்படிக்கு அனேக விதமாய்ச் சேதப்பட்டு மாபூசுகான்கூட... ஓடி அப்பால் ஆனையின் பேரி லேறிக்கொண்டு ஓடின ஓட்டம் குன்றுது தப்பிவிட்டார்க ளாம். அப்பால் மயிலாப்பூரிலிருந்து ஒரு வித சரக்கைக்கூட்ட இல்லை அங்கேதானே விட்டுப் போய்விட்டார்கள்... ... ... மூசே பரிதீ ஒருமணி நேரம் நின்று வெள்ளைக்காரரையும் மாயே சிப்பாய்களையும் கொள்ளையிடச் சொன்னவிடத்திலே அவர் கள் தனமெல்லாம் கொள்ளையிட்ட பிற்பாடு அங்கேயிருந்து சென்னப்பட்டணம் போனார்கள். சென்னப்பட்டணம் போகை யிலே இருநூறு சொல்தாதுகளும், நூறு மாயே சிப்பாய்களும், மூசே லத்தூறும் திருவல்லிக்கேணிக்குச் சமீபத்திலே வந்தார்கள். வந்தவர்களைக் கூட அழைத்துக்கொண்டு சென்னப்பட்டணம் போய் வந்தானென்றும், பிடித்துக்கொண்டுபோனது முப்பது ஒட்டகங்கள், அறுபது எழுபது எருதுகள், நாற்பதன்பது குதிரைகள் இந்த மட்டும் பிடித்துக்கொண்டு போனார்க ளென்று மிப்போது முப்பது ஒட்டகங்கள் எருதுகளின் மேலே பின்னையுமிருந்த பருவிலே புடவை தினுசுகள் தட்டு முட்டுகள் கொஞ்சம் வராகன் ரூபாய்களிதுகள் கூட இருந்ததாகவும் துரையவர்கள் சொல்லிச் சென்னப்பட்டணத்திலிருந்து வந்த அறமாதுகூட சற்று வந்தார்களானேயாகில் நடக்கவேண்டிய தெல்லாம் சரியாய் நடந்துபோம். இன்னம் சற்று தொடுசுக்கு இடம் வைத்துப்போனார்கள். சென்னப்பட்டணத்திலேயிருந்து வந்தவர் நாலு நாழிகை முந்தியே வராமல் கெடுத்துப்போட் டார்களென்றும் கோபமாய்ச் சொல்லிக்கொண்டிருந்தார். அதற்கு நானிருந்துகொண்டு இந்தமட்டுக்கும் போதும். இனி மேல் என்றைக்கும் அவரவர்கள் தலைமுறையிலே நடவாதது

நடந்தது. இதன் பேரிலே அதனமாக வேண்டியதொன்று மில்லை. ஆனல், நம்முடையவர்களிலே இரண்டு மாயே சிப்பாய்களுக்கு மாத்திரம் காயம்பட்டது. அது தவிர, மற்றப் பேருக்கு ஒரு முள்ளு முறியவில்லையென்று சொன்வீர்களே அது உம்முடைய அதிருஷ்டமல்லவா? எதிரியுடனே சண்டை கொடுக்கையிலே எதிரிகள் இருநூறு முன்னூறு சாகச்சே, நம்முடைய படையிலே ஒருத்தரும் சாகாமற்போனது என்ன வென்றால், உம்முடைய விடத்தில் சுவாமி கடாக்ஷம் பரிபூரண மாயிருக்கிறபடியினலே இப்படி நடந்தது. நவாபைப்போல் ஒத்தவன் ஓடிப்போனன் என்கிற கீர்த்தியும் உமக்குக் கிடைத் ததும் இது சுவாமியினலே உமக்குக் கொடுக்கப்பட்ட கீர்த்தி யும் விஜயமும். ஏனென்றால் நீர் சென்னப்பட்டணம் ஜெயங் கொண்டது நீர் நினைத்து நடத்தினது. இது நீர் மனதிலே கூட நினையாமல் வந்த செயமென்றும் பின்னையும் அநேகவிதமாய் ஸ்தவுத்தியம் பண்ணினவிடத்திலே மதாம் துய்ப்ளேய்க்சு கூட இருந்தபடியினலே அவன் தமிழிலே இது மெத்த அதிசய மப்பா, இத்தனை சண்டையிலே ஒரு சேவகனகிலும் சாகாமல் இருந்தது இவனிடத்திலே இருக்கிறன் என்று சொன்னன். அதற்கென்ன சந்தேகமா, இந்தத் துலுக்கருடைய சண்டை யிலே சாகாமலிருந்தது ஆச்சரியமல்ல. சென்னப்பட்டணம் பெரிய கோட்டை ஆயிரம் சொல்தாதுகளுடனே ஏரோப்பியர் இருந்த இடம் சண்டை சாமான்களிலே பீரங்கி, மருந்து, குண்டு, தீக்குடுக்கை, துப்பாக்கி முதலானதெல்லாம் புதுச்சேரி யிலே இருக்கிற சாமான்களைப் பார்க்கிலும் நூறு பங்கு அதனமாயிருக்க, அவன் கோட்டை ஸ்தலத்திலேயே இருக் கிறவனிவர்கள் எடுத்துப்போய் கொடுக்கிறது. இப்படியிருக்க, மூன்று நாளையிலே ஒரு மனுஷருஞ் சாகாமல் கோட்டையை ஒப்புவித்துவிட்டுப் போனபோது அது ஆச்சரியமா! இது ஆச் சரியமா! அவனிரோப்பியனய் இருக்கிறவனைச் சண்டையிலே ஒரு மனுஷனகிலும் சாவில்லாமல் செயமானது ஆச்சரியமாய் என் புத்திக்குத் தோற்றுகிறதென்றும், பின்னையும் அநேக விதமாய் இவருடைய யுத்தியும், இவருடைய தைரிய மும், உபாயத் தந்திரமும் எல்லாம் இரண்டு நாழிகை நேரம் சொல்லி இவருக்குச் சென்னப்பட்டணம் பிடிக்கிறதும் இந்த வருஷம் பத்தேயாகிறதும் போன மார்கழி மீ த்திலே தானே சொன்னீரிதல்லாமல் துரையவர்களுக்கு இந்த நவாபை

செயித்த கீர்த்தியும் வருதென்றும் உம்முடனே சொல்லியிருந் தேனே என்றும் அம்மாளுடனே சொன்னதற்கு, அம்மாளி ருந்துகொண்டு மெய்தான் அப்பா என்று சொன்னாள். இப் போது முசே லபூர்தோனே துரையுடனே எதிர்த்ததற்குச் சுவாமி அவருக்குப் பெருங்காற்றை அழைப்பித்துக் குன்றப் பண்ணினாரோ இன்னும் அவனுக்குக் கழுத்திலே கயிறு விழப் போகிறதென்று இப்படியாகச் சொன்ன விடத்திலே துரை பெண்சாதி இருந்துகொண்டு மெய்தானப்பா நீ சொன்ன படிக்கு இந்த மட்டுக்கும் ஒன்றும் தப்பினதில்லை, இனிமேலும் நீ சொன்னபடிக்கு நடக்குமென்றும் வெள்ளைக்காரரெல்லா ரும் சொல்லுகிறார்களென்றும் சொன்னாள். துரையுலாத்து கிறவரென்னவென்று கேட்டார். அம்மாள் நான் சொன்னதை யெல்லாம் விஸ்தரித்துச் சொன்னவுடனே மெய்தானிவன் சொன்னதெல்லாம் சரிப்பட்டதென்று சொல்லி, ஆனால் முத் தியப்பன் நாலுவருஷமாய் வெளியிலேயிருந்து வந்தவனைச் சண் டைக்குப் போகச்சொன்ன ... ... ... ... ... ... முத்தய்யன் நாலு வருஷமாக இல்லாமல் இப்போது வந்துவிட் டானென்றும் அவன்........

1746 ஆூ நவம்பர் மூ 10 உ க்கு அக்ஷய ஷூ அற்பிசி மீ 28 உ க்கு வியாழக்கிழமை

இற்றைநாள் காலத்தாலே குவர்னதோரண்டைக்குப் போனவிடத்திலே நடந்த வயணம்: நிசாம் காகிதம் சீக்கிர மத்துக்கு எழுதித்தீர்த்து அவரவருக்கு அனுப்பச்சொல்லியும், பின்னையும், மாபூசுகான் சேதியும், சென்னப்பட்டணத்துச் சேதியும் முத்தியப்பிள்ளைக்கு எழுதியனுப்புவித்துப் பாளயக் கார பெத்துநாயக்கனையும் எந்த விதத்திலேயும் பிடிக்கச் சொல்லி எழுதியனுப்பச்சொல்லி மற்றப்பேச்சுகள் எப்போ தும் பல கலவனாய்ப் பேசுகிற பேச்சாய் பேசினார். அந்தப் படிக்கு முத்தியப்பிள்ளைக்குப் பாளையக்காரர் பெத்துநாயக் கனைப் பிடிக்கச்சொல்லியும், பட்டணத்தைக் காக்கிறதிலே பத்திரமாய்க் காக்கச்சொல்லியும் எழுதி டபாலிலே அனுப்பி விட்டோம். பின்னை வேறேயதிசயமான பேச்சில்லை,

இற்றைநாள் மத்தியானம் கூடலூரிலே பறங்கிப் பேட்டை பெத்ரிக்குக் கப்பித்தானாகை இருந்த மனே பெற்மோ னென்கிறவனுக்கு நாகப்பட்டணத்துக்குப் பிஸ்ப்விடம் வந்த

படியினால் அவன் தேவனாம்பட்டணம் மேஸ்தர் நயினுக்கு சிநேகிதனானபடியினாலே வந்து அனுப்புவித்துக்கொண்டு போகத் தக்கதாக வந்தான். வந்தவனுக்குச் சாப்பாடிடு கையிலே இரண்டு மூன்று விசை பீரங்கிகள் தீர்ந்தார்கள் என்று கபுறு வந்தது. இந்தச் சேதி இற்றைநாள் ராத்திரி கபுறு சொன்னோம்.

இற்றைநாள் காலத்தாலே வக்கீல் சுப்பய்யன் ஆற்காட்டிலிருந்து எழுதின காகிதம் மகாதேவய்யன் கொண்டுவந்து கொடுத்தான். அதிலே எழுதியிருந்த வயணம்: மாபூசுகான் மைலாப்பூர் சண்டையிலே 22உ சுக்கிரவாரம் தொடுத்து அபசெயப்பட்டுப் போட்டுக்கொள்ளுகிறதற்கு நீமாகூட இல்லாமல் ஓடிவந்து தகப்பனுக்குக் காகிதம் எழுதின வயணம் என்னவென்றால் :... ... ... ...

*1746* ஆ நவம்பர் மீ *11*உ க்ரு அக்ஷய ளு ஐப்பசி மீ *29*உ சுக்கிரவாரம்.

இற்றைநாள் நடந்த சேதி என்னமென்றால்; பின்னை ஒன்றும் அதிசயமில்லை. கேள்விப்படவில்லை. இல்மிலதாருக்கு எழுதுகிற காகிதங்களிலே சோகாயந்தர், சிதம்பரம், வழுதாவூர், திமிரி, பின்னையும் ஒரு கில்லேதாருன் பேர்விளங்கல அவனுக்கும் காகிதங்கள் பற்வானாபண்ணி அனுப்புவித்தோம். அந்த நாள் சந்தாசாயபு மகளுக்குக் கலியாணமென்று சிறிது தினுசுகளுக்கும் வீட்டுகளுக்கும் கேட்கவந்தவிடத்திலே துரையுடனே போய்ச் சொன்னவிடத்திலே தம்முடைய கையிலேயிருந்து குலாபி அத்தர் ஆறு சின்ன சீசா ஒரு பெட்டியிலேயிருந்து கொடுத்தார். இருபது டொரையாக (துரியாம் பழம்) கும்பினீரிலே ஒரு கட்டிருக்கவேணும். அது பார்த்து எடுத்துத்தருகிறோம் என்று சொன்னார் அப்பால் சந்தாசாயபு மகளுக்கு ஒரு துப்பாக்கி ரெட்டைக் குழலும் ஒரு துப்பாக்கி ஒற்றைக் குழலும் கொடுக்கிறோமென்று சொல்லியிருந்ததைக் கேட்டதற்கு முசே கோர்தேயுக்கு உத்தாரங் கொடுத்தார். பாதாங்காய் முதலான இனுசு எல்லாம் சென்னப்பட்டணத்துக்கு எழுதியனுப்பி அனுப்பித்தத் தருகிறோமென்று என்னை லிஸ்துரு எழுதிக்கொண்டு வந்து

கொடுக்கச் சொன்னார். நல்லதென்று சொன்னதன்பின்பு, வீட்டிற்குக் கனகராயமுதலி வீடு இருக்கிறதே என்று கேட்டார். இருக்கிறது. அவர் கொடுப்பார்களோ என்னமோ வென்று சொன்னதற்கு லாசரை அழையென்று சொன்னார். அவன் வந்த பிற்பாடு அவனைக் கேட்டதற்கு மகா மரியாதை தாழ்வித்து, நானிருக்கிற வீடு ஒன்றும், கனகராயமுதலி விடுதி வீடும் விடுகிறோமென்று சொன்னார். அதன் பேரிலே பாக்குக்கிடங்கிலேயிருந்த என்னை அழைப்பித்து என்னுடனே மெத்த அவமரியாதையென்று கனகராய முதலி வீட்டுக்கு எதிர்வீடும் லாசர் இருக்கிற வீடும் கொடுக்கிறோமென்று சொல்லுகிறானென்று சொல்லி பெத்ரு பெண்சாதிக்குக் கொடுத்து உசேன் சாயன் சாயபு பெண்சாதியிருந்த கிட்டங்கிருக்கிறதே அந்தக் கிட்டங்கியைக் கேட்கவேணுமென்று துரை சொன்னார். அதை நான் கேட்டதற்கு அவர்களில்லையென்று சொன்னார்கள் என்றதன்பேரிலே அவர் மலையப்பமுதலியை அழைப்பித்து அந்தக் கிடங்குச் சாவியைக் கேட்டவுடனே கொண்டுவந்து கொடுத்துவிட்டார். அந்தச் சாவியை என்னண்டைக்கு அனுப்பிவிட்டான். தானப்ப முதலி இருபது நாளாய் உத்தியோகமெல்லாம் ரங்கப்பன் வசமாய்ப் போச்சுது. இனிமேல் நாம் வெட்கம் இல்லாமல் வெளிபுறப்படுகிறது எப்படியென்றிருந்தவனுக்குக் குறுக்கிட்டுக் குதிரை சறுக்கினது சாக்கென்று புறப்பட்டு வந்து வீட்டுக்கு வீடு பேச்சுப் பேசிவிட்டுப் பேசினது வெளியானதாய் வெளிக்குத் தெரியாதே வீராசெட்டி மற்றப்பேருடனே துரை தன்னை வண்ணாந்துறை காரியத்துக்கு அழைப்பித்து விசாரிக்கச் சொன்னதாய் அவர்களுக்கு எல்லாஞ்சொல்லிவந்தான். உத்தியோகம் இவனுக்கு வருகிறதானால் ஒன்பது மாதமாக வருகிறதா என்று யோசனைபண்ணாமல் மெய்யென்று திரிகிறார்கள், பெருங்காய மிருந்த குடுக்கைப் போலே இவன் அண்ணனிருந்து இருபது வருஷகாலம் நடந்தபடியினாலேயும் இந்தமட்டுக்கும் ஒருத்தரையும் நேமியாதபடியினாலேயும் இவனும் குறுக்கு நெடுக்குமாகவுந் திருப்புகிறபடியினாலேயும் பார்த்தபேருக்கு மயக்கமாயிருக்கிறது. அதுவுங் கொஞ்ச நாளையிலே வெளியாய்ப்போம். மற்றப்படியேவேறே அதிசயமில்லை. சென்னப்பட்டணம் சமாசாரமானால் முசே...

1746 ஆ நவம்பர் மீ 12 உ க்ரு அக்ஷய ளு அற்பசி மீ 30 உ சனிவாரம்

இற்றைநாள் காலத்தாலே மூன்று நாளாய்ப் பிடிதது எழுதின காகிதமெல்லாம் மாபூசுகான் தங்கள்பேரில் தன் தகப்பனும் நானும் மதியில்லாமல்படிக்கு நடப்பிக்கிற காரியமும் அவன் இரண்டு விடத்திலே சண்டைபோட்டு அபசயப்பட்டு ஓடிப்போன சாடையும் தாங்கள் சென்னப்பட்டணம் அன்வர்திகான் உத்தரவின்பேரிலே சண்டைபண்ணி வாங்கினதும் இங்கிலீசுக்காரர் தங்கள் கப்பலைப் பிடித்துக்கொண்டு பண்ணுகிற மோசங்களும் பார்சாய் நிசான் போட்டிருந்த கப்பலைப் பிடித்துக்கொண்டு சம்மதி வயணமெல்லாம் எழுதி இமாம் சாயபுக்கு அவர் எழுதின காகிதம் சென்னப்பட்டணம் பத்தே மோபார்க்குப் பாதிக்குப் பதில் காகிதமும் மாபூசுகான் நடப்பிக்கிற சம்மதிக்கு நிசாமவர்களுக்கு எழுதின காகிதத்துக்கு நகலும், நிசாமவர்களுக்கும் இதெல்லாம் வயணமாய்த் தெரியப்படச் சொல்லச்சொல்லியும் காகிதங்களெழுதி இமாம் சாயபு மகன் மைலாப்பூரிலே இருக்கிறவனண்டைக்கு அனுப்புவித்து அவனை சீக்கிரமத்துக்கு நிசாம் லசுக்கரிலே அவர் தகப்பனுரண்டைக்கு அனுப்புவிக்கச்சொல்லி அவர் பேருக்குக் காகிதம் எழுதி அவரையும் புதுச்சேரியிலே வந்திருக்கச் சொல்லியும், இப்படியாக எழுதி இற்றைநாள் பத்தரை மணிக்குப் பகல் ரவாணு பண்ணி அனுப்புவித்தேன். மற்றப்படி கில்லேதாரர்களுக்கும், மீர்குலாம் உசேன் என்பவரும் திருநெல்வேலிக்கும் மாபூசுகானிடத்துக்குக் காரியத்தைக்குறித்து எழுதின காகிதமிற்றைநாள் ராத்திரி ரவாணுபண்ணி அனுப்புவித்தேன்.

1746 ஆ நவம்பர் மீ 13 உ க்ரு அக்ஷய ளு கார்த்திகை மீ 1 உ ஆதிவாரம்

வக்கீல் சாமய்யன் காகிதமொன்றும், அசத்து சாயபு காகிதம் துரைக்கொன்றும், தானப்பமுதலிபேருக்கு ஒன்றும் என் பேருக்கு ஒன்றும், உசேன்சாயபு காகிதமும் மேலே எழுதின படிக்குத்தானே தன் பேருக்கு ஒன்றும், முசே கெர்சாம் காகிதம் துரைபேருக்கு ஒன்றும் வந்தது. உசேன் சாயபு காகிதத்

திலே எழுதியிருந்த வயணம்: மூன்றுபேர் வெள்ளைக்காரனை யும் நாம் பிணையிருந்து அழைத்துக்கொண்டுவந்து நம்முடைய வீட்டிலே விலங்குகளை வாங்கிப்போட்டு ஸ்நானம் பண்ணு வித்துப் புடவைசீலை கொடுத்துவைத்துக்கொண்டிருக்கிறோம் என்றும், அப்பால் சென்னப்பட்டணத்தண்டையிலே உங்கள் மனுஷர் இருந்தவர்களும் புதுச்சேரியிலிருந்து போனவர்களும் சமாதானப்பேச்சு பேசாமல் சண்டை கொடுத்தார்களென் றும் இப்பவும் இது சமாதானமாய்ப் போகிறதற்குச் சென்னப் பட்டணத்துக் கோட்டையை அசரத்து மகம்மது மாபூசுகான் வசம் பண்ணினால் சமாதானம் ஆமென்றும், இல்லாவிட்டால் கடப்பை முதலான சுபேதார்கள், எச்சமய நாய்க்கன்முதலான பாளையக்காரர் தனிமன்னரிக்கமன் சுபேதாருடனே கரைவழி யே வந்து சண்டைபண்ண விருக்கிறார்களென்றும் இங்கிலீசுக் காரர் முப்பது கப்பலுடனே கடலின்பேரிலேயே வைத்துச் சண்டைபண்ணவிருக்கிறதாகவென்றும் அப்போது கொடுத்து விடுகிறதைவிட இப்போதே சென்னப்பட்டணத்து கோட்டை யை மாபூசுகான்வசம் பண்ணினால் உங்களுபகாரமாயிருக்கும், சிநேகமும் உத்திரோத்திராபிவிர்த்தியாய் நடக்கும். இல்லா மல்போனால் இந்த இராச்சியத்துக்கு எசமானயிருக்கிறவனுட னே துவேஷித்து உங்களுக்கு வியாபாரமெப்படி நடக்குமென் றும் உங்களுக்கு மெங்களுக்கும் வெகுநாளாய் வருகிற சினேக மானபடியினாலே உங்களுக்குஎழுதியனுப்புவித்தோம். இதற்கு நீங்கள் பயப்பட எழுதினார்களென்று எண்ணத்தேவையில்லை. இராச்சியத்துக் கெசமானயிருக்கிறவர்களை ஒரு காரியத்தைப் பிடித்தால் சச்சிலே விடத்தக்கதில்லையென்று எழுதினார். அசரத்து சாயபு எழுதின காகிதத்திலே நபாபு உசேன் சாயபு அவர்கள் எழுதின காகிதத்துக்குச் சவுத்தூவா எழுத வேணும் என்று உபசாரமா யெழுதினான். எனக்கும் தானப்ப முதலிக்கும் எழுதின காகிதத்திலே தான் எழுதினபடிக்குக் காரியம் அனுகூலமாகத்தக்கதாக துரையவர்களுக்குத் தெரி யப்படச்சொல்லி அனுகூல உத்தரவாய் எழுதத்தக்கதாய்ப் பண்ணச்சொல்லியும், இந்தப்படிக்கெழுதின காகிதத்தைப் பார்த்துக்கொண்டு (௱) துரையவர்களுக்குச் சொன்னவிடத் திலே அதற்குத் துரையவர்கள் உத்தரவு எழுதச்சொன்னது ஸ்தானுதிபதியும் பேசவந்த வெள்ளைக்காரரைப் பிடித்துக் காவல்பண்ணி விலங்குபோட்டு இப்படி அநீதமாய் நடத்து

கிறவர்களை எங்கும் கண்டதுமில்லை. இதுவரைக்கும் நடந்தது மில்லை. ஆனலிப்போது இது மாத்திரம் நடக்கத்தக்கதாகக் கண்டோம். பூமண்டலங்களிலே இப்படிப்பட்ட சாதியாகி லும் எத்தனை சண்டையிலேயாகிலும் எப்படிப்பட்ட துவே ஷத்திலேயாகிலும் ஸ்தானுதிபதியும் வந்தவர்களைப் பிடித்துக் கொண்டு காவல்வைத்து விலங்குபோட்டுப் பின்னையும் நடப் பிக்கத் தக்க ஆயிரனுகளெல்லாம் நடக்கத் தக்கதாகக் கண்ட தில்லை, கேட்டதுமில்லை. இப்போது அசரத்து மாபூசுகானிடத் திலே கண்டோம். ஆனல், தாங்கள் அவர்களுக்குமேல் வாங்கிக் கொண்டு விடுதலைபண்ணி, அவர்களை மரியாதைபண்ணி, தங்கள் வீட்டிலே அழைத்துக்கொண்டு வந்து வஸ்திரமுங் கொடுத்து அவர்களுக்கு வேண்டியதெல்லாம் கொடுத்து நடப் பித்துக்கொண்ட வயணம் எல்லாம் கேட்டு மிகுதியுஞ் சந் தோஷமாச்சுது. நீங்கள் பண்ணின உபசாரத்துக்கு நாங்களு மெங்கள் வமிசத்தாருக்குங் கூடசெய்த உபசாரம். நாங்களும் எங்கள் வமிசத்தாரும் இந்த உபசாரம் மறக்கத்தக்கதில்லை என்றும் அதற்குப் பின்னையும் எப்படி உபசாரங்களெழுத வேணுமோ அந்தப்படிக்கெல்லாம் எழுதி, இப்போது விடு தலையாகி உங்கள் வசமாய் வைத்துக்கொண்டிருக்கிற மூன்று பேரையும் விடுதலைபண்ணி யனுப்பச்சொல்லியும் சென்னப் பட்டணங் கோட்டையிலே ஒருகாலும் எங்கள் பார்சா ஙிசான் இருந்த மட்டுக்கும் எங்கள் பார்சா உத்தரவு இல்லாமல்படிக்கு விடப்போகாது என்றும் என்னுடைய உத்தரவிலேயில்லை. அல்லவென்றுல் எங்கள் சீவனுக்குப் பிற்பாடு என்னமாய்ப் போச்சுதேயல்லாமல் மற்றப்படி போகத் தக்கதில்லை என்றும் கண்டிப்பாய் எழுதியனுப்பச் சொன்னர் அந்தப்படிக்கு எழுதி வக்கீல் சுப்பய்யனுக்கு மூசே கேர்சாம் மற்றுமுள்ளபேர்கள் என்ன கேட்கிறுர்களோ அதெல்லாம் தடை இல்லாமல் முன் வாங்கிக்கொள்ளச் சொன்ன ஆயிரம் ரூபாயிலே செலவுகள் வாங்கிக்கொடுக்கச் சொல்லி எழுதி அனுப்புவிக்கச் சொன்னர். அந்தப்படிக்கு எழுதிவந்த உசேன் சாயபு மனுஷருக்குப் பத்து ரூபாய் இனுமுங்கொடுத்து ரவானு பண்ணி அனுப்புவித்தேன். இவர்களுடனே கூட மூசே கேர்சா முடைய வேலைக்காரன் அரபி ஒருத்தனிருந்தவன் மூசே சேர்சா முடைய உடுப்புடவைக்கூட எடுத்துக்கொண்டு போனுன்.

இற்றைநாள் மட்டுக்கும் மாபூசுகான் ஸ்ரீபெரும்புத்தூருக்கு மேற்கே காஞ்சிபுரத்திற்குக் கிழக்கே இருக்கிற முத்துராமு செட்டி சத்திரத்தில் முன்னூறு குதிரையும் ஆயிரம் பேர் ராணுவத்துடனேயுமிறங்கி இருக்கிறான். மூசே பரிதி சென்னப்பட்டணத்துக்குக் கொம்மாந்தானுகி மூசே பரிதி கொள்ளையிட்டுத் தின்றுகொண்டு சுகத்திலே யிருக்கிறான். தேவனாம்பட்டணம் குவர்னதோர் மேஸ்தர் ஈன்து (M. Hinde) என்கிறவன் முன்னேயே நல்லவேளையிலே கோட்டையை வந்து பிடித்துக்கொள்ளுகிறார்களோவென்று திகில்பட்டிருந்தவன் இப்போது சற்றுத் தைரியமாய் முன் வர்த்தகர் கும்பினீர் கோந்திராக்துக்குப் போடவேண்டிய புடவையெல்லாம் வெளியில் வைத்து விற்றுப்போட்ட பணத்தைக் கொண்டுவரச்சொல்லியிருந்தவனிப்போது அந்தச்சந்தியிலே விற்றது போக மற்றப்புடவையெல்லாம் கொண்டுவரச் சொல்லிப் பார்வையிட்டுச் சலவைக்கு விட்டான். தமிழ் ராணுவத்திலே மூவாயிரஞ்சனம் மட்டுக்கும் வைத்ததற்கு ஆயிரம் பேர் மாத்திரம் வாங்கிப்போட்டு யற்றப்பேராணுவத்தையும் வைத்துக்கொண்டிருக்கிறான். கூடலூர் தேவனாம்பட்டணத்திலே யிருந்தவர்கள், குடிவாங்கிப்போயிருந்தவர்கள் பணங்காசுகள் கொஞ்சநஞ்சத்தைத் தட்டுமுட்டுகளுங்கொண்டு மறுபடியும் கூடலூரிலே வந்து சேர்ந்துவிட்டார்கள் என்ற கபுறு ஊர்ச்சிதமாய் வந்தது. அது எதனாலே பறங்கிப்பேட்டையிலே இருந்தவர்கள் எல்லாரும் வந்தார்களென்று பிரான்சுக்கார சொல்தாதுகள் விழுப்புரத்தின்பேரிலே போய் விழுந்து பத்துப்பேரை மாத்திரம் சரிகட்டிக்கொண்டும் கொள்ளையிட்டுக் கொண்டும் வந்ததே! இதனாலேயும் மாபூசுகானை மயிலாப்பூரிலே சண்டையிலே புடைத்தபடியினாலேயும் தீவானத்து அமுல்தார் நாட்டாரெல்லாரும் சுத்துக்கு நாற்காத வழிமட்டுக்கும் தலைப்படாமல் திரிகிறபடியினாலே பறங்கிப்பேட்டையிலே யிருந்தவர்களெல்லாம் தட்டுக்கெட்டுத் தடுமாறி சிதம்பரம் போய்ச் சேர்ந்தவர்களும், சிறிதுபேர் இந்நேரத்துக்குத் தேவனாம்பட்டணம் வெளியே பந்துறைக்குயாகிலும் குணமல்லவாயென்று வந்து சேர்ந்தார்களே இன்றையவரைக்கும் இந்தக் கபுறுலேயிருக்குது. இனிமேல் என்ன நடக்குமோ அறிய வேண்டியது.

**1946 ஆ நவம்பர் மீ 14 உ ஸ்ரீ அக்ஷய வருஷ கார்த்திகை மீ 2 உ சோமவாரம்**

இற்றைநாள் சென்னபட்டணத்துச் சமாசாரம் இங்கிலீசுக்காரரையெல்லாம் அவர்கள் சீர்மையிலே அவர்கள் வழக்கப்படிக்குச் சண்டை பண்ணுகிறதில்லையென்றும், கத்திக்கட்டுவதில்லையென்றும், எப்போது அழைத்தனுப்பினால் அப்போதிவர்கள் உடன்படிக்கைச் சீட்டெழுதிக்கொண்டு போகச் சொன்னதாகவும் அவர்களும் புறப்பட்டுப் பொகிறவர்களாயிருக்கிறார்களென்றும் எழுதிவந்தது. மயிலாப்பூரிலே துலுக்கப்பூண் டென்கிற தொன்றுமில்லையென்றும் அங்கேயிருந்த பேர் எல்லாரும் பொன்களைக் கொடுத்துப் போட்டுத் தப்பின தட்டுமுட்டு மவரவர் குஞ்சு குழந்தைகளுமாய்ப் பட்டாணியர், குசிராத்திக்காரர், நலாயித்தர், தமிழர், தெலுங்கர், பின்னையும் நானுசாதியும் செங்கழுநீர்ப்பட்டுப்பாளையம் போய்ச் சேர்ந்தார்கள் என்றும் படேசாயபு பெண்சாதி முதலானபேரை அழைத்துக்கொண்டு போகவேணுமென்று உசேன்சாயபு என்கிறவனுடைய மருமகன் அசத்துசாயபு என்கிறவன் திண்டிவனமட்டுக்கும் வந்து, படேசாயபு பெண்சாதி தான் வருகிறதில்லை. நீ எதற்காக வருகிறாய்என்று எழுதினதின்பேரிலே மறுபடியும் திருப்பிக்கொண்டு ஆற்காட்டுக்குப் போய்விட்டானென்கிற கபுறு வந்தது. மற்றப்படிக்கு வேறேயதிசயமில்லை. எப்போதும்போலே துரையவர்களிடத்துக்குப் போய் எப்போதும் வாடிக்கைப் பேச்சுக்கள் என்ன உண்டோ அந்தப் பேச்சுச் சேதியும் லோகாபிரமமாய்ப் பேசியிருந்து பாக்குக்கிடங்கிற்கு வந்திருந்தவ்விடத்திலே துரையழைத்தனுப்புவித்து வர்த்தகர் சென்னபட்டணத்திலிருந்தவர்கள் எல்லாரும் வெளியே அங்கங்கே போயிருக்கிறார்களே அவர்களுக்கெல்லாம் நீ காகிதங்களனுப்புவித்துச் சென்னபட்டணத்திலே இனிமேல் இங்கிலீசுக்காரருக்கு ஆசையில்லை. அவர்களெல்லோரும் புறப்பட்டுப் போகிறார்கள். இனிமேல் அவர்களுக்குச் சென்னப்பட்டணம் ஆமென்கிற பிரமையை விட்டு விடுங்கோளேன். புதுச்சேரியிலே வந்து சுகமாயிருக்கிறதானால் சென்னபட்டணத்திலே அவரவர் தட்டுமுட்டுகள், வீடுகள் கொள்ளையிலே போனதுபோக மற்றதுகள் எல்லாம் கொடுத்துவிடுகிறோமென்று அவரவருக்குக் காகிதங்களெழுதியனுப்பச் சொன்னார். நல்லதென்று சொன்னேன். அப்பால்

உன் தம்பியை ஏன் அனுப்பவில்லை சென்னப்பட்டணத்துக்கு. இந்த வர்தகர்களை யெல்லாம் அழைப்பித்து ஒப்பு உடன்படிக்கைப் பண்ணுகிறதற்கு. கவுல் மற்றது கொடுக்கிற தற்கும் நல்லதல்லவாவென்று கேட்டார். நல்லதுதானென்று சொன்னதற்கு இப்போது கோன்சேல் கூடி தீர்த்து மூசே லந்தூசையும், மூசே கோந்ரேல், மூசே லோஸ்தீஸ், மூசே எரிகோயேன் (M. de la Touche, M. Cotterel, M. Lhóstis, M. Herigoyen) இவர்களைச் சென்னப்பட்டணத்திற்கு அனுப்புகிறேன், உன் தம்பியையும் பயணம் தாயாராயிருக்கச்சொல்லென்று சொன்னார். நல்லதென்று வந்தேன். அப்பால் மூசே கோந்ரேல், லந்தூஸ் முதனான இவர்கள் நாலு பேரையும் அழைத்துப் பயண முஸ்தீதாயிருக்கச் சொன்னான்.

1746 ஆ௵ நவம்பர் ௴ 15 உக்கு அக்ஷய ௵ கார்த்திகை ௴ 3உ அங்காரக வாரம்

இற்றைநாள் துரையவர்களிடம் போனவிடத்திலே நிசாம் (Nizam) அவர்களுக்கும் இமாம் சாயபுக்கும் இரண்டு மூன்று நாளைக்கு முன்னே போன கடுதாசிப்படிக்கு எழுதின காகிதங் கொண்டுவாயென்றார். பையிலே இரண்டு காகிதமும் கையிலே கொடுத்தோம். மச்சிலி பந்தர் மார்க்கமாயனுப்புகிறோமென்று வாங்கிக்கொண்டார். அப்பால் மீருசேன் கான் வழுதாவூர் கில்லேதார் அனுப்பின காகிதமும், பெரு முக்கல் மியான் சாயபு அனுப்பின காகிதமும் படித்துக் காண்பித்தோம். அதற்குத் துரை சொன்னது: நாம் மாபூசுகான் நியாயந்தப்பிதமாய் நடத்துகிறானென்று எழுதினதற்கு அவர்கள் நாம் எழுதினதற்குச் சந்தோஷமாய்க் காணுகிறாப் போலே காணுதேயவர்கள் எழுதின சாடையிலேயென்று சந்தோஷமாய்ப் பேசியிருந்தார். அப்பால் குஸ்துமாது படிக்குச் சென்னப்பட்டணத்துக்குச் சேதியும் ஆற்காட்டு துலுக்கர் சேதியும் பேசியிருந்தார்.

இற்றைநாள் மாயே மண்டலம் கில்லேதார் காதுரு உசேன்கானுக்கும், கருங்குழிபாளையம் சாபிர் குமர் அலிகானுக்கும், (Zafar Gamar'Alikhan) காவேரிபாக்கம் கில்லேதார்... ... ...க்கும் ஆரணி கில்லேதார் சீனிவாசராயருக்கும்,

பழஞ்செஞ்சி கில்லேதார் மன்ருப்சிங்குக்கும் (Munroup-Sing) நபாபு மாபூசுகான் அநியாயமாய் எங்கள் பேரிலே வந்து சண்டை பண்ண வந்தானென்றும் ஸ்தானுதிபதியையும் போனவர்களைப் பிடித்துக் காவல்பண்ணி விலங்கு போட்டானென்றும், இப்படி எழுதியிருக்கிற பிராது காகிதங்களை யவரவருக்கு அனுப்புவித்தோம்.

இற்றைநாள் துரையவர்கள் சொன்னது: சென்னப்பட்டணத்திலே அரண்மனைக்காரர் எல்லாம் புதுச்சேரியிலே வந்து குடியிருக்கிறோமென்று மூசே பரிதிக்கு வார்த்தைப்பாடு கொடுத்தார்கள். பின்னையும் வர்த்தகர் அவரவர்களை அழைப்பித்துப் புதுச்சேரியிலே குடி இருக்கத்தக்கதாகப் பின்னையும் பண்ணி விடுகிறோமென்றும் அரண்மனைக்காரர் வார்த்தைப்பாடு கொடுத்தார்களென்றும் மூசே பரிதி எழுதியனுப்புவித்ததாய்ச் சொன்னார்.

*1746* ஆ நவம்பர் மீ *16*உக்கு அக்ஷய ஹு கார்த்திகை மீ 4உ புதன்கிழமை.

இற்றைநாள் காலத்தாலே சந்தாசாயபு அவர்கள் கோதுமை மாற்றிக் கொடுக்கச்சொல்லி மூசே கோர்னேயண்டைக்குப் போனவிடத்திலே நெல்லும் கோதுமையும் இந்தச் சட்டந்தான், இனி வேறே தினுசில்லையென்று சொன்னார். அப்பால் துரைவீட்டுக்கு வந்தவிடத்திலே மமுதல்லிகான் காகிதம் வந்தது. அதிலே எழுதியிருந்த வயணம்: மாபூசுகானை அடித்தது சபிதர் அலிகானை, அவன் மகனைக் கொன்ற பாவத்துக்குச் சுவாமி யும்முடைய முகாந்திரமாய் ஆக்கினை பண்ணுவித்தாரென்று சந்தாசாயபை அழைப்பிக்கிற யோசனையின்பேரிலே தீவட்டி வைக்கச் சொல்லியும் பின்னையும் நபாபு அன்வருதிகான் மகனுக்கு இன்னம் நன்றாய் புத்தி சொல்லவேணு மென்றும் இதனலே பார்சலினிடத்திலேயும் நிசாமிடத்திலேயும் உம்முடைய கீர்த்தி விளங்கிற்றென்று இப்படி பின்னையும் உபசாரமாய் எழுதினான், இதெல்லாந் துரைக்குப் படித்துக் காண்பித்தோம். அதற்குத் துரையவர்கள் மிகுதியுஞ் சந்தோஷப்பட்டுப் பதில் காகிதம் எழுதச் சொன்னது. நல்லது சந்தா சாயபை அழைப்பிக்கிற பிரயத்தனத்தின்பேரிலே நானும் பிரயத்தனம் பண்ணுகிறேன். நீங்க

ளும் பிரயத்தனம் பண்ணுங்கோளென்றும், பின்னையும் உபசாரமுஞ் சிறிது சொல்லி எழுதியனுப்பச்சொன்னன். அந்தப் படிக்கு எழுதியனுப்புவித்தோம். பின்னையும், சந்தாசாயபு வீட்டுக்குப் பீங்கானும் தட்டுமுட்டும் ரங்கப்பிள்ளையை யழைப்பித்து உத்தாரங் கொடுக்கச்சொன்னர். பாதாம்கொட்டை, கிசுமுசு, பேரீச்சங்காய் பங்காளத்துத் துரியாசுக்கும் சென்னப்பட்டணத்துக்குக் காகிதம் எழுதினர்.

இற்றைநாள் சாயங்காலம் ஐந்து மணிக்கு மூசே லத்தூஸ், லோஸ்தீஸ், கோத்ரேல், எரிக்துயோம் இவர்கள் சென்னப்பட்டணத்துக்குப் போனர்கள். மூசே லத்தூஸ் சென்னப்பட்டணத்துக்குப் பயணம் போகிறேமென்று நாலு மணிக்கு மூசே துலாராமை அனுப்புவிக்கப் போனபோது மூசே தும்மாவுக்குங் கொடுக்கவேண்டிய ஆயிரம் வராகனுங் கொடுத்துப் போகச் சொல்லி மூசே லத்தூஸை மூசே துலாராம் கண்டித்தார். அதன் பேரிலே இவனென்ன சொன்னலும் கேளாமல் இப்போது தானே கொடுத்துப் போகவேணுமென்று கேட்டவிடத்திலே அப்போது என்னை அழைப்பித்து அச்சை சம்மதி போனளும் பொன்கொடுத்த சம்மதியும் இன்னம் குழம்பு அராக்குச் சாராயங் கொடுத்த சம்மதியிருக்குதே நீர் சொல்லிக்கொள்ளும். அப்பால் கணக்குப் பார்த்துக்கொள்ளுவோம். எத்திதாக்ஷாயிருந்தால் ஒத்துக்கொள்வோம் என்று இப்படிக்கு மூசே துலாராம் முகமறியாதவன்போலே நான் பயணம் போகிறபோது இப்படி செய்ததற்கு மூக்கு நிறத்துப்போடு என்று சொன்னன். அப்போது மூசே துலாராமுக்கு மூவாயிரத்திருநூறு ரூபாய்க்கு இரண்டுமாத தவணைக்கு எழுதிக் கொடுத்து வந்தேன். அப்போது எட்டு மாற்று வராகன் என்றும் ரூபாயென்றும் தகராறு நடந்து மூசே நிக்கோலாஸ் வந்து சமாதானமாய்ச் சொல்லி மூவாயிரத்தறுநூறு ரூபாய் தீர்ந்துதான் நான் மூசே துலாராமுக்கு எழுதிக்கொடுத்தேன். அப்பால் மூசே லத்தூஸ் கனியப்பிள்ளை சாவடி மட்டுக்கும் போய் வழிவிட்டு அவ்விடத்திலே பெருமாள் நாயக்கன், வீரா நாயக்கன், திருவேங்கிடநாயக்கனிவர்களைக் கண்டு பேசி வீட்டுக்கு வந்தேன்.

1746 ஆ நவம்பர் மீ 17உக்கு அக்ஷய ஷு கார்த்திகை மூ 5 உ வியாழக்கிழமை.

இற்றைநாள் ராத்திரி வக்கீல் சுப்பய்யன் ஆற்காட்டிலிருந்து அனுப்பின காகிதச்சேதி, துரையவர்களுக்குச் சொன்ன வயணம் என்னவென்றால்: அசரத்து நபாபு அன்வர்திகான் மகன் மமுதல்லிகான் என்கிறவன் முன் ஆயிரத்தி ஐந்நூறு குதிரையும் சிறிது ராணுவமுங் கூட்டிக்கொண்டு நபாபு ஆசபுஷா (Nawab Asaf Shahgat.) அவர்கள் மருட்டியர் வரவொட்டாமல் கிருஷ்ணையாற்றண்டையிலே வழி கட்டச்சொல்லி, கிருஷ்ணைக்கு இப்புறமிருக்கிற சுபேதாரருக்கு எல்லாம் எழுதினபடியினாலே அன்வர்திகான் தன் மகன் மகம்மதல்லிகானையும் சிறிது குதிரை ராணுவமுங் கூட்டியனுப்பியிருந்தான். அவன் மறுபடி மகம்மது அல்லிகான் என்கிறவனும் ஆயிரம் குதிரையும் சிறிது ராணுவத்துடனேயும் ஆற்காட்டுக்கு வந்து நபாப் அன்வர்திகானுக்கு மூன்று நாளாய் பேறி காண்பித்து, கைஅசதிகண்டு, சுவஸ்தம் தப்பியிருக்கிற தகப்பனை தரிசனம் பண்ணிக்கொண்டு விடுதியிலே போய் இறங்கினான் என்றும், இந்தச் சேதி மாபூசுகான் காஞ்சிபுரத்திலேயிருக்கிறவனண்டைக்கு எழுதி அனுப்பினதாகவும், இனிமேல் அவ்விடத்திலேயிருந்து என்னமாய் வருமோ அப்படி நடக்குமென்றும், மமுதல்லிகான் வருகிறது மாபூசுகானுக்குச் சம்மதியல்லவென்றும் மமுதல்லிகான் பவுஞ்சுமாத்திரம் தன்னண்டைக்கு அனுப்பச் சொல்லியெழுதியிருக்கிறபடியினாலே உத்தாரம் வருந்தனியும் பார்த்துக்கொண்டிருக்கிறார்களென்றும், ஆற்காட்டிலேயும் ஆயிரங்குதிரை மட்டுக்கும் சேவகம் வைத்தார்களென்றும் வெள்ளைக்காரர் மூன்று பேருக்கு உசேன்சாயபு மரியாதை பண்ணி நடத்துகிறானென்றும், பாதிபேர் ஏன் பிரான்சுக்காரருடனே சண்டைபண்ணி அவமானப்பட்டானென்றும், இன்னம் அவன்பேரிலே சண்டைக்குப் போனால் அவமானப்படுவானென்றும் இதைவிட அபகீர்த்தி வேறே வேணுமோ என்கிற பேரும் இப்படியாகச் சொல்லுகிறவர்கள் சிறிதுபேரென்றும், சிறிதுபேர் சுபாவுடனே எறடிக்கொள்ளலாமாவென்றும் சொல்லுகிற பேருமாக இருக்குதென்றும் எழுதினான். இதுமுதலாகிய சேதியெல்லாம் துரையவர்களுக்குப் போய்ச் சொன்னோம். அவர் அதற்குச்சொன்னது: நாமாய்ப் பலவந்தமாய்ச் சண்டைக்

குப் போகவில்லை. அவர்களாய்ப் பலவந்தமாய்த் தேடிக்கொண்டு வந்தார்கள். நல்லது இன்னம் அதற்கேற்றபேரை நாலாறுபேரை அவ்விடத்திற்குச் சேதிகொண்டுவரச்சொல்லி அனுப்பு என்று சொன்னார். நல்லது என்று சொன்னேன். அப்பால் தேவனும் பட்டணம் குவர்னதோர் சேதி என்னவென்று கேட்டார். முன்னே வர்த்தகர்பேரிலே இருந்த நிலுவைக்கு எல்லாம் சரக்குக் கொண்டுவரச்சொன்ன சேதியும், அந்தப்படிக்கு நூறு கோடிமட்டுக்கும் காரிகம் வந்து பார்த்துச் சலவைக்கு விட்டதும், இப்போது சற்று தைரியமாயிருக்கிறார்களென்றும் நூறு பேர் சட்டைக்காரரும், நானூறு தமிழரும் ராணுவம் துப்பாக்கிகள் குண்டு மருந்துடனேகூட கடயம் வெங்கிடாசல நாயக்கன் என்கிறவனும் ஒரு குதிரையின்மீதேறிக்கொண்டு செஞ்சி மார்க்கமாய்ப் போனார்களென்றும், அங்கே இங்கிலீசுக்காரர் சென்னப்பட்டணத்திலேயிருந்து வந்தவர்கள் சிறிதுபேர் செஞ்சுக்கு வந்து சேர்ந்தார்களென்றும், அவர்களை அழைத்து வரப்போகிறார்கள் என்றும் கபுறு கேட்டேன் என்று சொன்னேன். அப்படிதானிருக்குமென்று சொன்னார். அப்பால் பத்துமணி வேளையானபடியினாலே யனுப்புவித்துக்கொண்டு வீட்டுக்கு வந்தேன்.

1746 ஆ நவம்பர் மீ 18 உக்கு அக்ஷய ஞு கார்த்திகை மீ 6 உ சுக்கிரவாரம்

இற்றைநாள் முன் திமிரி கில்லேதாருக்கு அன்வர்திகான் உத்தரவில்லாமல் அவன் குமாரன் மகம்மது மாபூசுகான் தங்கள் சென்னப்பட்டணத்தின்பேரிலே நியாயந்தப்பிதமாய் வந்து சண்டை பண்ணுகிறதும், தங்கள் ஸ்தானாதிபதியாய்ப் போய்ப் பேசப்போன வெள்ளைக்காரரைப் பிடித்துக் காவல் வைத்து விலங்குபோட்டு நடத்தின விதமும் தங்கள் பேரிலே விருதாவாய்ச் சண்டைக்கு வந்து சண்டை பண்ணுகிறது முதலான சம்மதியெல்லாம் எழுதினதற்குப் பதிலுத்தரவு காகிதம் அனுப்பினான். அதிலே எழுதியிருந்த வயனம்: தாங்களெழுதியிருந்த காகித வயணமெல்லாம் பார்த்துக் கொண்டோம். தாங்களெழுதினது நியாயந்தான். அவர்கள் பேரிலே நேரமாகிலும் சினேகிதம் பாராட்டி நடப்பித்துக் கொண்டு வரவேண்டியது நியாயமென்றும், வந்த ஸ்தானாதி

பதிகளைப் பிடிக்கிறது நியாயமல்லவென்றும் இது சேதிக்கு நபாபு அன்வர்த்திகானுக்கு எழுதியனுப்புகிறேன் என்று எழுதியிருந்த வயணமெல்லாம் துரையவர்களுக்குச் சொன்னோம். நல்லது மமுதல்லிகான் வந்தானே அவனுக்குக் காகிதமெழுதுவோமாவென்று கேட்டார். அதற்கு நான் சொன்னது: மாபூசுகான் தம்பிதானல்லவோ உன்னுடையது. ஆனபடியினாலே இதன் பிறகு போயிருக்கிற உத்தாரத்துக்குப் பதிலுத்தரவு இன்றையதினம் அல்லது நாளையதினம் வருமே வந்தவுடனே அது பார்த்துக்கொண்டு உத்தரவு எழுதவேண்டியதென்று தோற்றுது. அப்பாலுங்கள் சித்தம் எப்படியோ அப்படி பார்த்துக்கொள்ளுங்கோளென்று சொல்லிவிட்டுச் சும்மாயிருந்தேன். அதற்கு துரையிருந்துகொண்டு சொன்னது: மெய்தான் அப்படிதானே நடக்கட்டும் என்று சொன்னார். அதன் பேரிலே காரைக்கால் தபாலிலே யிருக்கிறவர்களிலே மேட்டுப்பாளையம் திருவந்திபுரம் இந்த இரண்டு விடத்திலேயுமிருக்கிற டபால்காரர்களை அங்கேயிருக்கிற தீவானத்து மனுஷர் பிடிக்க வந்தார்களாம். தப்பித்துக்கொண்டு வந்தார்களாமென்று கபுறு சொன்னதற்குக் காகிதங்களெழுதலாமாவென்று கேட்டார். இப்போது எழுதுகிறது நன்றாய்க் காணவில்லையென்று சொன்னேன். ஆனால், வாங்கிவரச் சொல்லென்று சொன்னார். நல்லதென்று சேர்வைக்காரனுடனே சொல்லி வரச்சொல்லிவிட்டு வீட்டுக்குப் போனோம்.

இற்றைநாள் முத்தியப்பிள்ளையவர்களுக்கு ஐம்பதுபேர் சேவகர்கள் சேவகத்துக்கு அமர்த்தி அனுப்புவித்தோம். இற்றைநாள் சுப்பிரமணியர் சஷ்டியானபடியினாலே சின்ன பரசுராமப்பிள்ளை பெண்சாதி சஷ்டி உத்தியாபன விரதம் பண்ணினதும் ஆறு கலசம் வைத்துச் சகல சம்பிரமமும், சகல தானமும், நானூறு வராகன் மட்டுக்கும் செலவழித்தார்கள். (வருகிற ஆதாயம் விபரீதமானபடியினாலே) சின்ன பரசுராமப்பிள்ளைக்குச் சரீரம் சுவரணை (ஸ்மரணை) யில்லை சிறிதுகாலம்.

1746 ஆ நவம்பர் மீ 19உ க்ஷய வருஷ கார்த்திகை மீ 7 உ

இற்றைநாள் சிதம்பரம் முகமத்தாமியான் கில்லேதார்களுக்கு அனுப்பின காகிதப்படிக்கு இவருக்கும் அனுப்பின

காகிதத்துக்குப் பதிலாகக் காகிதம் இந்த நாள் வந்தது. அதி லெழுதியிருந்த வயணம்: தாங்களனுப்பின காகிதம் பார்த்துக் கொண்டு மிகுதியும் சந்தோஷம் ஆச்சுது. ஆனால், மாபூசுகான் நடத்துகிறது நியாயந் தப்பிதந்தான். அவன் ராச்சியத்தைக் கெடுக்கிறதுக்குச் சுவாமி ஆக்கினை கொடுத்தார். நீங்களுமிருக் கிற சாக்கிரதையுடனே யிருக்கவேணுமென்று மின்னம் சிறிது ரகசியங்களுண்டு. அதற்கேற்ற பேரை நம்பிக்கையுள்ளவர் களாய் அனுப்புவிக்கவேணுமென்றுங் காகிதத்திலே எழுதப் போகாதென்றும், பின்னையுமிப்படி அனேகஞ் சேதிகளும் எழு தினான். அந்தச் சேதியெல்லாந் துரைக்குச் சொன் னோம். சந்தோஷமாய்க் கேட்டுக்கொண்டிருந்தார், அப்பால், சந்தாசாயபு அவர்கள் நிமித்தியம் பத்தே சிங்குக் கும், ரகோசிபாகுராவுக்கும், ஸ்ரீபதிராயருக்கும், சாயாசிராவுக் கும் நிசாமண்டையிலே யிருக்கிற ஷா அகமத்கான் மகன் அம னத்துகானுக்கும், சந்தாசாயபு மனுஷர் ரகோபண்டிதரைத் தானே எப்படி எழுதவேணுமோ அந்தப்படியே எழுதி வரச் சொல்லிச் சொன்னார். அவர்களும் நல்லதென்று போனார்கள்.

இற்றைநாள் சென்னப்பட்டணத்திலே யிருந்து பிரன்சஸ் மேரி என்கிற கப்பல் வந்தது. இந்தக் கப்பலிலே சென்னப்பட்ட ணத்து இங்கிலீசுக்காரர் கும்பினீர் சரக்கும், பொர்னவால் சரக்கும் தட்டுமுட்டு அவனுடைய மனுஷரும் கோசா பெத்து ரோஸ (Coja Petrus) கோசா, தத்தூஸுடைய சரக்கும் தட்டு முட்டும், பின்னையும் இரண்டொருத்தருடைய சரக்குந் தட்டு முட்டும் மூசே பெடுதல்மி (M. Barthelemy) உடுபுடவைகள் முச்சே பொரி முதலான பேர்களுடைய உடுபாவனைகள் தட்டு முட்டுகள் இதுகளெல்லாம் ஏற்றி வந்தது என்றும், இங்கிலீசுக் காரர் சொல்தாதுகள் இருபத்தைந்து பேரும் வந்ததாய்ச் சேதி சொன்னார்கள். மூசே பொர்னவால், மூசே பெடுந்தல்மி, மூசே புரி, பெந்தூருஸ், காதேரால் சென்னப்பட்டணம் குவர்னதோர் மர்க்கிமெஸ்தர் மானுகல், சின்னதுரை முதலான இங்கிலீசுக் காரர்சுட நாளை சோமவாரம் சென்னப்பட்டணம் விட்டுப் புதுச்சேரிக்கு வருவார்கள் என்று சொன்னார்கள்.

இற்றைநாள் நல்லண்ணமுதலி வீட்டிலே நம்முடைய புடவை சரக்குகள் போட்டுக்கொண்டிருந்த கிடங்கை வீட்டுக்

காரர் வசத்திலே யொப்புவித்துவிட்டு ராசவீதியிலே இருக்கிற பாலையப்பமுதலி வீட்டைப் புதிதாய் முஸ்தீதுபண்ணி இற்றை நாள் சரக்குகளைக் கொண்டுபோய் அந்த வீட்டிலே வைத்து நாள்கொண்டு சாயங்காலம் ரிஷப லக்கினத்தில் கிரகப் பிரவேசம்பண்ணி நானும் கூடப்போய் இருந்து வந்தவர்களுக்குப் பாக்கு வெற்றிலே எல்லாம் கொடுத்து சம்பிரமமாயிருந்து எட்டு மணிக்கு ராத்திரிக்கு வீட்டுக்குப் போனேன்.

1746 ஆ நவம்பர் மீ 20உ க்ரு அக்ஷய ளு கார்த்திகை மீ 8உ ஞாயிற்றுக்கிழமை.

இற்றைநாள் காலத்தாலே முந்தாம்நாள் வந்த காசிதாசு புக்கின் குமஸ்தா அரிசங்கர் தாறுவாடி வீட்டுக்குப்போய் நீர் முந்தாம்நாள்வந்திரே சரீரம்சுவஸ்தமில்லையென்று கேள்விப்பட்டேன். நீரும் போய் இரண்டரை வருஷமாச்சுதே! மறுபடி இவ்விடத்துக்கு வர இத்தனைநாள் சென்றதே! ஆனாலும்முடைய தம்பியிருந்தவனும் விவேகிதான் என்றுபசாரஞ் சொன்னேன். திருப்பதிக்குப் போனதும் அதற்கு முன் சரீரம் சுவஸ்தம் தப்பியிருந்ததும் இப்போது சற்று லகுவாயிருக்கிறதும், காசிதாசுபுக்கின்சு அவர்களுக்கும் உத்திரோத்திரா சினேகம் நிற்கவேணுமென்றும் இப்படியாக அனேகமாய் உபசாரமாய்ச் சொல்லி இரண்டு சாலுவை இருபது வராகன் பெறும் வெகுமானமாகக் கொண்டுவந்து கொடுத்தான். நானும் அங்கீகரித்துக்கொண்டு பதிலுத்தரவு உபசாரமாய்ச் சொல்லிவிட்டு அனுப்புவித்துக்கொண்டு துரைவீட்டுக்கு வருகையிலே தறுவாடி சொன்னது: தன்னைத் துரை பேட்டி பண்ணி வைக்கவேணும் என்று சொன்னார். நல்லதென்று வந்தேன். அப்பால் துரையவர்கள் வீட்டுக்குப் போனவிடத்திலே துரையவர்கள் ஆற்காட்டுச் சேதி ஏதாகிலும் வந்ததாவென்று கேட்டார். இற்றைநாள் வருமென்று சொன்னேன். அப்பால் சென்னப்பட்டணம் பேச்சும், ஆற்காட்டு அன்வர்திகான் பேச்சும், இங்கிலீசுக்காரர் பேச்சும் இவர் அதிருஷ்டம் பெலத்திருக்கிறதினாலே எல்லாக் காரியமும் ஆகும் என்று எதிரிக்கெல்லாம் அபசயமும் இவருடைய மேன்மையுடைய சேதியும் மற்றவர்களெல்லாம் வெறி பித்தாக்கொடுக்குகள் என்றும் சொல்ல, அது மெய்தான் இந்த ஊரிலே இருக்கிற

கோன்சேல்காரரெல்லாரும் சீர்மையிலே மெத்த அற்ப மனுஷர் என்றும், பின்னையும் இருக்கப்பட்டவர்களுக்குக்கூட ஷி தானத்தையுஞ் சொன்னார். அது மெய்தானென்று சொல்லி நீ யறியாதது ஒன்றுமில்லையே! முசே தோந்தேல் மாத்திரம் பெரிய மனுஷன் வீட்டுப் பிள்ளையென்றும், இப்போது சீர்மையிலேயிருந்து வந்திருக்கிற பெரிய மனுஷர்களையும் உனக்கு நன்றாய்த் தெரியுமே, அதனாலே நான் சொல்லக் கவையில்லை என்றார். அது மெய்தான் என்று ஸ்தவுத்தியமாயதற்கு எப்படி சொல்லவேண்டுமோ அப்படி சொன்னேன். அதன் பேரிலே நாலு நாழிகை தேசகாலம் பேசிக்கொண்டிருக்கையிலே அல்லிநக்கிம்கான் சாயபு உம்முடைய முலாகத்து கோரியிருக்கிறானென்று சொன்னேன். அதற்கு என்ன செய்யவேணுமென்று கேட்டார். அதன்பேரிலே பதினைந்து பீரங்கி சுடவேணும், ஏதாகிலுஞ் சகலாத்து மாகுதே ஓங்கிரி முதலானது கொடுக்கிற வாடிக்கையாம்படிக்குக் கொடுக்கவேணுமென்று சொன்னேன். உனக்கு எப்படி சம்மதியோ அப்படிச் செய் என்று சொன்னார். அப்பால் அரிசங்கர் தறுவாடி உம்முடைய பேட்டிக்கு அழைத்து வருகிறேனென்று சொன்னேன். உனக்கு எப்படி சம்மதியோ அப்படிச் செய் என்று சொன்னார். காரைக்கால் தபால்காரரை இரண்டிடத்திலே இருந்தவர்களை வாங்கிவரச் சொன்னோமே அவர்களுக்கும் அந்த ஊராருக்கும் ரொம்ப சிநேகமாயிருக்கிறபடியினாலே அவர்களிவர்களைச் சிந்தையில்லை வாருங்கோள் என்று அழைக்கிறார்களோ என்று சொன்னதற்கு உனக்குச் சம்மதியானால் போகச் சொல்லென்று சொன்னார். அந்தப்படிக்கு டபால் காரரை அவர்கள் வழியே போகச் சொன்னேன். அப்பால் பனிரெண்டு மணிக்கு வீட்டுக்கு வந்தேன்.

அப்பால் நாலு மணிக்கு ஆற்காட்டு வக்கில் சுப்பய்யன் காகிதம் வந்தது என்று துரை அழைத்தனுப்பினார். அந்தக் காகிதத்திலே உசேன்சாயபு சென்னப்பட்டணத்திலே கோட்டையின்பேரிலே சண்டைக்குப் போகத்தக்கதாக அன்வர்தீகான் நினைப்பாயிருக்கிறானென்றும், உங்கள் துரைகள் தாங்கள் பிடித்ததே பிடியாயிருக்கிறார்களென்றும், அங்கே வந்திருக்கிற வெள்ளைக்காரரிலே ஒருத்தன் புதுச்சேரி குவர்னதோர் அக்காள் மகன் என்றும் கபுறு கேட்

டோமென்றும் கேட்டதாகவும், அதற்கு வக்கில் சுப்பையன் மூசியே புரி மகனென்றும் சொன்னதாகவும், அதன்பேரிலே வெள்ளைக்காரரிலே மூன்று பேரையும் அழைத்துச் சென்னப் பட்டணஞ் சண்டை பண்ணி வாங்கின சேதி யெல்லாங் கேட்டு அதில் திக்குடுக்கையினுடைய பிரஸ்தாபங் கேட்டதின் பேரிலே வெகு சந்தோஷப்பட்டதாகவும், வெள்ளைக்காரரை புதுச்சேரி குவர்னதோர் அவர்களுக்குக் காகிதமெழுதச் சொன்னதாகவும், அவர்கள் காகிதமெழுதுகிறதற்கு மாத்திர மல்லவென்று சொன்னதாகவும், அதன் பேரிலே யாதாமொரு குமாஸ்தர் மனுஷரை அனுப்பவேணுமென்று யோசனை பண்ணினதாகவும், வக்கில் சுப்பய்யனை புதுச்சேரிக்குப் போகச் சொன்னதாகவும், அதற்குத் தான் உத்தரவு இல்லாமல் போகப்போகாதென்று சொன்னதாகவும் வெள்ளைக்கார ருக்கு இருபது மெழுகுவத்தி அனுப்பச்சொல்லியும், ஆறின பதஞ்சோறுபோலே யிருக்கிறது. முன்னிருந்த சுறுக்கா யிருக்கவில்லை. சண்டைக்குப் போகிறபேச்சென்றும் அன்வர்தி கான் திருச்சினுப்பள்ளியிலே யிருந்து மூன்னூறு குதிரையுடனே வந்து சேர்ந்தானென்றும் இது முதலாகிய சேதி யெழுதிய னுப்பினதெல்லாம் துரைக்குச் சொன்னேம். துரை பதிலுத் தரவு எழுதச்சொன்னது: தன்னைப் போகச்சொன்னால் தானிவ் விடத்திற்கு வரத் தேவையில்லை. மூன்று வெள்ளைக்காரரை யும் நன்றாய் விசாரித்துக்கொள்ளச் சொல்லியும், இருபது மெழுகுதிரியனுப்புவிக்கச் சொல்லியும், அதன் பிரகாரம் அப் போதைக்கப்போது திட்டமாய் விசாரித்து எழுதியனுப்பச் சொல்லியும் இப்படி எழுதியனுப்பச் சொல்லி உத்தாரங் கொடுத்தார். அந்தப்படிக்குக் காகிதமுமெழுதி, மெழுகுதிரி யுங் கொடுத்து, பறங்கிப்பேச்சைப் பேசுகிறதற்கு ஒரு துபா சியுமனுப்பினேம். அப்போது மதனந்தபண்டிதனும் கிட்டே யிருக்கையிலே துரை துலுக்கர் பேச்சுப் பேசும்போது வில் லியநல்லூரும் அதைச்சேர்ந்த தாலுக்கும் கூட ஷ 1-க்கு இருபதினாயிரம் வராகன் எடுக்கத்தக்கதாகச் சீர்மை கொடுத் தால் சென்னப்பட்டணம் விட்டுவிடுகிறோமென்று எழுதிய னுப்பென்று சொன்னார். இப்போது அந்தப் பேச்சு நாமெடுக் கிறதல்ல. வருகிறமார்க்கமாய் வரவேணும் என்று சொன் னேன், அதுவும் மெய்தானென்று ஒத்துக்கொண்டார்,

அப்பாலே என் மருமகன் அகப்பட்டான் என்று நானொரு காரியத்துக்கும் சம்மதி காட்டப்போகாது. ஆர் அகப் பட்டாலும் சரி, காரியம் காரியமாம்படிக்குப் போக வேணும். பிரான்சுக்காரருடைய சாதிசட்டமென்றும் அதற் குத் திருஷ்டாந்திரமென்றும் சேதம் நடந்த சம்மதி களும் சென்னப்பட்டணம் வர்த்தகரை எப்படியும் புதுச்சே ரிக்கு வந்து சேர அழைப்பித்துத் தீரவேணுமென்று மித்தி யாதி சங்கதிகள்பேரிலே பேசியிருந்தார். அதற்குத் தக்க உத்தாரம் நானும் சொல்லிக்கொண்டு வந்தேன். அப்பால் பேசின பிற்பாடு சுவாரி புறப்பட்டுப் போய்விட்டார். நானும் பாக்குக் கிடங்குக்கு வந்திருக்கையிலே கருங்குழிபாளையம் கில்லேதார், இராசத்துகான் மருமகன் கான்பகதூர் ரகீம் சபர் அல்லிகான் (Rhan Bahadur Rahem Zafar Alikan) அனுப்பின காகிதத்துக்குப் பதிலுத்தரவு வந்தது. அந்தச் சேதியைப் போய்ச் சொன்னேன். அந்தக் காகிதத்திலேயிருந்த வயணம்: தாங்களனுப்பின காகிதம் பார்த்துக்கொண்டேன். நானெழுதவேண்டியதென்னவிருக்கிறது? சுவாமி எந்த வேளைக்கு என்னமாய் நடத்தவேணுமோ அந்த வேளைக்குச் சுவாமி நடத்தினபடிக்கு அப்போதைக்கப்போது நடக்குமென் றும் நியாயமெங்கே இருக்கிறதோ அங்கே செயமுண்டாம். அநியாயமெங்கே இருக்கிறதோ அங்கே அபசெயமுண்டாம். இப்போது நடந்திருக்கிற காரியத்தின்பேரிலே பார்த்துக் கொள்ள வேண்டியதென்றும் சேதி யிருந்தது அதைப் பார்த்துக்கொண்டு துரைக்குச் சொன்னோம். துரை சந்தோஷ மாய் கேட்டுக்கொண்டிருந்தார்.

*1746* ஆ நவம்பர் மீ *21*உ்து அக்ஷய ஸு கார்த்திகை மீ *9*உ சோமவாரம்.

இற்றைநாள் சாயங்காலம் முன் மீருகுலாமுசேனுக்குச் சென்னப்பட்டணம் பத்தேயானதற்கு மொபார்க்கு பாரி காகிதமெழுதினதற்குப் பதிலுத்தரவு திருநெல்வேலியிலிருந்து வந்தது. அது மேற்படி தகப்பனாரண்டைக்கு வந்தபடியினாலே அவர் அனுப்பினார். அந்தக் காகிதச் சேதி சென்னப்பட்டணம்

பத்தே பண்ணுகிறதற்கு மிகுதியுஞ் சந்தோஷமாச்சுதென்றும், இப்படிப்பட்ட விஷயம் அநேகஞ் உண்டாகவேணுமென்றும், சத்துருக்கள் முகம் கருப்பாய்ப்போச்சுதென்றும், இந்தச் சந்தோஷம் தம்முடையதென்றும், வட்டி சம்மதி தங்கள் தகப்பனுர் வசம் கொடுத்த சேதி தாங்கள் தகப்பனுர் எழுதி அனுப்பவில்லையென்றும் இந்த மட்டுக்கும் கொடுத்திருந்தாலாச்சுது இல்லாவிட்டால் கொடுத்துவிடச்சொல்லியும் எழுதின சேதியைத் துரைக்குச் சொன்னேம். வட்டி சம்மதிக்கு நாளை ஞாபகம்பண்ணென்று சொன்னுர். இதல்லாமல் இமாம் சாயபு மகன் அசனல்லிகான் நிசாமுக்கும் இமாம் சாயபுக்கும் அனுப்பின காகிதம் அனுப்பினேமென்று புதுச்சேரிக்கு நாம் வந்திருக்கிறதற்குத் தியாகர் கடைக்குப் (Tyagar) பயணம் போகத்தக்கதாகச் சாமான்களெல்லாமனுப்பிவிட்டு நாமும் பயணந் தயாராயிருக்கிற வேளையிலே காகிதம் வந்தபடியினாலே, புதுச்சேரிக்கு வரக்கூடாமல் போச்சுது. அப்படியே கொஞ்ச நாளைக்குப் பிறகு வருகிறேமென்றும், செலவுக்குப் பதினாயிரம் ரூபாய் உண்டிகைபண்ணி யனுப்பச் சொல்லியும் இப்படியாக எழுதின காகிதம் துரையண்டைக்குச் சென்னப்பட்டணம் டபாலிலே வந்து அவரென்னண்டைக்கு அனுப்புவித்தார். இந்தக் காகித வயணமும் ராத்திரி துரைக்குச் சொன்னேன். அதற்குப் பதினாயிரம் ரூபாய்க்கு வர்த்தகரை அழைத்துக் கண்டு பேசி உண்டியல் எழுதச்சொன்னுர். அதற்கு நான் அவர்கள் மனுஷரிருக்கிறார்களே அவர்களுடனே சொல்லி உண்டிகை அமர்த்தச் சொல்லுகிறேனென்று சொன்னேன் நல்லது அப்படியே செய் என்று சொன்னுர். அந்தமட்டுக்கும் நானுவிதப் பேச்சுக்களும், சென்னப்பட்டணத்து வர்த்தகரை யழைப்பிக்கிறதற்கு எப்படியாமாகிலும் பண்ணி அழைப்பிக்கச் சொல்லியும், ஆற்காட்டிலே நபாபு கச்சேரியிலே பிராஞ்சுக்காரர் வந்து விழுந்தார்களென்கிறதாய்க் கிலிபிலியாய் அதன்பிறகு இங்கிலீசுக்காரர் ஓடிப்போகிறவர்கள் நூறு பேர் சொல்தாதுகள் இது மார்க்கமாய் போகிறவர்களென்று தீர்ந்து நபாபு அன்வர்திகான்கூட மனசு ஸ்தசீதமாயிருந்தது முதலான சேதியெல்லாம் பேசியிருந்து வீட்டுக்கனுப்புவித்துக்கொண்டு வந்தேன்.

*1746* ஆ நவம்பர் மீ *23* உக்து அக்ஷய ஷு கார்த்திகை மீ *11* உ புதவாரம்

இற்றைநாள் காலத்தாலே பழஞ்செஞ்சியின் காகிதம் படித்துச்சொன்னேம். அதிலெழுதியிருந்த வயணம்: தாங்கள் எழுதின காகிதம் பார்த்துக்கொண்டு மிகுதியுஞ் சந்தோஷமாச்சுது. ஆனால், மாபூசுகான் நடப்பித்தது நியாயமல்லாத காரியம் நடத்தினான். அவனுக்குச் சுவாமி ஆக்கினைகொடுப்பார். இதல்லாமல், எவனும் தனசம்பாத்தி அதிகாரம் ஒவ்வொன்றுபோதும் (கெட்டுப்போகிறது) அப்படியிருக்க, மாபூசுகானிடத்திலேயிந்த மூன்று குணமுமிருக்கிறது இதற்கெல்லாம் ஸ்தானமாயிருக்கிற அவருணங்கூடவிருக்கிறது. ஆனபடியினாலே, இவனுடைய நடத்தைக்கு எழுதவேண்டியதென்னவிருக்கிறது? ஆகிலும் நபாபுடனே சல்லுக்காயிருக்கிறது நல்லதென்றும், பின்னையும் ஆப்திகரித்த சிநேகமாயெழுதின வயணமெல்லாம் துரையவர்களுடனே சொன்னதற்குச் சந்தோஷப்பட்டார்கள்.

இதல்லாமல் சாதக்கு சாயபு என்கிறவன் வேலூரிலேயிருந்து துரை பேருக்கு ஒரு காகிதமும் என் பேருக்கு ஒரு காகிதமும் அனுப்பினான். அந்தக் காகிதத்திலே எழுதியிருந்த வயணம்: முன்னே நாம் மருட்டியர் கலாபத்திலே, புதுச்சேரியிலே, தாங்களாசிருவிலேயிருந்தபடியினாலே தங்கள் ஆபிதத்தைக்குறித்து எழுதினேம். சென்னப்பட்டணத்தின் பேரிலேயும் புதுச்சேரியின் பேரிலேயும் நபாபு மாபூசுகான் சண்டைபண்ணிக் கோட்டை வாங்கவேணுமென்று கெட்டகெட்ட ஒட்டுகளெல்லாமிட்டுக்கொண்டிருக்கிறான். ஆனபடியினாலே, நீங்கள் சமாதானம் பண்ணிக்கொள்ளுகிறது நல்லது. அல்லவென்று அதற்கேத்த பத்திரமாயிருக்கவேணுமென்று பின்னையும் அதைத்தானே விவரித்தெழுதினான். எனக்கெழுதினதிலே உங்கள் குழந்தைகள் குஞ்சுகள் தட்டுமுட்டுகள்கூட வேலூருக்கு அனுப்புவித்தால் நல்லது. அதற்குப் பசங்கள் குஞ்சுகள் வருகிறதற்கு வழிக்குப் பயமில்லை. ஆகையால், குதிரை சுவாரிகள் சேருவார்கள். குஞ்சு குழந்தைகளுக்குச் சுவாரிகளுக்கு டோலி காடி முதலானதுங்கூட அனுப்புகிறேனென்று இப்படி பின்னையும் இவ்விடத்திலே நபாபு அவர்கள் சண்டையிலே தோற்றுவந்தபடியினாலே பத்தைபண்ணிச் சென்னப்

பட்டணத்துக்கோட்டையும் புதுச்சேரி கோட்டையும் வாங் கத்தக்கதாயிருக்கிறரென்றும், நீர் வரக்கூடுமானல் வரு கிறது. வரக்கூடாவிட்டால் குஞ்சு குழந்தைகளை அனுப்பு கிறது என்றும் ஆட்திகரித்து எழுதின காகித வயணம் எல்லாம் (ா) துரையவர்களுக்குச் சொன்னேன். அதற்குத் துரையவர்கள் நகைத்து நம்முடைய சினேகிதங்கோரி எழுதி னதற்கு உபசாரம் எழுதின மாபூசுகான் அவர்களுக்கு மற் றது வரப்பட்டவர்கள்கூட அவர்கள் தளத்துடனே கூட வந்தாலும் சுவாமி தயவினல் வந்தவர்கள் படுகிற அவஸ்தை களை நீங்கள் கேள்விப்பட்டு என்னிடத்திலேயிருக்கிறபரியந் தம் பிரீதியினலே எனக்குப் பத்தேமொபார்க்கு எழுதப் போகிறீரென்று எழுதச்சொன்னர். அந்தப்படிக்குக் காகித மும் எழுதி எனக்கு எழுதினதற்கும் அதற்குத் தக்கதாக உத்தாரமெழுதிக்கொடுத்து அனுப்புவித்தேன். மறுபடி பத் தேசிங்கு வக்கில் என்று தஞ்சாவூர் நாட்டுராசா காரியம் பேச வந்திருந்தான், கேசவராயனென்கிறவன். அவனெரு காகிதமெழுதினன். அந்தக் காகித வயண மென்னவென்ருல் மாபூசுகானும் மமுதல்விகானும் உங்கள்பேரிலே சண்டைக்கு வரவேணும் என்று தளங்கூட்டிக்கொண்டு வருகிருர்களே என்னண்டைக்கு ஐயாயிரம் வராகன் அனுப்பினல் இரண்டா யிரம் மருட்டியர் குதிரை கூட்டிக்கொண்டு வந்து துலுக்கர் தாமெல்லாம் துரத்திவிடுகிறேனென்றும் எழுதினன். அந்த வயணமெல்லாம் துரைக்குச் சொன்னதற்குப் பதிலுத்தரவு எழுதச்சொன்னது: எங்கள் பேரிலேயிருக்கிற பிரீதிக்கு உபசாரமெழுதி படையுடனே சேர்ந்ததற்கு எங்களுக்குச் சீர்மையிலிருந்து வந்திருக்கிற படைக்குச் சண்டைபண்ணு கிறதற்கு எந்தெந்த ஸ்தலத்துக்கு அனுப்புவோம் என்று யோசனைபண்ணுகிறதாயிருக்கிறது. அத்தனை ஜனங்களிருக் கிறபடியினலே எங்களுக்கு மருட்டியர் குதிரை கவையில்லை என்று உபசார மெழுதச் சொன்னர். அந்தப்படிக்கு எழுதி யனுப்புவித்தேன்.

இற்றைநாள் சுப்பய்யன் ஒரு காகிதமெழுதி அனுப்பினன். அதிலெழுதியிருந்த வயணம்: மகம்மது அலிகான் சாத்துபுரத் திலே டேரா கொண்டுபோய்ப் போட்டு அவனும் புதுச்சேரி யின்பேரிலே சண்டைக்கு வந்ததாய் அவனும் ஆயிரம் சுவா

ரும் அற்பிசி மீ 8 உ (20 உ நவம்பர் மீ) டேரா போய்ச் சேர்ந்தானென்றும், அவ்விடத்துக்குப் போகிறதென்கிற பேச்சுமாத்திரம் அல்லாமல் போகிற சாடையாய்க் காண்பிக்க வில்லை. வெள்ளைக்காரர் பேரிலே சண்டைக்குப் போகிற தென்றுப்போலே போர்சுவார்களுக்கும் சமேதார்களுக்கும் எசமானுகிற மமுதலிகானுக்கும் கூட முகத்திலே களைவாங்கி சேஷயிதேவி அடைந்தாப்போலே யிருக்கிறுர்களென்றும், உசேன்சாயபு ஒரு பிராமணனை ராசாவினிடம் அனுப் புகிறுனென்றும், அவனுக்குச் சற்றே மரியாதைபண்ணி வைக்கவேணு மென்றும் அவனை விசாரிக்கச் சொல்லியும் வெள்ளைக்காரர்களை வெளிப்படுத்துகிறதற்கு ரொம்ப பிர யாசை யென்றும், அந்தக் காலம் கூடாதென்றும் நாளது வரையில் அதற்குச் சமயம் பார்த்து எழுதியனுப்பு கிருரென்றும், ஆற்காட்டு லாலாபேட்டை குமஸ் தாக்கள் கையிலே ஆயிரம் ரூபாயும் வாங்கிக்கொண்டு வரு கிருரென்றும், குலாபு சிங்குக்கு நூறு ரூபாய் கொடுக்கிரு மென்றும், இந்த ஆயிரம் ரூபாயிலே இப்போது சத்தியாய் வேண்டியது வாங்கிக்கொண்டு மற்றதைத் தேவையானுல் அப்போது வாங்கிக்கொள்ளுகிருமென்றும், அன்வருதி கானுக்கு அறுபது எழுபதுதரம் பேதியாகுது, பிழைக்கிற வழி யாயிருக்கவில்லை யென்று மிப்படியாக எழுதியனுப்பின காகித வயணம் எல்லாம் துரைக்குப் படித்துச்சொன்னேம். இதல்லா மல் கனகராய முதலியிருக்கும்போது ஏதாகிலும் பழவகைகள் அனுப்புவார்கள். இப்போது அனுப்பக்காணேமென்று ஒரு கூண்டு கொய்யாப்பழமாத்திரம் அனுப்பச் சொல்லியும் இப் படியாக எழுதினுன். அந்தப்படிக்குக் கொய்யாப்பழம் அனுப் பச்சொல்லி உத்தாரங்கொடுத்தார் அப்பால் துரை என்னை அழைப்பித்து ஏகதேசமாய்ச் சொன்னுர். அது சுப்பய்யனுக்கு எழுதி உசேன் சாயபுக்குச் சொல்லச்சொன்னது. அன்வருதிகா னுக்கும் எங்களுக்கும் மனது போதாமலிருக்குதே அதற்கு நாங் கள் தேவனும்பட்டணம் கோட்டையைச் சண்டைபண்ணி வாங்கிக்கொண்டு அத்துடனே சேர்ந்த குண்டு கிராமங்களெல் லாம் உங்களுக்குக் கொடுத்துவிடுகிருமென்றும், கோட்டை யை மாத்திரம் சிறிது ராணுவத்துடன் சிலநாள் வைத்துக்கொண் டிருந்து அதன் பிற்பாடு கொடுத்துவிடுகிறேன் என்றும், அந் தக் கோட்டையுங் குண்டு கிராமமும் மறுபடியும் இங்கிலீசுக் காரருக்குக் கொடுக்கத் தேவையில்லையென்றும் இந்தப்படிக்குச்

சமாதானம்பண்ணி அன்வருதிகானுடைய காகிதம் சீக்கிரமத்துக்கு வாங்கி அனுப்பச்சொல்லியும், இந்தப்படிக்கு உசேன் சாயபுக்குத் தெரியப்படச்சொல்லியும், அவர் சொல்லுகிற உத்தரவுபடி எழுதியனுப்பச்சொல்லியும், பின்னையும் இது வயணங்களாயெழுதவேணுமோ அந்தப்படிக்கெல்லாம் எழுதியனுப்பச்சொல்லியும் உசேன் சாயபுக்கு அந்தவயணம் ஒரு காகிதமெழுதி சந்திக்கு ஒரு மார்க்கமெழுதி அனுப்புவித்தோம். அந்த வயணம் நம்முடைய வக்கில் வந்து விஸ்தாரமாய்ச் சொல்லுவான். அதை நன்றாய்க் கேட்டுச் சந்தி அமரப்பண்ணினாலும் உமக்குங் கீர்த்தியுமுண்டென்றும், பிரசாக்ஷியம் வராதென்றும் அன்வருதிகான்சாயபு அவர்களுக்கும் ராசியாய்ப்போய்ச் சமாதானமாயிருப்போமென்றும் பின்னையும், உபசாரமாய் எழுதியனுப்பச் சொன்னார். அந்தப்படிக்கு இரண்டுபேருக்கும் காகிதமெழுதிக் கொடுத்து அனுப்புவித்தோம். இதற்கு நகலும் மதனந்தபண்டிதன் வசத்திலேயிருக்கிறது. இன்றைய மட்டுக்கும் நடந்தது.

*1746* ஆ நவம்பர் மீ *24* உ க்ஷய ஞூ கார்த்திகை மீ *12* உ குருவாரம்

இற்றைநாள் நடந்ததென்னவென்றால் மமுதல்லிகானென்கிறவன் அன்வருதிகான் மகன் கணவாயின்பேரிலே கிருஷ்ணைக்குப் போகவேணுமென்று போனவன் வந்தானே அவனுக்கொரு காகிதம் எழுதியனுப்புவிக்கவேணுமென்று துரையவர்கள் சொன்னார்கள். நீங்களிப்படிக்கு எழுதவேணுமென்று சொன்னால் அந்தப்படிக்கு எழுதியனுப்புகிறேன் என்று சொன்னேன். இதுவரைக்கும் நாற்பதுநாளாய்ப் பிடித்து நிசாமுக்கு எழுதின காகிதத்துக்குக்கூட உன் மனதின்படியே எப்படி யுக்தமோ அப்படி எழுதியனுப்பு என்று சொன்னபடிக்கு எழுதினதென்னவென்றால்: இதற்குமாத்திரம் வயணஞ்சொன்னபடிக்கு எழுதுகிறேனென்று சொன்னேன். அதென்னவென்று கேட்டார். காகிதமெழுதுகிறதற்கு முன்னே என்னுடனே பேசியிருந்து அதன்பேரிலே காகிதமெழுதச்சொல்லி உத்தாரங் கொடுக்கிறபடியினாலே உங்கள் அபிப்பிராயம் தெரிந்திருக்கிறபடியினாலே அதற்குத்தக்கதாய் எழுதியனுப்புவேனென்று சொன்னேன். நல்லது இதற்கு அபிப்பிராயம் தெரியாமலிருக்கும்போது எழுதுகிறதாங்காட்டும், பிரயாசமிதற்கு உனக்குத் தோற்றினபடிக்கு எழுதிக் கொண்டுவா உன் சமர்த்து இதிலே

தெரியுதென்று சொன்னார். நல்லதென்று எழுதிக் கொண்டு போய் படித்துக்காண்பித்துப் போட்டோம். சந்தோஷமாகத் தானே திட்டமாய் எழுதியிருக்கிறது. ரவாணுபண்ணி அனுப்புவிடென்று சொன்னார். அந்தப்படிக்கு இரண்டு சேவகர் கையிலே கொடுத்தனுப்புவித்தேன்.

இற்றைநாள் சாயங்காலம் ஐந்து மணிக்குச் சென்னப்பட்டணம் குவர்னதோர் மேஸ்தர் மாசு அவர் பெண்சாதி, அவர் பெண்கள், பிள்ளைகள், சின்னதுரை மேஸ்தர் மானுஷன் பின்னையும் ஐந்தாறு பேர் இங்கிலீசுக்காரர்கூட இவ்விடத்திலிருந்து போயிருந்த மூசே பெடுத்தலெம், புரி, லவில்பாது, திலார்ஷ் (M. Barthelemy, M. de Bury, M. de la Villebague, M. Delarche), பின்னையும் இரண்டொரு வெள்ளைக்காரர் முதலான நூறு சொல்தாதுகளும் நூறு சிப்பாய்களும்கூட வந்தார்கள். இவ்விடத்திலிருந்து நூறு சொல்தாதுகளும், ஐம்பது மாயே சிப்பாய்களும், இருபது ஒபிசியேல்மார்களும் எதிராக காலாப்பட்டு மட்டும் போனார்கள். அங்கே மத்தியானத்திற்கு சாப்பிட்டுச் சாயங்காலம் புறப்பட்டார்கள். புதுச்சேரி குவர்னதோர் மூசே துய்ப்ளேய்க்சும், கோன்சேல்காரரும், மீனாட்சியம்மை சத்திரமட்டும் எதிரே போய் அழைத்துக் கொண்டு வந்தார்கள். சென்னப்பட்டணம் கெவுனி வாசல் படியிலே நுழையும்போது இருபத்தொரு பீரங்கி போட்டார்கள். அப்பால் அவ்விடம் விட்டுக் குவர்னதோர் வீட்டுக்குள்ளே நுழையும்போது இருபத்தொரு பீரங்கி போட்டார்கள். அப்பால் சாராயம் வாங்கிக்கொள்ளும்போதும் அப்படிதான். அந்தப்படிக்கு இரண்டு நாழிகை தேசகாலம் பேசியிருந்த பிற்பாடு இவர்களுக்கு விடுதி அமர்த்தி இருக்கிற குவர்னதோர் வீட்டுக்கு மேற்கே இருக்கிற கோன்சேல் வீட்டை இவர்களுக்கு விடுதியாக முன்னேதானே அமர்த்தியதை எல்லாம் திட்டமாய்ச் சிங்காரித்து, கட்டில்களமைத்து, மற்றதெல்லாம் போட்டு முஸ்தீதாக இருக்கிற வீட்டைத் துரை பெண்சாதி கொண்டுபோய்க் காண்பித்து அதைப் பார்த்துவிட்டு மறுபடி குவர்னதோர் வீட்டிற்குப் போய் சாப்பிட்டு ராத்திரி அவர்களுக்கு விடுதி விட்டிருக்கிற வீட்டுக்குள்ளே படுத்துக்கொள்ளப் போனார்கள். ஆனாலிவர்களுக்கு நடந்த மரியாதை, காவலாய் வந்தவர்களுக்கு இப்படி மரியாதை

பண்ணுகிறது வியாயமில்லை. இவன் சென்னப்பட்டணத்திலே குவர்னதோராய் இருக்கிறபோது வந்தாலுமிதற்குச் சற்றுக் குறைச்சலாய் மரியாதை நடத்துகிறதேயல்லாமல் இவ்வளவு நடக்காது. அப்படி வெகு மரியாதை பண்ணினபடியினாலே துரையைச் சமஸ்தமான ஜனங்களும் ஸ்தவுத்தியம் பண்ணினார்கள். ஆனால் இந்தக் குவர்னேர் மாசு வருகிறபோது இந்தப் பட்டணத்து ஜனங்கள், குண்டுதாழை எதுவக்கி, குவர்னதோர் வீடுமட்டுக்கும் வந்து வேடிக்கைப் பார்த்த ஜனங்களை மட்டாய் மேரையாமித்தி இவ்வளவு என்று சொல்லக்கூடாது. ஜனங்கள் நெருக்கமும் இந்த மட்டுக்கும் தொகை புரியாததும் எள்ளு போட்டால் எள்ளு விழாது. இப்படி பட்டணத்திலுண்டான ஜனங்கள் எல்லாம் வந்துபார்க்கிறபோது முசே மார்சு அவர்களுடைய மனசு எப்படியிருக்குமோ அந்தத் துக்கத்தை இன்னபிரகாரமென்று எழுதப்போகாது. ஆனால், லோகத்துக்குள்ளே சுகமுந் துக்கமும் உடந்தையானபடியினாலே விவேகிகள் இதை ஒரு அவமானமாயெண்ணார்கள். கோட்டைக்கு இக்கட்டு வருகிறதும் பட்டணத்துக்கு இக்கட்டு வருகிறதும் அதிலேயிருக்கப்பட்ட ஜனங்கள் வழிப்படுகிறதும், சுவாமியுடைய ஆக்கினையே யல்லாமல் மற்றப்படியல்ல. ஆனால் கஷ்டம் சத்துருக்குக் கூட வரலாகாது.

இற்றைநாள் இராத்திரி எட்டு மணிக்குக் குவர்னதோர் என்னை அழைப்பித்துச் சென்னப்பட்டணத்திலேயிருந்து இந்த சனங்கள் பிறகே வெகுபேர் தட்டு முட்டுக் கொண்டு வந்து உங்கள் சாவடிமுதல் முத்தியாலுப்பேட்டைமட்டுக்கும் வைத்திருக்கிறார்கள். அங்கே வீடுகளிலே போய்ச் சோதித்துப் பாளையக்காரமனுஷருக்கும் தாக்கீதுபண்ணி எல்லாம் கொண்டுவந்து கெவுனிவாசல் சேர்க்கச் சொல்லி உத்தாரங் கொடுத்தார். அந்தப்படிக்கும் இதல்லாமல் புடைவை சீலைகள் அங்கங்கே கொண்டு வந்து வைத்ததெல்லாம் முசே லேபோமைப் போய் பார்த்து சோதித்துவிடச் சொன்னார்.

1746 ஆ நவம்பர் மீ 25 உக்கு அக்ஷய ஞு கார்த்திகை மீ 13 உ சுக்கிரவாரம்

இற்றைநாள் சேதி யென்னவென்றால்: மாயே சிப்பாய்களும் சிறிது சொல்தாதுகளும் பாளையக்கார சேவகர் கொண்டு

வருகிற புடவைகளை மூட்டைகளைக் கேட்டால் கொடுக்க் மாட்டோமென்கிறார்கள். சண்டைக்கு வருகிறார்கள். அடிக்கிறார்கள் என்று பாளையக்காரர் மனுஷர் வந்து துரையுடனே சொன்னபடியினாலே துரை மூசே துக்கேனுக்கு உத்தாரங் கொடுத்து இருபது சொல்தாதுகளை பாளையக்காரர் சேவகர் பிறகே கூட்டி மாயே சிப்பாய்களாகட்டும், சொல்தாதுகளாகட்டும், வெள்ளைக்காரரிலே குவர்னதோர் ஆனாலும் பின்னைப் பேசாமல் வருகிற மூட்டைகளை வாங்கிச் சென்னப் பட்டணம் வாசற்படியிலே கொண்டுபோய் ஒப்புவிக்கச் சொல்லி உத்தாரங் கொடுத்தார். அதன்படி அனுப்பினார். இந்தச் சொல்தாதுகள் போட்டு முத்தியாலுப்பேட்டையிலே வாசற்படியிலே சோதனை வாங்கினார்களென்று சேதி கேட்ட உடனே முத்தியாலுப்பேட்டையிலேதானே தமிழர் வீட்டிலே அங்கங்கே அடக்கமாய் வைத்திருந்ததையெல்லாம் போய்ப் புகுந்தெடுத்துக்கொண்டுவந்து கெவுனிவாசல் சேர்த்தார்கள்.

நேற்றும் இன்றும் மார்க்கமாய்க் கொண்டுவந்தவர்கள் தட்டு முட்டையும் தெத்துவாசலிலே வைத்துக்கொண்டு இதுகளெல்லாம் சோதித்துவிடுகிறதற்கு மூசே லேபோமை (M. Lebon) அனுப்புவித்தார்கள். அவனதையெல்லாம் மதிப்பு எழுதிக்கொண்டுவிட்டானும். ஆனால் சென்னப் பட்டணத்து வர்த்தகருடைய தட்டுமுட்டுப் பணங்காசெல்லாம் பிரான்சுக்காரருடைய சண்டையாச்சுதே யென்று மயிலாப்பூர் தீவானத்தாராச்சுதே வெகுநாளாய் சென்னப் பட்டணம் வர்த்தகருக்கும் மயிலாப்பூர் வர்த்தகருக்கும் தொந்தமாய் வந்தபடியினாலே ஷியான் குடிகள், துலுக்கர், குசிராத்துக்காரர் வகை வெகுபேர், அப்பால் துலுக்கர்கள், பாளையக்காரரிருக்கிற விடத்துக்குப் போனால் பணத்துக்கு மோசம் வரப்போகுதென்று யோசனை பண்ணி, மயிலாப்பூரிலே வைத்துக்கொண்டு, அவரவர்கள் கறக்காம்பாக்கம், சைதாப் பேட்டை, கோடம்பாக்கம், பூந்தமல்லி, பின்னையும் பின்னையுமந்த வட்டாரங்களிலே யிருக்கப்பட்ட கிராமங்களிலே திரிந்துகொண்டு இப்படியிருக்கும்போது நபாபு அன்வருதிகான் மகன் மாபூசுகான் மயிலாப்பூருக்கு வந்த விடத்திலே இனிமேல் சிந்தையில்லை என்று இவன் பவுஞ்சுடனே இருக்

றபடியினுலே பிரான்சுக்காரர் சென்னப்பட்டணங்கூட இங்கிலீசுக்காரர்களுக்குக் கொடுத்துவிடுவார்கள் என்ருப் போலேதானே எண்ணிக்கொண்டு வெகு சனங்களிருந்தாப் போலே சிறிதுபேர் மேலாலோசனைபண்ணி, செங்கழுநீர்பட்டுப்பாளையம், பூந்தமல்லி, கோட்டை இப்படி சிறிதுபேர்களும், தட்டுமுட்டுகள் குஞ்சு குழந்தைகள் தாண்டவித்துத் தாங்கள் மாத்திரம் மயிலாப்பூரிலேயிருந்த பேர்களும் உண்டு. இப்படியிருந்தபடியினுலே பிரான்சுக்காரர் பரிதீ முதலான பேர் போய் சண்டைபண்ணினபடியினுலே மாபூசுகான்கூட அவருடைய தளமுங்கூட முறிந்து ஓடிப்போனபடியினுலே நபாபு லங்கர் கொள்ளையிட்டு, பிரான்சுக்காரர் சொல்தாதுகளும், மாயே சிப்பாய்களும், போன சேவகரும், கூலிக்காரர் உள்பட வரிசையாய்க் கொள்ளையிட்டார்கள். மறுபடியும் 23 உ சனிவாரம் வந்தபோது மயிலாப்பூர் தமாமுங் கொள்ளையிட்டார்கள். இவர்கள்பேரிலே நீபத்தை மயிலாப்பூரிலே குடியிருக்கிற பள்ளியறைத் துலுக்கர் நாஞசாதியும் சுற்றுப் பேட்டிலேயிருக்கிறவர்கள் கூட வந்து கொள்ளையிட்டது மிதமில்லை. முன் சென்னப்பட்டணம் பிரான்சுக்காரர் பிடித்த போது இந்தக் கொள்ளையில்லை. சென்னப்பட்டணம் வர்த்தகர் இந்த மயிலாப்பூர் கொள்ளையிலே வெகுபேர் கெட்டுப் போய்விட்டார்கள். இந்தக் கொள்ளையிலே இந்தவூரார் கொள்ளையிட்டதெல்லாம் கெவர்னர் மாகூ வருகிருர்களென்று இவர்கள் பிறகே இரு நூறு பேர் சொல்தாதுகளும், மாயே சிப்பாய்களும், நூறு பேரும் வந்தபடியினுலே கூலிக்காரரும், மூட்டைக்காரரும், சேவகர்களும் பின்னையும் இவ்விடத்திலிருந்து அவ்விடத்துக்குப் போயிருக்கிற முத்தியா பிள்ளையவர்கள் அரும்பாத்தபிள்ளைகூட முதலான பேர்கள் எல்லாமனுப்பின புடவை திஞசுகள் எல்லாம் துரை வாசற்படியிலே சோதித்துத் தீர்வை வாங்கிக்கொண்டுவிடச் சொல்லி முசே லேபோமுக்கு உத்தாரங்கொடுத்து அனுப்புவித்த படிக்கு முசே லேபோமும் போயிருந்து நூறு வராகனுடைமையைப் பத்து வராகனுக மதிப்பு எழுதினதேயல்லாமல் அதற்குச் சந்து எழுதினதில்லை. இதற்குத் தாழ்ந்து எழுதினதுமுண்டு எழுதாமல் சும்மா எடுத்துப்போனதுமுண்டு. அதெல்லாம் ஒரு மிதத்திலே எழுதிமுடியாது. இதல்லாமல் சிப்பாய்கள்

கொண்டுவந்ததும் சொல்தாதுகள் கொண்டு வந்ததும் அதற்குத் தீர்வையுமில்லை, அதைப் பார்த்ததுமில்லை.

அந்தப்படிக்கு விட்டுவிட்டார்கள். இந்தப்படிக்குப் பார்த்துவிடுகையிலே சிறிது சொல்தாதுகள் தலைபட்டுக் கொள்ளையிட்டுச் சுற்றிப்போனதற்கு மூசே லேபோம் வாய் திறவாமல் இருந்ததும், பின்னையும் இரண்டொரு வெள்ளைக்காரர் பேசாமலிருந்தார்கள். முத்தாலுப்பேட்டை சோதனை வாங்கப் போன வெள்ளைக்காரர் இருபது சொல்தாதுகளும் அவர்கள் சுற்றினதுமட்டும் மிதமில்லை. இப்படி நானாவிதமாய் நடந்தது. இந்தவிசை மைலாப்பூரிலே கொள்ளைபோனது பத்து லட்சம் வராகன் மட்டுக்கும் உண்டென்று சொன்னார்கள். அவ்வளவு இல்லாமற்போனால் அதற்குப் பாதிக்கு மோசமில்லை. முத்திய பிள்ளைக்கு மாத்திரம் கிடைத்தது பதினாயிரம் ரூபாய்க்கு உண்டென்று வந்தவர்களுஞ் சொன்னார்கள். அவர் தினுசு மூசே லேபோம் பார்த்து விடுகையிலே அவரவர்கள் பார்த்தவர்களும் சொன்னார்கள். அவர்கள் சொன்னது பின்னையும் விசேஷித்துச் சொன்னார்கள். இவ்விடத்திலே இன்னம் எவ்வளவு தினுசிலே வைத்துவைத்தாரோ தெரிந்ததல்லவே. இவர் நேற்றுப் போனவர் (பேச்சு) இப்படியானால் முன் பிரான்சுக்காரர் சண்டை முதல்கொண்டு நாளது வரைக்கும் பட்டணத்திலே இருக்கிறவர்கள் ஊரிலே குடியில்லாமல் இருக்கையிலே எவ்வளவு சம்பாத்தியம் சம்பாதித்திருக்க வேணுமோ இதன்பேரிலே பார்த்துக்கொள்ள வேண்டியது. ஆனாலிந்தக் கொள்ளையுடைமை எவன் கொள்ளையிட்டானோ அவனுக்கு முன்னிருந்ததுகூட நாசமாய்ப்போமேயல்லாமல் விருத்தியோங்கத்தக்கதில்லை. இந்த மட்டுக்கும் பரீட்சையாகியும் இருக்கிறது. இனிமேலும் பரீட்சையாகவும் போகிறது. எத்தனை ஜனங்கள் ஐயையோ என்றார்களோ தெரியாது. ஆனபடியினாலே சகலமும் எஞ்சியத்தியில் என்று போய்விடும்.

*1746* ஆ டிசம்பர் மீ *1*உக்கு அக்ஷய ளுய கார்த்திகை மீ *19*உ வியாழக்கிழமை.

இற்றைநாள் காலத்தாலே முன் ஆறேழு நாளைக்கு முன்பாக நபாபு அன்வர்திகான் மகன் மகம்மது அலிகானுக்கு

எழுதின காகிதத்துக்குப் பதில் காகிதம் நம்முடைய கும்பினீர் சேவகரும் அவருடைய அரக்காரர்களுடைய அரக்காரர்களு மாகக் கொண்டுவந்தார்கள். அந்தக் காகிதம் பார்த்துப் படித் துத் துரையுட.னே சொன்ன சேதி என்னவென்ருல் : மமு தல்லிகான் ரொம்ப சிநேகிதங் கோரி எழுதினீர்கள். நீங்கள் சென்னப்பட்டணத்தின் பேரிலே சண்டைக்குப் போகும் போது நபாபு சாயபு அவர்களுக்கு எழுதியனுப்புவித்து அவருடைய மற்றவைகளுக்கு அழைப்பித்துக்கொண்டு சென்னப்பட்டணம் வாங்கவேண்டியிருந்தது. அல்லவென்று நீங்கள் வாங்கினவர்கள் சமுத்திரத்தின்பேரிலேதானே இருந்து சண்டைபண்ணி வாங்கினதே யுண்டானல் நாங்கள் பேசத் தக்கதில்லே. நீங்களாவது கரை வழியாகவும் வந்து சண்டை பண்ணி வாங்கினதினுலே நாங்கள் கேட்க வந்து விழுந்து மாபூசுகான் சாயபு அவர்கள் இருதிறத்தார்களுக்கும் சமா தானம்பண்ணி, வந்தவர்பேரிலே உங்கள் மனுஷர் சண்டை பண்ணினுர்களென்றும், நம்மை நிசாம் மருட்டியர்பேரிலே வெகு பவுஞ்சுடனே போகச்சொல்லிப் பர்வாணு அனுப்பினுர் கள். ஆனபடியினுலே வெகு பவுஞ்சுடனேயும் பீரங்கிகள், செகாயில், துப்பாக்கிகள் முதலான தோப்புக்காணுவுட.னே நாம் போயிருந்தோம். அவ்விடத்துக் காரியங்கள் சமாதானமானபடியினுலே நாம் மறுபடியும் ஆற்காட்டுக்கு வந்து இந்த பிராந்தியங்களுக்குச் சுவாரி புறப்பட்டோம். ஆனுல், நீங்கள் நபாபு அவர்களிடத்திலே பக்தியும், விசுவாசமும். சிநேக மரியாதையுந் தப்பாமல் வந்தது முதற்கொண்டு நடத்திக்கொண்டுவருகிறபடியினுலே அவர் களு முங்களிடத்திலே அப்படியே விசுவாசத்துடனே சினேகாபிவிர்த்தியாய் நடத்திக்கொண்டுவருகிறமட்டுக்கும் நீங் கள் சென்னப்பட்டணத்துக் காரியத்துக்கு எழுதியனுப்புவித் தால் அவர் குதிரைசுவாரிகள் சேவகரும் உமக்கு எந்தமட்டுக் கும் வெகு சந்தோஷத்துடனே தடையில்லாமல் அனுப்புவார் கள். அப்படி செய்யாமல் மயிலாப்பூரும் கொள்ளைபண்ணி விழுப்புரத்திலேயுமிப்படி நடத்துகிறதல்ல. இந்த மட்டுக்கும் நடந்ததெல்லாம் நடந்துபோச்சுது. இனிமேலே சினேகாபி விர்த்தியாய் நடக்கவும், உங்கள் பக்தி விசுவாசமும் அசரத்து அவர்கள்பேரிலே யிருக்கிறதும் காண்பிப்பதாக உங்களுடைய நினைப்பு இப்படியென்று எழுதியனுப்புவித்தால். அந்தப்படிக்

குச் சினேகாபிவிர்த்தியாய் நடக்கத்தக்கதாக நாம் சமாதானம் பண்ணிப்போடுகிறோமென்று மிப்படியும் உடம்புசெத்த பேச்சாய் கௌரவம் போக்கடித்து எழுதிக்கொண்ட காகிதத்துக்குச் சேதி, துரையவர்களுக்குப் படித்துக்காண்பித்துச் சொன்னவுடனே அவர் நகைத்து அவன் சண்டைக்கு வருகிற சுருக்குத் தெரிந்ததேயென்று சொன்னார். மெய்தான் நான் முன்னமேதானே சொல்லவில்லையா? உங்களுடைய அதிருஷ்டம் பலவந்தமா யிருக்கிறபடியினாலே அன்வருதிகானாகிலுஞ் சாவான் அல்லவென்று நிசாமன் முலுக்காகிலும் செத்து அந்தரம்துமிலே மிருத்திசல்லிகானாகிலும் ஒன்றுகட்டிக்கொள்ளுவான். அல்லது தக்கேசாயபாகிலும் கட்டிக்கொள்ளப் போறார்கள். அன்வருதிகானுக்காகிலும் அல்லது நிசாமன் முலுக்காகிலும் சாவார்கள். தப்பிதம் வராமல்போனால் இவர்களாகிலும் ஒரு சண்டையிலே அகப்பட்டு அந்தப் பயத்தினாலே யாதொரு சமாதானத்துக்கு வருவார்களேயல்லாமல் மற்றப்படி இதுகளைத்தொட்டு ஒரு பொல்லாப்பும்வராது. நடக்கிற காரியத்தைத் தடையில்லாமல் நடத்தும், சுவாமி ரக்ஷிப்பார் என்று சொல்லவில்லையா? அந்தச் சேதிக்குச் சரியாய் நடக்கத்தக்கதாகப் பார்த்துக்கொள்ளுங்கோளென்று சொன்னேன். மெய்தான் சீக்கிரமத்துக்குத் தேவனாம்பட்டணத்தையும் வாங்கித் தீர்த்தாலேயல்லாமல் இந்தவிடத்திலே நாம் வியாபாரம் பண்ணுகிறதற்குச் சங்கடமென்று சொன்னார். அதன்பேரிலே நானிருந்துகொண்டு தேவனாம்பட்டணமிருக்கிறது எப்போது உமக்குச் சங்கடமாய்த் தோற்றினதோ அதுவும் உம்முடைய கைவசமாச்சுதென்று எண்ணிக்கொள்ளுங்கோளென்று சொன்னேன். அதெப்படியென்றார். இப்போது நடக்கிற சேதி அப்படி நினைக்கவும் அப்படி முடியும்படியாய் வேளைவந்திருக்கிறது என்று சொன்னேன். நகைத்து நல்லது தேவனாம்பட்டணம் தானியமெடுத்து வரவும், கூடலூர் சுற்றுப்பட்டிலேயிருக்கிற கிராமங்களுடைய தானியமெடுத்து வரவும், அல்லவென்றும் இவ்விடத்துச்சாமான்கள் கொண்டுபோகும்போதும், கொண்டுபோய் வரும்போதும் அவ்விடத்துத் தானியம் அகப்பட்டதை யெடுத்துவரவும் நூற்றியைம்பது, இரண்டாம்பேர் அறியாமல் அமர்த்துவிக்கச் சொன்னார். அந்தப்படிக்கு எனக்கு வெளியே போய் நெல் கொண்டுவர

வேண்டுமென்று முருகப்பிள்ளைக்குச் சொல்லி அமர்த்தச் சொன்னேன் அந்தப்படிக்கு அமர்த்தியிருக்குதென்று வந்து கபுறு சொன்னான்.

தானப்பமுதலி அற்பிசி மீ 5 வ (அக்டோபர் மீ 18 வ) முதல் வெளியே புறப்படாதவன் அறிசைபாக்கம் பட்டணவர் களைக் காவல்வைத்திருக்கிற நிமித்தியமாக அந்தப் பட்டணவர் கள் தங்கள் கையிலே வரி வாங்குகிறார்களென்று பிராது பண்ணினால் நான் அதை விஸ்தரித்துச்சொல்லித் தள்ளிவித் துப்போடுவேனென்று யோசனைபண்ணி துரை வீட்டுக்கு வந்து துரையுடனே சொல்லிக்கொண்டான். அவன் அப்படி நினைத்தானே அல்லாமல் நானப்படி நடத்துகிறதில்லை.

1746 ஆ டிசம்பர் மீ 2 வ க்ஷய வருஷம் கார்த்திகை மீ வெள்ளிக்கிழமை 20 வ. சுக்கிரவாரம்

இற்றைநாளானதினால் பின்னை வேறே அதிசயமில்லை. துரையினிடத்திலே லோகாபிரமமாய்ப் பேசியிருந்தோம். கூட லூருக்குப் போகிற எருதுகளுக்கு நூற்றியைம்பதுக்கு, நித் தம் 1-க்கு, எருது 1-க்கு பணம் $\frac{3}{8}$ விழுக்காடு தீர்த்துப்போட்டே னென்று கபுறு சொன்னேன்.

அதன் பேரிலே தேவனாம்பட்டணம் சேதி தானிருக்கிற லக்ஷணமும் இப்போது வீட்டையிடிக்கிறதும், இரண்டு மூன்று நாளையில் புதுச்சேரியார் வந்து விழுகிறார்கள் என்றும் அவர் கள் ரொம்ப ஆனபடியினால் இராத்திரியெல்லாம் வெளியே போய்விடுகிறதும், பொழுது விடிந்தாப்போலே ஊரேவந்து சேருகிறார்களென்றும் கோட்டையிருக்கிற முஸ்தீது பீரங்கி கள் முஸ்தீதும் சேவகர் இருக்கிறதும், சட்டைக்காரரும் வெள் ளைக்காரருமாய் ஐந்நூறு பேருக்கு உண்டென்றும் சொன் னேன். இதல்லாமல் வேறே சேதி இல்லை.

இற்றைநாள் சென்னப்பட்டணம் இங்கிலீசு கோன்சேல் காரனிலே மூன்றுவது ஆலோசனைக்காரன் மேஸ்தர் ஸ்திராட்டன் (Ms. Stratton) என்கிறவன் சமுசாரத்துடனே படகின்பேரிலே மேஸ்தர் மாசு குவர்னரண்டைக்கு வந்தான். ஒரு வெண்கலக் குந்தாணி பீரங்கி, படகிலே வந்தது.

1746 ஆ டிசம்பர் மூ 3 வக்து அக்ஷய ஸு கார்த்திகை மீ 21வ சனிவாரம்.

இற்றைநாள் முன் சப்தரல்லிகான் சாகிறதற்கு முன்னே இரண்டு மாசத்திற்கு முன்னே சென்னப்பட்டணத்திற்கு அவர் தாயாரண்டைக்கு வந்தாப்போலே உமக்கும் சந்தா சாயபுக்கும் விரோதமானுல் அவன் மகன் ஆபிதுசாயபும் துவேஷமில்லே. ஆனபடியினுலே ஆபிது சாயபை மாத்திரம் மருட்டியர் வசத்திலே இருக்கிறவனே அழைப்பிக்கவேணுமென்று ரொம்பவும் துக்கப்பட்டுச் சொல்லிக்கொண்டதற்கு, நல்லது அவனே அழைப்பிக்கிறதற்கு ஐந்து லட்சம் ரூபாய் கொடுத்தால் அவனே அழைப்பிக்கிறேன் என்று சொன்னுன். அதற்கு நல்லதென்று ரொக்கம் நகத்து எண்பதினுயிரம் வராகனும், சிறிது ரூபாயும், சிறிது உடைமையும், சிறிது பன்னீராயிரம் ரூபாய்க்குப் புடவைதினுசுமாக ஏகத்துக்கு ஐந்து லட்சம் ரூபாய்க்குச் சரியாய்க் கொடுத்தான். அதைக் காசிதாசு புக்கான்சி வசம் பண்ணி இதற்கு இரெட்டிப்புக் கொடுக்கச் சொல்லியும், அலாயிதா ஆபித்து சாயபு சம்மதியென்று காசிதாசு புக்கான்சி கை ரசிது வாங்கி அல்லிதோஸ்துகான் பெண்சாதி வசம் கொடுத்தான். அப்பால் வேலூருக்குப் போனுப்போலே இந்தப் பணத்தை வாங்கிக்கொண்டு அழைப்பித்தார். தாய்க்கும் மற்றப் பேருக்கும் கோனுனமைத்தான் விடமாயிருக்குமென்று யோசனைபண்ணினுனே, பின்னை எதைக்குறித்தோ திரும்பியுந் தாய்க்கு எழுதி அந்த ஐந்து லக்ஷம் ரூபாயும் மறுபடியும் உமது வசத்திலேதானே கொடுத்துவிடச்சொல்லி, காசிதாசு புக்கான்சிக்கு உத்தாரங் கொடுத்தேன். அவனுன்கையிலே வாங்கின பகினுசு பங்கு செலுத்துவான். ரசிதைக் கொடுத்துவிடென்றும் ஆபித்துச் சாயபை நானழைப்பித்து உன்னண்டைக்கு அனுப்புகிறேன் என்றும் இப்படியாக எழுதினுன். இப்படி எழுதினது பத்து நாளையிலே யெல்லாம் வேலூரிலே மிராத்து சல்லிக்கான் கொன்றுபோட்டான். அந்தப்பணம் காசிதாசு புக்கான்சியும் வசத்திலேதானே நாளது வரைக்குமிருக்குது. இதுவெல்லாம் அல்லி நக்கிம் சாயபு கூட இருந்தான். மீர்சத்தும் அறிவான். அப்பால் மீர்சத்து அல்லிநக்கின் சாயபும் காசிதாசு புக்கான்சியும் பங்கிட்டுக்கொள்ளுகிறதாக யோசனைபண்ணினுர்

கள். பின்னையுமென்னென்ன யோசனை பண்ணினார்களோ தெரியாது. அந்த மட்டிலே இருக்கிறது. அந்த சம்மதியோடே சேர்ந்த புடவையானபடியினாலே அதற்குச் சாப்தா பெட்டியிலே யிருந்தாப்போலே, காணாதேபோனபடியினாலே அவனை நீங்கள் சாப்தா கொண்டுவரச்சொல்லிக் கேட்டதற்கு, அவன் தினுசுவகையரு சாப்தா அல்விதோஸ்துகான் வசத்திலே, அல்வி நக்கி சாயபு முகாந்திரத்திலே வந்து கேட்கிறான். அந்தப் படிக்கெழுதிக் கொடுத்தார்கள். இந்த ஐந்து லக்ஷம் ரூபாயும் வாங்கிக்கொடுத்தால் கால்வாசி நீங்களெடுத்துக்கொள்ளுங்களென்று எனக்குச் சொன்ன சேதியாம்படி துரைக்குச் சொன்னேன். அதற்கு அவரிருந்துகொண்டு இருபதினாயிரம் முப்பதினாயிரம் அல்லது ஐந்து லக்ஷம் ரூபாய். இதற்குக் காரியக்காரனைப் பிடித்தால் என்ன வரப்போகுது. அல்லவென்றவிடத்திலே யிருந்தால் பதினாயிரம் வராகன் பதினையாயிரம் வராகன் மட்டுக்கும் இருக்கிறது, பிடித்தும் காரியமில்லை. எஜமானனைப்பிடித்தால் காரியமுண்டு. இதற்கு மார்க்கஞ் சொன்னால் அப்படியே செய்கிறேனென்று துரை சொல்லி இதற்கு வயணமெப்படி சொல்லவேணுமோ அப்படியெல்லாம் சொல்லி மதாம் சந்தாசாயபைக் கண்டு பேசிவாயென்று சொன்னார், இந்தப்படிக்கு இராசாபண்டிதருக்குச் சொல்லிக் கேட்டு வரச் சொன்னேன்.

தேவனாம்பட்டணம் சமாசாரம் என்னவென்று கேட்டார். அதற்கு நான் சொன்னது: கூடலூரிலே ஒருத்தருமில்லை. வாசற்படிக்குப்பத்துபேர் இங்கிலீசுக்காரரும் பத்து சட்டைக்காரருமாக நாலு வாசற்படிக்கு மாத்திரம் இருக்கிறார்கள். ஊருக்குள்ளே ஒருத்தரும் வெள்ளைக்காரரில்லை. கூடலூர் பட்டணத்திலே தமிழ் ராணுவம் ஐந்நூறு பேருக்குண்டு. வடக்கேயிருந்து வந்தவன் ஒருத்தரும் வெள்ளைக்காரரில்லை, கூடலூர் பட்டணத்திலே தமிழர் ராணுவம் ஐந்நூறுக்குண்டு. மல்ராசாவென்கிறவன் ஒரு சின்ன பாளையக்காரன் ஒருத்தன் வந்தவன், கூடலூரிலேயே இருக்கிறான். தேவனாம்பட்டணம் கோட்டையிலே முன்னூறு நானூறு சொல்தாதுகளில் இங்கிலீசுக்காரர் இருநூறு சட்டைக்காரரும் இருக்கிறார்கள். இதல்லாமல் துரைத்தனக்காரர்கள் இருக்கிறார்கள் தேவனாம்பட்டணம் கோட்டையிலே தாழ ஆரபிக்கோட்டை

யிலேயுமாய் நூறு பீரங்கி மாத்திரமிருக்குது. ரஸ்து நூற்றிருபது கரிசை நெல்லிருக்குது. இருபத்தைந்து கரிசை முப்பது கரிசை அரிசியிருக்குது. நூரு பார மட்டுக்கும் மருந்திருக்கிறது. ஒரு பண்டக சாலையிலே அரிசியிருக்கிறது மற்றப்படிக்குத் தேவனும்பட்டணம் சுற்றிலும் சோதனை மட்டுக்கும் ஆயிரம்பேர் தமிழர் ராணுவமிருக்கிறது. இது வந்த சமர் சாரம். அப்பாலென்னமாயிருக்குதோ. புதிதாய்தேவனும்பட்டணம் கோட்டைக்கு வாயு மூலையிலே யிருக்கிற வீடுகள், வடவண்டை யிலேயிருக்கிற வீடுகள், முத்தியாலு நாயக்கன் வீட்டு மட்டுக்கும் ஏகத்துக்கு இடித்துச் சமன்பண்ணுகிருனென்றும் கபுறு வந்தது என்று சொன்னேன். இது மெய்தான். இதற்குமேல் இவ்விடத்திலே என்ன அதிசயமிருக்கிருப்போலே யிருக்குது என்று சொல்லி, தேவனும் பட்டணம் நான் போய் வாங்கப்போகிறேன் என்று துரை சொன்னுர். நீர் போய் இறங்கினல் சுவாமி யுமக்குச் செயங் கொடுப்பார். உமக்கிப்போது சகல சயமுங் கொடுக்கத்தக்க ஆசிராயிருக்கிருர். நீர் தளம் சண்டைக்கு அனுப்புகிறது பத்தேயாகிறதேயல்லாமல் தடையாய் நிற்கத்தக்கதில்லை, பின்னையும் ஸ்தவுத்தியமாய்ச் சொன்னேன். அவரும் சந்தோஷமாய்த்தானே. இது உனக்குச் சரிதானென்று சொன்னுர். நானென்ன அடிமை, என்னைத்தொட்டு என்ன? நீர் சொன்ன வேலை செய்கிறவனென்று சொன்னேன். அப்பால் அனுப்புவித்துக்கொண்டு வீட்டுக்கு வந்தேன்.

இற்றைநாள் சனிவாரம், துரையண்டைக்குப் போன விடத்திலே, சந்தாசாயபு, பால அமுசத்திராசாபண்டிதர், ரகோசிபோன், சிலாபத்தேசிங்கு, பாஜிராவ், ஸ்ரீபதிராயன், சாகுராசாவுக்கு இவர்களுக்கு நான் காகிதமெழுதவேண்டிய வயணமுண்டாயிருந்தால், நீங்கள் சவாதுப்பண்ணிக்கொண்டு வாருங்கள். அதைப்பார்த்துக்கொண்டு காகிதமெழுதி அனுப்புவிப்போமென்று துரையவர்களுக் குத்தாரங்கொடுத்தபடிக்கு ஐந்தாறு நாளைக்காக இன்றைக்கு எழுதிவந்த சவாதுகளைப் படித்துக் காண்பித்துச் சொன்னவிடத்திலே அவர் சொன்னது: இது உனக்கெப்படி இருக்குதென்று கேட்டார். இதற்குச் சந்தாசாயபு அவர்களை அனுப்புகிறதற்கு இந்த ராச்சியம்

நவாத்துசபை நீக்கினது தப்பிதமாய் அன்வருதிகான் சபைக்கு வந்து பிற்பாடு ராச்சியமெல்லாம் எடுத்துப்போட்டதுமல்லாமல் கரை துறையிலேயிருக்கிற பறங்கிகள் ...பண்ணினதினாலே இரண்டு லக்ஷம் வராகன் மட்டுக்கும் தீவானத்துக்குமிருக்குது. அப்படிப்பட்டவர்களுக்கு அநியாயமாய் நடத்தலாமென்றும், இதைத்தொட்டு வெகுசண்டை....தப்பாயிருக்கிறது....அதற்கு ராச்சியத்தையுங் குட்டிச்சுவராக்கினானென்றும், சந்தாசாயபு அனுப்புவித்தால் அந்தப்பணம் நாலுமுத்தரவாதியாயிருக்கிறான் என்றும் எழுதியிருக்கிறபடியினாலே மற்றவயணமெல்லாமிருக்க வேண்டு...... வேண்டியதுஞ் சரி, பணத்துக்கு உத்தரவாதம் நானே... திரம் எழுதப்போகாதென்றும் சொன்னேன். அதற்கு மெய்தான் அப்படியிருக்கலாகாது. சந்தாசாயபு ஒப்புக்கொள்ளுகிறாரும். நான் தங்கள் குமாஸ்தாவாயிருந்து பணம் அறுவு பண்ணி அனுப்புகிறோம். இந்தப்பணம் தங்களுக்குச் சேருகிறதற்கு என்னாலேயான சகாயமெல்லாம்செய்து சேர்ப்பண்ணுகிறேனென்றும் என் சகாயமில்லாமல்போனால் அவருக்கு ஒரு காசாகிலும் சேரமாட்டாதென்று மிப்படியாக எழுதச்சொல்லி எப்படி இதுவென்று கேட்டார். நன்றாயிருக்குது எழுதலாமென்று சொன்னேன் அப்படி எழுதி காகித முஸ்தீது பண்ணென்று உத்தாரங்கொடுத்தார். அதன் பேரிலே சந்தாசாயபு பெண்சாதி எனக்குச் சொல்லியனுப்பின தென்னவென்றால், இப்பால் காசிதாசு புக்கான்சி குமாஸ்தா . அரிசிங்கு தறுவாடி என்கிறவன் வந்து மயிலாப்பூரிலே சண்டையானபோது சிறிது புடவை தினுசுகள் போச்சென்றும், அது சென்னபட்டணத்துக்குக் காகிதமெழுதிக் கொடுக்கவேணுமென்றும் கேட்டதற்குக் குவர்னதோர் சாயபு அவர்கள் அந்தத் தினுசுக்குச் சாப்தா எழுதிவந்தால் அந்தசாப்தாவைக்கொடுத்தனுப்பிச் சென்னபட்டணத்துக்கு அனுப்புவித்து அந்தப்படிக்குக் கொடுக்கச் சொல்லுகிறேன் என்று சொன்னாராம். அந்த உடைமை அவனுடையதல்ல. சுப்பிதரல்விகானுடைய திந்தவுடைமை வந்ததென்று சொன்ன விபரம்:—

1746 ஆ டிசம்பர் மீ 4 உக்கு அக்ஷய ஹு கார்த்திகை மீ 22 உ ஆதிவாரம்.

இற்றைநாள் காலத்தாலே குவர்னதோர் வீட்டுக்குப் போனவிடத்திலே ஆற்காட்டு வக்கில் சுப்பய்யன் காகிதமும்

உசேன் சாயபு காகிதமும் வந்தது. சுப்பய்யன் காகிதத்திலே எழுதியிருந்த வயணம்: தேவனும்பட்டணத்தின்பேரிலே சண்டைக்குப் போய் சண்டைபண்ணிக் கோட்டையும் அதற்குள்ள கிராமங்களும் கட்டி கிராமங்கள் தீவானத்துக்குக் கொடுத்துவிடுகிருப்போலேயும், சிறிது நாளைக்குப் பிறகு கோட்டையை விடுகிருப்போலேயும், இதன் பேரிலே நபாபுக்கும், புதுச்சேரி துரையவர்களுக்கும் சமாதானமா யிருக்கிறுப் போலேயும் இந்தப்படிக்கு உசேன் சாயபுக்குச் சொல்லி நபாபுக்குச் சொல்லி உத்தரவு வாங்கி யனுப்பச்சொல்லி எழுதினீர்களே அந்தப்படிக்கு உசேன் சாயபுக்குச் சொன்னதற்கு அவர் நகைத்து சென்னப் பட்டணங் கோட்டை இங்கிலீசுக்காரருக்கு விடவேணு மென்று கேட்டால் தேவனும்பட்டணம் கோட்டை வாங்கினே மென்று எழுதினது, பிள்ளைக்கு வரங்கேட்கப் போனவிடத்திலே புருஷனைக் கொண்டுபோகிற சாமி கதையாயிருக் கிறதென்று மிப்படி எங்கேயாகிலும் உண்டாவென்றும் அப்பால் ராசி அவர்கள் சம்பதிராயர் வந்தவுடனே அவருடனே சொன்னதாகவும், அவர் நகைத்து, ஒருத்தனுக்கு ஒரு கண் கெட்டுப்போனதாகவும், ஒரு கண் சற்று நோவு காணப்போகிறுப்போலே யிருக்கிற சாடையறிந்தும் கெட்டுப் போன கண்ணுக்கு மருந்துபோடவேணுமென்றும் வைத்தியனை சம்பாதித்துக் கேட்டால் அவன் ஒரு கண் நன்றுயிருக் கிறதையும் போக்கடிக்கிறேமென்று சொன்னதுபோலே யிருக்குது. உங்கள் துரைகள் தேவனும்பட்டணத்தை வாங்குகி ரேமென்று கேட்டது. என்று சம்பதிராயனும் உசேன் சாயபும் சொன்னதாகவுமிது நபாபு சாயபுடனே எச்சரித் தால் நன்றுய்க் காணுதென்று மிது காரியம் சர்வாத்து மனக உத்தரவு சொல்லப்போகாதென்று இந்தப்படிக்கு தேவனும்பட்டணம் வாங்குகிறபேச்சுக்கூடாதென்று எழுதச் சொல்லிச் சொன்னுரென்றும், உசேன் சாயபு முசே கேர்சாம் முதலான பேர்களை விட்டுவிடுகிறேமென்று சொன்னுனென்றும் மூன்று நாளையிலே அனுப்பிவிடுவாரென்றும், அந்தரங்கத்திலே விசாரித்தால் நபாபு இந்த மூன்று பேர் வெள்ளைக்காரரையும் விடுதலைபண்ணி அனுப்பிவிடச் சொன்னதாகவும், உசேன் சாயபு பார்த்துக்கொண்டு அனுப்பலாமென்று

வைத்துக்கொண்டிருக்கிறதாகவும், உசேன் சாயபு அடி குத்து அதுவும் ஐந்தாறு நாளையிலே இனம்பண்ணி விடுதலையாக்கி அனுப்பிவிடுகிறோம் என்றும், உசேன் சாயபு வீடு சென்னப் பட்டணத்திலே இருக்கிறதை இடிக்கிறார்களாம். அதை இடிக்காமல் உங்கள் துரைக்குச் சொல்லி உத்தரவு அழைப் பிக்கவேணுமென்று சொன்னதாகவும் இது முதலான சேதி எல்லாம் எழுதின காகிதமாம்படி படித்துக் காண்பித்துக் கொண்டு துரைக்குச் சொன்னேன். துரை இருந்துகொண்டு நல்லது உசேன் சாயபு காகிதத்திலேயும் தேவனும்பட்டணம் சோலிப் போகவேண்டாமென்றுந்தா னல்லோ எழுதி இருக் கும். இது மதனுந்த பண்டிதர் அறியப்போகாது உன் அலமேரி யிலே வை யென்று சொன்னார். நல்லதென்று சொன்னேன். இனி தேவனும்பட்டணம் கோட்டையின்பேரிலே ராசகாரியம் நடத்துகிறேன். நீர் மாத்திரம் தேவனும்பட்டணம் சமாசாரம் அப்போதைக்கப்போது சமாசார மழைப்பிக்கவேணும். நீர் மிகவுஞ் சாக்கிரதையாயிருந்து சமாசார மழைப்பியுமென்று சொன்னார்,

1746 ஆ டிசம்பர் மீ 7உ க்ரு அக்ஷய ளு கார்த்திகைமீ 23உ சோமவாரம்

இற்றைநாள் ராத்திரி முசே தெப்பிரமேனி சென்னப்பட் டணத்துக்கு எசமானத்துவமாகப் போனான். இவன் போன வுடனே முசே பரிதி அங்கேயிருந்துகொண்டு வருகிறது. வந்த வுடனே தேவனும்பட்டணத்தின் பேரிலே சண்டைக்குப்போகி றதாய் தீர்ந்து முசே தெப்பிரமேனியைச் சென்னப்பட்டணத் துக்கு அனுப்பினான்.

இற்றைநாள் காலத்தாலே மப்பு மந்தாரமாய் தூத்தலு மாக இருந்தது. துரையவர்கள் சாத்தாருவுக்கும், சாவு ராசா வுக்கும், சம்பதிராயனுக்கும், பத்தேசிங்கு, ரகோசி போன் சலா, பாசிராயன், நிசாமண்டையிலே யிருக்கிற சாமத்துகான் மகன் அமரனத்துகான், சந்தாசாயபு பேருக்கு எழுதின காகித மெல்லாம் கோந்து தடவாமல் மொகாபண்ணி சந்தா சாயபு மகலமுசுழ்றி, ரகோபண்டிதர் வசம் கொடுத்தோம். மமு தல்லிகான் பேருக்கு உம்முடைய தம்பி காரிய நிமித்தியம்

சாத்தாருவுக்கு எழுதின காகிதங்கள் உம்மண்டை அனுப்பு வித்தோம். நீர் சீக்கிரமத்துக்கு ரவாணுபண்ணி யும்முடைய தம்பியண்டைக்குச் சேர அனுப்பச்சொல்லியும் உம்முடைய தம்பியை அழைக்கிற காரியத்திலேயிருக்கச்சொல்லியு மிப்படி யாகக் காகிதமெழுதி ரகோபண்டிதர் கையிலே கொடுத் தனுப்புவித்தோம். இதல்லாமல் துரையவர்கள் முகமுகமாய்ச் சொன்னதென்னவென்ருல் ரகோபண்டிதர் போய் சந்தாசாயபு பெண்சாதிக்குச் சொல்லச் சொன்னதும், மமுதல்லிகானுக்குச் சந்தாசாயபு பெண்சாதியை எழுதியனுப்பச்சொன்னதும், அன் வருதிகானுக்குச் சரீரம் லகுவில்லை. இரண்டு பிள்ளைகளும் பவுஞ்சுடனே சென்னப்பட்டணத்தண்டையிலேயும் புதுச்சேரி மார்க்கமாகவுமிருக்கிருர்களிந்தச் சமயத்திலே மமுதல்லிகான் பவுஞ்சுமற்றது வைத்து ஆற்காட்டிலே போய்விழுந்து, எசமான் விருத்தக்கிழவனைப் பிடித்துக் காவல்பண்ணிக் கட்டிக்கொள் ளச்சொல்லியும், இதற்கு மருந்து குண்டும் மாயே சிப்பாய்கள் சிறிது சொல்தாதுகளிதுகளெல்லாம் நாம் மற்றது பண்ணு கிருேமென்று இந்தப்படிக்கு வேலூர் மூர்த்திசல்லிகான் தக்கா சாயபையுங்கூட அனுகூலம் பண்ணிக்கொண்டு நடத்தினுல் நடந்தேறிப்போமென்று மிந்தப்படி காலதாமதமில்லாமல் நடத்தச் சொல்லியும் எழுதியனுப்பச் சொன்ஞர். இதற்கு முன் மமுதல்லிகான் எழுதின காகிதத்திலேயும் உங் கள் ஆசிரு உண்டானுல் ஆற்காட்டு சுபைகட்டுகிருேம் என்று எழுதினபடியினுலே காகிதத்திலே எழுதாமல் வாய் விசேஷ மாய்ச் சொல்லி, சந்தாசாயபு பெண்சாதியைக் கொண்டு எழு தச்சொன்னது. இதிலே நடந்த விசேஷம் ரொம்பவுண்டு. காரிய மென்னமோ அதுமாத்திர மெழுதினேன்: மற்றப்படி அதிசயமான காரிய மொன்றுமில்லை.

இற்றை நாள் பத்து மணிக்குச் சென்னப்பட்டணம் குவர்னதோர் மேஸ்தர் மாசு என்பவர் இவ்விடத்திலே வந் திருக்கிருர்களே அவருடைய குமாரன் ஐந்தாறு வயதுள்ள பிள்ளை. அதற்கு வலிகண்டு இரண்டு முழியும் பிதுங்கி வெளியே வந்தது. அதன்பேரிலே யவர்கள் பட்ட தாபந்தி எழுதி முடியாது. அப்போது இவ்விடத்துக் குவர்னதோர் முசே துய்ப்ளேக்சும் அவர் பெண்சாதியும் அந்தச் சேதி கேட்ட வுடனே, அந்தக்ஷணமே போய் விசாரித்தார்கள். வைத்தியனை

அழைப்பித்து அங்நேர மதுக்குச் சிகிச்சை மற்றதெல்லாம் நடப்பித்து அவர்களுக்குத் துக்கோப சமனுகத்தக்கதாக ரொம்பவும் தெரியப்படச்சொல்லி, ஒரு சாமபரியந்திரமிருந்து சற்றுச் சுவஸ்தமானபிற்பாடு புறப்பட்டு வீட்டுக்கு வந்தார்கள்......

ஆனுல், லோகத்திலே இடறின காலிலே இடறுமென்று சொல்லுவார்களே அதுவும், இக்கட்டு வந்தாலும் பரம்பரையாய் வருமென்று சொல்லுகிருர்களே அதுவும் அபத்தமல்ல, வெகுசா பார்த்தது முண்டு. ஆனுல், நன்ருயிருந்தவர்களுக்கு இக்கட்டு வரப்பண்ணலாகாது (தெய்வம்) அப்பால் மனுஷனுலே செய்யவேண்டியதென்ன? அனுபவித்துத் தீரவேணும். சுவாமிக்கா சித்தம் திரும்பவேண்டும்.

1746 ஆ டிசம்பர் மீ 6 உக்ஷ அக்ஷய ஞு கார்த்திகை மீ 24 உ மங்களவாரம்

இற்றைநாள் காலத்தாலே முசியே குவர்னதோர் அவர்களிடத்திலே போனவிடத்திலே சந்தா சாயபு அவர்கள் மகள் குமாஸ்தா ராகோ பண்டிதர் துரையண்டைக்கு வந்து உசேன் சாயபு அவர்கள் தங்கள் பீபீசாயபு அவர்களுக்கு அனுப்பின காகிதமும் அல்லி தோஸ்துகான் மகளுக்கு அனுப்பின காகிதம் கொண்டுவந்து படித்துக்காண்பித்துச் சொன்னதென்னவென்ருல்: உசேன்சாயபு அவர்கள் புதுச்சேரியின் பேரிலே ரொம்ப கலாபம் நடக்கும், அதனுலே அதிலேயிருக்கிற உங்களுக்கு ரொம்ப வருத்தம் வருமென்றும், அல்லிதோஸ்துகான் மகள் சென்னப்பட்டணத்திலிருந்து புறப்பட்ட அவஸ்தை, அவஸ்தையல்ல. அதைப்பார்க்கிலும் நூறு பங்கு அதனமாய்ச் சம்பவிக்குமென்றும் அப்போது சருவசோபானமுந்தோற்றுவிட்டுக் கிலேசப்படவேண்டியிருக்குமென்றுமிப்படி பின்னையும் புதுச்சேரி கலாபம் எப்படி பயங்கரமாயெழுதவேணுமோ அப்படி எழுதி, ரஞ்சன் கடை கோட்டை செவுகல் மேட்டுப்பாளையம் இது முதலாகிய இடம் வந்து தம்முடைய ஆதினத்திலேயிருக்கிறது, அதிலே வந்திருக்கலாம் என்றும் அல்லவென்று வராமலிருந்தால் சருவசோபானமும் போக்கடித்துக்கொண்டு மெத்த அவஸ்தைப்படுவீர்களென்றும் நான் பந்துவானபடியினுலே எழுதினேன் என்றும் எழுதின

காகிதவயணம் படித்துத் துரையவர்களுக்குச் சொன்னவிடத்திலே படேசாயபு மகளுக்குமிப்படிதானு எழுதிவந்திருக்குது என்று கேட்டார். ராகோ பண்டிதர் சொன்னது: இப்படிதான் எழுதிவந்தது. இப்படியேதான் எழுதினுல் ஆர் மனது பேதியாது. ஆகிலும் எங்கள் மனது பேதிக்கிறதில்லே. படேசாயபு மகலிலே இந்தச் சாடையின்பேரிலே தட்டுமுட்டுகள் அப்புறம் தாண்டாமல் வாசற்படி மற்றதுக்குச் சொல்லி எப்படி பத்திரமாய் பார்க்கவேணுமோ அப்படி பார்க்கச் சொன்னுரா? எங்கள் பீபீ சாயபு என்று சொன்னுர். அதற்கு நாங்களும் பத்திரமாய் விசாரிக்கிருேம். நீங்களும் விசாரித்துக்கொள்ளுங்கோளென்று சொல்லி, அப்பால் துரைபென்னேயழைத்துப் படேசாயபு வீட்டண்டையிலே அதற்கேற்ற மனுஷரைப் போட்டு எப்படி விசாரித்துக்கொள்ளவேணுமோ அப்படி விசாரித்துக்கொள்ளென்று சொல்லி, அப்பால் உசேன் சாயபு இந்த மூன்று வீட்டுக்காரரையும் எப்படியுமழைப்பித்து உள்ள காசை சுற்றுகிற நிமித்தியம் இந்தக் கலாபத்தைக்கூட உண்டாக்கிக்கொண்டிருக்கிருனென்று இவன் பொல்லாதவன் என்றும் சொன்னுர். அதற்கு நான் சொன்னது: முன்னே இந்தக் கலாபம் ஆரம்பித்தபோதுதானே உசேன்சாயபு சென்னப்பட்டணத்தாருக்கும் மற்றதாய் நடத்துகிருனென்றும் சொன்னதற்கு நீங்களவனேத்தொட்டு அப்படி நடவாதென்று சொன்னீர்களோ? அதற்கு நானினிமேல் காரியம் வெளிப்படுத்துமென்று சொன்னேனே, அது இப்போது மெய்யாச்சுதென்று சொன்னதற்குத் துரை இருந்துகொண்டு, இவன் காகிதம் மெத்த உபசாரமாய் எழுதுகிருனே, இவனேத்தொட்டு நடவாதென்றிருந்தேன். இப்போது வெளியாச்சென்று சொல்லி, நல்லது சுவாமி இருக்கிருர் என்று சொன்னுர். அன்வருதிகான் மகன் மாபூசுகானுக்குத் தம்பி மமுதல்விகான் எழுதின காகிதத்துக்குப் பதில் காகிதம் எழுதியனுப்ப வேண்டாமாவென்று கேட்டேன். என்ன எழுதலாஞ் சொல் என்று கேட்டார். அதற்கு நான் சொன்னது : பின்னேயொன்றும் எழுதப் போகாது. அவன் எழுதின காகிதத்திலே உங்கள் நினைப்பு எழுதுவித்தால் அந்தப்படி நடக்கிறேனென்று எழுதினுனே பதிலுத்தரவு. அவனே ரொம்ப ஸ்தவுத்தியமாய் எழுதி எங்கள் நினேப்பு உங்கள் சிநேகங் கோரி இருக்கிருேம். சிநேகம் விருத்தியாய் நடத்துமென்றும் சனங்கள் உபத்திரவப்படாமல் சுகப்படுத்து

மென்றும் எழுதுகிறதேயல்லாமல் பின்னை ஒரு விதமாய் எழுதப் போகாதென்று சொன்னதற்கு, மெய்தான் அந்தப் படிக்கு எழுதியனுப்பு என்று உத்தாரங்கொடுத்தார். அப்போது வந்த அரக்காரர்கள் வந்தவர்கள் பேருக்கு ஐந்து ரூபாய் விமுக்காடு கொடுத்தனுப்பினுல் அவர்களிவ்விடத்திலே சொல்தாதுகளிருக்கிறதற்கும் மருந்து குண்டுகளிருக்கிறது இவ்விடத்தில் இருக்கிற பந்தோபஸ்துகள் எல்லாம் பின்னையும் கொண்டாடி விஸ்தரித்துச் சொல்லுவார்கள் என்று சொன்னதற்கு, மெய்தானந்தப்படிக்குக் கொடுத்தனுப்பு, காகிதமும் எழுதியனுப்பென்று சொன்னுர். அந்தப்படிக்கு அன்வருதிகான் மகன் மகம்மதல்லிகான் பேருக்குக் காகிதமும் எழுதிக்கொடுத்து, அரக்காரர்களிரண்டு பேருக்கும் பத்து ரூபாய் கொடுத்தனுப்புவித்தேன்.

பதினைந்து காளாய் துரை சொல்தாதுகளையும் மாயே சிப்பாய்களையும் அரியாங்குப்பம், அழிசபாக்கம், பின்னையும் அப்பால் இரண்டு நாழிகை மட்டுக்கும் தூரம் போய் வரச் சொல்லி, அப்பால் கூடப்பாக்கம், வழுதாவூர், திருவக்கரை அதற்கு நூறு பேர் மட்டுக்கும் போய்வரச் சொல்லியும், வடக்கே காலாபேட்டு மட்டுக்கும் நூறு பேரை போய் வரச் சொல்லுகிறது மிந்தப்படியாய் நடத்திவந்தபடியினுலே இந்தக் கோள் வெளியெல்லாம் ஏகமாய் ஆயிரம் சொல்தாதுகள் புறப்பட்டுத் திரிகிருர்களென்று கோன் பிறந்து, எங்கேயிருந்த அமுல்தாரர், எங்கேயிருந்த நாட்டார் அவ்விடங்கள் விட்டு அப்பால் காதவழியுமிருகாதவழியும் இந்தடுக்கிலே கோட்டை ஸ்தளங்கள் போய்ச் சேர்ந்தவர்களும், காடும் பாளையப்பட்டுகளாயிருக்கிற இடம் போய்ச் சேர்ந்தவர்களும் இந்தப்படிக்குச் சுற்றுக்கு முக்காதவழி தூரம் துலுக்கருக்கும் நாட்டாரும் பெலத்த குடியானவர்கள் கூடப் புறப்பட்டுப் போய்விட்டது மல்லாமல் அப்பால் பயிர்தாக்ஷி உண்டாயிருக்கும் அத்துடனே கூட மழையுமில்லாததினுலே பயிருடனே சேர்ந்தது சாங்கமாய் அழிந்துபோச்சுதென்று சொல்லிக்கொள்ளுகிருர்கள். பறங்கிப்பேட்டையிலே யிருந்தவர்களானுல், வர்த்தகர், குடிகள், தாமும் பறங்கிப்பேட்டையை விட்டுச் சிதம்பரம் போய்ச்சேர்ந்தார்கள். இந்த அதிர்செஞ்சி ஆற்காட்டிலே கூட இருந்தார்களே வெள்ளைக்காரர், அதோவந்தார்கள் என்று சொல்பிறந்திருக்கிறதும்,

துலுக்கர் தட்டுக்கெட்டுத் தடுமாறுகிறதும் சொல்லிமுடியாது. இப்படியிருக்க, நம்முடைய ஊரிலேயிருக்கிறபேர், செட்டிகள் கோமுட்டிகள் பின்னையுஞ் சிறிது குடிகள், துலுக்கர் வந்து மேல் பாரிசத்திலே முற்றுகை போடுகிறார்கள். கடலின்பேரிலே இங்கிலீசுக்காரர் வந்து சண்டை போடுகிறார்களென்று அவர்கள் பயந்து தட்டுமுட்டுகளை வெளியே அனுப்பினவர்களும், குஞ்சு குழந்தைகளை வெளியே அனுப்பினவர்களுமவர்களை வெகுதூரம் யோசனைபண்ணிக்கொண் டிருக்கிறார்கள். காலம் நடக்கிற சேதியறிந்தும் இவர்களுடைய செயகாலம் ஆனபடி சென்னப்பட்டணம் வெள்ளைக்காரன் பட்டணமாயிருந்தும் மனுஷர் சரவில்லாமல் சுனியாசமாய் பட்டணம் வந்தது தெரியாமல் சனங்கள் பிரமிக்கிறார்கள். அப்பால், சுபாகிரிபண்ணுகிறவர்கள்கூட வந்து தோற்று ஓடிப் போனதைப் பார்த்தால் தெரியாதா! ஆனாலும் சனங்கள் அத்தனை தூரம் யோசனைபண்ணத்தக்கனவர்கள் அல்லாததினால் வெளியே போகிறார்கள். இனிமேல் விசிதமாய் தெரியும் சகல சனங்களுக்கும்.

*1746* ஆ டிசம்பர் மூ 7 உ க்கு அக்ஷய ஹு கார்த்திகை மீ 25 உ புதவாரம்.

இற்றைநாள் துரைகள் கோன்சேலியேர் கூட காலத்தாலே கோவிலுக்குப்போய் பூசைகேட்டு வந்து கோன்சேல் கூடி இரண்டு மாசத்தின்போது நம்முடைய வீட்டுக்கு எதிரேயிருக்கிற மிஸ்ஸியோனேர் கோவிலிலே இரண்டுபேர் திருடி ஒருத்தன் அகப்பட்டு ஒருத்தன் ஓடிப்போனது, அகப்பட்டவனை இற்றைநாள் கோன்சேலிலே தீர்த்து முத்திரைசாவடிக்கு எதிரே போட்டிருக்கிற தூக்கு மரத்திலே போடத்தக்கதாகத் தீர்த்தார்கள். அந்தப்படிக்குச் சாயங்காலம் இந்தரை மணிக்குக்கொண்டுபோய்த் தூக்கி ஆறுமணி அடித்தபிற்பாடு இறக்கிக்கல்லறையிலே கொண்டுபோய்ப் புதைத்தார்கள்.

*1746* ஆ டிசம்பர் மீ 8 உ க்கு அக்ஷய ஹு கார்த்திகை மீ 26 உ பிரகஸ்பதி வாரம்

இற்றைநாள் ஆற்காட்டிலேயிருந்து வக்கில் சுப்பய்யன் அனுப்பின காகிதமும் முசே கேஞ்சாம் அனுப்பின காகிதமும்

துரைக்குக்கொடுத்து வக்கில் சுப்பய்யன் காகிதச்சேதி சொன்ன வயணம்: நபாபு அன்வருதிகான் சாயபுக்கு நித்தம் ஐம்பது அறுபதுதரம் பேதியாகுதென்று முன்னே பார்த்த பரியாரியை வேண்டாமென்று வேறே பரியாரியையழைத்துக்கொண்டதாக வும், மருட்டியர் கபுறு சுறுக்காயிருக்குதென்றும், அவர்கள் வக்கில் கிருஷ்ணுசிநாயக்கனுக்கு எழுதிவந்ததாகவும், மமு தல்லிகானை மிஞ்சிப் போகவேண்டாமென்று எழுதினதாகவும், மாபூசுகானுக்கும் அப்படிதான் எழுதினது. அவன் கேளாமல் மிஞ்சி ஸ்ரீபெரும்புத்தூர் விட்டுக் கிழக்கே காதவழி போன தாய்ச் சேதி வந்தது என்றும், வெள்ளைக்காரரை இந்தக் காரியம் தீர்ந்தாலேயல்லாமல் உசேன் சாயபு நினைப்பு விடுகிற தாய் இருக்கவில்லை என்றும் மகம்மது சரீபு என்கிற சமேதாரன் மூசே புரீ மகனை அப்பாலே கட்டத்தின்பேரிலே கொண்டுபோகிற கபுறு இருக்குதென்றும் இது முதலான சேதியெல்லாம் துரை அவர்களுக்குச் சொன்ன விடத்திலே உசேன் சாயபைத் தொட்டுதான் இந்த அட்டி அவர்கள் குமஸ்தா நாகோசி பண்டிதனுடனே சொல்லச்சொல்லி அவனைக்கொண்டு எழுதச் சொன்னது என்னவென்றால், இவர் எங்களவர்கள் மூன்று பேரும் அநியாயமாய்ப் பிடிபட்டவர்களை நபாபு அன்வருதிகான் அவர்களுக்குச் சொல்லி, காவலிலிருந்தவர்களை விடுதலைபண்ணி, தம்முடைய மேல் வீட்டின்பேரிலே வைத்து, அவர்களுக்குக் கட்டில், மெத்தை, தலைக்காணி, சாப்பாடு, பழ வகைகள், ஒரு நாளைக்கு மூன்றுதரம் விசாரிக்கிறதிலே அழைத்துக்கொண்டு, கண்டு பேசுகிறதிலே தாழ்த்தியில்லை. அனுப்புவிக்கிறோமென்று சொல்லுகிற பேச்சிலே தாழ்த்தியில்லை. அனுப்புகிறதுமாத்திர மில்லை. அவர்கள் பண்ணின சமயத்துக்கு நாங்கள் ரொம்ப பாத்தியமாயிருக்கிறோம். அவர் அனுப்பாம லிப்படிபண்ணு கிறது ரொம்ப ஆச்சரியமாயிருக்கிறது. நவாபுக்குக்கூட இவர் களைத்தொட்டுப் பிரயோசனமென்ன? விட்டுவிடச் சொன்ன தற்குக்கூட இவர் தடைபண்ணிக்கொண்டிருக்கிறார். அந்த மூன்று பேரையும் சென்னப்பட்டணத்திலே சண்டையிலே செத்துப்போனதாய் எண்ணிக்கொள்ளுகிறோம் என்று சொல்லி எழுதச் சொன்னபடிக்கு அவருங் காகிதமெழுதி எனக்குக் காண்பித்து அனுப்பினர். வக்கில் சுப்பையனுக்கும் உசேன் சாயபுக்கும் சொல்லச்சொல்லி மேலே எழுதினபடிக்குத்தானே எழுதினது காரியம் அதுதான். பின்னையும் நாலு விசேஷம்

ஏற்றிதாக்ஷியுண்டாயிருக்கும். வெள்ளைக்காரருக்குப் படிக்கிற தற்குத் துரை கொடுத்த எட்டுப் புத்தகமனுப்புவித்தோம் என்று எழுதி புத்தகமும் காகிதமும் அங்கேயிருந்து வந்த சேவகர் கையிலே கொடுத்து அனுப்புவித்தேன்.

அப்பால் பதினொரு மணிக்குச் சந்தாசாயபு மகன் வந்து துரையைக்கண்டு பேசி லட்சம் ரூபாய் நீங்கள் கொடுக்கிறோமென்று சொன்னதற்கு அட்டி வராமல் கொடுக்கவேணுமென்று வந்து கேட்டு அதற்குத் துரையும் உங்கள் தகப்பனார் வருகிற கபுறு ஊர்ச்சிதமாய் எழுதி வந்தால் அப்படியே தருகிறோம் என்று சொன்னார். அவர்களும் மெய்தான், சுவாமியுடைய சித்தத்தின்படியே அவர் வருகிறாரென்று எழுதி வந்தவுடனே கொடுக்கவேணுமென்று கேட்டதற்கு அவசியம் தருகிறேன் என்று சொன்னார். அதற்கு நீங்கள் இப்போது சாத்தாராவுக்கு சாவுராசா முதலானபேர்களுக்கு எழுதின காகிதம் போய்ச் சேர்ந்தால் அவர்களுக்கும் பரவசம் உண்டாயிருக்கும். அதன் பேரிலே உங்களுக்குக் கீர்த்தியும் வருமென்றும் பின்னையும் உபசாரமாய்ச் சொன்னான். அதன்பேரிலே துரை சொன்னது: உங்கள் தகப்பனார் வரவேணுமென்று என்னாலேயான சர்வ பிரயத்தனம்பண்ணுகிறது தெரிந்திருக்கிறதே. ஆனாலுங்கள் வரவுகள் சமஸ்தமானபேரும் ஒருமித்து ஒரு கையாயிருந்து நடப்பிக்கச்சொல்லிப் போ. அன்வருதிகான் சாகத்தக்கதாகச் சமீபித்திருக்கிறபடியினாலே அவன் பிள்ளைகளும் பவுன்சும் சென்னப்பட்டணம் புதுச்சேரி பாரிசம் வந்திருக்கிறபடியினாலே உங்கள் பவுஞ்சும் நீங்களும் போய் ஆற்காட்டின்பேரிலே போய் விழுந்து அன்வருதிகானைப் பிடித்துக் காவலிலே வைத்துக்கொண்டு இதற்கொரு எசமான் ஏற்பட்டு ஆற்காட்டிலே இருந்து, அவ்விடத்திலேயிருந்து இரண்டு பவுஞ்சா இறங்கின இரண்டு பிள்ளைகள் பேரிலேயும் வந்து விழுந்தால் நாங்களும் இரண்டு பவுஞ்சாய் ஏற்பட்டுக் கீழண்டை வந்து அடித்தால் அவர்கள் பவுஞ்சு முறிந்து பிள்ளைகளிரண்டுபேரும் அகப்பட்டாகிலும் போவார்கள், விழுந்தாகிலும் போவார்கள். அப்பால், ஆற்காட்டு சுயராச்சியம் ஏகத்துக்குக் கட்டிக் கொண்டு நிசாமுக்கு உண்டான பணம் கொடுத்துவிடுகிறோம் என்று அதற்குத் தக்கதாய் எழுதினால் அவனும் கடிக்கமாட்டாத பாக்கு உத்தமதாமென்று உங்களுக்குத்தானே ராச்சியம்

பாவிபண்ணி, பணத்தை அனுப்பச்சொல்லி எழுதப்போகிறான். அந்தப்படிக்கு அனுப்புவிக்கலாமென்று சொன்னார். அதற்குச் சந்தாசாயபு மகன் உங்கள் தயவினாலே அப்படித்தான் நடக்கப் போகிறது. இப்போது அப்படி நடத்துகிறவனாய் உத்தியுத்தனாக முரத்திசல்லிகானிருக்கிறான் என்று சொன்னான். அதற்குத் துரை இருந்துகொண்டு முரத்திசல்லிகான் நினைப்பு என்ன? சந்தாசாயபை அழைத்து வைக்கிறதாய் யோசனைபண்ணி இருக்கிறானா? தானா இருக்கிறதாக யோசனை பண்ணியிருக்கிறானா? என்று கேட்டார். சாயபு சாதா சொன்னது: தான்தானே ஆக்கிரமித்துக்கொள்ளுகிறதாய் யோசனைபண்ணி இருக்கிறானே யல்லாமல் பின்னை ஒருத்தரை வைக்கிற யோசனை பண்ணவில்லையென்று சொன்னான். அதன் பேரிலே அல்லிநக்கி சாய்பு.... ... ... ... ... ... ... ...

1746 ஆ டிசம்பர் மீ 10உ க்ஷய ௵ கார்த்திகை மீ 28உ சனிவாரம்

இற்றைநாள் காலத்தாலே டபால்காரன் கொண்டுவந்த கபுறு என்னவென்றால்: மூசே பரதி சென்னப்பட்டணம் விட்டு இப்போது திருப்போரூர் தாண்டி வருகையிலே மாபூசுகான் பவுஞ்சு ஐந்நூறு குதிரையும், ஆயிரத்தைந்நூறு ஸ்தோமமும் வந்து சுற்றிக்கொண்டதாகச் சேதி வந்தது. அந்தச் சேதியை துரையுடனே போய்ச் சொன்னேன். இதிலே மகுதல்லிகான் செஞ்சியை விட்டுத் தேவனாம்பட்டணத்துக்குப் போகிறதாய் நேற்றையதினம் பவுஞ்சும் வரும் பயணப்பட்டதாகவும் தேவனாம்பட்டணமாக வரச்சொல்லி எழுதி, பிரைப்பின் சகாயத்தின்பேரிலே புறப்பட்டதாய் நம்முடைய சமாகாரன் எழுதியனுப்பினான். அந்தச் சேதியை துரையுடனே சொன்னதற்கு அவன் எவ்விடத்திலே வந்திறங்குகிறான், எதற்குச் செவ்வையாய் வருகிறான். அப்போதைக்கப்போது சமாசாரம் அழைப்பியென்று சொன்னார். அந்தப்படிக்குக் கும்பினீர் சேவகரிரண்டுபேரும் நயினார் சேவகரிலே நாலுபேரும் ஆக ஆறு பேரைப் பயணம் பண்ணியனுப்புவித்தேன். அப்பால் துரையழைப்பித்து ஒட்டகத்துக்குச் சாமான் குறைச்சலாய் இருக்கிறதெல்லாம் சீக்கிரமத்துக்கு முஸ்திப்புபண்ணி வையுமென்று சொன்னார். அந்தப்படிக்கு ஒட்டகக்காரரை

அழைப்பித்துக் கேட்டால் அவர்கள் சிறிது ஒட்டகத்துக்குச் சாமான்களில்லையென்று சொன்னார்கள். கோபாலய்யன் மகன் ராமய்யனை அவாலாயன்றி குறைப்பட்ட சாமான்களெல்லாம் பரசுராமப்பிள்ளையுடனே சொல்லியனுப்புவித்தேன். அப்பால் முன்ஷிதுபண்ணுவிக்கச்சொல்லச் சொல்லியனுப்புவித்தேன். அப்பால் துரையழைத்து வழுதாவூர் கில்லேதாரர் மமுதல்லி கான் வருகிறசேதி என்னவென்றால் ஒன்றும் சொல்லியனுப்ப வில்லை, அனுப்பாமல் போனார்களென்று கேட்டார். அதற்கு நான் சொன்னது: சேதி வந்தால் தெரியுமென்று சொன்னேன். அதற்குத் துரை இருந்துகொண்டு நாம் சிறிது சொல்தாதுகளை முரட்டாண்டிசாவடியிலே போயிருந்து வழுதாவூர் கோட்டையைச் சுற்றினாப்போலே வரச்சொல்லி அனுப்புகிறோமென்று சொல்லி அனுப்பச்சொல்லியும், அவர்களுக்கு ஏதாகிலும் ஆடு, பன்றி, கோழி தேவையாயிருந்ததற்கு உண்டான பணம் கொடுத்துவிடுவார்கள். அழைப்பித்துக் கொடுக்கச்சொல்லியும் சொல்லியனுப்பச்சொன்னார். அதற்கு முன்னே தொண்டமானத்தம் வேங்கடாசலய்யன் வந்து வழுதாவூர் கில்லேதாரனும் பச்சையப்ப முதலியும், ராமபத்திர செட்டியும், மமுதல்லிகான் பவுஞ்சும், இந்தப் பக்கமாய் வருகிறதென்று கபுறு இருக்குது. முன் திரிந்தாப்போலே நூறு சொல்தாதுகளை வழுதாவூரை கோட்டையைச் சுற்றினாப்போலே திரிந்துப்போனால் வருகிற மமுதல்லிகான் பவுன்சுக்கு மெத்த அச்சத்திலேயிருக்குமென்றும். நம்முடனே சொல்லி, துரையவர்களுக்குச் சொல்லச் சொல்லியனுப்பியிருந்தபடியினாலே துரையவர்களுக்கு அவர்கள் சொல்லியனுப்பின சேதியையுஞ் சொல்லி அதன்பேரிலே தொண்டமானத்தம் வேங்கடாசலய்யனை அழைப்பித்துத்துரையவர்கள் சொன்ன சேதியாம்படிக்குச் சொல்லி வழுதாவூர் கில்லேதாரனுக்கும் பச்சையப்ப முதலிக்கும் சொல்லச்சொல்லியனுப்புவித்தோம். அப்பால் துரையவர்கள் கிழண்டை பாரிசம் வரிசையிருந்தாப்போலே கொத்தளத்தின்பேரிலே ஏறிப்போகையிலே என்னுடனே சொன்ன சேதி என்னவென்றால்: தாசுமான் நாளை முரட்டாண்டி தண்ணீர்ப்பந்தலுக்குப் போகுது. அதுகளுக்குத் தீனி தட்டுமுட்டுச் சாமான்களெல்லாம் சின்ன பரசுராமனுடனே சொல்லியனுப்பினவை யென்று சொல்லிவிட்டு அவரப்பால் நடந்தார். அதன்பேரிலே

நான் பாக்குக்கிடங்குக்கு வந்து சின்ன பரசுராமனை அழைத்து அனுப்புவித்து அரியாங்குப்பத்துக்குப் போகிற தாசுமான்களுக்கும், முரட்டாண்டிசாவடிக்குப் போகிற தாசுமான்களுக்கும் தீனி தட்டுமுட்டும் சாமான்களும் அனுப்புவிக்கச்சொல்லச் சொல்லியனுப்பிவிட்டோம். அப்பால் சாயுங்காலம் எட்டு மணிக்குத் துரையவர்கள் வீட்டுக்கு வந்து பிற்பாடு என்னையழைத்து அனுப்புவித்துச் சொன்ன சேதி என்னவென்றால்: முசே பரிதி (M. Paradis) அண்டையிலேயிருந்து காகிதம் வந்ததென்று சொல்லி, அந்தக் காகிதத்தைப் பார்த்துப் படித்துக்காண்பித்துச் சொன்ன வயணமென்னவென்றால்: சென்னப்பட்டணத்திலேயிருந்து ஐம்பது பேர் சொல்தாதுகள் முப்பது பேர் சிப்பாயுடனேயும் முன் 26 உ வியாழக்கிழமை (8 உ டிசம்பர் மீ) ராத்திரி புறப்பட்டுத் திருப்போரூர் வந்து சேர்ந்து, அவ்விடத்திலேயிருந்து, மறுநாள் 27உ சுக்கிரவாரம் புறப்பட்டு இப்புறம் ஒரு நாழிகை வழி வந்தவுடனே அசரத்து நபாபும் மாபூசுகான் அவர்களுடைய ராணுவங்கள், ஐந்நூறு குதிரையையும், ஆயிரம்பேர் ஸ்தோமமும் கால்படையாக வந்து சுற்றிக்கொண்டார்கள். இதன்பேரிலே அவன் முப்பது சிப்பாய்களையுஞ் சேர்த்துப் பாளையத்தைச் சுற்றிவைத்து இந்த ஐம்பது பேர் சொல்தாதுகளுடனே புறப்பட்டு, தான் பல்லக்கைவிட்டுக் குதிரையின்பேரிலே ஏறிக்கொண்டு, துலுக்கரைத் துரத்திக்கொண்டு இவர்கள் துரத்தினவுடனே அவர்கள் இப்புறம் ஓடிப்போகிறதும் அவர்கள் ஓடிப்போன பிற்பாடு இவர்களிப்புறம் வருகிறதும் இந்தப்படியாக தள்ளுநோக்கமாக வந்து ராத்திரி சதுரங்கப்பட்டணம் வந்து சேர்ந்தோமென்கிறதாக எழுதியனுப்பின காகித வயணஞ்சொல்லி, ஆனால்......நல்ல சவுகரியவந்தனைபடியினாலேயும் சுவாமியுடைய கடாட்சம் இருக்கிறபடியினாலேயுமிவன் ஜெயித்துவந்து சேர்ந்தானேயல்லாமல் இல்லாவிட்டால் அவர்கள் நேசத்துடனே வந்து விழுந்ததுக்கும் மடிபபு வருமென்று சொல்லியும் எதிராளியாயிருக்கிறவர்கள் வசத்திலே கடிதத்துடனே திரண்ட பவுஞ்சுடனே வந்திறங்கி இருக்கிறமட்டுக்கும் இவனிப்படி தோடயத்துடனே வருகிறது தோன்றாமல் செய்தாய் என்று சொன்னார்கள். அப்பால் நாளைக்கு அவனுக்குச் சகாயமாயிங்கிருந்து தாசுமான் அனுப்புவிக்குறோமென்று சொல்லி ஆற்காட்டுக்கு உசேன் சாயபுக்குக் காகிதமெழுதச்சொன்ன வயணம்: நாங்களிந்த

மட்டுக்கும் நபாபு அன்வருதிகான் குமாரன் மாபூசுகான் அநியாயமாய் எங்களண்டையிலேயிருந்து தன்னைத் சந்தித்துத் தன் சேதி கேட்கவந்த ஸ்தானாதிபதிகளைப் பிடித்ததுமல்லாமல் தங்கள் சம்மதியின்பேரிலே நாங்கள் சென்னபட்டணம் சண்டைபண்ணி வாங்கின எங்கள்பேரிலே அநியாயமாய் வந்து சண்டைபண்ணினதுமல்லாமல் ... சென்னப்பட்டணத்துக்கும் புதுச்சேரிக்கும் போக்கு வருத்தாயிருக்கிற எங்கள் மனுஷரையும் அலாக்கு பண்ணவில்லை, நாங்கள் எந்தமட்டுக்கும் பொறுத்துப் பார்த்தாலும் அடங்குகிற சாடை காண்பிக்கவில்லை. இதல்லாமல் நீரும், உம்முடைய சமுசாரமும், பிள்ளையும், உங்கள் வமிசத்தாரும் எங்களைத்தொட்டும், எங்கள் வமிசத்தாரைத்தொட்டும் பெற்ற சகாயங்கள் மிதமில்லை. அப்படி நீரிந்தக் காரிய நிமித்தியமாய் ... ... ... மத்தியவிரதியாய்ப் பேசுகிறபடியினாலே இது எப்படியும் சமாதானமாகப் போவோமென்றும் யோசனைபண்ணி, நபாபு மாபூசுகான் பண்ணப்பட்ட அலாக்குக்கு எல்லாம் மனம் பொறுக்கப்பட்டதும் பொறுக்க நாளுக்குநாள் அபிவிர்த்தியாய்ச் சண்டையும் கலாபமும் அதனமாகுதேயல்லாமல் தணியவில்லை. இப்போது சுபாகிரி பண்ணுகிற அன்வருதிகான் கூட்டங்கள் புதிதாய் வந்தவர்கள். அவர்களுக்கு எங்கள் பறங்கிக்காரருடைய சாடைகளும் நன்றாய்த் தெரியாது. அப்படிப்பட்டவர்களிடத்தில் நீர் வெகு நாளாய் இந்த ராச்சியத்திலேயிருந்து சகலவதிகாரங்களும் நன்றாயறிந்தவரானபடியினாலே கலாபம் விசேஷித்து நடவாது. யோசனைபண்ணினதற்கு நீங்கள் நடத்துகிறதும் நடக்கிற காரியமும் பார்த்தால் விரோதமாய்க் காணுது. இப்பவும அங்கே பிடித்த வெள்ளைக்காரர் மூன்று பேரையும் விட்டுவிட்டு இந்த வட்டாரங்களிலே யிருக்கிற குதிரைகளும் வாங்கிப்போனால் ஆச்சுது, இல்லாவிட்டால் ஆற்காட்டு மட்டுக்கும் நிபத்தம் பண்ணுவோ மினிமேல் நாங்கள் மனம் பொறுத்துப்பார்க்கத்தானில்லை யென்று மிதற்கும் பின்னையும் சற்றுக் கண்டிப்பா யெழுதியனுப்பச் சொல்லி உத்தாரங் கொடுத்தார். நல்லதென்று சொன்னதின்பேரிலே அப்பாலே என்னை அழைத்துப்போய் வேட்டவலம் பண்டாரி மகன் பெரிய அய்யா என்கிறவனை முன்னே துலுக்கர் பிடித்துப் போய்.........கோட்டையிலே துலுக்கனுக்கினையில் வைத்திருந்தபோது அவன் தப்பித்துக்கொண்டு ஓடிப்போய் தெற்கே

சேர்ந்த சிறிது ராணுவங் கூட்டிக்கொண்டு மறுபடி வந்து அவன் தகப்பனையும் தம்பியையும் பிடித்துக் காவல்பண்ணி, செஞ்சி சீர்மையெல்லாம் கலாபம் பண்ணுகிறானென்று சொன்னீரே அவர்கள் மனிதரை அனுப்பித்து இந்த மமுதல்லிகான் தண்டின்பேரிலே வந்துவிழுந்து கலாபம்பண்ணி, குதிரைகளைப் பிடித்து, மனுஷரை வெட்டிச் சிலர் றுபண்ணத்தக்கதாகப் பண்ணுவிக்கவேணுமென்று அதற்குத் தக்க எத்தனம் பண்ணிப்பாரென்று சொன்னார். நல்லதென்று வந்தேன்.

ஆனால், மூசே பரிதி சேதி, துரை சொன்னீரே நான் கேட்ட சேதி என்னவென்றால், நூறு சொல்தாதுகளும், நாற்பது ஐம்பது காப்பிரிகளும், முப்பது மாயே சிப்பாய்களும் சமேதாரன் சேக்கு அசேன் என்கிறவனும் கூட வருகையிலே சொல்தாதுகளுக்கும் மாயே சிப்பாய்களுக்கும் சிறிது காப்பிரிகளுக்கும் பேருக்கு ஆறு வேட்டு மருந்து குண்டுங் கொடுத்துச் சிறிது மருந்து குண்டும் ரஸ்துமெடுப்பித்துக்கொண்டு அவனவன் சென்னப்பட்டணத்திலே சம்பாதித்த தட்டுமுட்டுப் பணம் காசுப் புடவை சீலைகளும் எடுப்பித்துக்கொண்டு வரும்போது திருப்போரூருக்கு இப்புறம் வரும்போது அன்வருதிகானும், டிபவுன்சும், ஆயிரங் குதிரையும், இரண்டாயிரம் சேனையும், நாலு மூலையும் வந்து சுற்றிக்கொண்டு சண்டை பண்ணுகிறதிலே துலுக்கரிலே முப்பது நாற்பது குதிரைமட்டுக்கும் விழுந்தது. இவர்களிலே ஒரு மாயே சிப்பாய்க்கும் ஒரு காப்பிரியனுக்கும் காயமிந்தமட்டுக்கும் தள்ளு நோக்குமாய் சதுரங்கப் பட்டணம் வந்து சேர்ந்தோம். இவர்கள் பிறகே வந்துசேர்ந்த மூசே பரிதி சொந்தம் சிறிது பணம் காசும், சிறிது உயர்ந்த ரத்தினங்களும், தினுசுவாரி புடவைகளும் பெட்டியிலே போட்டுப் பிறகே கூலிக்காரரெடுத்து வந்தார்களாம். அந்தப் பெட்டியின் பிறகே ஆறேழு சொல்தாதுகளும் ஆறேழு மாயே சிப்பாய்களும்கூட வந்தார்களாம். அதை முகலாயக் குதிரைக்காரர் கொண்டுபோனதுமல்லாமல் பின்னையுஞ் சிப்பாய்களும் புதுச்சேரியிலிருந்து போயிருக்கிறவர்கள் சிறிது கொள்ளையிட்டதும் சிறிது கொள்ளையுடைமை வாங்கினதும் இதுகளிலே சிறிது பரிதி பிறகேகூட வந்தவர்கள் கொண்டுவந்ததில் கொஞ்ச நஞ்ச மாத்திரம் தப்பித்தது. மற்றது செத்துப் பின்னிடஞ்சி வந்ததெல்லாம் வழியிலே துலுக்கர் குதிரைக்காரர்

யின்று பறித்துக்கொண்டு, கொண்டுவந்தார்கள். அவர்களை ரெண்டு போட்டு துரத்திவிட்டதாய்ச் சேதி கேட்டேன். மூசே பரிதியது போனது பதினாயிரம் வராகன்மட்டுக்கு உண்டென்று சிறிதுபேர் சொன்னார்கள். கூட வந்தவன் ஒருத்தன் சொன்னது, பத்துக்குமேல் உண்டென்று சொன்னான். அநியாயார்ச்சிதம் வித்தம் அஷாளாவின் சியத்தி என்று எப்படி சம்பாத்தியமோ அப்படி போச்சுது. அது பதினாயிரம் ஆகட்டும், இருபதினாயிரம் ஆகட்டும், நூறு வராகன்மட்டுக்கும் சரி. வெகு பேர் அவனவன் எத்தனை கஷ்டப்பட்டு சம்பாதித்தானோ இந்த உடைமையைப் போக்கடித்துக்கொண்டாப்போலே, எப்படி அவனுக்குந் திகிலிட்டுக் கிலேசப்பட்டானோ அந்த நெருப்பு நிரம்பி இருக்கப்பட்ட உடைமையை இவன் கொண்டுவந்து வீட்டிலே வைத்தால் அந்த நெருப்பு இவனுக்குப் பழயதாகி இவன் சம்பாதித்திருக்கிறதைக்கூட பஸ்மம் பண்ணாதே போமா? அதற்குத் திருஷ்டாந்தமாக, முன் புதுச்சேரி கப்பல் மணிலாவுக்குப் போய்வருகிறதைப் பிடித்ததற்கு எத்தனைபேர் அங்கலாய்த்தார்கள். அந்த நெருப்பும் போய்த்தானே சென்னப் பட்டணத்திலே விழுந்து, சென்னப்பட்டணம் இந்தப்பாடாச்சுது. இது அப்படி லக்ஷம் பங்கு அதனங்கொண்ட நெருப்பு வந்து விழுகிறது என்னமாய்ப் போமென்று விவேகிகளாயிருக்கிறவர்கள் தெரிந்துகொள்வார்கள். அறியவேண்டியது. இந்தப் படிக்கு மூசே பரிதி வந்து சேர்ந்து, சதுரங்கப்பட்டணம் வந்து, வெளி ஈசுவரன்கோவிலைப் பிடித்துக்கொண்டு தட்டுமுட்டு, பெட்டிப்பேழை போனதற்குத் தாபந்தப்படவில்லை. அதனாலே நான்கு கண்ணாடி ஒன்றரை புருஷப்பிரமாணத்திலே கொண்டு வந்து கண்ணாடி போனதற்கு மெத்தக் கிலேசமாயிருக்குதென்று சொன்னானென்று வந்தவர்கள் சொன்னார்கள். ஆனாலிவன் வந்த மடிப்புக்குச் சுவாமி பிராஞ்சுக்காரருக்குச் செயகாலங் கொடுத்திருக்கிறபோது தப்பி வந்தானே யல்லாமல் இல்லாமற்போனால் வந்து சேரமாட்டான்.

இற்றைநாள் காலத்தாலே ஒன்பது மணிக்குத் துரை உசேன் சாயபுக்கு எழுதச்சொன்ன வயணப்படிக்குக் காகிதமெழுதுவித்துத் துரை படித்துக் காண்பித்து வக்கில் சுப்பய்யனுக்கும் ஒரு காகிதம் எழுதினது உசேன் சாயபுக்குக் காயித

வயணங்கண்டு எழுதி உசேன் சாயபுக்குத் தெரியப்படச் சொல்லி இப்போது உசேன் சாயபுக்கு எழுதின் காகிதத்துக் குப் பதிலாகக் காகிதம் வாங்கி, சீக்கிரமத்துக்கு அனுப்பச் சொல்லியும் வந்திருக்கிற வெள்ளைக்காரரை நன்ருய் விசாரித் துக்கொள்ளச் சொல்லியும் எழுதி கையிலே கொடுத்து...பய ணம்பண்ணியனுப்புவித்தேன். முன், கில்லேதாரர்ாளுக்கு... போது காவேரிபாக்கத்தானுக்கும், மாயிமண்டல துற்கத் தானுக்கும், கலவை கில்லேதாரனுக்கும், ஆரணியாருக்கும் எழுதின காகிதத்துக்குப் பதில் காகிதங்களிற்றைநாள் வந்தது அந்தக் காகிதத்தில் எழுதியிருந்த வயணம்: தாங்கள் நடப் பித்த காரியமும் நபாபு மாபூசுகான் நடப்பித்த காரியமும் வய ணமெல்லாம் நீங்கள் எழுதியனுப்பின வயணங்களெல்லாம் பார்த்துக்கொண்டோம். நடக்கவேண்டிய காரியம் நடந் தேறிப்போச்சுது. இனிமேலாகிலும் சுபாகிரி பண்ணுகிற வர்களுடைய சினேகம் வைத்து நடப்பித்துக்கொள்ளுகிறதே நல்லது என்றும், அப்படி நடப்பித்துக்கொண்டால் நிசாமவர் கள் கேட்டாலும் வெகு சந்தோஷப்படுவார்களென்றும் காவே ரிபாக்கத்தானும் கலவையானும் எழுதினுர்கள். மாயிமண்டலம் துற்கம் காதர் உசேன்கான் குமாரன் எழுதினது. ஆனுல் நீங் கள் பேச்சு தப்பினீர்கள் என்று. அதெப்படியென்ருல், இங்கி லீசுக்காரருக்கு விற்றுப்போட்டு மறுபடி பிரண்டுபோனீர் களென்றும் நீங்கள் வர்த்தகர் சுபாகிரியின் பேரிலே எதிர்த்துச் சண்டைபண்ணலாமாவென்றும், பின்னையுமிப்படி பலவித மாய் எழுதினுன். ஆரணிக்கோட்டையான் எழுதினதானுல் நீங்கள் சவுரியவந்த ரென்கிறதை நாம் முன்னங்கேட்டிருக் கிருேம். இப்பவும் நடந்த காரியத்தினுலேயும் தெரியுமென் றும், ஏற்கனவே சவுரியவந்தவர், அத்துடனே நியாயம்கூட உங்கள் பாரிசத்திலேயிருக்கிறபடியினுலே செயமுங்களுக்கே வந்தது. ஆனுல், சுவாமியினுடைய கடாட்சம் பரிபூரணமா யிருக்கிறபடியினுலே இன்னஞ் செய முங்களுதேயானுல் தேசங்கள் கெட்டுப்போகாதபடிக்கும் சனங்கள் கெட்டுப் போகாமல்படிக்கும் சுபாபுவுடனே சமாதானம் பண்ணிக் கொள்ளுகிறது நன்ருய்க் காணுது என்றும் நீங்கள் சர்வக்ஞர், உங்களுக்குத் தெரியாத காரியமொன்றுமில்லே. உங்களுடைய புத்திக்கு நாமா வெழுதுகிறது என்று உபசாரமா யெழுதி

ஞன். இந்த வயணமெல்லாம் துரைக்குச் சொன்னோம்' அப்பால் புறப்பட்டு வீட்டுக்கு வந்தேன்.

இற்றைநாள் பகலைக்குப் பிறகு மூன்று மணிக்குச் சதுரங்கப்பட்டணத்திலே வந்திருக்கிற மூசே பரிதிக்குக் குமுக்கும், இரு நூறு சொல்தாதுகளும், நூற்றைம்பது சிப்பாய்களும், குண்டுமருந்தும், ரஸ்தும் எடுப்பித்துக்கொண்டு போனார்கள். இதற்குப் பெரியதனமாகப் போனது கப்பித்தான் மூசே லத்தூர். ராத்திரிக்கு நம்முடைய சாவடியிலே போயிருக்கிறதாய்ச் சொன்னார்கள்.

இற்றைநாள் வந்த சேதி: மமுதல்லிகான் கக்கானூர்ப் பேட்டையிலே அவனும் அவன் தண்டுமிறங்கினதாகச் சேதி வந்தது.

இற்றைநாள் சாயுங்காலம் ஆறு மணிக்குச் சதுரங்கப்பட்டணத்திலேயிருந்து ஐந்து சலங்கு வந்தது. அந்தச் சலங்கிலே மாயே சிப்பாய்களுக்குச் சமேதாரன் சேக்கு அசேன் சென்னப்பட்டணத்திலே கொள்ளையிட்ட தட்டுமுட்டும் மூசே பரிதியது சிறிது தட்டுமுட்டும், மூசே பரிதி துபாசிகளும் சேவகர்களும் மாபூசுகான் சண்டையிலே பறித்துக்கொண்ட மாபூசுகான் நவபத்தும், இதுகள் வந்தன. சென்னப்பட்டணத்திலேயிருந்து வரும்போது நடுவே மாபூசுகான் பவுஞ்சு வந்து சுற்றிக்கொண்டபோது தப்பினது இந்தச் சலங்குகள் பேரிலே வந்ததாய்ச் சொன்னார்கள். ஆனால், மூசே பரிதியும், சொல்தாதுகளுமிந்தச் சலங்கும் பேரிலே வராதேபோனதென்னவென்று கேட்டால் இந்தச் சலங்கும் பேரிலே இறங்குகிறதாய் நெருங்கினபடியினாலே சலங்கு தள்ளுகிற பட்டணவர் ஓடிப்போய்விட்டபடியினாலே, அப்பால் மூசே பரிதியும், சொல்தாதுகள், மாயே சிப்பாய்கள், காப்பிரிகளெல்லாரும் இறங்கி இனிமேல் சலங்கின்பேரிலே போகிறதற்கு யுக்தப்படவில்லை என்று எற்றின தட்டுமுட்டுகளையும், துப்பாக்கிகளையும், தமிழ்ச் சேவகரையும் பயணம் பண்ணிச் சலங்குகளை அனுப்பிவிட்டு அவ்விடத்திலே சமீபத்திலேயிருந்த பறங்கிக்காரர் கோவில் ஒன்றை ஆசிரா பிடித்துக்கொண்டு அதிலே இருக்கிறார்களென்றும், ஒலாந்துக்காரன் தன் பெத்திரியை சாத்திக்கொண்டானென்றும்,

ஏனென்றால், தாங்கள் தீவானத்துக் கிராமத்திலே பெத்திரி கட்டிக்கொண்டிருக்கிறபடியினாலே தங்களாசிரா கொடுக்கப் போகாதென்று சொன்னானென்றுஞ் சொன்னார்கள்.

*1746* ஆ டிசம்பர் மீ *12* உக்த அக்ஷய ஸு மார்கழி மூ முதல் வ சோமவாரம்

இற்றைநாள் காலத்தாலே கேள்விப்பட்ட சேதி என்னவென்றால்: நேற்று ராத்திரி பனிரெண்டடித்து ஒரு மணி நேரத்துக்கு மூசே பரிதி காகிதம் வந்ததாம். அதற்கு அந்நேரமே பதிலெழுதி (காகிதமெழுதி) ஒன்றரை மணி நேரத்துக்குப் பயணம்பண்ணியனுப்பினாரென்று சேதி கேட்கப் பட்டதை என்ன எழுதப்போகிறான். தான் புறப்பட்டு வரப் போகிறேன் என்று எழுதப்போகிறான். அதற்கு இவர் பதில் உத்தரவு இவ்விடத்திலிருந்து குமுக்கு வருகிறது. சுகமாய் வரலாமென்று எழுதப்போகிறாரென்று தோற்றுகிறது. மற்றப் படி விசேஷித்து எழுதப்போகிறதென்ன இருக்கிறது?

அப்பால், ஒன்பது மணிக்கு இமாம்சாயபு மகன் காகிதம் வந்தது. அந்தக் காகிதத்திலே எழுதியிருந்த வயணம்: தாங்கள் ஆற்காடு சேருகிறதற்கு முன்னே தானே வரச்சொல்லி எழுதியிருந்தால் அப்படியே வருவோம். மிஞ்சி ஆற்காடு சேர்ந்தபடியினாலே இனிமேல் கிறமேணு பார்த்துக்கொள்ளுவோம் என்றும், சென்னப்பட்டணம் வீடு கோவில்களை இடிக்கிறதை நிறுத்தக்கூடாதென்று எழுதினார்களோ தெரிய வந்தது என்றும் சென்னப்பட்டணத்திலே இருக்கிற தங்கள் தினுசு வெளியே கொண்டுபோகிறதற்குச் சென்னப்பட்டணம் கொம்மாந்தான்மாருக்குக் காகிதமெழுதி அனுப்பிவிடச்சொல்லியும், பதினாயிரம் ரூபாய்க்கு அப்துல் கரீம் முகாந்திரமாய் ரசீது அனுப்பினோமென்றும், அதற்குக் கோவர்த்தனதாசு குமாஸ்தா வசம் செலுத்தி ரசீது வாங்கிக்கொள்ளச்சொல்லியும் டங்காசாலை ருசுமு சம்மதி கணக்குத் தீர்ந்த பிற்பாடு குண்டூர் பாலி செட்டிவசம் செலுத்தச் சொல்லியும் இப்படியாக எழுதி வந்தது. இந்த வயணமெல்லாம் துரைக்குச் சொன்னோம். ரசீது வந்ததாஎன்று கேட்டார் வந்திருக்கிறது. கோவர்த்தனதாசு குமாஸ்தாவை விசாரித்து அதன் பிற்பாடு இதற்கு உத்தார

மெழுதி யனுப்பவேண்டியது தென்று சொன்னதற்கு, நல்லது விசாரித்துச் சொல்லென்று சொன்னார்.

இற்றைநாள் சாயங்காலம் ஐந்தரை மணிக்கு முசே பரிதி வந்து சேர்ந்தான். இவன் பிறகே வந்த சொல் தாதுகளையும், மாயே சிப்பாய்களையும், காப்பிரிகளையும் நம்முடைய சாவடியிலே விட்டுப்போட்டுவந்தான் இங்கேயிருந்து போன சொல்தாதுகளும் மாயே சிப்பாய்களும் முசே பரிதியை ஆச்சிக்காட்டுச் சாவடியிலே கண்டார்களாம். அவர்களையும் திருப்பிக்கொண்டு வந்து நம்முடைய சாவடியிலே வந்து, இராத்திரிக்கு இருந்து காலத்தாலே வரச்சொல்லிவிட்டு வந்தான். வந்தவன் முகம் பார்த்தால் உற்சாகமாய்க் காண வில்லை. கொஞ்ச தளத்துடனே வந்தவனை வெகுதளத்துடனே துலுக்கர் வந்து சுற்றிக்கொண்டதற்கு அவர்களையெல்லாந் துரத்தியடித்து வந்தவனுக்கு உற்சாகமில்லாமற் போவானே னென்று யோசனைபண்ணிப் பார்க்குமிடத்தில் அகப்பட்ட கிடங்கு சென்னப்பட்டணத்திலே துலுக்கர்வசமே போய் விட்டபடியினாலே அந்த விசாரத்தினாலே உற்சாகமில்லை யென்று யோசனைபண்ணினேன். இதல்லாமல் துரை முகமும் உற்சாகம் தப்பிதானேகண்டது அவன் கொண்டுவந்ததிலே துரைக்கு எவ்வளவாகிலுமிருக்கும், அந்தச்சேதி சொல்லியிருப் பானே. அதனாலே யிவருக்கு உற்சாகமில்லை யென்று யோசனை பண்ணித் தீர்த்தேன்.

அப்பால் ஆற்காட்டிலிருந்து வக்கில் சுப்பய்யன் அனுப் பின காகிதமொன்று வந்தது. அந்தக் காகிதச் சேதி யென்ன வென்றால்: முசியே இஸ்க்நுமிலே (M. Schonomille) பறங்கி மலையிலே பிடித்துக்கொண்டுவந் தவனை மாபூசுகான் ஆற்காட் டுக்கனுப்பினானென்று அவனைக் கொத்தவால் வசம் பண்ணி வைக்கச்சொல்லி நபாபு உத்தாரங் கொடுத்தாப்போலேயும், அதிலே சுப்பய்யன் உசேன்சாயபுக்குச் சொல்லி, முசியே கேற்றா முதலான மூன்றுபேருடனேகூடப் பிணைக்கத்தக்கதாகச் சொல் லிவித்து இஸ்தன்மேலே அழைப்பித்து முசியே கேற்சாமுடனே கூட உசேன்சாயபு வீட்டிலே வைத்ததாகவுமிவனுக்குக் கூட கட்டில் மெத்தை கொடுத்து மரியாதையாய்த்தானே வைத்துக் கொண்டிருக்கிறார்களென்றும், உசேன்சாயபு சென்னப்பட்ட

ணம் வீடு கோட்டையிலே இருக்கிறதை இடித்துப்போடுகிற தாய் இருக்குதாம். சென்னப்பட்டணம் கப்பித்தான் பேருக்கு இடிக்கவேண்டாமென்று காகிதம் வாங்கியனுப்பச் சொல்லிச் சொன்னுர் என்று மயிலாப்பூர் தஸ்தகிரிசாயபு அவர்களுடைய யது மயிலாப்பூர் சண்டையிலே கொள்ளை போனதும், அழைப்பித்துக் கொடுக்கவேணுமென்றும், உசேன்சாயபு சொன்னுனென்று இஸ்க்குமிலே (M Schonomille) சொத்தவால்சாவடியிலே போடாமல் உசேன்சாயபு வீட்டுக்கு அழைப்பித்து மூன் பேருடனேகூட வைக்கிறதற்குச் சத்தியாய் இருபத்தைந்து ரூபாய் செலவழிந்தது என்றும் இவர்களுக்கு விடுதலையானுல் பத்துப்பணம் விசேஷித்துக் கொடுக்கிறேமென்றும் அவரவருக்குச் சொல்லியிருக்குதென்றும், நிசாமன்மூலுக்கு அண்டையிலிருந்து ஐந்துபேர் குருசுபர்தாரும், ஒரு காயித்தனும் நபாபு அன்வருதிகானண்டைக்குப் பணத்துக்கு வந்தார்களென்றும், நபாபுக்கு மூன்னுக்கு இப்போது பேதிமட்டும் கட்டியிருக்குதென்றும் இவனுக்கு உத்தியோகம் தெரிந்ததென்று மிப்படியாக எழுதின சேதியெல்லாம் படித்துக்காண்பித்து, இராத்திரி எட்டு மணிக்குக் கபுறு சொன்னேம். அதற்குத் துரையிருந்து கொண்டு. இனிமேல் சண்டை பண்ணுகிறதேயல்லாமல் ஆற்காடு மட்டுக்கும் சுட்டு நிபாத்தம் பண்ணுகிறதேயல்லாமல் இனிமேல் மனம் பொறுத்துப்பார்க்கத்தங்கதில்லையென்றும், நாமெந்தமட்டுக்கும் மனம் பொறுத்துச் சமாதானமாய்ப் போவோம் என்று பார்த்தால் துலுக்கர் நாளுக்குநாள் கலாபம் விர்த்திபண்ணுகிருர்களென்றும் சொல்லிவிட்டுப் போவென்று தாம் சாப்பிடப்போனுர்.

**1746 ஆ டிசம்பர் மீ 13 உக்கு அக்ஷய ஞ மார்கழி மீ 2 உ மங்களவாரம்**

இற்றைநாள் காலத்தாலே மூசே பரிதிக்குக் குமுக்குப் போன சொல்தாதுகளும் மாயே சிப்பாய்களுங்கூடப் போயிருந்த படை ஆச்சிக்காடு மட்டுக்கும் போய் மறுபடி திருப்பிக்கொண்டுவந்து சேர்ந்தது. இது வந்த அரைநாழிகைக்கு மூசே பரிதி பிறகே வந்த படையும் சமேதாரன், சேக்கு அசேன் பல்லக்கிலே ஏறிக்கொண்டு மாபூசுகான் கையிலே மயிலாப்பூர் சண்டையிலே வாங்கின நிசானும் நவபத்தும்

பிடித்துக்கொண்டு ஏழுரை மணி நேரத்துக்கு வந்து சேர்ந்தார்கள். ஒன்பது மணி நேரத்துக்குத் துரையழைத்து அனுப்புவித்து வக்கில் சுப்பய்யனுக்குக் காகிதமெழுதி அனுப்புவிக்கச் சொன்னது என்னவென்று கேட்டால். சென்னப்பட்டணத்திலே உசேன் சாயபு வீடு இடியாதபடிக்கு எழுதியனுப்பச்சொல்லி உசேன் எழுதியனுப்பச் சொன்னதாக எழுதினதற்குப் பதில் உத்தரவு நாங்கள் வீட்டை இடிக்கவேணுமென்று நினைக்கவில்லை. துலுக்கர் பலவந்தமா யிடிக்கப்பண்ணினார்கள். அது எப்படி என்றால், அவர்கள் சண்டைபண்ணுமலிருந்தால் எங்களுக்கு வீட்டை இடிக்கவேண்டிய கவையில்லை. எங்கள் பட்டணத்துக்கு அழகாய்க் கட்டியிருக்கிற வீட்டை நாங்கள் தானே இடிப்போமாவென்று இப்படி இடிக்கத்தக்கதாக நீங்கள் செய்தீர்கள். இப்பவும் நீங்கள் இந்தச் சண்டையைச் சமாதானம்பண்ணி எங்கள் மனுஷரை அநியாயமாய்ப் பிடித்திருக்கிறவர்களை விட்டுவிட்டால் நாங்கள் வீடுகள். இடியலை நிறுத்துகிறோமென்றும், இதுவுமல்லாமல் தஸ்தகிரி சாயபு தட்டுமுட்டுப் போனது அழைப்பித்துத் தருகிறோமென்று உசேன் சாயபு சொன்னதற்குப் பதிலுத்தரவு எங்கள் மனிதர் மயிலாப்பூர் மாபூசுகான் அண்டையிலே கொள்ளையிட்டதாய் அபாண்டம்போட்டு அந்த ஊரிலேயிருக்கிற பள்ளி, பறை யின்னேயும் நானாசாதியும் சுற்றுப்பேட்டையிலே கிராமங்களிலே இருக்கிறவர்களும் தலைபட்டுக் கொள்ளையிட்டார்கள். அது உங்களுக்கும் நன்றாய்த் தெரியும் என்று உசேன் சாயபுக்கு இரண்டு சேதியுஞ் சொல்லச்சொல்லியு மிதல்லாமல் முந்தாம்நாள் எழுதின காகிதத்துக்குப் பதிலுத்தரவு சீக்கிரமத்துக்கு வாங்கியனுப்பச் சொல்லியும் இப்படியாக எழுதியனுப்பச் சொன்னபடிக்குக் காகிதமெழுதி வக்கில் சுப்பய்யனுக்கு அனுப்புவித்தோம்.

மூன் கொள்ளையிலே அகப்பட்ட ஒட்டகத்திலே பதினறு ஒட்டகம் கூட முசே பசீதி பிறகே வந்த தளத்துடனேகூட வந்தது.

இற்றைநாள் இரண்டு மணிக்குச் சென்னப்பட்டணத்து வர்த்தகன் அருணாசல செட்டி என்கிறவன் முசே துய்ப்ளேய்க்சு குவர்னதோர் அவர்களுக்கு ஒரு கடிதமெழுதியனுப்பினான்.

அந்தக் காகிதத்திலே வந்த காகிதத்தை என்னண்டைக்கு அனுப்புவித்து அதிலேயிருக்கிற வயணம் வந்து சொல்லச் சொல்லி, சேவகனுடனே சொல்லியனுப்பினர். அதிலே எழுதியிருந்த வயணம்: முசே துய்ப்ளேய்க்சு குவர்னதோர் சென்றால் அவர்களுக்குச் சென்னப்பட்டணம் அருணசல செட்டி எழுதிக்கொண்ட விண்ணப்பம். தாங்கள் வெகு நாளாக என்பேரில் பட்சம் வைத்து நடப்பித்துகொண்டு வாரீர் கள். அவ்விடத்துச் சாப்பாடு இவ்விடத்துத் தண்ணியுமாய் உங்களுடனே லேவாதேவி பண்ணிக்கொண்டு இந்தமட்டுக்கு மிருந்தேன். இந்தக் கலாபத்திலே நம்முடைய சிறிது போன தட்டு முட்டும், சிறிது வெள்ளித் தட்டுமுட்டும், செப்புக்குடத் திலே போட்டுப் புதைத்துக் கிடங்கிலேயிருந்தது. அந்தக் கிடங்கு இடிக்கிறபடியினலே அதை யெடுத்து வந்து வீட் டிலே வைக்கவேணுமென்று கொண்டுவந்தவிடத்திலே முசே பரிதீ மனுஷர் பிடித்துக்கொண்டுபோய்க் கோட்டையிலே வைத்து, புதுச்சேரி குவர்னதோர் உத்தாரம் வேணுமென்று சொன்னர்கள். தாங்களதைத் தயவுபண்ணி, அதைக்கொடுத்து விடச்சொல்லி முசியே பரிதிக்கு எழுதியனுப்புவிக்கச்சொல்லி எழுதியிருந்தது. அந்தச் சேதியைத் துரைக்குச் சொன்னதற் குத் துரை பதிலுத்தரவு எழுதச்சொன்னது: தானனுப்பின காகிதம் வந்து சேர்ந்தது. பார்த்துக்கொண்டோம். எல்லாவற் றுக்கும் தாமிவ்விடத்திற்கு வந்து கண்டுபேசினல் அப்படியே தம்முடைய மனது சந்தோஷம் பண்ணுவிக்கிறேனென்று எழுதி யனுப்பச்சொன்னர். அந்தப்படிக்குக் காகிதம் தமிழிலே யெழுதி துரை கையிலே கொடுத்தேன். நபாபு மகன் மமுதல்லிகான் பவுன்சு திருவதி போய்ச் சேர்ந்ததாய் ராத்திரி எட்டு மணிக்குக் கபுறு வந்தது. அந்தச் சேதி துரையுடனே சொன்னேன். அங்கேயிருந்து தேவனம்பட்டணத்துக்கு வருகுதா? என்னவென்று கேட்டார். தேவனம்பட்டணம் நாளையதினம் வருமென்று சொல்லுகிருர்கள் என்று சொன் னேன், குதிரை எம்மாத்திரமுண்டென்று கேட்டார். ஆயிரத்தைந்நூறு குதிரை யுண்டு, இரண்டாயிரம் ஹோமத்தமுண்டு (சேனை காலாட்படை), நூறு ஒட்டை உண்டு, ஆனை பதினைந்து இருபது உண்டு என்று சொல்லு கிருர்கள். இதல்லாமல் பத்தொன்பது பீரங்கி சின்னதும் பெரியதுமாய். ஒவ்வொரு பீரங்கி ஒவ்வொரு மாட்டின்

பேரிலே வருகுதென்று கபுறு வந்தது என்று சொன்னதற்குச் செஞ்சியிலேயிருந்து தேவனும்பட்டணத்துக்கு வராததற்குச் செவ்வைப் பாட்டையாய்ப் பாதிராப்பூலியூர், விழுப்புரம், பாகூர், தேவனும்பட்டணம் போகிறதைவிட்டு, பின்னையு முக்காதவழி சுற்றி மேலாகப் போய் திருவதி, பண்ணுருட்டி போய்ச் சேர்ந்தான் என்று சொன்னேன். ஏனென்றால் நம் முடைய சொல்தாதுகள் விழுப்புரமட்டுக்கும் திரிகிறார் கள். அவர்களெக்கா எக்கியாய் வந்து விழுவார்கள் என்று அவன் தண்டெல்லாம் நடுங்குதாம். அவன் ராத்திரி ஒரு கூடாரத்திலேயாகிலும் அரை நாழிகையாகிலும் தூங்கு கிறதில்லையாம். ஒரு கூடாரத்துக்கொரு நாழிகை நேரம் ராத்திரி முப்பதுமிப்படி திரிகிறானும். ராத்திரியிலே தூங்கியறியானும். இந்தப்படிக்கு இரவும் பகலும் அச்சத்துடனே எந்தவேளை பிராஞ்சுக்காரர் வந்து விழுகிறார்களோ என்று பயத்துடனே இருக்கிறான் என்கிற க்புறு சுறுக்கா யெல்லாரும் சொல்லு கிறார்களென்று சொன்னேன். அது மெய்தான். இவன் மெத்த பயந்தவனென்று சொன்னார்கள்.

இற்றைநாள் சாயங்காலம், நாற்பது நாளைக்கு முன்னே மாபூசுகான் எங்கள்பேரில் அநியாயமாய் ஸ்தானுதிபதியாய் வந்தவர்களைப் பிடித்து விலங்கு போட்டதுமல்லாமல் திரும்பி யும் சண்டைக்கு வந்து சண்டைபண்ணுகிறார்கள் என்கிற சேதி முதலான நியாயம் எல்லாம் கில்லேதாரர், சாகீர்தாரர் பேருக் கும் எழுதினபோது வந்தவாசி தக்கா சாயபுக்கும், சேத்துப் ப்ட்டு கில்லே மீர்சத்தல்லாகானுக்கும், வேலூர் மிருத்தி சல்லிகானுக்கும், சாத்துக்கடை கில்லே இராசத்துகான் குமாரன் இராசத்துகானுக்கும் எழுதின காகிதத்துக்குப் பதிலிற்றைநாள் சாயங்காலம் வந்தது. அதிலே எழுதியிருந்த வயணம்: வேலூரானும் சாத்துக்கடையானும் தாங்கள் எழுதின காகிதம் வந்துசேர்ந்து பார்த்துக்கொண்டு மிகுதியும் சந்தோஷமாச்சுது. அசரத்துகானும் நபாபு அவர்கள் நடப் பித்த காரியங்களும் நீங்கள் நடந்துகொண்ட சம்மதிகளும் சவிஸ்தாரமாய் எழுதினார்கள். அது பார்த்துக்கொண்டு மிகுதியுஞ் சந்தோஷமாச்சுது. ஆனால், நபாபு அன்வருதிகான் சாயபு அவர்கள் சிநேகமெண்ணி அவரநுகூலத்தின்பேரிலே நடந்துகொள்ளுகிறது என்று எழுதினார்கள்,

அப்பால் மீர்சத்து எழுதின காகிதத்திலே தாங்கள் எழுதின் காகிதம் பார்த்துக்கொண்டு மிகுதியுஞ் சந்தோஷ மாச்சுது. தாங்தளெழுதின காகிதம் விஸ்தாரமாய்ப்பார்த்துக் கொண்டு மிகுதியுஞ் சந்தோஷமாச்சுது. உங்களுக்கும் இங்கி லீசுக்காரருக்கும் ஆதியிலே சண்டையான மார்க்கமும் அது வந்த விதமும் எழுதியனுப்புவிக்கச் சொல்லியும் உங்களுக்கும் நமக்கும் ஏக கிரகத்தியமாயிருக்கிறபடியினாலே இந்தப்படி தானே முடித்துத் தீர்ந்து தயவுவைத்து நடப்பித்துக்கொண்டு வரவேணுமென்று உபசாரமா யெழுதினானேயல்லாமல் பின்னே யொன்றுங் காகிதத்திலே எழுதாமல்போன சேவகன் மணிய னென்கிறவனுடனேயும், பின்னையும் ஒருத்தன் பேர்விளங்க னுடனேயும் அந்தரங்கமாய்ச் சொல்லி, துரைக்குச்சொல்லி, துரைக்குச் சொல்லச்சொன்னது. நீங்கள் செய்தது நல்லவேலை செய்தீர்களிதைத்தொட்டு உங்களுக்குச் சாசுவதமான கீர்த்தி உங்கள் வமிசத்துக்கெல்லாம் வந்தது. இந்த அன்வருதிகான் பண்ணுகிறதெல்லாம் புருடர். இதைக்கொண்டு நீங்கள் யோசனை பண்ணவேண்டாம். இப்படிக்குச் சுபேதாரன் விரோதித்தவனை அடித்ததினாலே நிசாமன் முலுக்குப் பின்னை யும் சந்தோஷப்படுவாரென்று மிதனாலே உங்களுக்கு அதிசெய முண்டாயிருக்குமென்றும், நாமும் எழுதியிருக்கிறோமென்றும் அதற்கு நல்ல கபுறு வருமென்றும், அந்தக் கபுறைத்தொட்டுச் சந்தோஷமுண்டாகுமென்றும், பணத்தோடே சேர்ந்ததுக்கு இவர்களுக்குக் கொடுக்கிறதைச் செலவழித்துத் துரத்தினா லிதைத்தொட்டு மெத்தவு மேன்பாடுண்டென்றும் சருவ உத்த மனாகச் சமாதானப்படப்போகிறீர்களென்று மிப்படி பின்னை யுமிதற்கடுத்த விசேஷமாய்ச் சொல்லியனுப்பினான். இந்தச் சேதியும் தக்காசாயபு அனுப்பின காகிதச்சேதி. இவர்கள் மாபூசுகான் இப்படி நடத்துகிறான். அப்படி அநியாயம்பண்ணி னானென்று எழுதின காகிதத்துக்கு இந்தச் சாடையை விட்டு விட்டுத் தாங்களெழுதின காகிதம் பார்த்துக்கொண்டு மிகுதி யுஞ் சந்தோஷமாச்சுது. முன் நபாபு சாத்துல்லாகான் முத லான நவாயித்தருக்கும் உங்களுக்கும் நடந்த சினேகிதத்தின் பேரிலே திருஷ்டிவைத்து இப்பவும் நபாபு பார்த்து கூட்டத் தின்பேரிலே நீங்கள் வெகுசாய் தயவுபண்ணி சினேகம் அபி விர்த்தியாய் நடப்பித்துக்கொண்டு வருகிறபடியினாலே விசே ஷித்த மரியாதையுடனே சகல காரியத்துக்கும் உதவி ஒத்

தாசை பண்ணிக்கொண்டு நடப்பித்துக்கொண்டு வருகிற சமாசாரம் அப்போதைக்கப்போது கேட்டு எங்களுக்குள்ளேயிருக்கப்பட்ட சந்தோஷ மிதத்திலே யில்லே. ஆனபடியினாலே, சுவாமி மேன்மேலும் சகல செயமுங் கொடுத்துச் சகல மேன்பாடுங் கொடுப்பாரென்று எழுதியிருந்த வயணமெல்லாம் இராத்திரி பத்து மணிக்குத் துரைக்குச் சொன்னோம். அவருங் கேட்டு மிகுதியுஞ் சந்தோஷப்பட்டு நவாபித்தரை ஸ்தவுத்தியமாயும் அன்வருதிகானுக்குப் பயந்து காகிதத்தினாலே ஒரு சாடையாயெழுதினதும் விசேஷமாய்ச் சொன்ன சாடையும் சொல்லிக்கொண்டிருந்தார். இதல்லாமல் வழுதாவூர் கில்லேதாரர் மீர் உசேனுகான் எழுதின காகிதச் சேதி என்னவென்றால்: மமுதல்லிகான் வரும்போது சேத்துப்பட்டு வழியாக வந்து நாங்கள் புதுச்சேரி கோட்டையின்பேரிலே சண்டைக்குப் போகிறோம். போகிறவிடத்திலே ஆசிருவேணுமே வழுதாவூர் கோட்டை எங்கள் வசம் பண்ணவேணுமென்று கேட்டதாகவும், அதற்குப் பார்சாகில்லே. நிசாமன்முலுக்கு அவர்கள் சன்னது வந்தால் விடுகிறோமென்று சொன்னதாகவும், அதன்பேரிலே புதுச்சேரியாருடனே நீங்கள் கூட்டிக்கொண்டு எங்கள்பேரிலே ராசகாரியங்கள் பண்ணுகிறீர்கள் அல்லவா, நல்லது ஆகட்டுமென்றும், வழுதாவூர்க் கோட்டையை வாங்கினோமென்றும் சாகீரையெல்லாம் சப்தி பண்ணுகிறோமென்றும், கோபத்துடனே வருகிறாரென்றும் வந்தால் அவனைத் தொட்டு ஆகப்போகிறதென்னவென்று உங்களுக்கு இந்த துலுக்கரை செயிக்கத்தக்கதாகச் சுவாமி தைரியஸ்தராய் சவுரியாசவுரிய பல பராக்கிரமங்கள் கொடுத்திருக்கிறாரென்று மிது முன்னிலேயாய் உங்களுக்கு அதிக கீர்த்தி. இந்துஸ்தான் ராச்சியம்கூட உயுத்தத்துக்குள்ளே பிராஞ்சுக்காரரை செயிக்கத்தக்கனவர்களில்லே. அவர்களைப்போலே சவுரியவந்தரில்லே, இந்தப் பிராந்தி ராச்சியங்களிலேயும் விபோயிதத்திலேகூட இல்லேயென்றும் உம்மைத் தொட்டு உம்முடைய வமிசத்துக்கெல்லாம் கீர்த்தியாச்சுதென்று எங்கள் நபாபு பீர்சத்துல்லாகானுக்கும் உங்களுக்கும் பூர்வமாய் வரப்பட்ட மனசு கலந்த சினேகமானபடியினாலே எங்கள் கோட்டையை உங்களுடையதென்றும், உங்கள் காரியங்களெல்லாம் எங்களுடையதென்றும், இல்லாமல் முசியே பரிதிநூற்றியைம்பது பேருடனே வந்தவன்பேரிலே மாபூசுகான்

அண்ணன் மகன் அன்வார்கான் ஆயிரத்தைந்நூறு குதிரையுடனேயும், ஆயிரம் ஹோமத்துடனேயும் வந்து சுற்றிக்கொண்ட விடத்திலே என்ன மோசம் வருதோவென்றும், நமக்கு விகாரமாய் நாங்கள் சைதான்படியினலே சுவாமியைப் பார்த்து உங்களுக்குச் செயம் வரவேணுமென்று செபம் பண்ணி ஆசீர்வாதம் பண்ணினேம். அந்த ஆசீர்வாதப் படிக்குச் சுவாமி சகல செயமும் கொடுத்து முசியே பரீதி கொஞ்ச தளத்துடனே யிருந்தாலும் முகலாயத் தளம் விஸ்தாரமாய் வந்தபடியினலே அதையெல்லாம் முசே பரீதி அடித்துத் துரத்தி, சிறிதுபேரைக் கொன்று, சகல செயமும் பொருந்தி வந்தான். இது மொபாற்கு இருக்குதென்று இன்னுமநேகமாகிய சகல விஷயங்களும் சுவாமியுமக்குத் தயவு பண்ணி வைப்பாரென்று இப்படியாக எழுதியனுப்பின காகித வயணங்களும் படித்துக் காண்பித்ததற்குத் துரையவர்கள் ஒரு நாழிகை தேசகாலம் மீர்சத்தை ஸ்தவுத்தியம்பண்ணி அவருக்கு நாளைக்கு பதிலுத்தரவு எழுதியனுப்பு என்று சொன்னர். ராத்திரி பதினெரு மணி வேளையானபடியினலே அனுப்புவித்துக்கொண்டு வீட்டுக்கு வந்தேன்.

1746 ஆ டிசம்பர் மீ 14வ க்கு அக்ஷய ஞு மார்கழி மீ 3வ புதவாரம்

இற்றைநாள் காலத்தாலே மமுதல்லிகான் நேற்று ராத்திரி வந்து திருவீதியிலிருந்து பத்து நாழிகைக்கு நெல்விக்குப்பத்திற்கு வந்தானென்றும் கபுறு வந்தது என்று துரைக்குப் போய்ச் சொன்னேன். அப்பால் மத்தியானத்துக்குத் தேவனும்பட்டணம் குண்டுக்குள்ளே இருக்கிற மஞ்சகுப்பத்துக் கும்பினீர் தோட்டத்துக்கு வந்துகொண்டிருக்கிருனென்கிற கபுறு இருக்கிறதென்று சொன்னேன். அதற்குத் துரை இருந்துகொண்டு தேவனும்பட்டணத்தாருக்குத் தண்டு செலவுக்குக் கொடுக்கிறதற்குப் பணமெப்படி என்று கேட்டார். நாகப்பட்டணத்து ஒலாந்தாக்காரர் கொடுத்தனுப்புகிருர்களென்று சொன்னேன். நல்லது இன்னும் மனுஷரை அனுப்பித் தேவனும்பட்டணத்துச் சுற்றிலேயிருக்கிற கொத்தளத்திலே கோட்டையிலே இருக்கிற பீரங்கிகள், தமிழச் சேவகர், சொல்தாதுகள், சட்டைக்காரர், கூடலூரிலே இருக்கிறதுகள், இதுகள் வயணமாய்ச் சேதி

அழைப்பிக்கவேணுமென்று சொன்னார். அதற்கு நான் அழைப்பித்துவைத்திருக்கிறேன் என்று சொன்னேன். அந்தப்படிக்குப் பிரஞ்சு எழுத்திலே எழுதுவித்துக் கொண்டுவந்து கொடு என்று சொன்னார். நல்லதென்று சொன்னேன் நான் சொல்லாதுக்குமுன்னே தெரிந்து சேதியழைப்பித்து வைத்தேனென்று எப்படி என்று கேட்டார். இந்தக் காரியம் நடக்கவேண்டி இருக்கும்போது இதுகள் நீங்கள் கேட்பீர்களென்று அழைப்பித்த காகிதத்திலே எழுதிவைத்தேன் என்று சொன்னதற்குச் சந்தோஷப்பட்டுச் சிறிது ஸ்தவுத்தியமாய்ச் சொன்னார். என்னை ஸ்தவுத்தியமாய்ச் சொன்ன அப்பால் தேவனும் பட்டணத்துமேலே சண்டைக்குப் போகிறதற்குச் சொல்தாது கப்பித்தேன்மார், ஒபிசியேல்மார்கள், இன்சின்கள் றுததினுந்துகன் (Lieutenants) முசே பரிதி ஆணை ஆக்கினையின் கீழ்...படிந்து நடக்கிறதில்லையென்று தகராறு பண்ணினார்களென்று கொமிசேல்பண்ணி, அப்பால் ஒபிசியேல்மாரை, கப்பித்தேன்மாரை, முசியே புரி, முசியே லத்நூர், முசியே பெலசான்சு முதலானவர்களை தனித்தனியே அழைத்துக்கொண்டு பேசுகிறதும், நாலுபேர் ரெண்டுபேரை அழைத்துகொண்டு பேசுகிறதும், அவரவருக்குச் சீர்மையிலே நடந்திருக்கிற வயணங்களும் அதற்குமுன் நடந்ததற்கு எழுதியிருக்கப்பட்ட லீவுருகளும் காகிதங்களும் காண்பித்துச் சமாதானம் பண்ணிக்கொண்டிருந்தார். என்னை யழைத்து நயினாருக்குச் சொல்லி அறுபது சேவகரும் அவனையும் பயணமாய் முஸ்தீதாயிருக்கச் சொல்லு. முசியே பரிதீ பிறகே வந்த ஒட்டகங்களுக்கெல்லாம் சாமான் முஸ்தீதுபண்ணி வை என்று சொன்னார். அப்பால் சாயங்கால வேளை வந்த சேதி யென்னவென்றால்: கும்பினீர் சேவகர் ரெண்டுபேரும, நயினார் சேவகர் நாலுபேரும் ஆக ஆறு பேருமிருக்கிறதினாலே நயினார் சேவகரில் ஒருத்தன் வந்து சொன்னது: மமுதல்லிகான் பிறகே ஆயிரத்தைந்நூறு குதிரை வந்ததென்றும், சின்னதும் பெரியதுமாகப் பத்தொன்பது பீரங்கி வந்ததென்றும், நூறு சகாலியென்றும், ஐந்நூறு துப்பாக்கிக்காரரென்றும், நூறு ஒட்டகமும் பத்து ஆனைக்குண்டென்றும், அப்துல் சலீல் (Abdul ealil) ஒரு ஆனையின்பேரில் ஏறியும், மமுதல்லிகான் ஒரு ஆனையின் பேரிலேறியும் இந்தப்படிக்குத் திருவந்திபுரத்திலே வந்து அங்கே இருந்து மஞ்சகுப்பத்துத் தோட்டத்தண்டைக்கு வந்த்விடத்

திலே தேவனும்பட்டணத்திலே யிருந்து சிறிது வெள்ளைக் காரரும் சின்ன துரை மேஸ்தர் குரோக்கும் (M. Croke) எதிர் கொண்டு போனதாகவும் அவர்கள் வந்து மஞ்சகுப்பத்துத் தோட்டத்திலே இறங்கினுப்போலே கோட்டையின்பேரிலே சிறிது பீரங்கி சுட்டதாகவும் மமுதல்லிகான் குண்டும் பிறகே செஞ்சியிலே யிருந்து கூடவந்த நாலு இங்கிலீசுக்காரர் ரதத்தின்பேரிலே வந்தவர்களும், சின்ன துரைகூட மமுதல்லிகானும் மஞ்சகுப்பத்துத் தோட்டத்திலே இறங்கி அவர்களுடைய பவுஞ்சும் அவர்களும் பெண்ணையாறு முதல் புதுச்சேரி வழி எல்லாம் இறங்கச்சொல்லி இடம் காண்பித்ததாகவும், அதன் பேரிலே மமுதல்லிகானிந்த வழி எவ்விடத்துக்குப் போகிற பாட்டை என்று கேட்டானென்றும், அதன்பேரிலே தேவனும் பட்டணத்தார், சென்னப்பட்டணம் புதுச்சேரிக்குப் போகிற மார்க்கமென்று சொன்னதாகவும், புதுச்சேரிக்குமிதுக்கும் எத்தனை தூர முண்டென்று கேட்டதாகவும், அதன்பேரிலே காதவழிக்குக் கொஞ்சம் குறைச்சலா யிருக்குமென்றும் சொன்னதாகவும் புதுச்சேரியார் இந்த ஊரின்பேரிலே வருகிறதாயிருக்கிறுர்களென்றும் கபுறு இருக்கச்சே என்னையும் என்னுடைய தளத்தையும் அவர்கள் வருகிற பாட்டையிலே இருக்கச் சொன்னீர்களென்று கோபித்துக்கொண்டு திருவந்திபுர மட்டுக்கும் போகிறதாய் ஒரு நாழிகை வழி போனவனை மறுபடியும் சின்ன துரை, ரங்கப்பநாயக்கன் முதலானவர்கள் போய்ச் சமாதானம்பண்ணி அழைத்துக்கொண்டு வந்து மஞ்சகுப்பத்துக்கு வாயு மூலையாய் திருப்பாதிரிப்புலியூர் போய், பெண்ணையாற்றங்கரை ஓர்மாய் குதிரைவால் கொத்தளமென்றும் செம்மண்டலத்துக் கொத்தளமென்றிருக்குதாம். அதற்கு மத்தியே வழிக்கு ஒரு நாழிகைவழி மேற்கே இறங்கச்சொன்னதற்குக்கூட அவர்கள் ரொம்ப பயந்து சிறிது பீரங்கியும் தேவனும்பட்டணத்துச் சேவகரையும் தங்கள் பாளையத்துக்கு முன்னே யிருக்கச்சொல்லிச் சொன்னதாகவும், அதற்கு இவர்கள் நல்லதென்று சொன்னதற்குக்கூடச் சம்மதியாமல் அப்பால் குண்டுக்குப் புறம்பே கோண்டூர் தோப்பு என்று இருக்கிறது. அதற்குக் குண்டுசாலை ஓரத்துக்கு ஏகமாய்த் தாண்டி.றங்கினர்கள் என்றும், ராத்திரிக்குப் பரிதியும், 500 பேர் சொல்தாதுகளும் வந்து விழுவார்களென்றும்

ரொம்பவும் கலவரத்துமேலேயிருக்கிறதாய்க் கபுறு வந்து சொன்னான். இந்தக்கபுறை துரையுடனே சொன்னதற்கு மூசே பரிதி முதலான பேர்களை நாலத்துரெண்டு கபுறு வந்து சொன்னவனைச் செல்லச் சொல்லி அதன்பேரிலே இது உண்டான சேதி யென்று சொன்னார். அதன் பேரிலே துரையிருந்து கொண்டு மமுதல்லிகானிப்படிப் பிரிக்கித்தனம் வகிந்து ஓடலாகாது. அப்படியே வெளியே போய் மார்க்கமாயிறங்கப் போகாதா? இப்படி பரத்தைக் கெடுத்துப் போடுவார்களாவென்று சொன்னார். அதற்கு நான் சொன்னது: உம்முடைய அதிர்ஷ்டம் பலவந்தமானபடியினாலே மமுதல்லிகானுக்கும் அவன் பிறகே வந்த படைக்குமப்படியாந் தோற்றியிருக்கிறது. உம்முடைய படை புறப்பட்டால் பின்னை அவர்கள் தளமும் எசமானும் நிற்கத்தக்கதில்லை என்று சொன்னேன். அது மெய்தானென்று துரை முதலான பேர்கள் சொன்னார்கள் மாபூசு கானுடைய தண்டு சமாசாரம் வந்ததாவென்று கேட்டார். அதற்கு நான் சொன்னது: மாபூசுகான் அமரப்பேட்டையிலே யிருக்கிறான்.

அன்வருதிகான் சதுரங்கப்பட்டண மட்டுக்கும் வந்தவன் மறுபடி மாபூசுகானண்டையிலேபோய்ச் சேர்ந்தானென்கிற கபுறு வந்ததென்று சொன்னேன். அது மெய்தான், எனக்குஞ் சென்னப்பட்டணத்திலேயிருக்கிறவர் எழுதியிருந்தாரென்று சொன்னார். நபாபு அன்வருதிகானுக்குச் சரீரம் எப்படியிருக்குது என்றுகேட்டார். முன்னைக்கு இப்போது சற்று லகுவாயிருக்குதென்று சேதி சொல்லுகிறார்களென்று சொன்னேன். அவன் கொஞ்சத்திலேயெல்லாம் சாகிறதாயிருக்கவில்லை. எண்பத்தாறு வயது சென்ற கிழவனாயிருந்தும் இத்தனை வியாதிவந்தும், பின்னையும் பிழைப்பித்திருக்கிறது மெத்த ஆச்சரியமாயிருக்குதென்று சொன்னார்கள். வேளை வராதே சீவன் போகாதே வேளைவருகிற மட்டுக்கும் அப்படி யிழுத்துக்கொண்டு நிற்குமென்று சொன்னதற்கு, மெய்தானென்று சொல்லிவிட்டுப் போனார்.

1746 ஆ டிசம்பர் மீ 19 உக்த அக்ஷய ஸு மார்கழி மீ 8 உ சோமவாரம்

இற்றைநாள் நடந்த சேதி: உதித்த ஏழு நாழிகையில் நயினார் வந்து சொன்ன சேதி: நேற்று ராத்திரி இங்கிலீசுக்காரர் முப்பது பேர் வெளியே புறப்பட்டுச் சவுக்கியிருந்த

சேவகரையும் பிடித்துப்போட்டு, கோட்டை ஏறிக் குதித்து ஓடிப்போன பேரைத் தொடர்ந்துபோன விடத்திலே எட்டு பேர் இடுப்பு ஒடிந்த பேரும், காலூனப்பட்ட பேருமாய் அப்பால் நடந்து போகமாட்டாமல் கிடந்தார்கள். அவர்களை உப்புக்கழியண்டையிலே கண்டு எடுத்துவந்தோமென்று சொன்னூர்கள். அதற்கு நல்லது, குறை பேரையும் இன்னும் மனுஷரை அனுப்புவித்துத் தேடிப்பிடித்து வாருங்கோ ளென்று சொன்னேம். பிற்பாடு மூன்று மணிக்குத் திரும் பவும் நாலு பேர் அகப்பட்டார்களென்று மிரண்டு பேரை அரியாங்குப்பத்திலே கொண்டுபோய் அனுப்புவித்தோமென் றும், குறை ரெண்டு பேரை எடுத்துவரவேணுமென்றும் நயினூர் சேவகர் வந்து சொன்னூர்கள். அந்தப்படிக்கு எடுத்துவந்து சேருங்கோள் என்று சொல்லி அனுப்பினேம். திரும்பவும் நாலு மணிக்கு வில்லியநல்லூருக்கு மேற்கே குப்பத்தண்டையிலே ஈச்சஞ்செடி சங்கஞ்செடியிலே பத்துப் பேர் இங்கிலீசுக்காரர் ஆயுதங்களில்லாமல் ஒளிந்திருக்கிறூர்க ளென்று அந்தவூர் தலையாரி வந்து சொன்னூன். அந்தச் சகுனம் மகா-ா-ா-ஸ்ரீ துரையவர்களுக்கு எச்சரித்து இருபது பேர் துப்பாக்கிக்காரரை அனுப்புவித்தோம். அவர்கள் போய் இங்கிலீசுக்காரர் பத்துப் பேரையும் பிடித்துக்கொண்டு வந்து எட்டு மணிக்குக் கெவுனி வாசலிலே ஒப்புவித்தார்கள்.

அப்பால் கூடலூருக்கு மேல்புறத்திலே துலுக்கர் இறங்கி இருந்து பாளையத்திலிருந்து முன்னூறு குதிரை புறப்பட்டு அழிசபாக்கத்துக்கிட்டே சுற்றி வந்தார்கள். அந்தச் சேதி கபுறுதாரிகள் வந்து சொன்னூர்கள். உடனே அரியாங்குப்பம் விட்டுப் பாளையம் புறப்பட்டு முத்திரிசப்பிள்ளை சாவடிக்கு நேரே போகிறபோது குதிரைக்காரரைக் கண்டு மாயே துலுக் கரும் சிறிது சொல்தாதுகளும் புறப்பட்டுக் குதிரைக்காரர் பேரிலே போனூர்கள். இவர்கள் வருகிறதைக் கண்டவுடனே குதிரைக்காரரெல்லாரும் ஓடிப்போனூர்கள். அதிலே இங்கி லீசுக்காரரும் இரண்டு மூன்று குதிரை ஏறிக்கொண்டுவந்து அழிசபாக்கத்திலே இரண்டு மாட்டையுஞ் சுட்டார்கள். அவர் களையுந் துரத்துகிறபோது அவர்களும் அங்கே நின்ற நூறு குதிரையுமோடிப்போச்சுது. அதன்பேரிலே நம்முடையவர் கள் பாளையம் நடந்து காட்டுப்பிள்ளையார் கோவில்கிட்டே

போய் இறங்கித் தீனி நின்றுகொண்டிருக்கிறதிலே அறுநூறு குதிரைக்காரரும் மமூதல்லிகான் சாயபு அவர்கள் பாளையத்திலேயிருந்து புறப்பட்டு வந்து காண்பித்துக்கொண்டார்கள். உடனே இவர்களும் பத்து குதிரையும் மாயே துலுக்கரும் சிறிது பேரும் சொல்தாதுகளும் புறப்பட்டுப் போய் எதிர்த்துத் துரத்தினார்கள். அதன் பேரிலே அவர்கள் நிற்கமாட்டாமல் ஓடினார்கள். அவர்களை, பாகூர்மட்டுக்கும் போய் துரத்திவிட்டு அதன்பேரிலே மரிகிருஷ்ணபுரத்திலே போயிறங்கினார்கள். இறங்கினவுடனே இங்கிலீசுக்காரரும் ராணுவமும் வந்து குண்டு தாழையிலே ஒட்டி நின்று துப்பாக்கிகள் ரொம்ப சுட்டார்கள். அப்போதுமிவர்களும் நாலைந்து பீரங்கியும் சுட்டு மாயே துலுக்கரும் சிறிது சொல்தாதுகளும் எதிர்த்து நடந்தார்கள். அப்போது அவர்களிலே நாலு பேருக்குக் காயமாச்சுது. அவர்கள் காயக்காரனை எடுத்துக்கொண்டு மஞ்சகுப்பத்துத் தோட்டத்திலே போய்ச் சேர்ந்தார்கள். இவர்களுங் குண்டு மேட்டிலே போய்ச் சேர்ந்தார்கள். இவர்களிலொருத்தருக்கும் காயமில்லை. இது சேதி கபுறுதாரி மலையப்பன் கூட இருந்து பார்த்து வந்தான் என்று சொன்ன சேதி.

இற்றைநாள் சாயங்காலம் சூரத்துச் சோட்டாதுகள் வந்தார்கள். துரைக்கும் முசே துலோராமுக்கும் காகிதங்களும் வந்தன. இதிலே சீர்மைக் காகிதங்கூட துரைக்கு வந்தது. சமாசார மின்னதென்றும் தெரியாது.

காசிதுகள் சொன்னது: நிசாமன்முலுக்கு ஐதிராபாத்திலிருந்து சூரத்துச் சுபேதாரன் செத்துப்போனான் என்று சூரத்து வர்த்தகன் முல்லா அப்துல் சமத்து மகன் பகறதீன் என்கிறவன் அழைத்துப் போகத்தக்கதாகச் சூரத்துக்கு அவுறங்காபாத்து மேலே போகிறானென்று நாசரசங்கு கூடப் போனார் என்றும், மருட்டியர் சமாச்சாரம் நிசாமன்முலுக்குச் சமாதானம் பண்ணிப்போட்டாரென்றும், மருட்டியர் இவ்விடத்துக்கு வருகிறதேயில்லையென்றும், தான் சாதாருவுக்குச் சவாபாசிருவு அண்டைக்குப்போய் வந்தேனென்றும் வரச்சே மாபூசுகான் தண்டுக்கு வழியிலே யிருக்கிற சவுக்கிதாரன் தன்னை யழைத்துப்போனார்களென்றும் காசிதுகளுக்கு

நிசாமல்முலுக்கு முகருடனே யிருக்கிற ரகதாரி தஸ்நிக்குக் காண்பித்தவிடத்திலே விட்டுவிட்டானென்றும் துரையுடனே சொன்னான்.

*1746* ஆ டிசம்பர் மீ 20 உக்கு அக்ஷய ஸு மார்கழி *9* உ மங்களவாரம்

இற்றைநாள் பாளையத்திலே நடந்த சேதி: விடிய நாலு நாழிகைக்குத் தீவானத்துக் குதிரையும் இங்கிலீசுக்காரரும் வந்து மஞ்சகுப்பத்திலே யிறங்கியிருக்கிற நம்முடைய பாளையத்தை வந்து நாலு புறத்திலும் சுற்றிக்கொண்டு துப்பாக்கிகள், குண்டுகள், கோலியள், ருக்கட் பாணிங்கள், செசாலும் கொளுத்தினார்கள். இவர்களுமவர்களைக் கண்டவுடனே சகலமான பேரும் முஸ்தீதுபட்டு மஞ்சகுப்பத்துத் தோட்டத்திலே கூடி பாளையத்தை நிறுத்து மற்றப்பேரெல்லாரும் வெளிப்பட்டு ஒரே மொத்தமாய் நாலு முகத்திலேயும் வெகு சண்டை கொடுத்தார்கள். இப்படி கைகலந்த சண்டையாக விடிந்து பத்து நாழிகைவரைக்கும் நடந்தது. இதிலே வெள்ளைக்காரன் ஒருத்தன் விழுந்துபோனான். வெள்ளைக்காரர் பத்துபேருக்குக் காயமாச்சுது. மற்ற துலுக்கரிலே ஏழெட்டுப் பேர் விழுந்துபோனார்கள். மற்ற துலுக்கரிலேயும் பத்து பேருக்குக் காயமாச்சுது துலுக்கர் குதிரையிலே ..........குதிரையும்.............ராணுவமும் விழுந்து போச்சுது. ஜனங்களும் காயம்பட்டார்கள். இங்கிலீசுக்காரரிலேயும்..............பேருக்குக் காயமும்...........விழுந்து போனார்கள். அதன்பேரிலே கூட்டிப் பாளையம் அவர்கள் கைவசமாய்ப் போனபடியினாலே இவர்களுக்கு அங்கே நிற்க இடமில்லை அதனால் சகலமான பேரும் ஒரு மொத்தமாய்ப் புறப்பட்டு மாடுகளையும் ஒட்டகங்களையும் சேகரித்துக் கொண்டு மரிகிருஷ்ணபுரத்துக்குக் கிழக்காகப் புறப்பட்டு, கடற்கரை ஓரமாய் வந்து நாலு மணிக்கு அரியாங்குப்பம் வந்து சேர்ந்தார்கள். இரண்டு ஒட்டைகள் மரிகிருஷ்ணபுரத்துக்குக் கிட்டேயிருக்கிற ஓடை சேற்றிலே விழுந்து கொண்டு நடவாதபடியினாலே அதை இவர்கள் தானே கொன்றுபோட்டு வந்து சேர்ந்தார்கள். துலுக்கர் குதிரையும் தவளகுப்பம் சாவடிவரைக்கும் வந்து திரும்பிப்போச்சுது.

அதிலே இங்கிலீசுக்காரரும் சிறிது பேர் குதிரையின் பேரிலே யும் ஏறிக்கொண்டு கூடவே வந்து திரும்பிப்போனார்கள். இதுகளெல்லாம் இவ்விடத்திலே பனிரெண்டு மணி முதற் கொண்டு ஸ்ரீ துரையவர்களுக்கும் நமக்கும் கபுறுகள் வந்தன. இந்தச் சண்டையாகிற சேதி கேட்டவுடனே துரையவர்கள் நம்மைக் கூட்டிவரச்சொல்லிச் சொன்ன வயணம்: என்னைப் பார்த்து, பார்த்தாயா நாலுநாளாய் முசே பரிதிக்குக் கொம்மாந் தானிடம் கொடுத்து அனுப்புவோமென்று அநேக விதத்திலே தெரியச் சொன்னோம். முசே புரி கேட்கமாட்டேனென்று போனான். ஓடிவருகிறான் பார்த்தாயாவென்று தங்கள் பேச்சுப்படி கேளாமல் தான்தானே யோசனைபண்ணிப் போனபடியினாலே இத்தலையும் வந்ததென்றும் ஆருக்கும் தலைக்குப் பட்டால் தெரியுமென்றுஞ் சொல்லி இனிமேல் நடக் கிறகாரியத்தைப்பார் எப்படி நடக்கிறதோ அதைப் பாரென்று சொன்னார்கள். ஊரிலே இருக்கிற ஜனங்கள் வெகுவாய் பாளையம் தமாம முழுகிப்போகிறதாய் மலைத்தார்கள். உடனே எல்லாரும் சுகமாயிருக்கிறார்களென்று கேட்டவுடனே சகல மான சனங்களும் வெகுவாய் சந்தோஷப்பட்டார்கள். அதன் பேரிலே நாமும் சகலமான பேருக்கும் தைரியம் வரத்தக்கதாக நடந்த சேதிகளெல்லாம் சொல்லி அதன்பேரிலே வளவுக்குப் போய் யோசனைபண்ணி நித்திரைபோனோம். நம்முடைய மனதுக்கும் ஸ்ரீ துரையவர்கள் மனதுக்கும் கலக்கந்தோன்ற வில்லை. பாளையத்திலே சேர்த்துப் பாளையமாத்திரம் அவர்கள் கையிலே அகப்பட்டுப்போச்சுது. மற்றப்படி ஒரு சேதமுமில்லை. சகலமான பேரும் வந்து சேர்ந்தார்கள் இது நடந்த சேதி, கேட்ட சேதி எழுதினேன்.

இற்றைநாள் மத்தியானம் துரையவர்கள் என்னுடனே சொன்னது நம்முடையவர்கள் அபசயப்பட்டு வந்தது எனக்கு மெத்த சந்தோஷம். ஏனென்றால் முசே பரிதியை கொம்மாந்தா னுக்கி அனுப்புவோமென்று என்னாலே ஆனமட்டும் சொன்னோம். முசே புரி முதலான பேர், ஒபிசியேல்மாரெல்லாரும் அவன் ஒரு இஞ்சிலீராயிருந்தவன். அவன் கீழே நாங்கள் அடங்கி நடக்கிறதில்லை என்றும், அவன் போய் செயித்து வருகிற காரியம் எங்களாலே ஆகாதா என்றெங்களை அனுப்பிப்பாரு மென்றுஞ் சொன்னார்களானவிவர்கள் போய் பங்கப்பட்டு வர

வேணுமென்று நினைத்தேன். அப்படியே ஆச்சுதென்று சந்தோஷமாயிருக்கிறது. ஆனால் நம்முடையவர்கள் முறிந்து வந்தார்களென்கிறது கஞ்சத்துப் பாதிக்கு என்று சொல்லி, நீ, முசே புரி முதலான பேர் பயணமாகிப்புறப் பட்டுப் போகச்சே, முசே பரிதீ என்ன! பட்டணமாக இப்போது காணுமே வேருகாரர் வந்து ஆருக்குக் கபுறு சொல்லுகிறது என்று கேட்டதற்கு இப்போது முசே பரி போகிறான். இவனுக் குச் சொல்லச்சொல்லு. நீ சொன்னபடிக்கு முசே பரிதீ இனி மேல் போவான். அப்போது அவனுக்குக் கபுறு சொல்லச் சொல்லு என்று சொன்னதற்கு, நீ, முசே பரிதீ போகிறது நன்றாய்க் காணுது. இவன் போகிறேன் என்று சொன்னால் எல்லாரும் பயப்பட்டு நடுங்கினார்கள். இவன் போகாவிட்டால் இதுவே ஒரு அச்சம் இல்லாமலிருக்கும் (துலுக்கருக்கும் இங்கி லீசுக்காரருக்கும்) என்று சொன்னீயே, அப்படியே நடந்தது என்று சொன்னார். இப்படி நாலு நாழிகை தேசகாலம் பேசினோம் அதுவெல்லாம் எழுதவேணுமானால் நூறு காகித மாகிலுஞ் செல்லும். சுவாரசியப் பேச்சென்னமோ அதைமாத்திர மெழுதினேன்.

இதல்லாமலின்றையதினம் அரிகிருஷ்ணபுரத்தண்டை யிலே சண்டையிலே இங்கிலீசுக்காரர் பிடித்துக்கொண்டு போனது கும்பினீர் மாடும் தனிமாடுமாய் கால்நடை 250, 260, கூடாரம் 120, 130, துப்பாக்கிப் பெட்டி 5-க்கு துப்பாக்கி 250, சாராயம் மொண்டு வார்க்கிறசொப்புக்குடம் 60, சாராய பீப் பாய் 100, மருந்து பீப்பாய் 50 பன்றி 100, ஆடு 1400, கோழி 2000, ரொட்டி பிஸ்கோத்து, பின்னையும், தீனி தட்டுமுட்டும் கொள்ளைபோச்சுது.

இற்றைநாள் நடந்த அதிசயமென்ன வென்றால்: நேற்றை யதினம் ராத்திரி பத்து மணிக்கு மேஸ்தர் மாசு (M. Morse) துப்பாக்கி பெருமாள்முதலி தம்பி லக்ஷ்மணமுதலி என்கிறவ னையும் பின்னை ஒருத்தன் கந்தப்பனென்கிறவனையும் இவர்கள் இரண்டுபேரையும் அவர்கள் வீட்டுக்குப் போகையிலே சின் னதுரை வீட்டுக்கு மேலண்டையிலே பிடித்துக்கொண்டு அவர் கள் கையிலேயிருந்த பணங்காசு, தட்டுமுட்டு, கடுதாசி இது தள் எல்லாம் ஐந்தாறு பேராய்க் கூடிப் பிடித்து அடித்துப்

பறித்துக்கொண்டுபோனார்களாம். அது ஆர் இப்படி நடுத்தெருவிலே, சின்னதுரை வீட்டண்டையிலே, பத்துமணிவேளையிலே இப்படிச் செய்தார்களென்றால், அந்த வயணம் விவரித்து நடந்த சங்கதியாம்படியே யெழுதுகிறேன். இப்பவும் மேஸ்தர் மாசு (M. Morse) இவ்விடத்திலேயிருந்து தேவனாம்பட்டணத்துக்குக் கடுதாசி எழுதுகிறதும், தேவனாம்பட்டணத்தார் கடுதாசி மேஸ்தர் மாசுக்கு வருகிறதுமிதல்லாமல். முசியே புசியேத்து (M. Bousset,) முசியே ப்ரீவிலும் (M. Friell) எந்நேரமும் சண்டையிலே போய்க் கண்டு வார்த்தைச் சொல்லிக்கொண்டிருக்கிறதும், இந்தச் சேதிகளெல்லாம் ஸ்ரீ துரையவர்களறிந்து முசியே ........பிராஞ்சுக்காரராயிருந்து எந்நேரமும் அவனண்டையிலே போய்ப் பேசிக்கொண்டிருக்கிற காரியமென்ன? அவர்களை ஒரு நாய்கள் அப்படிப்பட்டவர்களிப்பபட்டவர்கள் என்று பதினைந்து இருபது நாளைக்கு முன்னே ஒரு தரம் அவர்களைக் கோபித்துக்கொண்டு என்னை அழைத்து, இப்படியானால் மேஸ்தர் மாசுக்கு (M. Morse) தேவனாம்பட்டணத்துக்குக் கடுதாசியை மனுஷரை வைத்துக் கண்டுபிடித்து வரவேணுமென்று சொன்னார்கள். பின்னையும் அவர்கள் சொன்னதென்னவென்றால், இந்தச் சேதி நயினாருடனே சொன்னோமேயானால் கவை கெட்டுப்போம். அவனாலே ஆகாது. அதற்கு நீதானே அதெப்படி உபாயமாய்ப் பிடிக்கவேணுமோ அந்தப்படிக்கு ஆள் வைத்துப் பிடித்துக் கொண்டுவா என்று சொன்னார். இந்தச்சேதி இன்று பதினைந்து நாளைக்கு முன்னே என்னுடனே சொன்னார்கள். நானும் அன்றைய தினந்தானே இரண்டுபேர் துபாசிகளை அழைத்து மாதம் ஒரு வராகன் சம்பளம் கொடுக்கிறோம் என்று சொல்லி மாசு வீட்டிலே நடக்கிற சமாசார மந்நேரத்துக்கந்நேரம் நமக்கு வந்து கபுறு சொல்லச்சொல்லி வைத்துவைத்தேன். அவர்களன்றுடம் நடக்கிற சேதி காகிதம் தேவனாம்பட்டணத்திலே யிருந்து வருகிறது முதலான சேதிகளெல்லாம் சொல்லிக் கொண்டே வருவார்கள். அப்படி இருக்கையிலே நேற்றைய தினம் தேவனாம்பட்டணத்திலே யிருந்து ஒரு பிராமணப் பிள்ளையாண்டான் காகிதம் கொண்டுவந்து மேஸ்தர் மாசு கையிலே கொடுத்தான். அந்தக் காகிதத்தை மாசு படித்துக்கொண்டு மறு கடுதாசி எழுதிக் கொடுக்கிறோமென்று

மாசு சொன்னதாகவும் அதற்குத் துபாசி லக்ஷ்மணன் இருந்துகொண்டு அந்தப் பிராமணப்பிள்ளையாண்டானைப் போய் தான் சாப்பிடுகிற வீட்டிலேபோயிருக்கச் சொல்லியும், தேவனும்பட்டணத்தாருக்கு மாசு எழுதுகிற கடுதாசியைத் தான் வாங்கிக்கொண்டுவந்து கொடுத்து அனுப்பிவிடுகிறேனென்று சொல்லி, அந்தப் பிராமணப்பிள்ளையாண்டானை முன்னே தங்கள் வீட்டுக்கு அனுப்பிவிட்டான். அந்தக் கபுறு நமக்கு வந்தவுடனே அந்தப் பிராமணப்பிள்ளையாண்டானை முன்னே (தங்கள் வீட்டுக்கு அனுப்பிவிட்டான்). இரண்டாம்பேர் அறியாமல் பிடித்துக்கொண்டுபோய் நயினார் வீட்டில் காவல் வைத்துவிட்டு, பிற்பாடு லக்ஷ்மணன் அந்தக் கடுதாசியைக் கொண்டுவருகிறபோது அவனைப் பிடித்து அவன் கையிலேயிருக்கிற கடுதாசியைமாத்திரம் பிடுங்கினால் அவனுக்கு அசுவை தோணப்போகுதென்கிறதினாலே கள்ளர் வந்து அவர்கள் கையிலேயிருந்த தட்டுமுட்டுப் பணங்காசு இருக்கிறதையெல்லாம் பறித்துக்கொண்டு போனார்களென்று இருக்கத் தக்கதாக நம்முடைய போயண்டா நாலு பேரையும், அழகிரி செட்டியையுமிந்த ஐந்து பேரையும் அவர்கள் வருகிற வழியிலே வைத்து அவர்கள் கையிலே இருக்கிறதையெல்லாம் பறித்துக்கொண்டு வரச்சொல்லி வைத்திருந்தபடியினாலே அவர்களந்தப்படியே காத்துக்கொண்டிருந்து அவர்கள் வரும்போது சின்னதுரை வீட்டுக்கு மேலண்டையிலிருக்கிற பாலத்துக்கடுத்தாப்போலே வருகிறபோது அவர்களிரண்டுபேரையும் பிடித்துக்கொண்டு அவர்கள் கையிலேயிருந்த ரொக்கம் பத்து வராகன் டணமும் பறித்துக்கொண்டு அவர்களுடைய அங்கி, புடவை, சீலையெல்லாம் கிழித்துப்போட்டு ஓடிப்போய் விட்டார்கள். அந்தக்ஷணமே கடுதாசியையும் வராகனையும் கொண்டுவந்து கொடுத்தார்கள். அதிலே தேவனும்பட்டணத்தாருக்கு மேஸ்தர் முசே மாசு எழுதின கடுதாசி ஒன்றும், குருவப்பநாயக்கருக்கு லக்ஷ்மணன் பேசிவைத்துத் தமிழிலே இருந்த காகிதமொன்றுமிருந்தது அதைக் கொண்டுபோய்த் துரையவர்கள் கையில் கொடுத்தேன். அதை மத்தேசு கையிற் கொடுத்தவிடத்திலே என்ன எழுதியிருக்குது பார் என்று சொன்னார். அவன் பார்த்துச் சொன்ன வயணம்: பின்னை ஒன்றும் எழுதியிருக்கவில்லை. என்னுடைய கிரகசாரம் என்னப்

பட்டது இப்படியெல்லாம் படத்தக்கதாக வந்தது நானிவ்விடத்திலே என்னுடைய இரத்தத்தை நான் குடித்துக் கொண்டு கஷ்டப்பட்டுக்கொண்டு அவஸ்தைப்படுகிறேன். தெய்வ எத்தனமப்படியிருந்தால் செய்யலாவதென்ன? ஆகிலும் இனிமேல் நீங்களாகிலும் அதற்கேற்றபடிக்கிருந்து நிருவாகம் பண்ணிக் கொண்டிருக்கவும் என்று இது மாத்திரம் எழுதியிருந்தது. அப்பால் குருவப்பநாயக்கனுக்கு லக்ஷ்மணன் எழுதியிருந்த காகிதத்தை நான் படித்துப்பார்த்துத் துரையுடனே சொன்வேன். அதிலெழுதியிருந்த வயணமென்னவென்றால்: மதாமுடைய தந்தப் பூபோட்ட பெட்டிகள், தட்டுமுட்டுகள், உடுப்புகளெல்லாம் எடுத்தனுப்பவும். இதல்லாமல் அவ்விடத்திலே வாங்கி அனுப்புகிற புடவைகள் விலை வயணமும் எழுதி வர்த்தகர் பேரிலே வரவேண்டிய பணங்காசெல்லாம் கண்டித்து வாங்கியிருக்கிற பணங்காசு தட்டுமுட்டெல்லாம் தேவனும் பட்டணத்துக் கோட்டையைக் கொண்டுபோய்ச் சேர்க்கச் சொல்லியும் எழுதியிருந்தது. அந்த வயணமெல்லாம் சொன்னேன். அதன்பேரிலே அவர்கள் கையிலே யிருந்து பறித்துக் கொண்டுவந்த வராகன் 27-யும் அவனைப் பிடித்துக்கொண்டு வந்த சேவகருக்குக் கொடுத்துவிடச்சொல்லி உத்தாரங் கொடுத்தார்கள். நானந்த வராகனை வாங்கி இன்னமொரு வேளையிலே கேட்டாலும் கேட்பாரென்று சொல்லிச் சும்மா வைத்தேன். இத்தனையும் அந்தக் கடுதாசியைப் பிடிக்க வேணுமென்கிறதினால் இப்படி நடந்தது.

இற்றைநாள் ராத்திரி குவர்னதோர் என்னுடனே சொன்னதென்ன வென்றால்: முசியே புரி வந்து என்னுடனே சண்டை வயணமெல்லாம் சொன்னான். துலுக்கரிலே எழுபது எண்பது குதிரை விழுந்தது. போஸ்ரத்து சிப்பாய்களிலே இரு நூறு முன்னூறு விழுந்துபோனது உண்டென்று சொன்னான், பின்னையுமிரண்டு நாழிகை மட்டுக்கும் சண்டை பண்ணினால் துலுக்கரிலே வெகு சனம் விழுந்து போவார்கள். தண்டு ஆற்காடு போய்ச் சேர்ந்துபோமுன்கியே போன ஒபிசியேலுக்குள்ளே கொம்மாந்தானாயிருக்கிறவன் பேச்சுக் கேளாமல் அவனவன் தனித்தனியே பெரியதனம் பண்ணினபடியினாலே கெட்டுப்போச்சுது. கூட்டிப்பாளையத்தைக் காணாதே போனபடியினாலே, அது கொள்ளைபோனதினாலே இவர்களுக்

கும் மருந்து குண்டு தாழ்த்தியும் சாப்பிடுகிற வஸ்து முதலா னது தாக்ஷியாபடியினாலே யவர்கள் வரத்தக்கவேண்டி வந்த தென்றும், முசியே புரி முதலானபேர், கப்பல் மத்லோத்துகள் சொல்வழிக்கு வராமல்போனபடியினாலே கெட்டுப்போச்சு தென்று குற்றமவர்கள்பேரில் வைத்தார்கள். நான் முசியே புரி முதலான ஒபிசியேல்பேரிலே வைத்தேன் என்று சொன்னார். அதற்கு நான் சொன்னது: முசியே பரிதியுடைய பேர் அவ்விடத்திலேயிருக்கிற சாடைக்கு முசே பரிதி சண்டை பண் ணாமல் சும்மா போனாலும் ஓடிப்போய்விடுவார்கள். அந்த தண் டிலே முசியே பரிதி என்று பேர் சொன்னால் நடுங்குகிறது. நான் சொல்லமாட்டேன். அதை எங்களவர்களுக்குள்ளே துப்பாக்கி லக்ஷ்மண நாயக்கனென்று ஒருத்தனிருந்தான். அவன் நடத்தை துலுக்கர் குதிரை தண்ணீர் காட்டப்போனால் தலையெடுத்த வாக்கிலே குதிரை வழியே நிற்குமாம். துப்பாக்கி லக்ஷ்மண நாயக்கனில்லை தண்ணீர் குடியென்று சொன்னால் அதன் பிற் பாடு குதிரை யானைகள் கூட தண்ணீர் குடிக்குமாம். அப்படி முசியே பரிதி பேரென்றால் துலுக்கர் தண்டிலே அப்படி நடக் குது என்று சொல்லிச்சொன்னால் முகபரோதரவாயிருக்கும் இன்னமுங்களுக்கு, பரஸ்பரமாய் கபுறு வந்தாலப்போது தெரியுமென்று சொன்னேன். அதற்கு மெய்தான், இனிமேல் பரிதியைத்தான் அனுப்புகிறேன். நீ கபுறு மாத்திரம் திட்ட மாய் விசாரித்துச் சொல்லென்று சொல்லி. இந்தக் கூலிக்காரர் கள் மாடுகளித்தோடே சேர்ந்ததுமெனக்குத் தொந்தரையை வையாமல் நடப்பித்துக்கொள்ளென்று சொன்னார். நல்லதென்று சொன்னேன்.

*1746* ஆ டிசம்பர் மீ *21* உக்கு அக்ஷய ஹு மார்கழி மீ *10* உ புதன்கிழமை

இற்றைநாள் காலத்தாலே அழிசபாக்கத்துக்குச் சூரியப் பிள்ளையை அழைக்கப்போன விடத்திலே, சாமிநாதன் அழைத்துவந்தான். அதென்னவென்றால்: தேவனாம்பட்டணத் துக்குத் தண்டு போகிறதற்கு நாலு நாள் முன்னதாகப் பிடித் துத் துரையவர்கள் கிராமம் பிறத்திக்கிராமமும் எழுதி யனுப்புவித்துக் கூலியாள்களை அழைப்பித்துக் கர்ன காமி பண்ணிவையென்று உத்தாரங் கொடுத்திருந்தபடியால் ஒழுகரை முதலான கிராமங்களையெல்லாம் ஆள்கள் கூட்டிக்

அனுப்புவிக்கச்சொல்லி எழுதியனுப்பினபோது அழிசபாக்கத்துக்கும் எழுதியனுப்பினதற்கு ஒரு ஆளாகிலும் அனுப்பாமல் போனபடியினுலேயும் அழைத்தனுப்பினதற்குக்கூட வராமலிருந்தபடியினுலேயும் கும்பினீர் சேவகனை அனுப்பி அழைத்து வரச் சொன்னேன். அவன் அழைத்துவந்தவுடன் காலத்தாலே கொண்டுவந்துவிட்டான். என் பிரையாலும் அனுப்பாமல் அழைத்னுப்பினுலும் வராதேபோனதென்னவென்று கேட்டேன். ஆள்களெல்லாம் ஓடிப்போய்விட்டார்கள் என்று சொன்னுன். உன் கிராமத்திலே பத்திலே ஒரு பங்கு காணுது அரியாங்குப்பம். அதிலேயிருந்து நூற்றைம்பது ஆள் மட்டுக்கும் வந்மட்டுக்கும் நீ யனுப்பாமலிருக்கிறதாவது என்னவென்று கண்டித்து, உனக்கித்தனை ஆங்காரமென்னவென்று கண்டித்து, நல்லது, துரையண்டைக்கு வா வென்று சொல்லிவிட்டுப் பாக்குக்கிடங்குக்கு வந்தேன். வந்தவிடத்திலே துரையழைத்தனுப்பினுர். அங்கே போய் அவரைக் கண்டு பேசிவிட்டு வருகையிலே தானப்பமுதலி துரைவாசல் படியிலே சூரியப்பிள்ளையுடனே பேசியிருந்தவன், என்னைப்பார்த்து அழிசபாக்கத்துக்குச் சூரியப்பிள்ளையை அனுப்பிவிடவேணுமேயென்று சொன்னுர். இவர் கிரெஸ்தனுங்காட்டு மென்று சூரியப்பிள்ளையை நடப்பித்தகாரியமெல்லாம் சொல்லி இப்படியிப்படி நடப்பித்தவனை துரையுடனே சொல்லிவிட்டு அதற்கேற்ற தண்டனை தண்டியாமல் விடப்போகாதென்று சொன்னேன். அதற்குத் தானப்பமுதலியிருந்துகொண்டு உம்மாலே ஆகாது என்று சொன்னுன். என் கையாலாகுமென்றும் ஆகாதென்றும் நீ அறிவாயென்று சொல்லிவிட்டு வந்து துரையுடனே சொல்லவேணுமென்றிருக்கும்போது இதிலே முசே துலோராம் அனுப்பினதாய்க் கோமண்ணமுதலி வந்து சொன்ன சேதி யென்னவென்றுல்: அழிசபாக்கம் குடியானவர்கள் எல்லாரையும் அழைப்பித்து, பணமுந் தண்டவொட்டாமல், பயிருக்குந் தண்ணீருமிறைக்கவொட்டாமால் தழைந்துபோட்டு அழைத்துக்கொண்டு வந்ததுமல்லாமல் உதாசினமும் பண்ணினீராம், மற்ற கிராமமெல்லாம் கும்பினீரைச் சேர்ந்த கிராமம். அழிசப்பாக்கம் அளந்து முசே தும்மாவைச் சேர்ந்ததென்றும், அது வழி போகத் தேவையில்லையென்றும், நாம் குவர்னதோருடனே

வேணுமென்றாலும் பேசிக்கொள்ளுகிறோமென்றும் இப்படி யாகச்சொல்லி அனுப்பினாரென்றும் கோமண்ணமுதலி வந்து சொன்னதற்கு நாம் நியாயம் சொன்னதென்னவென்றால்: என் வீட்டுக்காரியத்துக்கு நான் எழுதினதில்லை. குவர்ன தோருத்தாரமில்லாமல் கிராமங்களுக்குக் கூலிக்காரருக்கு எழுதினதில்லை. அந்த வேலையாலே துரை உத்தாரமென் றெழுதினோமே யல்லாமல் என்னுக்தாயப்படிக்கொன் றும் எழுதவில்லை. இப்படி எழுதின கிராமங்களுக்கு எல்லாம் அவரவர்கள் நூறும் ஐம்பதும் ஆளும் அனுப்பி ஓலையும் எழுதியனுப்பவில்லையா? சூரியப்பிள்ளை மாத்திரம் ஓலைக்குப் பதில் எழுதாமல் ஆள்களும் அனுப்பாமல் அழைத் தனுப்பினதற்குக் கூட வராமல் இருந்தது ஒன்று; இதல்லாம லிந்தக் காறுபாறு முன் கனகராயமுதலியார் விசாரிக்கச்சே தான், தானப்பமுதலி விசாரிக்கச்சேதா னிவர்கள் எழுதி யனுப்பி ஆள்களை அழைப்பிக்கவில்லையா? இப்படி முன்னும் பின்னும் நடந்திருக்கச்சே நான் எழுதியனுப்பினேனென்று முசியே துலோயாய் அவர்களுக்கும் நம்மைப் பகையாக்கி வைக்க வேணுமென்று யோசனைபண்ணி என் வாயிலே பிறவாத பேச் சைப் பணம் தண்டவொட்டோம் என்றானென்றும், தண்ணீர் பயிருக்கு விடவொட்டாமல் தழைந்து போட்டானென்று மிந்த வூரிலே வந்த ரெட்டிகளைத் தழைந்துபோட்டுப்போக ஒட்டா மல் வைத்துக்கொண்டிருக்கிறானென்றும் இப்படி சொன்ன வார்த்தையிலே ஒரு வார்த்தையாகிலும் உண்டானால் நான் அபராதமுங் கொடுத்து நேரஸ்தனாய்ப் போகிறேன். இல்லா விட்டால் என்பேரிலே ஆர் வந்து சொன்னார்களோ அவர்கள் கையிலே அந்தப்படிக்கு வாங்கத்தக்கதாக எழுதி கட்டிவிசா ரிக்கச்சொல்லுமென்று சொன்னேன். அவனும் நானும் சொன்ன நியாயம் ஒத்துக்கொண்டு நானுஞ் சொல்லுகிறேன். நீரும் சொல்லுமென்று சொல்லிவிட்டுப் போனான். இந்தப்படிக்கு ராத்திரியும் வந்து சொல்லிவிட்டுப் போனான். இதல்லாமல் இற்றைநாள் நடந்ததென்னவென்றால்: துரையென்னையழைத்து அரண்மனை கிராமங்களெல்லாம் சுட்டுப்போட்டுத் தீரவேணு மென்று சொல்லி வழுதாவூர் கோட்டை சாகீர் கிராமங்களுக் கெல்லாம் அடையாளம் என்ன கொடுக்கலாமென்று கேட்டார். உங்கள் சித்தத்திற்குச் சம்மதியானபடிக்கு அடையாளம் கொடுக்கிறதுதானே என்று சொன்னேன். வெள்ளைக் கொடி

கட்டினால் குணமல்லவா என்று சொன்னார். அப்படி ஒருத்தன் கட்டினாப்போலேயிருந்தால் எல்லாரும் கட்டுவார்கள். ஆனபடியினாலே இப்போது உங்கள் முத்திரைபோட்ட காகிதமொன்று சென்னப்பட்டணத்துக்கனுப்புவிக்கிற காகிதத்துக்கு அடையாளங் கொடுக்கிற சட்டமாய்ச் சிறிது காகிதத்திலே அரக்குமுத்திரை போட்டு ஒவ்வொரு கிராமத்துக்கு ஒவ்வொன்று கொடுத்தனுப்பினால் நம்முடைய அறமாத்துப் போகச்சே அந்தக் கிராமத்தார் கொண்டுவந்து இந்த முத்திரையைக் காண்பிக்கிறார்களோ அந்தக் கிராமத்துச் சோலிபோகவேண்டாமென்று நம்முடைய தாசுமானுக்குச் சொல்லியனுப்புகிறதென்றும் அப்படி பண்ணினால் நன்றாய்க் காணுதென்று சொன்னதற்கு நீ சொன்னது நியாயமாகக் காணுது. அப்படிதானே செய்யவேண்டியதென்று சொல்லி மத்தேசுக்குச் சொல்லி ஐம்பது காகிதத்துணுக்கையின் பேரிலே அரக்குமுத்திரைபோட்டு முஸ்தீது பண்ணச்சொல் என்று சொன்னார். மத்தேசுக்குச் சொன்னபடி ஐம்பது காகிதத்துணுக்கையின்பேரிலே அரக்குமுத்திரை போட்டு முஸ்தீது பண்ணச்சொல்லென்று சொன்னார். மத்தேசுக்குச் சொன்னபடி ஐம்பது காகிதத்துணுக்கையிலே அந்தப்படிக்கு அரக்குமுத்திரை முஸ்தீது பண்ணச் சொன்னேன். அப்பால் துரை அழைத்து வழுதாவூரிலே கில்லேதாரன் மீருசேன்கானுக்கு ஒருகாகிதமெழுதி அவர்கள் கிராமம் எத்தனையோ அத்தனைக்கும் முத்திரைகொடுத்து அனுப்பிவை என்று சொன்னார். நல்லது என்று சொல்லி மீருசேன்கானுக்கெழுதின காகித வயணம்: மழுதல்லிகான் இந்தப் பிராந்தியங்களுக்கு வந்து எங்கள் கிராமங்கள்பேரிலே எங்கள் மனுஷர்பேரிலே தொந்தரைகள் பண்ணி நடப்பிக்கிறபடியினாலே நாங்களும் வெகுவாய் மனம் பொறுத்துப் பார்த்தோம். எந்த மட்டுக்கும் அவர்கள் சும்மாயிருக்கிறதை சாடைகாண்பிக்கவில்லை. ஆனபடியினாலே நாங்களும் அவர்கள் கிராமங்கள் எங்கே யிருக்குதோ அந்தக் கிராமங்களெல்லாம் சுட்டுச் சிறைகள் பிடித்துக்கொள்ளையிட்டுத் தீர்க்கவேணுமானபடியினாலே உங்களுக்கும் நமக்கும் வெகு ஆப்பித்தமானபடியினாலே உங்கள் கிராமத்துக்கெல்லாம் எங்கள் கிராமமாயெண்ணி இருக்கிறபடியினாலே உங்கள் கிராமத்துக்கெல்லாம் இந்த அடையாளம் கொடுத்து வையுங்கோளென்று காகிதம் எழுதி நாற்பத்தைந்து முத்திரையும் கொடுத்து அனுப்

பிஞேம். அப்பால் துரையுடனே நவமால் கிராமங்களிருக்கிறது. மீருசத்து அலிகான் (M. Murtaza Alikhan) கிராமங்களிருக்கிறது. அதுகளுக்கு முத்திரை கொடுத்து அனுப்பவேணுமென்று சொன்னேன், நல்லது கொடுத்தனுப்பு என்று சொன்ஞர். பின்னையும் இரண்டொரு சார்தார்கள் அனுகூலமுண்டு, அவர்களுக்கும் கொடுக்கவேணுமென்று சொன்னேன். அவர்கள் ஆரென்று கேட்டார். பெருமுக்கல் மியா சாயபு அவர்கள்தான். பின்னையும் முத்துமல்லாரெட்டி, முத்துவெங்கடபதிரெட்டி என்றிருக்கிருர்கள். அவர்கள் கிராமமெல்லாவற்றிற்கும் சீட்டுக்கொடுக்கவேணும். அவர்களைத்தொட்டு நம்முடைய பட்டணத்துக்கு ரொம்ப ஆதரவு. எப்படியென்ருல் அவர்க்ள் சீர்மை தானியம் இரண்டு லக்ஷம் வராகன்மட்டுக்கும் வருகிறது. அவர்கள் குஞ்சு குழந்தைகள்கூட இங்கே இருக்கிறது. இப்போது துலுக்கருக்கும் நமக்கும் சண்டையாயிருக்கும்போதும் மாபூசுகானிவர்களுக்கெல்லாம் புதுச்சேரிக்குத் தானியம் தவசமிருக்கிறதைக்கூட அனுப்ப வேண்டாமென்று எழுதி இருக்கும்போதுகூட நாமதைப் பாராட்டப்போகாது என்று எப்போதையும் போலே நடப்பித்துக்கொண்டு வருகிருர்களென்றும், பின்னையும் சொல்லத்தக்கதாக விசேஷமாம் படியே சொன்னேன். முன்னையும் வில்லியநல்லூர் ரெட்டிப் பேச்சுக்குமிப்படிதான் சொன்ஞய். கடைசியிலே இந்த ரெட்டிதான் மமுதலிகான் பாளையத்திலேயிருந்து நம்முடையவர்கள் பேரிலே ராசகாரியம் பண்ணுகிருனென்றும் சொன்ஞர். அவன் என்ன செய்யப்போகிருன். எசமான் கிட்டே வந்து அழைத்து வேலையில் தள்ளப்போகாதே என்று அதற்குத் தக்கன மார்க்கமாய்ச் சொன்னேன். அதன்பேரில் நீ நியாயஞ் சொல்லத்தெரியாதவஞ? ஆனுலும் வில்லியநல்லூர் நம்முடையவர்கள் சண்டைக்குப் போனவிடத்திலேகூட வந்து காண்பித்துக்கொண்டு சண்டைகொடுத்தானும். அப்படிப்பட்ட பொல்லாதவனினிமேல் அவன் பேச்சு நம்முடைய ஊருக்கு ஆகாதென்று சொல்லி, அப்பாலவன் தவிர பின்னை யாருக்கு உனக்குச் சம்மதியாய்க்காணுதோ அவர்களுக்கெல்லாம் சீட்டுக்கொடு என்று சொன்ஞர். நல்லதென்று சொல்லி வந்தேன். அப்பால் வீட்டுக்குச் சாப்பாட்டுக்குப் போகச்சே இரண்டு மணிக்குச் சாப்பிட்டவுடனே துரை அழைத்து அனுப்

பினர். போய்க்கண்டு பேசினவிடத்திலே மாயே சிப்பாய்களுஞ் சமேதாரர்களுமாயிருக்கிற இரண்டுபேர் அண்ணன் தம்பி மாருக்கும் வெகுமானங்கொடுக்கவேணுமென்று மிரண்டு சாலுவை அழைப்பியென்று சொன்னர். அதற்கு நல்லதென்று சொல்லிஅனுப்பி, கொண்டுவரச்சொல்லி, கத்தி, பிஸ்தோல், துப்பாக்கிகள்கூட வெகுமானம் பண்ணவேணுமென்றும் சிப்பாயல்லவாவென்றும் சொன்னேன். ஆனல் தம்முடைய கையிலே இருந்த கத்தியிலே இரண்டு கத்தியு மிரண்டு பிஸ்தோல் சோடும் எடுத்துவரச்சொன்னர். வந்தது; அதை யெனக்குக் காண்பித்தார். நன்ருயிருக்குதென்று சொன்னேன், பிஸ்தோலைப் பார்த்து அதை, ஙீயோகு (N. Diego) கையில் கொடுத்துவிட்டு முசியே கோறுனேந்துக்குச் சொல்லியனுப்பி, இரண்டு கோடு பிஸ்தோல் கொண்டுவரச் சொல்லியனுப்பினர். அந்தப் படிக்கு வந்தது. வந்தவுடனே தம்முடைய கணக்குப் பிள்ளையை அழைப்பித்து மூவாயிரம் ரூபாய் அரியாங்குப்பத்துக்குக் கொண்டுபோகச் சொன்னர். அப்பால் என்னை அழைத்து எங்கள் அறமாது பார்த்ததில்லையே, அரியாங்குப்பத்துக்கு நீ வந்து பாரென்று சொல்லி, தாம் மதாமை முன்னே போகச்சொல்லி, தாம் பிறகாலே வண்டியிலேறிக் கொண்டு அரியாங்குப்பத்துக்குப் போனர். அப்பால் நானும் கூடப்போனேன். போய்சேரச்சே வெள்ளைக்காரரும் மாயே சிப்பாய்களும் வரிசை நின்ருர்கள். தம்பூரு ஷாம்படித்தார்கள். பாதிரி கோயிலண்டையிலே வண்டிவிட்டிறங்கி அப்பால் கொத்தளமட்டுக்கும் நடந்து போனர். கொத்தளத்து அண்டையிலேயிருக்கிற மதாம் அல்பேர் வீட்டண்டையிலே நின்று அங்கே மதாம் துய்ப்ளேய்க்சு நாற்காலி போட்டுக்கொண்டிருக்கச்சே அங்கேபோய் நின்று வரிசை முடியப் பார்த்தவுடனே இதிலே சிப்பாய்களுக்குச் சமேதாரனுயிருக்கிற சேக்கு அப்துல்லாய்மானும், அவன் தம்பி சேக்கு அசேனும் இரண்டுபேரும் வந்து சலாம் பண்ணினர்கள். அப்போது இரண்டு பிஸ்தோலை கொடும், இரண்டு கத்தியும், இரண்டு சாலுவையும், இரண்டு பேருக்குங் கொடுத்துக்கும் பினீர் காரியத்திலே இன்னம் நன்ருய்ப் பிரயாசைப்பட்டால் சுவாமியுனக்கு இன்னம் அதிசெயமான மேன்பாடும் லாபமும் கொடுப்பார் என்றும் சொன்னர். அப்படியே நாங்கள் பிரயாசைப்படுகிறது உங்கள் மனசுக்கு வரத்தக்கதாகவே நடந்து

கொண்டோம். இனிமேலும் அப்படியே நடக்கிறோமென்றும் உபசாரஞ் சொன்னார்கள். அப்பால், மூவாயிரம் சொல்தாதுகளுக்கு கொடுக்கச்சொல்லி மூசே துக்கேன்வசம் கொடுத்துபோட்டார். அப்பால், வரிசையிலே வந்து பாதிரிகோயிலுக்குள்ளே வந்துபோனார் அங்கே கப்பல் மரினேயிகளும் முசியே பென்வாம் கப்பல் கப்பித்தானிருந்தான், அவனுடனே பேசிக்கொண்டிருந்து, அங்கேயிருந்து புறப்பட்டவுடனே மதாமும் வந்தார்கள். அவர்கள் முன்னே போனவுடனே என்னுடனே இப்போது வெகுமானம் பண்ணுகிறது எப்படியிருக்குது. உனக்கேற்க நன்றாய்க் காணுதா என்று கேட்டார். இந்தச் சண்டை வேளையிலே உற்சாகம் பண்ணவேண்டியதுதானென்று சொன்னேன். அப்பால் தேவனாம்பட்டணத்துப் பேச்சும் மமுதல்லிகான் தண்டுபேச்சு மிதுமுதலானதெல்லாம் பேசியிருந்து அவர் வண்டியின்பேரிலே ஏறிக்கொண்டு புதுச்சேரிக்கு வந்தார். நானுங் கூட புறப்பட்டு வந்துவிட்டேன். அப்பால் இராத்திரி மமுதல்லிகான் தண்டிலேயிருந்து குதிரைகள் நூறு மட்டுக்கும் செத்ததென்றும், சிப்பாய்களும் சமேதாரருமாய் இருநூறு இருநூற்றைம்பது மட்டுக்கும் உண்டென்றும் அன்வருதிகான் மகனை மிஞ்சிப்போய் சண்டைபண்ண வேண்டாமென்றும். இராமார் மமுதல்லிகான் தண்டிலே இருக்கிறதில்லை, திருவந்திபுர மலையண்டையிலேயும், அக்கின்நாயக்கன் காட்டிலேயும் போயிருக்கிறானென்றும், தண்டிலே நானூறு ஐந்நூறு குதிரைக்காரர் மட்டுக்கும் குதிரை சினியுடனே சுகுருய் புதுச்சேரி பிரான்சுக்காரர் வந்துவிடுவார்களென்றும், புதுச்சேரி முகமாயிருக்கிறார்களென்றும், தண்டிலே காயக்காரரும் சாவும் மிச்சமென்றும், குண்டு காயம்பட்டு ஓடின ஆனை செத்ததென்றும் இப்படியாகச் சேதி வந்தது இந்தச் சேதியை ராத்திரி ஒன்பது மணிக்குக் கபுறு சொன்னவிடத்திலே அவர் நிசாமன்முலுக்கு சமாசாரமும், அன்வருதிகான் இன்னும் சாகவில்லையாவென்று இது முதலாகிய சேதியெல்லாம் அவர் கேட்க அதற்குத் தக்கதாய் நானும் சொல்லிவிட்டு வந்தேன்.

*1746* ஆ டிசம்பர் மீ *22* உ க்கு அக்ஷய ஹு மார்கழி மீ *11*உ பிரகஸ்பதிவாரம்

இற்றைநாள் நடந்த அதிசய மென்னவென்றால்: மமுதல்லிகான் தண்டிலேயிருந்து வந்த நம்முடைய கபுறுகாரர் சொன்

னசேதியென்னவென்றால்: மமுதல்விகான் தண்டுக்கு அன்வரு திகான் காகிதம் ஒட்டைக்காரன் கொண்டுவந்து கொடுத்தான் என்றும் அதிலெழுதியிருந்த சேதியென்ன வென்றால் நாமிங்கே சண்டையை நிறுத்திச் சமாதானம் பேசுவோமென்றும், நீங் கள் அங்கே சண்டை மற்றதும் பண்ணத்தேவையில்லையென் றும் எழுதியிருந்தது வந்ததாய்க் கேள்விப்பட்டதென்று சேதி வந்து சொல்லி, பின்னையுந் தண்டில் முசியே பரிதி வந்து விழு கிறான் என்கிற கபுறு சுறுக்காயிருக்குதென்றும், முசே பரிதி பேர் சொன்னால் நடுங்குகிறதும் தண்டெல்லாம் அதலகுதல மாகிறமுதலாகிய சமாசாரங்கள் சொன்னானிதல்லாமல் பின்னை ஒருத்தன் வந்து சொன்ன கபுறுலேயானால் இங்கிலீசுக்கார ருக்கும் மமுதல்விகானுக்கும் பணுயிசாயில்லை யென்றும், தேவ னும்பட்டணம் குவர்னதோர் பேரிலே மமுதல்விகான் கோபித் துக் கொண்டதாகவும் தாங்களுக்கும் மற்றதாய் வந்த விடத்திலே உங்கள் சத்துருக்கள் வந்தால் நாங்கள் சண் டைக்குப் போகச்சே நீங்கள் கோட்டையிலேதாமூடிக் கொண்டிருந்ததென்ன? உங்கள் சாதி சவுரிய பானகனல்ல, நீங்கள் வியாபாரம் பண்ணுகிறதற்கு யோக்கியரே யல்லாமல் சண்டைக்கு யோக்கியரா? என்று காறி முகத்திலே உமிழ்ந்தா னென்றும், அவன் அனுப்பின வெகுமானம் வாங்காமல் திருப்பி விட்டானென்றும் பாளையமெல்லாம் பிரஞ்சுக்காரர் பேர் சொன்னால் கற்பத்துப் பிண்டங்கூட விழுந்து போகுதென்றும் இது முதலாகிய செய்தியும், பின்னையும் வாடிக்கையாய் மமு தல்விகான் அப்பால்பட்டேயிருக்கிறான் என்றும் பாளையத் திலே பொழுது விடிந்தால் வருகிறதென்று மிது முதலாகிய சேதிகள் சொன்னது எல்லாம் அந்தச்சேதி கொண்டுவந்த அந்தப் பறையனைக் கொண்டுபோய் முன்னே விட்டு அவனைத் தானே சொல்லச் சொல்லிவித்தேன். அதற்குத் துரையிருந்து கேட்டு அப்பால் என்......

*1746* ஆ டிசம்பர் மீ 25உ க்ஷய அக்ஷய ஸு மார்கழி மீ 14உ ஆதிவாரம்

இற்றைநாள் காலத்தாலே மாபூசுகான் அவர்கள் அமரம் பேட்டிலேயிருந்து அவன் தளத்துடனே அவ்விடம் விட்டுப் புறப்பட்டுச் சாத்தஞ்சேரி பணுயூர் அந்த வட்டாரங்களுக்குப்

போயிறங்கினுனென்றும் அவன் மமுதல்லிகான் தேவனும்பட்டணத்தண்டையிலே இறங்கியிருக்கிறவன் வரச்சொல்லியெழுதியனுப்பினுனென்றும், அதன்பேரிலே புதுச்சேரியின் பேரிலே கலாபம் பண்ணுகிறதற்கு வருகிருனென்றும், அன்வதிருகான் கூட வருகிருனென்றும் இரண்டாயிரம் குதிரைமட்டுக்கும் கூட வருகிறதென்றும், இந்தப்படிக்கு நாமனுப்பியிருந்த வேவுகாரர் வந்து சொன்னுர்கள். அந்தக் கபுறு நான் போய் துரையுடனே சொன்னேன். அதற்குத் துரையவர்கள் இருந்துகொண்டு எனக்கு அந்த வழி மார்க்கம் சொல்லவேணுமென்றும் சொன்னுர். அந்த வழி மார்க்கம் ஆற்காட்டுக்குப் போகலாம். இப்படியும் வரலாம். ஆற்காட்டுக்குப் போகிறதானுல் இந்த வழியாய் பின்னை எது செவ்வையான மார்க்கம் என்று கேட்டார். அதற்கு நான் சொன்னது: அமரம்பேட்டிவிருந்தாப்போலே செவ்வையாய்ச் செங்கல்பட்டு, கருங்குழி, பாளையம், மதுராந்தகம், புலம்பாக்கம் இந்த மார்க்கமாய் சூனம்பேட்டிவிருந்து, ஆலத்தூர், வழுதாவூர் மார்க்கமாய் வரவேண்டியது. இந்த மார்க்கம் வரவேண்டியதற்கு அப்படி மேற்கே போகிறபடியினுலே ஒன்று ஆற்காட்டுக்குப் போகவேணும் இல்லாவிட்டால் பயந்து வெகுதூரம் மேலண்டைக்குப் போய் அப்பால் கிழண்டை வரவேணுமானபடியினுலே சொல்லுகிறேனென்று சொன்னேன்.

அப்படிதான் ஆகவேணும். இல்லாவிட்டால் அத்தனை தூரம் போகவேண்டியதென்ன விருக்கிறதென்று சொல்லிவிட்டு அப்பால் கூடலூரிலே எத்தனை சலங்கிருக்கிறது? ஆறெப்படி? ஆற்றுக்கு மேல்பாரிச முண்டா? கொத்தளம் ஆற்றுக்கு எந்தண்டையிலே யிருக்கிறது? என்று கேட்டார். ஆற்றுக்குத் தெற்கே ஒன்று, வடக்கே ஒன்று கொத்தளமிருக்கிறது. ஆற்றோரம் மேல்பாரிசத்திலே சலங்குகள், பாறு பண்ணைகள், சுலுப்புகளிருக்கின்றன. அதற்கடுத்தாப்போலே பட்டணவர்கள் வீடுகள், சட்டைக்காரர் வீடுகளிருக்கின்றன என்று சொன்னேன். உனக்கு நன்ருய்த் தெரியுமாவென்று கேட்டார். நான் பத்துதர மிருபதுதரம் கூடலூரிலிருந்து படகின்பேரிலேறி தேவனும்பட்டணத்திலே இறங்கினதுண்டு. தேவனும்பட்டணத்திலேயிருந்து ஒற்றைமரத் தோணியின் பேரிலேறி கூடலூரிலே இறங்கினதுண்டு. அப்போது பார்த்ததே

யல்லாமல், குறிப்பாய், நன்ருய்ப் பார்த்ததில்லையென்று சொன்னேன். நாஞெருதரம் மேஸ்தர் பிட்டி இருக்கும்போது போய் இருக்கிறேன். எனக்குமப்படியே ஞாபகம் தோற்றுகிறது. ஆனாலுமிந்தக் காரியம் நன்ருயறியவேண்டியது. அதற்கேற்ற மனிதரையனுப்பி, திட்டமாய் விசாரித்து வந்து சொல்லத்தக்கதாகவும் அதற்கேற்ற பேரை அனுப்பென்றும் சொன்னார். மமுதல்லிகான் பாளையமிறங்கியிருக்கிற கோண்டூர் தோப்புக்கும் அரியாங்குப்பத்துக்கும் பாட்டைவழியெழுதி வரயென்று சொன்னார். அந்தப்படிக்குச் சேறு, வயல்வெளியில்லாமல் சற்று சுற்றுவழியாய் ஒரு வழியும், சற்று வாய்க்கால் வரப்பு மிருக்கிறது. சமீப வழி ஒரு வழியுமொன்று, பத்து நாழி வழியுமொன்று, இருகாத வழியுமெழுதிக்கொண்டு போய்க் கொடுத்தேன். அதைப் பார்த்துக்கொண்டு, ஒன்றுக்கொன்று வெகு சுற்றிருக்கிறது என்று சொல்லிவிட்டு இற்றை நாள் ராத்திரி அவர்களுக்குச் சற்றே பயம் வருவித்திருக்கிறேன் என்று சொல்லிவிட்டு அரியாங்குப்பத்துக்குப் போகிறேன் என்று சொன்னார். அப்போது நான் சொன்னது: நேற்று ராத்திரி மமுதல்லிகான் மனுஷன் வந்தானே அவனுக்குக் காகித மூஸ்தீதாயிருக்குதே அவனை அனுப்பிவிட வேணுமென்று சொல்லியிருந்தீர்களேயென்று ஞாபகம் பண்ணினேன். அந்தக் காகித வயணமென்னவென்று கேட்டார். காகித வயணம் நீரெழுதின காகிதம் பார்த்துக்கொண்டு சகலமுந்தெரிய வந்தது. இப்பவும், நீரெழுதின காகிதத்திலே சினேகம் பெருக வேணுமென்று நினைக்கிறோமென்றும் உங்கள் காகிதத்துக்கு நாம் எதிர்பார்த்துக்கொண்டு உங்கள் கிராமத்தின் பேரிலே வந்து சேதம் பண்ணாமல் உங்கள் மனுஷருக்கு உபத்திரவம் பண்ணாமல் நாமப்புறமாய் தேவனாம்பட்டணத்துக்கு அடுத்தாப்போலே யிறங்கியிருந்த நம்முடைய தளத்தின்பேரிலே உங்களவர்கள் வந்து சண்டைபோட்டார்களென்று எழுதினீர்களே யப்படி நடந்ததில்லை. நாங்களெங்கள் சத்துருவின்பேரிலே நாங்கள் சண்டைக்குப்போனால் உங்கள் தளம் வந்து எங்கள் தளத்தின்பேரிலே சண்டை பண்ணி மனுஷரை சேதமாக்கினதேயல்லாமல் நாங்களாய் நீங்களிறங்கியிருக்கிற பாளையத்தின்பேரிலே வந்து சண்டை போட்டதில்லையென்றும்

நீங்களெழுதின காகிதத்திலே நடந்து போனதெல்லாம் போச்சுது, இப்பவும் சினேகம் பிரதானமாய் எண்ணியிருக்கிறோம். அந்தப்படிக்குச் சமாதானம் பண்ணிக்கொள்ளுகிறதே யானால் நாமிதோ ஆசீராயிருக்கிறோமென்று எழுதினீர்களே, நாமுமப்படிதான் சினேகம் பிரதானமாய் எண்ணியிருக்கிறோமேயல்லாமல் மற்றப்படி பின்னையுமொன்று மெண்ணினோமல்ல. இதற்கு நடக்கவேண்டியதென்ன மார்க்கமோ அதை நீங்கள் அறிந்து எழுதினால் அந்தப்படி நடந்துகொள்ள யுக்தமாய்க் காணுமானால் அப்படியே நடந்துகொள்ளுகிறோமென்று அப்பிறமும் உபசாரமாய் எழுதியிருக்குதென்று சொன்னேன். நல்லது, வந்த மனிதனுக்கு இரண்டுகெசம் சகலாத்துக் கொடுக்கவேணுமென்று சொன்னீயே அந்தப்படி வந்திருக்குதாவென்று கேட்டார். வந்திருக்குதென்று சொன்னேன். அவனையுமழைத்துக்கொண்டு சகலாத்தும் வெகுமானமும் பண்ணி காகிதமும் கொடுத்து அவனோடு கூட வந்தவனுக்கு ஒரு ரூபாயும் கொடுத்துச் சேவகரைக் கூட்டி அமிசபாக்கங் கடக்கக் கொண்டுபோய் விட்டுவரச்சொன்னார். அந்தப்படிக்கு அனுப்பிவிட்டேன். அப்பால் துரைகத்தால் பண்டிகையானபடியால் கோவிலுக்குப் போனார். நானும் பாக்குக் கிடங்கிற்கு வந்தேன். கோவிலுக்குப் போய் வந்து கபே குடித்தானவுடனே என்னை அழைக்கச் சொன்னார். நான் போனவுடனே ரங்கப்பா, பட்டணத்திலே தானியமில்லாமலிருக்கிறதே இதற்கேதாகிலும் யோசனை பண்ணியாவென்று கேட்டார். அய்யா, நான் இதற்கு முன்னேயிருக்கிற காரியத்தைப் பார்த்து நீங்கள் இனிமேலாவது சொல்லுவீர்களென்று யோசனை பண்ணி, கனூர்பேட்டை, பென்னாத்தூர் மீர்குலா முசேன்தாலுக்கிலே இரண்டாயிரம் வராகனுக்குத் தானியமும் கேட்டு விலையும் பேசிக் கொண்டு வருகிறதற்கு விழுப்புரத்தின் பேரிலே வரவேணும். அந்த யோசனையைப்பண்ணி அதற்கு மார்க்கங்காணாமல்தான் சும்மாயிருக்கிறேனென்று சொன்னேன். அதற்கு வேறே மார்க்கமாய்க் கொண்டுவரப் போகாதாவென்று கேட்டார். தேவனாம்பட்டணம் பேர் சொன்னால் கொண்டுவர ஸரமில்லாமற்போல் கொண்டுவர மார்க்கத்தைக் காணோம் என்று சொன்னேன். அதற்குத் துரை சொன்னது: வேறே வழியாகக் கொண்டுவரப் போகாதாவென்று கேட்டார். மாட்டுக்காரர் என்ன சொல்லு

வார்களோ எந்தவழி கொண்டுவந்தாலும் அரண்மனைச் சீர்மைதானல்லோவென்று சொன்னேன். ஆனால் தேவனும்பட்டணத்துக்குப் போகுதென்று எண்பித்துச் சமீபத்திலே வந்தாப்போலே இப்படி திருப்பிவிடப்போகாதாவென்று சொன்னார். நல்லது சொல்லிப்பார்க்கிறேன். ஆனால் நம்முடையவர்கள் தைரியமில்லாமல்படிக்குப் போனதினாலே பிரயாசமென்று சொன்னேன். அது மெய்தான். அது எப்படியுண்டோ அப்படிப் பாரென்று சொன்னார். அதற்கு நான் பிரயாசைப்படுகிறதற்காலோசனை யென்ன. ஆனால், இப்போது உங்களுக்குச் சகல விதத்திலேயுமுங்கள் கீர்த்திக்குத் தேசங்களெல்லாம் பரவியிருக்கிறது. இதனாலேயும் கீர்த்தி வரவேணுமென்று என் மனதிலே ராத்திரியும் பகலும் சுவாமியைப்பார்த்து வேண்டிக்கொள்ளுகிறேனென்றும், முசியே லெனுவாருக்கு முன்னே யிது முன்னிலையாய்க் கீர்த்தி வந்தது. தீர்வையை விட்டுவிட்டானென்றும், தன் கைப்பணங்கொடுத்துத் தானியம் அழைப்பித்தாவென்றும் கருப்பிலே ரக்ஷித்தானென்றும் பேர் வந்தது. மற்ற எந்தக் காரியத்திலே எப்படி நடப்பித்தாலும் சுவையில்லை தானியம் வந்து ஏழைச்சனங்களுக்குச் சந்தோஷம் வருத்தி வைக்கிறபடியினாலேயும், கருப்பானபடியினாலேயும் இந்த வேளையிலே உங்களுக்குக் கீர்த்தி. இது முன்னிலையில் விஸ்தரித்துவரவேணுமென்றும் சுவாமியைப் பிரார்த்திக்கிறேன் என்று சொல்லி இப்போது மூன்று படி கொண்டு மூன்றரை படி விற்கிறது. உங்களை யிந்த வூரிலேயும் பின்னையுந் தெற்கு வடக்கு இருபதுங்காத வழிமட்டுக்கும் ஸ்தவுத்தியமாய்ப் பண்ணுகிற சனங்களை ஒரு மிதத்திலேயில்லை. நான் சொன்னால் ஸ்தவுத்தியமாயிருக்கும். அப்பால் நீங்கள் விசாரித்தால் தெரியுமென்று சொன்னேன். அது மெய்தானென்று சொல்லி அவர் சொன்னதென்னவென்றால்: நல்லது இப்போது வெளியிலேயிருந்து அழைப்பிக்கிற நெல் மூன்று படி விழுமா என்று கேட்டார். அப்படி விழமாட்டாது. அது அழைப்பித்துச் செலவு சித்தாயமெல்லாம் போட்டுப் பார்த்துச் சொல்லவேணுமென்று சொன்னேன். அதற்குத் துரையவர்கள் சொன்னது: என்ன விழுந்தாலும் விழட்டும் மூன்றரை படி விற்றுத் தீரவேணும். அதற்குள்ள நஷ்டம் என்ன வந்தாலும் நம்முடைய கணக்கிலே எழுதிக்கொள்ளுகிறது என்றும் சொல்லி அதன் அளவிலே நாலாயிரம் ஐயாயிரம்

நஷ்டம் வந்தாலும் பாராமல் தானியமழைப்பித்து மூன்றரை படி விலைக்கு விற்றுத் தீரவேணும். அப்படிச் செய்து தீர வேணும். இதற்கு அன்னபிக்கார் பண்ணவேணுமோ அந்தப் பிரகாரம்பண்ணி நடத்து. அது உன்னுடைய கார்கு. உனக்கு எப்படிச் சம்மதியோ அப்படி நடத்து என்று சொல்லி இன்றைய ராத்திரிக்கும் மமுதல்லிகான் பவுஞ்சுப்படி யிப்படி காபுருப் படப்பண்ணிவிக்கிறேன் என்று சொல்லி, நான் வேறே எத்தனம்பண்ணி நடத்துகிறேன். துலுக்கனும் ஏமாறினைப் போலே யிருக்கவேணும். தேவனாம்பட்டணம் மூசே ஈன்து (Ms. Hinde) குவர்னதோரும் ஏமாறிப்போய் மோசம் வந்ததென்று கோட்டையை ஒப்புவித்துப் போடவேணு மென்று சொன்னார். அதற்கு நான் சொன்னது: சுவாமி உம்முடைய பங்கில் இருக்கிறதினாலே எவரெவர்கள் அதிக் கிரமமாய் நடத்தினவர்களுக்கு ஆக்கினை, கொடுக்கிறார் ஆனபடியினாலே, நீரெத்தனம் பண்ணினபடிக்கு நடக்கிற தற்கு அனுமானம் என்னவிருக்கிறது என்று சொன்னேன். அதன்பேரிலே பின்னையும் அந்தப்பேச்சு மிந்தப்பேச்சுமாய் நடந்தது. அதிலே சுவாரசியமில்லாத பேச்சு எப்போதும் நடக் கிறதானபடியினாலே எழுதவில்லை அப்பால் துரை சொன்னது: நான் அரியாங்குப்பத்துக்குப் போகிறேன். நீ இவ்விடத்திலே இரு. வருகிற காரியம் கபுறுகளெல்லாம் விசாரித்துக்கொண்டு இரு. அகத்தியமான காரிய முண்டானால் நீ வா என்று சொல் லிவிட்டு அரியாங்குப்பத்துக்குப் போனார் நானும் பாக்குக் கிடங்குக்குப் போயிருந்து வீட்டுக்குப் போனேன்.

*1746* ஆ டிசம்பர் மீ *26* உக்கு அக்ஷய ஞு மார்கழி மூ 15 உ சோமவாரம்.

இற்றைநாள் குவர்னதோர் அரியாங்குப்பத்துக்கு நேற் றுப் போனவிடத்திலே அவ்விடத்திலிருந்தபடிக்கு மாபூசுகா னும் அன்வருதிகான் முதலாகிய பாளையம் வந்து உத்திர மேலூர் சாலபாக்கத்தண்டையிலே இறங்கினதாய்ச் சேதி வந்தது. இதெல்லாம் பெருமுக்கல் மீயாசாயபு சொல்லியனுப் பினதென்ன வென்றால், நம்மை மாபூசுகான் புதுச்சேரியின் பேரிலே தான் மோகிம் போகிறதாயும் நம்மையுங் கூட வரச் சொல்லச் சொல்லியனுப்பினான். உங்கள் துரைக்கும் நமக் கும் முப்பது வருஷமாய் சினேகம் நடக்குது. அவர்

மனது அபிப்பிராய மறிந்கே எழுதியனுப்புமென்றும் உங்களுக்கும் நமக்கும் ஏகக்கிரக கிருத்தியமாய் நடக்கிறது. ஆனபடியினலே துரைக்கு இதைத் தெரியச் சொல்லி அனுப்பினல் அந்தப்படிக்கு நடந்துகொள்ளுகிறேமென்றும், அவர் போகவேண்டாமென்றல் போகவில்லையென்றும், போகச் சொன்னல் போகிறேமென்றும் இப்படியாகப் பெரியபிள்ளைக்கு எழுதி வந்ததாய்ப் பெரியபிள்ளை வந்து என்னுடனே சொன்னர். நல்லது, துரையவர்களுக்கு எச்சரித்துப் பதிலுத்தரவு சொல்லுகிறேனென்ற சொன்னேன். இந்தக் கபுறும் துரைக்குச் சொல்லவேணுமேயென்ற நானும், கிருஷ்ணராயரும், மதனுந்த பண்டிதனும் அரியாங்குப்பத்துக்குப் பத்து மணி வேளைக்குப் போனேம். துரையைக் கண்டுபேசி மேலே எழுதின சேதியெல்லாம் துரையுடனே யெச்சரித்தேன். அவருக்கு இந்தச் சேதி கேட்டு நல்லது ஆற்காட்டுச் சேதியொன்றும் வரவில்லையாவென்ற கேட்டார், இந்தமட்டுக்கும் வந்ததில்லை என்ற சொன்னேன். அதற்குத் துரையிருந்துகொண்டு அலேவு சான் ஏசியே என்ற சொன்னர். நல்லதப்பா ஊருக்குப் போகிறேன். நீங்கள் எப்போதுவருகிறீர்களென்ற கேட்டேன், நகைத்துக்கொண்ட வாக்கில், நான் சேவகத்தனத்திலே வந்து சண்டைக்குப் போகத்தக்கதாக அட்டையிலே வந்திருக்கிறபோது இனிமேலேது ஊருக்கு வருகிறதென்று சொன்னர். அப்பால் நீ அங்கே இருக்கவேணும். ஊரிலே சமஸ்த கபுறும் விசாரித்துக்கொள். அகத்தியமான கபுறு இருந்தால் வாவென்று சொன்னர். இல்லாவிட்டால் அங்கேதானே இருவென்று சொல்லிப் போகச்சொன்னர். அந்தப்படிக்கவாள் கையில் அனுப்புவித்துக்கொண்டு புறப்பட்டுப் பதினென்றரை மணிக்கு ஊரேவந்து சேர்ந்தோம்.

இற்றைநாள் சாயங்காலம் குவர்னதோர் அரியாங்குப்பத்துக்குப் போயிருந்தவர் ஊரே வந்தார். வந்தவுடனே என்னையழைத்து ஏதாகிலுஞ் சேதி வந்ததா என்று கேட்டார். பறங்கிப்பேட்டையிலே யிருந்து நம்முடைய தொக்தேர் ஓலை வந்ததென்று சொன்னேன். சேதி என்னவென்று கேட்டார். ஒலாந்துக்காரரும் இங்கிலீசுக்காரருமாய்க் கூடி யிங்கு பிறப்பிக்கிற சேதி யென்னவென்றல், இங்கிலீசுக்காரருக்கு இருபத்தைந்து கப்பல் ஐந்தாந் தலைச்சேரியிலே வந்திருக்கிறதாகவும்,

பங்காளத்திலேயிருந்து பதினொரு கப்பல் இவ்விடத்துக்கு வருகிற தென்றும், கூடலூரிலே பண்டகசாலை மற்றதும் முஸ்தீது பண்ணிவைக்கிறார்களென்றும், மமுதல்லிகான் பாளையத்தின் பேரிலேயும் தேவனாம்பட்டணத்தின்பேரிலேயும் ஊரிலே யுண்டான சனங்கள் எல்லாம் புறப்பட்டு வந்துவிட்டார்களென்றும் இருக்கிற சொல்ததுகளெல்லாம் வெளிப்பட்டு வந்துவிட்டபடியினாலே கோட்டையின்பேரிலே அந்த வேளையிலே பவுஞ்சு போனாலே கோட்டை கைவசமாய்ப் போமென்றும் இப்படியாக ஒலாந்தாக்காரரும் இங்கிலீசுக்காரரும் பேசிக்கொள்ளுகிறார்களென்றும், புதுச்சேரியிலே இருக்கிறவர்கள் கூட இங்கிலீசுக்காரர் பாரிசமாய்ப் பேசுகிறார்களென்றும், மமுதல்லிகான் சென்னப்பட்டணம் கோட்டையையே வாங்கினாலே யல்லாமல் போகிறதில்லையென்றும், விஸ்தாரமாய்ப் பவுஞ்சு முஸ்தீதுபண்ணுகிறார்களென்றும் மாபூசுகானும் வருகிறானென்றாப்போலேயும் இப்படியெல்லாம் எழுதிவந்த சேதி சொன்னேன். நல்லது, மாபூசுகான் பவுஞ்சு எங்கே வருகிறதென்று கபுறு இருக்குதென்று கேட்டார். மதுராந்தகம் வந்ததாய் இப்படி வருகிறதாய்ச் சேதி சொல்லுகிறார்களென்று சொன்னேன். நல்லது கூடலூருக்கு ஆளனுப்பினையாவென்று கேட்டார். அனுப்பினேன். அவர்கள் உற்ற கபுறு வந்து சொன்னால் ஐம்பது வராகன் கொடுக்கிறோமென்று சொன்னேன். அதன்பேரிலே துரை இருந்துகொண்டு நல்ல காரியம் பண்ணினேமென்று சொல்லிவிட்டுப் போவென்று சொன்னார்.

இற்றைநாள் ராத்திரி பத்து மணிக்கு நான் பாக்குக்கிடங்கிலேயிருந்து வீட்டுக்குப் போனேன். போகையிலே வழுதாவூர் வாசற்படியிலே யிருக்கிற கோர்ப்பிளானும் (M. Courblau) ஒரு சட்டைக்காரரும் வந்து உன்னுடைய மனுஷனும் தண்டு சமாசாரம் கொண்டுவந்தோமென்று வாசற்படிக்கப்புறமிருந்து கூப்பிடுகிறார், கதவைத் திறக்கிறதாவென்று துரையவர்களைக் கேட்கவந்தோமென்று சொன்னார்கள். நல்லது, வாருங்கோளென்று அழைத்துக்கொண்டு அவருக்குக் கபுறு அனுப்புவித்து அவருத்தாரத்தின்பேரிலே உள்ளே போய் அவருடனே இஸ்கோர்ப்பியோமின் இரண்டு பேர் தண்டு சமாசாரங் கொண்டுவந்தார்கள். வாசற்படியிலே வந்து கூப்பிட்டார்கள் என்று வாசற்படிக்காரன் கோர்ப்பிளா

மும் (M. Courblan), சட்டைக்காரனும் வந்து சொல்லுகிறார்களென்று சொன்னதற்கு அவர்களை உள்ளே விடச்சொல்லி கோற்பிளாமுக்குச் சொல்லியனுப்பினர். அவன் மறுபடி வருகிறமட்டுக்கும் என்னை இருக்கச் சொன்னர். அதன் பிற்பாடு போன கோற்பிளாம் கதவைத் திறந்துவந்தவர் சேவகரிரண்டுபேரையும் உவளே அழைத்து, துரை வீட்டண்டையிலே கொண்டுவந்துவிட்டார்கள். அப்பால் அவர்களை அழைத்துக்கொண்டு துரை முன்னேவிட்டுச் சொன்ன சேதி என்னவென்ருல்: மாபூசுகான் பாளையம் திருப்பாபுலியூரிலே சாயங்காலம் வந்து சேர்ந்ததென்றும், நாளைக்கு மமுதல்லிகான் பாளையத்தோடே கூடப் போய்ச்சேருவார்களென்றும் சொன்னுர்கள். அந்தச் சேதியைத் துரைக்குச் சொன்னேம். துரை அதற்குச் சொன்னது: இப்போது தானே இவர்களுடனே இரண்டு பேரைக் கூடக் கூட்டி மறுபடியும் மாபூசுகான் பாளையத்துக்குப் போய் நடக்கிற சமாசாரங் கொண்டுவரச் சொல்லென்று சொன்னர். வந்தவர்களுடனேகூட பின்னையும் இரண்டுபேர் கும்பினிச் சேவகரையும் வெங்கய்யனையும் கூடக் கூட்டி அனுப்பி வைத்தேன். அப்போதானே பதினெரு மணி வேளைக்குத் தெத்து வாசற் கதவு திறந்து அப்பாலே விட்டுவிட்டார்கள். அதன் பிற்பாடு நான் வீட்டுக்குப் போய்விட்டேன்.

1746 ஆ டிசம்பர் மீ 27 உ க்ஷய வரு மார்கழி மீ 6 உ மங்களவாரம்

இற்றைநாள் காலத்தாலே முசே துபுவா என்னை வரச் சொன்னபடியினலே அவர் வீட்டுக்குப் போய் அவ்விடத்திலே அவரில்லையென்று சொன்னபடியினலே துரை வீட்டுக்கு வந்தேன். துரையிருந்துகொண்டு அன்வருதிகானண்டைக்குப் போனவர்களின்னம் வரவில்லையேயென்று கேட்டார். இன்றைக்குச் சாயங்காலம் வருவார்களென்று சொன்னேன். தண்டுபோன சாடை யென்னவென்று கேட்டார். பாதிராப்பூலியூரிலேயிருந்தாப்போலே புறப்பட்டு விழுப்புரத்தின் பேரிலே வந்து தேவனும்பட்டணத்தண்டையிருக்கிற கொண்டூர் தோப்பிலே இறங்கியிருக்கிற மமுதல்லிகான் தண்டிலே கூட அவர்கள் பாளையமும் போய்ச்சேருமென்று சொன்னேன்.

இன்றையதினம் போய்ச்சேருமா என்று கேட்டார். போய்ச் சேருமென்று சொன்னேன். எப்படி சேருமென்று கேட்டார். முக்காத வழி உண்டென்று சொன்னீயே முக்காத வழி போய்ச் சேருமா என்று கேட்டார். சேருகிறது பிரயாசம் உம்முடைய பயத்தினாலே பொழுது விடிய பத்து நாழிகை என்னச்சே புறப் பட்டு ஓட்டமாயோடி அந்தப் பாளையத்தோடே போய்ச் சேரு வோமென்கிற நினைப்பினாலே போய்ச் சேர்ந்து போவான் என்று சொன்னேன். மெய்தானென்று ஒத்துக்கொண்டார். அப்பால் கூடலூர் பிடிக்கவேணுமே அதற்கு யோசனையென்ன போகலாமா? என்று கேட்டார். கூட லூரிலே தமிழ்ச்சேவகரே அல்லாமல் வெள்ளைக்காரரில்லை. வாசற்படியிலே சட்டைக்காரர் மாத்திரம் ஐந்தாறு பேரும் ஒரு வெள்ளைக்காரனும் இருக்கிறான். கடற்கரையிலேயிருக் கிற கொத்தளத்திலே மாத்திரம் இரண்டு வெள்ளைக்காரரும் பவ்வத்துசட்டைக்காரரும், சிறிது தமிழச்சேவகரும் இருக்கிறார் களாம். போகிறதற்குக் கடலின்பேரிலே சலங்கின்பேரிலே போய், முகத்துவாரத்துக்குள்ளே போய் நுழைந்து கூடலூரிலே போயிறங்கிவிடலாமென்றால் கற்நாடகச்சேவகர் முன்னூறு பேரும் வடக்கேயிருந்து வந்தவன் மல்ராசா என்கிறவனுமிருக் கிறார்கள். அவர்கள் வெள்ளைக்காரரைக் காணும்போதே புறப்பட்டு ஓடிப்போவார்கள். அதைப் பத்திரப்படுத்திக் கொண்டு அப்பால் தேவனாம்பட்டணத்தின்பேரிலே இராச காரியம் பண்ணலாமென்று சொன்னேன். அது மெய்தான் என்று ஒத்துக்கொண்டு மூசே பரீதியை அழைக்கச் சொன்னார், இதிலே நானிருந்துகொண்டு எனக்கு ஒன்று தோன்றுகிறது என்று சொன்னேன். என்னவென்று கேட்டார். போய் பூருகிற தற்கு, என்ன பூரலாம். சத்துருக்கள் கப்பல் கடலின் பேரிலேயும் துலுக்கர் சுற்றிலும் இருந்துகொண்டிருந்தால் வருத்தம். இரண்டு பாரிசத்திலேயும் சுற்றிக்கொண்டில்லாமல் ஒரு பாரிசத்திலே மாத்திரமானால் கப்பல் வந்தாலும் பயமில்லை. நிருவாகம் பண்ணிக்கொள்ளலாம் கடல்பாரிசம் கப்பல் வராமல் துலுக்கர் மேலண்டையிலே எவ் வளவு தளத்துடனே வந்து துலுக்கர் சுற்றிக்கொண்டாலும் நிருவாகம் பண்ணிக்கொள்ளலாம். இரண்டு பாரிசமுமானால் வருத்தமென்று தோன்றுகிறதென்று சொன்னேன். ஆசவே பேசோன் என்று சொல்லி இதற்கு யோசனை பண்ணிக்கொண்

டிருக்கிறபோது முசே பரீதி வந்தான். அவனுடனே இந்த நியாயமெல்லாம் சொல்லென்று சொன்னர். எனக்குத் தோன்றினபடிக்கு, முன் சொன்ன பிரகாரமெல்லாம் சொன்னேன். அது மெய்தானென்று ஒத்துக்கொண்டு, புறேவிசியோம் வேணுமென்று கேட்டார். தானியமிருக்குதென்று சொன்னேன், அதிலே துரையிருந்துகொண்டு, முன்னேதானே எழுதிக் கொடுக்கிறுன் அத்துடனே சேர். அந்த யோசனை கவையில்லை யென்று சொல்லி ஆற்றிலே தண்ணீர் எவ்வளவு என்று கேட்டார். அறையளவு தண்ணீர்க்குக் குறைச்சலில்லை. அதற்கு உசந்து இரண்டு பாபம் மட்டுக்கும் உண்டென்று சொல்லி இது சென்னப்பட்டணம் பிடித்தவுடனே ஆனல் போனவுடனே கைக்கு வருமென்று சொல்லி அதற்கு முசே லபூர் தோனே போராட்டத்தைத்தொட்டு அப்போது கூடாமற் போச்சுது. இல்லாவிட்டால் ஒரு அறுமுசு வேளையிலே ஆகிப் போகிற காரியம். இப்போது துலுக்கரைத்தொட்டு அவர்களுக்கு இத்தனை பலமும் நமக்கு இத்தனை யோசனைக்குமிடமாயிக்குதென்று சொல்லி, அல்லவென்று தேவனும்பட்டணம் வாங்காமலிருந்தால் புதுச்சேரிக்கு எந்நேரமும் போராட்டமுண்டாயிருக்கும். அதில்லாமலிருந்தால் வருகிற இங்கிலீசுக் கப்பல்காரருக்கு நிற்கிறதற்குத் தாவில்லாமலிருக்கும். அதனலே வருகிறவனுக்குப் பலவீனமென்று சொல்லி இப்படி எனக்குத் தோற்றுது. அப்பால் உங்கள் சித்தமென்னமாயிருக்குதோ தெரியாதென்று சொன்னேன், நீ சொல்லுகிற வார்த்தை நியாயந்தானென்று சொன்னர். முசியே பரீதியைப் பார்த்து எப்படியிருக்குதென்று கேட்டார். அதற்கு முசியே பரீதி சொன்னது: நன்றாயிருக்குது. ஆனல் துலுக்கர் போய்விட்டாலும் அல்லது இங்கிலீசுக்காரர் கப்பல்கள் வராதேபோனலும் செய்யலாமென்று சொன்னர். அதன் பேரிலே சாப்பாட்டு வேளையாச்சுதென்றெழுந்துபோனர்கள், அப்பால் நான் வீட்டுக்கு வந்தேன்.

இற்றைநாள் சாயங்காலம் ஆறுமணிக்கு மாபூசுகான் மமுதல்விகான் பாளையம் போய்ச்சேர்ந்தானென்றும், மமுதல்விகான் எதிர்கொண்டுவந்து அழைத்துப்போனுன் என்றும், தண்டு போய்ச் சேர்ந்தவுடனே கொத்தளத்தின்பேரிலே இருபத்

தொரு பீரங்கிப் போட்டார்களென்றும், கோட்டையின் பேரிலே இருபத்தொரு பீரங்கிப் போட்டார்களென்றும், மமுதல்லிகான் பாளையத்திலே மூன்று பீரங்கிச் சுட்டார்கள் என்றும், மமுதல்லிகான் பாளையத்தின் பிறகே மாபூசுகான் பாளையம் தண்டிறங்கினதாகவும், சேவகத்துக்குக் காத்துக் கொண்டிருக்கிறது. ஐந்நூறு குதிரையும், பின்னையும் ஆயிரம் குதிரையும் இவர் சேவகத்துக்குள்ளே யிருக்கிறது கூட ஆயிரங் குதிரை உண்டென்று ஏகத்துக்கு மாபூசுகான் பிறகே வந்தது. ஆயிரத்தைந்நூறு குதிரை உண்டென்றும் நாலாயிரம் ஐயாயிரம் ஸ்தோமம் உண்டென்றும், பத்து பதினைந்து பீரங்கி உண்டென்றும் நானூறு ஐந்நூறு சாயிலுண்டென்றும் இப்படியாக வந்து இராத்திரி ஒன்பது மணிக்கு நாமனுப்பியிருந்த ஐந்து பேர் வளையற்காரரிலே இரெண்டு பேர் வந்து சொன்னார்கள். அந்தக் கபுறு ராத்திரி பத்து மணிக்குத் துரையுடனே சொல்லிவிட்டு வீட்டுக்கு வந்தேன்.

1746 ஆடு டிசம்பர் மீ 3)-உ அக்ஷய ஞூ மார்சழி மீ 19உ வெள்ளிக்கிழமை

இற்றைநாள் மத்தியானத்துக்குள்ளாக வந்த சேதியென்னவென்றால்: நேற்றுராத்திரி மாபூசுகான் மமுதல்லிகான் பாளையத்தின்பேரிலே முசே பரதியுஞ் சொல்தாதுகளும் வந்து விழுந்தார்களென்று அதல குதலப்பட்டு அறக்காரராய்ப் போய் விசாரித்து வந்து இல்லையே என்று வந்த பிற்பாடு சுவஸ்தப்பட்டு அறக்காறுகானுக்கு இன்னும் நாலுபேருக்கு அவ்வைந்து ரூபாய் கொடுத்தானென்று கபுறு வந்தது. கூடலூருக்குச் சலங்கின்பேரிலே போகத்தக்கதாக யோசனைபண்ணித் தீர்ந்தது. இதற்கு முசியே பரதி, லத்தூர்கூட இருந்து கோன்சேல் பண்ணித் தீர்த்தார்கள்.

அந்தப்படிக்கு என்னை அனுப்புவித்துச்சமாசாரம் அழைப்பிக்கச் சொன்னபடிக்கு நானும் போகிறவனுக்கு உத்தியோகமுங் கொடுக்கிறோமென்று உடன்படிக்கைப்பண்ணி அனுப்பினேன். நாளை மூன்றுஞ் சாமத்துக்குக் கபுறு கொண்டுவருகிறேன் என்று போனான்.

இற்றைநாள் ஆற்காட்டுக்கு உசேன் சாயபுக்கு ஒரு காகிதமும், வக்கில் சுப்பய்யனுக்கு ஒரு காகிதமும், முசியே கேஞ்சாமுக்கு ஒரு காகிதமும் அவர்கள் படிக்கிறதற்குப் பதினேந்து லிவுறும், எழுதுகிறதற்குக் காகிதமும், தேபுட்டியுமனுப்புவித்தேன். சாயங்காலம் அன்வருதிகான் காகிதமும் நம்முடைய மானேசியும் அவர்கள் மனுஷன் தோபேசான்சியும் முன்னே வந்து இருபது ரூபாயும் நாலு பெகசம் சகலாத்தும் வாங்கிப் போனவன்தானே வந்தார்கள். காகிதம் மத்தலபு; தகப்பனுனவன் பிள்ளையை ஒரு வஸ்து கேட்டால் கொடுக்கப்போகாதாவென்றும், தான் வருகிறமட்டுக்கும் சென்னப்பட்டணம் கோட்டையைக் கொடுக்காவிட்டால், நான் வந்த காரியம் விபலமானுல் எப்படி அதன்பேரிலே நான் புறப்பட்டு வந்தால் மெத்த அவமானமாச்சேயென்று மிது கொடுக்கிறேமென்றும் எழுதினுல் வருகிறேமென்று மிது முதலாகிய சேதி எழுதி வந்தது. இந்தச் சேதியைத் துரைக்குச் சொன்னேம். பறங்கிப் பேட்டை கில்லேதாரன் (பேதாஸ்ரான்) சேக்கு ஆதாம் என்கிறவன் என் பேருக்குக் காகிதமெழுதி வேலாயுதப்பிள்ளையையுங்கூட அனுப்பினதற்கு வருகிறதற்குக் காரியம் ஆகாதே போனுல் இறுக்கிக்கொள்ளாதபடிக்குப் பரவசம் கேட்டுவர, வந்தவர்களுக்குத் துரை காகிதம் பரவசமாய்ச் சுகமாய் வரலாமென்றும் எனக்குக் காகிதம் தாமெழுதின வயணமும் வேலாயுதப்பிள்ளை சொன்ன பேச்சும் துரையவர்களுடனே எச்சரித்து அவர் காகிதம் வாங்கியனுப்பினேம். அது பார்த்துக்கொள்ளச்சே தெரியுமென்று எழுதி துரை சொன்ன சேதியாய் வேலாயுதப்பிள்ளையுடனே சொல்லி, கும்பினீர் சேவகனையுங்கூட கூட்டியனுப்புவித்தோம்.

1746 ஆ டிசம்பர் மீ 31 உ க்கு அக்ஷய ஸு மார்கழி மூ 20 உ சனிவாரம்

இற்றைநான் காலத்தாலே என்னை அழைத்து முசே லந்தூர் பரிதி, துரை மூன்று பேருமிருந்து கூடலூர் சங்கதியெல்லாம் மார்க்கம் வழியெல்லாம் கேட்டு முன்னிரண்டுபேர் கூடலூர் சமாசாரம் அறிந்து வந்து, ஆறுகள், கொத்தளங்கள் நிலவரமெல்லாம் சொன்னவர்களை முசே லந்தூர் பிறகே கூட்டச் சொல்லிச் சொன்னபடிக்குக் கும்பினீர் சேவகன் உத்தண்டி

யைக்கூடக் கூட்டி முசியே லத்தூர் பிறகே கூட்டி அனுப்புவித்தேன். அவர்கள் மூன்று பேருக்கும் மூன்று வராகன் கொடுத்து இன்னமிருபத்தைந்து வராகன் கொடுக்கிறேன் என்று சொல்வி அனுப்பிவைத்தேன். அப்பால் துரை அன்வருதிகானுக்குப் பதில் காகிதமெழுதச்சொன்னது: தாமெழுதின காகிதத்துக்கு நமக்கு மெத்தவுஞ் சந்தோஷமாச்சுது. ஆனல், தகப்பன் கேட்டது பிள்ளை கொடுக்கவேண்டியதுதான். அப்படி கொடுக்கக் கூடவில்லையே யென்கிற விசாரம் சொல்விமுடியாதென்றும், ஆனல், எங்கள் ராசாவுடைய உத்தாரமில்லாமல் போட்ட கொடியை வாங்கப்போகாது. வாங்கப்போனல் என் தலைக்கு வரும்; அப்படி என் தலைக்கும் வருகிறது. உங்கள் பிள்ளையாயிருக்கிற எனக்கு உங்களைத் தொடத்தானே வருகிறது; உங்களுக்கு ஏற்க மனமாய் என்று மிப்பவும் நீங்களெழுதி அனுப்பின காரியத்துக்கு விலாய்த்துக்கு எங்கள் ராசாவுக்கு எழுதியனுப்பி அப்படியே கொடுத்துவிடுகிறோம் என்று மப்புறம் சினேகமதற்கு மிகுந்த உபசாரமாயெழுதி வந்த தோன்சியுடனேயும், முகதாவிலே துரையவர்கள் சிறிது வந்ததுவும் கூட்டியும் சினேகத்தைக் குறித்து மச்சனங்களும் ராச்சியங்களும் கெட்டுப்போகிறதும், மழையில்லாமல் கருப்பு ஒரண்டையிலேயும் சண்டை ஒரண்டையிலேயுமாய் ராச்சியங் கெட்டுப் போகுதென்றுமிப்படி துரையனேகமாய் முகமுகமாய்ச் சொன்னதை என்னையும் கூட்டித் தனித்துச் சொல்லச் சொன்னபடிக்கு நானுஞ்சொல்லி, அவர் கேட்டனுப்பின மணியடிக்கிற கெடியாரம் முசியே புசேத்துக் கையிலே நான் நூறு வராகனுக்கு வாங்கிக்கொடுத்து அனுப்பினேன். இதல்லாமல் என் காகிதமொன்று அன்வருதிகானுக்கு உபசாரமாயெழுதியனுப்பினேம். இவனுடனேகூட மானேசியும் கும்பினீர் சேவகனெருத்தனையுங் கூட்டியனுப்பினேன்.

இற்றைநாள் சாயங்காலம் கூடலூருக்குப் போகத்தக்கதாக இருபது சலங்கு பயணம் கடல் புறப்பட்டு அரியாங்குப்பத்திலேயுள்ள ஆற்றுக்கு நேராய்ப் போச்சுது. அரியாங்குப்பத்திலே யிருக்கிற வெள்ளைக்காரர் வந்து அப்படியே சலங்கின்பேரிலேறி கூடலூருக்குப் போகிறதாய் எத்தனம் பண்ணி நடந்திருக்கிறது. அப்பால் கூடலூருக்குக் கபுறுக்குப் போனவன், வழி எதிர்பார்த்துக்கொண்டு துரையிருக்கிறுர்.

இற்றைநாள் ராத்திரி ஏழு மணிக்கு வேதபுரீஸ்வரன் கோவிலிலே, சம்பா கோவிலிலே நரகலைப்போட்டு அப்புறத்திலேயிருந்து எறிந்தார்களாம். அப்போது சங்கரய்யன் பிரதக்ஷணம் பண்ணுகையிலே பிள்ளையார் கோவிலண்டையிலே விழுந்துதாம். சங்கரய்யன் தலைமேலே விழத் தப்பித்தாம். அது விழுந்துடைந்ததாம். அங்கே துர்க்கந்தம் பொறுக்கக் கூடாமல் போச்சுதென்றும், மகா நாட்டார், தில்லைமுதலி, பெத்துசெட்டி, ஆறுமுகத்தாமுதலி, ஆண்டநாயகப்பிள்ளையும் பத்து பேர் வந்து சொன்னார்கள். அந்தச் சேதி துரையுடனே சொன்னப்போலே முசே மேரையும், தெமெரேனையும் தானப்பமுதலியையும் அழைத்துச் சொல்லி அவர்கள் வர ஒன்பதரை மணி சென்றது. அவர்கள் வந்தவுடனே முசியே பரிதியைக் கூடக் கூட்டி யதைப்போய் பார்த்துவரச் சொல்லி யனுப்பினுர் அவர்கள் போகிறதற்கு முன்னே பரிதியையும் மேரையும் தாமழைப்பித்துக் குழல் அடித்தான்! இந்தப் போதனையின்பேரிலே போனவர்கள் என்னமாய்த் தப்புந் தாறுஞ் சொல்லுகிறுர்களோ! பிரபு என்னமாய் நடத்துகிருரோ! நானறியேன். பிரபுவினுடைய பெண்சாதி விவேகந்தான், தெரிந்தாப்போலே யாச்சே! பிரபுவினுடைய விவேகமறியவேண்டியது அறிந்த பிறகாலே எழுதுகிறேன் அப்பால் முசே பரிதி, மேர், தெமெரேனு மூன்றுபேரும் தானப்பமுதலியும் கோயிலண்டை போனவுடனே மலைக்கொழுந்தன் மகன் பற்லாமென்கிற பையன் பறைப்பசங்கள் கூட வந்தவர்களைப் பறங்கிப் பேச்சுப் பேச்சுக்குள்ளே கோவிலுக்குள்ளே போகச்சொன்னப்போலேயும், அதை முசே மேர் கேட்டு பற்லாமென்கிற பயலை நீ இங்கே வந்தா யுன்னுடைய வேலையா போ, என்று கோபித்துக்கொண்டா னதின்பேரிலே போறேனய்யாவென்று புறப்பட்டுப் போய்விட்டாப்போலே பிற்பாடு கோவிலுக்குள்ளே நுழைந்து பார்த்தார்கள். உடைந்து விழுந்திருக்கிற கூசாவை மோந்து பார்த்து நரகல்தானென்று சொன்னுர்கள். உடைந்தவிடமும் பார்த்து விழுந்த விடமும் பார்த்து அந்தக் கோவிலிலேயிருந்து விழுந்தது பிசகில்லை, அவர்கள்தான் போட்டது என்று தீர்த்துப் பரிதி துரையுடனே சொல்லவேணுமென்று சொன்னுன். முசியே மேர் இருந்துகொண்டு பாதிரிகளைப் போய்க்கேட்க வேணுமென்று

சொன்னுன். முசே பரிதி எனக்குத்தரவில்லையென்று சொன்னுன். மேர், எனக்கு உத்தரவுதானென்று சொல்லிச் சொன்னவிடத்திலே நல்லதென்று பரிதி முதலான பேர் சம்பாகோவிலண்டைபோய் மணிக்கயிறு வெளியிலே விட்டிருக்குதே அந்தக் கயிற்றைப்போயிழுத்தவுடனே மணிசத்தமாச்சுது. அந்தசப்தமானவுடனே சுப்பிரியராயிருக்கிற பாதிரி, கடுநியென்கிறவன் வந்து கதவைத்திறந்து வந்தகாரியமென்னவென்று கேட்டான். அதன் பேரிலே நடந்தசேதியைச் சொல்லி அது விழுந்த சாடைபார்த்தால் உங்கள் கோவிலிலேயிருந்து விழுந்திருக்குதென்று சொல்லி ஈசுரன் கோவிலிலே விழுந்த சாடைக்கு நேராய்ப் பாதிரி கோவிலிலே பார்த்தால் சரியாயிருந்தது. இதல்லாமல் அந்தப் பக்கத்திலே சுவரின்கிழே கல்லெல்லாம் பிடுங்கியிருக்கிற சாடையும் பார்த்து இப்படி நடக்கிறது நல்லதல்லவென்று ரொம்பவும் சொன்னுர்களிப்படி நாங்கள் நடத்தவில்லை அவர்கள்தானே இந்தப்படி நடப்பித்துக் கொண்டு பிராதுபண்ணினுல், அதன்பேரிலே நீங்கள் விழுந்து சுவரும் கட்டாமல் கிடக்கிறதற்கு உத்தாரங்கொடுப்பார்கள் என்று பண்ணின காரியமென்று சொன்னுர்கள். உங்களுடைய சாடை எல்லாருமறிவார்கள் என்று சொல்லிவிட்டு இப்படி நடத்துகிறதைத்தொட்டு வெகு பேச்சிக்கிடமாயிருக்குமென்று சொல்லிவிட்டு, குவர்னதோர் அண்டைக்கு வந்து நடந்த காரியமும் மெய்தான் சம்பாகோவிலார்தான் நடத்தினது. அதற்குச் சந்தேகமில்லையென்று சொன்னுர்கள். அதன்பேரிலே துரை சொன்னது: இந்தப்படிக்கு எழுதிவையுங்கோளுங்கள் சீர்மைக்கு எழுதியனுப்புவோ மிதற்கு இங்கேயும் அதற்குத் தக்கதாகச் சம்பாகோவில்கார் நினைக்கத் தக்கதாக நடத்துவோமென்றும், பின்னையும் அவர்கள் ஊரிலே நடத்துகிற காரியமும் இரண்டு நாழிகை தேசகாலம் பேசியிருந்து அவரவர் வீட்டுக்குப் போனுர்கள். துரையும் படுத்துக் கொள்ளப்போனுர். நானும் தானப்பமுதலியும் வீட்டுக்குப் பதினெரு மணிக்குப் போனேம்.

1747 ஆ ஜனவரி மீ 1வக்கு அக்ஷய ளு மார்கழி மீ 21 வ ஆதிவாரம்.

இற்றைநாள் சனவரி பண்டிகையானபடியினுலே முசே பேரத்னவால் வீட்டுக்குப் போனேன். அவனிருந்துகொண்டு நீ

எனக்கு நல்ல வருஷம், நல்ல பண்டிகையென்றும், நல்ல ஆதாயம் வரவேணுமென்றும் சொன்னியே, சென்னப்பட்டணம் அழிந்ததுடனே எல்லாம் போச்சுதென்று சொன்னான். அதற்கு நான் வியாபாரம் பண்ணினவர்களுக்கு எந்தப் பட்டணமானால் தானென்னவென்று சொன்னேன். அதற்கவன் சொன்னது: புதுச்சேரி குவர்னதோர் முசியே துய்ப்ளேய்சுத்த நினைப்பு என்னவென்றால், சென்னப்பட்டணத்தைப் போலே புதுச்சேரியை ஆக்க வேணுமென்று நினைக்கிறார். ஒருக்காலுமாகமாட்டாது. ஏனென்றால் சென்னப்பட்டணத்திலே ஒவ்வொரு வர்த்தகன் ஒவ்வொரு குவர்னதோர்போலே சகல்வி பெடுதாதியுடனேயுமிருக்கிறது. இங்கே நேற்று ராத்திரி தமிழர் கோவிலிலே பீயைக்கரைத்து ஊற்றினார்களாம். இது பாதிரிகள் நடத்தினாலும் பின்னை யார் நடத்தினாலும் இதுக்கேற்ற தண்டனை தண்டித்தது போலேயும் அல்லோ இனிமேல் வர்த்தருக்குச் சலக்கறணை நடப்பிக்கப் போகிறதென்று சொன்னான். நானொன்றுஞ் சொல்லுகிறதல்லவென்று பின்னை வேறே சீர்மை சமாசாரத்தையும், பின்னையும் நாலாவிதமான பேச்சையும் பேசிவிட்டு அவன் பெண்சாதிக்கும் போம் பேஸ்த்துக் கொடுத்துப் புறப்படும்போது துரை அழைக்கிறார் என்று வந்து அழைத்தான். போனவிடத்திலே துரையிருந்துகொண்டு நேற்று ராத்திரி நூறு பேர் சொல்தாதுகளும், மாயே சிப்பாய்களும், முசியே லத்தூரும் (M. de latour) சேக்கு அசேனும் கூடலூருக்குப் பயணம் போகிறதாய் அனுப்புவித்தோமேயவர்கள் வீராம்பட்டணத்து ரேவிலே ஏழரை மணிக்குச் சலங்கின்பேரிலேறினார்கள். மூன்று சலங்கிலே தண்ணீர் மொண்டுகொண்டு அதிலே போட்ட மருந்து குண்டுகளெல்லாம் நனைந்து, திரும்பியும் கரைபோயிறங்கிப் போகிற பயணத்தை நிறுத்தி, மறுபடி அரியாங்குப்பம் பத்து மணிக்குப் போய்ச் சேர்ந்தார்கள் என்றும் காகிதம் வந்தது என்றும் சொன்னார். இப்போதுதான் எனக்கப்படிதாக் கபுறு வந்தது என்று சொன்னேன், நல்லது கூடலூருக்குப் போனவன் இன்னம் வரவில்லையாவென்று கேட்டார். இன்னம் வரவில்லையென்று சொன்னேன். நேற்று மத்தியானம் வருகிறோம் என்றவன் இன்னம் வரவில்லையே ஒரு வேளை பிடித்துக்கொண்டார்களோ, என்னமோ தெரியாதென்று கேட்டார். என்னமோ தெரியாது. கபுறானால் வரவில்லையென்று சொன்னேன். அதன்

பேரிலே சற்றே யோசனையாயிருந்தார். போனு போனு போலே நல்ல வருஷம், நல்ல பண்டிகை, போன வருஷம் உமக்குச் சகல செயமுண்டாகி தேசங்களெல்லாம் கீர்த்தியாச்சுது. டில்லி வரைக்கும் உம்முடைய கீர்த்தியும் பிரதாபமுமுண்டாச்சுது. உங்கள் வமிசத்திலே எல்லாருக்கும் நீ யொருத்தன் பிறந்ததினுலே உம்முடைய அமிசமெல்லாம் பராக்கிரம சாதனென்றும், உங்களுடனே பாற்சாலைப்போலே ஒத்தவன் எதிர்த்தாலும் தோற்றப்போகிறதே யல்லாமல் வேறேயில்லை என்று சொல்லத்தக்கதாகக் கீர்த்தி வந்தது. டில்லி வரைக்கும் உண்டாச்சுது என்றும, பின்னையும் ஸ்தவுத்தியமாயடுத்ததாய் அநேகமெல்லாம் சொல்லி இந்த வருஷம் இதைப்போல நூறு பங்கு உண்டாகவேணுமென்று நினைக்கிறேனென்றுமப்படித் தானே சுவாமி தயவு பண்ணுவாரென்றும் சொன்னேன். அதற்கு அவர் ரங்கப்பா, பார்த்தாயா, சுவாமி எனக்குத் தயவு பண்ணுகிறது, என் பேர் சொன்னுல் துலுக்கர் நடுங்குகிறது என்று சொன்னுர். அதன்பேரிலே நான் விஸ்தாரமாய் இவர் பிரதாபமும் பராக்கிரமமும் சனங்கள் சொல்லிக்கொள்ளுகிறதாய் ஒரு நாழிகை தேசகாலஞ் சொன்னேன். அது எழுதவேணுமானுல் பத்து பதினைந்து காகிதஞ்செல்லும். அப்படியெல்லாம் ஸ்தவுத்தியமாய்ச் சொன்னதின்பேரிலே சம்பாகோவிலார் நடப்பித்ததற்கு அவர்களுக்குச் சாந்திரீடத் தக்கதாகக் கோன்சேலிலே பேசிப்பண்ணுவிக்கிறேனென்று சொன்னுர். இப்படி நடந்ததற்கு நீங்கள் சுருக்குக்காண்பியாவிட்டால் இப்போது உங்களுக்கு வந்திருக்கிற கீர்த்திக்கு இது நன்ருய்க் காணவில்லை. இதல்லாமல் நீங்களிப்போது சென்னப் பட்டணத்து வர்த்தகரை யெல்லாமிங்கே அழைப்பித்துச் சென்னப்பட்டணத்தைப்போலே இதைப் பந்தோபஸ்து பண்ண வேணுமென்று நினைக்கிறதற்கு மிதுசகாயமிருக்கும். வர்த்தகர்களுக்குப் பரவசமாயிருக்கும். உங்களுக்குத் தோன்ருதது ஒன்று இருக்குதா? எனக்குத் தோன்றினது சொன்னேன் என்று சொன்னேன். அது மெய்தானிதல்லாமல் சம்பாகோவிலார் மெத்த மிஞ்சினவர்கள். அவர்கள் எத்தனை வேலை என் பேரிலே நடத்தின பேர் மற்றபேர் பேரிலே நடத்துகிறதற்கு என்ன கேட்க வேணுமா? அது எனக்கு நன்ருய்த்தெரியுமிது அவர்கள் மனதிலே எப்போதும் நாட்டியிருக்கத்தக்கதாகவும்

சகல சனங்களுக்கும் விசிதப்படத்தக்கதாகவும் நடப்பிக்கி றேன் என்று சொன்னர். இந்தச் சேதி பகலேக்கு மேலாக நடந்தது.

காலத்தாலே கொஞ்ச நஞ்சம் நடந்ததோடேகூடத் தானே சேர்த்து எழுதிப்போட்டேன். அப்பால் சம்பாகோவி லுக்குப் போனேம். அங்கே மரியாதை மற்றதெல்லாம் எப்போ துஞ் சட்டமாய்த்தானே நடந்தது. ஆனலப்போதும் என்னை ரொம்பவும் ஸ்தவுத்தியமாய்ப்பண்ணி என் கழுத்தை வந்து கட்டிக்கொண்டு ரொம்பவும் லாலனைபண்ணி, உப சாரஞ்சொல்லி அனுப்புவார்கள். அதுமாத்திரம் நடக்க வில்லே. அது எதனுலேயென்றல்: நேற்று ராத்திரி வேதபூரி ஈஸ்வரன் கோவிலிலே நரகலேக் கொண்டுவந்து போட்டதைத் துரைக்குச் சொல்லி, கோன்சேல்காரரை அனுப்பி விசாரிக்கப் பண்ணினது நானென்றுப்போலே அவர்களுக்குத் தோற்றி என்பேரிலே சற்றுக் குறையிருக்கிறுப்போலே கண்டது. ஆனல், நானதைப் பிடிவாதமாய்த் துரையுடனே சொன்ன தில்லே. மகாநாட்டார் அவர்கள் வந்து சொல்லிக்கொண்ட பேச்சை துரைக்கு எச்சரித்ததின்பேரிலே அவராய் நடப் பித்ததேயல்லாமல் நானென்றுஞ் சொன்னதில்லே. அப்படி நானிப்படி. அப்பிருக்தியாயிருக்க அவர்களாய் நினேத்தால் நாம் செய்யலாவதென்ன? இந்தப் பிரபுவினுடைய சாடை ஒருத்தர் சொன்னப்போலே கேட்கிறவரல்லவென்று சமஸ்த மான பேருக்கும் தெரிந்தேயிருக்கிறது. அப்படி அறிந்தும் என்னினல் செய்யலாவதென்ன விருக்கிறது? அப்பால் மிசியோனேர் கோவிலுக்குப் போய் அங்கேயிருந்து தானப்ப முதலி அனுப்புவித்துக்கொண்டு வீட்டுக்கு வந்தேன். அவரும் வீட்டுக்குப் போனர்.

சாயங்காலம் கூடலூருக்குப் போன மனுஷன் வந்தவனே அழைத்துக்கொண்டு துரை சனவரி பண்டிகைக்கு வெள்ளேக் காரத் தெருவுக்கு விசாரிக்கப்போனர். அவர் லத்தூஸ் வீட்டிற்குப் போய் புறப்படச்சே நான் போய் கூடலூருக்குப் போனவன் வந்து சேர்ந்தானென்று கபுறு சொன்னேன். நேற்றையதினமே வந்து சேராமற்போனுனென்று கேட்டார்

சத்துருக்கள் ஊரிலே போய் உள்புகுந்து கலாப வேளையிலே சமாசாரமறிந்து வருகிறதென்ன சாமானியத்துக்குள்ளே யிருக்குதா? போயங்கே, ஒண்டியிங்கே, ஒண்டிப்போய்ச் சேர்ந்து பார்த்துவந்தான். அதனாலே ஒருநாள் சென்றதென்று சொன்னேன். நல்லது, அவர்கள் கையிலே அகப்படாமல் தப்பிவந்தது போதுமென்று சொல்லி இவன் ராத்திரிக்கு அழைத்துவரச்சொன்னார். நான் போனவுடனே கூடலூர் சேதி என்னசொன்னானென்று கேட்டார். அதற்கு நான் சொன்னது: முன்வந்து சொன்னவர்கள் பேச்சு அபத்தமல்ல. கூடலூரிலேயிருந்த சேவகரையும் மல்ராசாவையும் மஞ்சகுப்பத்திலே கொண்டுபோய் வைத்ததாகவும், கூடலூரிலேயிருக்கிற கொத்தளங்கள்பேரிலே யிருக்கிற பீரங்கிகள் காதிலே ஆணியடித்துக் கீழே தள்ளிப்போட்டதாய் முன்னாலே சேதி கேள்விப்பட்டிருந்தோமே, அந்தச் சாடையாய்த்தானே சொல்லுகிறான் என்றும், போனால் கூடலூர் கைவசம் பண்ணிக்கொள்ளலாமென்றும் சொல்லுகிறான் என்றும் சொன்னேன். இது மூந்தாம்நாள் சமாசாரம். நேற்றையகாலமே மட்டுக்கும் நடந்த சமாசாரமாயிருக்கும். நேற்று ராத்திரி நம்முடையவர்கள் அரியாங்குப்பத்திலேயிருந்த வாக்கிலே, வீராம்பட்டணத்து ரேவிலே, சலங்கின் பேரிலே ஏறினவர்கள் இரண்டு மூன்று சலங்கு ஓட்டையாகி நின்றுபோனார்களென்ற சேதி ஏதாகிலும் அறிந்து, கூடலூரிலேதாகிலும் சொல்தாதுகளைப் பீரங்கிகளை ஏதாகிலும் மறைவாய் வைத்திருந்தால் எப்படி? அந்தச் சமாசாரம் விசாரித்து வரச்சொல்லென்று சொன்னார். மறுபடி போய் வரச்சொல்லி வந்தவனுக்குச் சொல்லியனுப்பினேன். அவனும் நாளை நன்றைக்குக் கபுறு கொண்டுவருகிறேனென்று சொல்லியனுப்புவித்துக்கொண்டு போனான்.

அப்பால் மமுதல்லிகான் மாபூசுகான் தண்டு இறங்கியிருக்கிற பாளையச் சேதி ஏதாகிலும் வந்ததா? அந்தத் தண்டிலே என்னமாய் ராத்திரி முப்பதுமிருக்கிறார்கள் என்று கேட்டார். தண்டிலேயானால் ராத்திரி முப்பதும் ஒருத்தருக்கும் நித்திரையில்லை. குதிரைகளானால் சீனி........

*1747* ஆ சனவரி மீ *4* உக்கு அக்ஷய ஸ்ரீ மார்கழி மூ *24* உ புதவாரம்.

இற்றைநாள் காலத்தாலே எட்டுமணிக்கு நான் வீட்டிலே யிருந்து துரையவர்கள் வீட்டுக்கு வருகிறதற்குமுன்னே கேள் விப்பட்ட சேதி என்னவென்றால்: மாயே சிப்பாய்களுக்கு சமே தாரராயிருக்கிற சேக்கு அசேன் அப்துல்ரயிமான் அண்ணன் தம்பிகளுடனே அலிபேர்சு கப்பித்தானாக இருக்கிற துலுக்கன் அவன் பேர்... ... ...அவனண்டைக்குக் காசிகான்சு சிங்கு மாரிபத்திலே கோவிந்தராவ் தண்டுக்குப் போய்ப் பேசிவந்த தாகவும், சிறிது பவுஞ்சுகூட்டிக்கொண்டு போகிறதாகவும், தண்டுக்குப் போகிறதாகவும் போயவர்களுடனே கூடிக் கொண்டு புதுச்சேரியின் பேரிலே ராசகாரியம் பண்ணுகிற யோசனை நடக்கிறதாகவும் வெங்கய்யன் வந்து சொன்னான் என்னிடத்திலே. இதல்லாமல் துரையவர்களுத்தாரப்படிக்குப் பத்துநாளைக்கு முன்பாக வேட்டவலம் பண்டாரத்தார் மகன் பெரிய அய்யாவுக்குச் சொல்லியனுப்பின தென்னவென்றால்: மொகலாய சீர்மையெல்லாம் சுட்டுக் கோட்டைப் பரப்புகிறது. தாம்தூம்பண்ணி, தண்டிலேயும் வந்துவிழுந்து, சோராவரி பண்ணினால் உனக்கு என்ன மற்றது வேணுமோ அந்த மற்றது எல்லாம் பண்ணுகிறோம் என்று சொல்லியனுப்பியிருந்ததற்கு அவரும் சம்மதித்து அவருடைய மணியக்காரன்..........யும் ஒரு அய்யனையுமனுப்பி ஒரு காகிதம் சுவஸ்தமாய் எழுதி யனுப்பினார். அவர்கள் வந்த சேதியும் அவர்கள் சொன்ன சேதியும் வயணமாய்த்தானே துரையுடனே சொன்னதின் பேரிலே துரை யிருந்துகொண்டு அந்தப்படிக்கு, தாம்தூம் பண்ணச்சொல்லி உத்தாரங் கொடுத்தார்கள். அந்தப்படிக்கு அவர்களுடனே சொன்னோம். அவர்கள் துரையவர்கள் ரூபு ரூபாய்ச் சொல்லவேணுமென்று சொன்னார்கள். நல்ல காரியந் தான் என்று சொல்லியிருக்கச் சொன்னேன். அப்பால் துரை வாசற்படி பதினொரு மணி மட்டுக்கும் திறவாமலிருந்தபடி யினாலே இப்பாலே தோட்டத்து வாசலிலே போய்க்கண்டு பேசிக் கொண்டு வந்தேன். அப்பால் அன்வருதிகான் அண்டையிலே யிருந்து ஒரு சுவார் வருகிறானென்று அவன் மனுஷன் எவனோ ஒருத்தனும் நம்முடைய கும்பினீர் சேவகனும் வந்து கபுறு சொன்னார்கள். அந்தச் சேதி துரைக்குச் சொன்னோம். அவனை

வ்ழுதாவூர் வாசற்படியிலே யழைத்துவரச் சொல்வி காகிதங் கொடுத்து அவன் வந்தால் அவனையும் வீட்டிலே யிறக்கி, பின்னை யொருத்தரும் அவனுடனே பேசாமற்பண்ணி அவன் வந்த சமாசாரமெல்லாம் நீ யறிந்து வந்து சொல்லு. அவனை ராத்திரி ஒன்பது மணி நேரத்துக்கழைத்து வா என்று சொன்ஞர். நல்லதென்று சொன்னேன். அப்பால் குதிரை சுவாரை அழைத்துவரச்சொல்லிச் சேருவைக்கார சாந்தப்பனையும் ஒரு கும்பினீர் சேவகனையும் அழைத்துவரச் சொன்னேன். அவன் போய் அழைத்து வந்தான். அவனை என்னவென்று கேட்டால், அவன் சொன்னது : அன்வருதிகா னனுப்பிவைத்தாரென்றும், அவர் சொன்னது. நீங்கள் மாத்துபர் மனுஷனை யனுப்பச் சொல்லி எழுதினபடிக்கு அனுப்பவேணும் என்றிருந்தார்கள் இதிலே சென்னப்பட்டணத்திலே.

**1747** ஆூ ஜனவரி மீ 5உக்கு அக்ஷய வூ மார்கழி மீ 25உ பிரகஸ்பதிவாரம்.

இற்றைநாள் காலத்தாலே ஐந்து மணிக்கு நேற்று ராத்திரி பதினொரு மணிக்கு, குவர்னதோரவர்கள் அறையிலனுப்புவித்துக்கொண்டு அன்வருதிகானண்டையிலிருந்து வந்த குதிரைச் சுவாரையும் அதற்கு முன் மூன்று நாளாய் வந்திருந்த அவனுடையசமேதாரனையும் பயணம்பண்ணி நம்முடைய மானேசியையும் கும்பினீர் சேவகரையுங்கூடக் கூட்டியனுப்பினேன். அப்பால் துரை வீட்டுக்கு வந்தேன். துரைக்குச் சரீரம் சுவஸ்தமில்லையென்று கதவு சாத்திக்கொண்டு உடுத்திக்கொள்ளாமவிருந்தபடியினலே பாக்குக் கிடங்கிலேதானே நான் ஆற்காட்டுக்கு வன்னிப்பேட்டு நிமித்தியம் அஸ்ரத்துலா சாயபு நம்முடைய மனுஷரை துலுக்குத் தகாதாயில்லாமல் பணங் கேட்டதற்கு நமக்கு நீர் ஏதாகிலும் குத்தகைக் கொடுத்தீரா? உம்முடைய கையிலே நாமேதாகிலும் குத்தகை வாங்கினேமா? அப்படியிருக்க, நம்மைப் பணங் கேட்க நியாயமென்னவிருக்கிறது? இது முத்துவேங்கடபதிரெட்டி நமக்குப் பாத்தியம். நாம் குத்தகை வாங்கினதேயில்லை. பாபுராயனுக்குத் தெரியும், ரெட்டியாருக்கும் தெரியும் என்று அதற்குப் பரிகாரமாகவும், பார்சிலே காகிதம் எழுதுவித்து நடந்த வயணத்துக்குத் தெலுங்கிலே ஒரு யாதாஸ்து எழுதுவித்து ஆதியப்பன் எழுதுவித்தனுப்பு

வித்தோம். துரை காகிதம் ஆறண்............ ...............வாசற ...............யருக்கும் ஷி சிற்றப்பன் புதுசா........... மூலப் பண்ணுகிற திருமலேராயனுக்கு...........மல் மூசே புரி மகனைப் பிடித்துவந்து.........கபடத்தின்பேரிலே போன......கிற சமே தாரனுடைய இருக்கிறவர்களைக் கப்பி..........ற .. ...யமைப் பித்துக் கொடுக்கச்சொ... ... ...வித்த காகிதமும் மொகருபண்ணி யனுப்புவித்துப்போட்டு இற்றைநாள் மகா நாட்டார் பேட்டியானபடியினுலே யவர்கள் எல்லாம் சீக்கிர மத்துக்குச் சேர்த்து நாலு மணிக்கெல்லாம் அழைத்துவரச் சொல்லியனுப்பிப் போட்டிருக்கச்சே குவர்னதோரமைத் தனுப்பி. தண்டு சமாசாரம் வந்ததா? என்று கேட்டார். வந்தது. தண்டிலேயானுல் குதிரைக்காரரெல்லாம் சம்பள மில்லையென்று மறியல் தடையாயிருக்குதென்றும், மாபூசுகான் மனதுக்கு இன்னம் செவ்வைப்படவில்லை. மமுதல்லிகான் மனது சமாதானம் பண்ணிக்கொண்டு போவோமென்றிருக் குது. இராத்திரி பகல் தண்டிலேயிருக்கிற அறுநூறு எழு நூறு குதிரைக்காரர் சுற்றி நாலு நாழிகை வழிக்கு வந்து சுற்றிக்கொண்டே பொழுதுவிடியுந்தனிலும் திரிகிறுர்க ளென்று மமுதல்லிகான், மாபூசுகான், அப்துல்சலீல், அன்வரு திகான், பெருமுக்கல் மியாசாயபவர்களிருக்கிற பெரிய மனு ஷருக் கொருத்தருக்கும் நித்திரையில்லாமல் பெதறி அப் புறம் ஓடினுர்களென்றும், தண்டிலே பிராஞ்சுக்காரர் எந்நேர மாகிலும் வந்து விழுவார்களேயல்லாமல் விழாமற்போகிற தில்லையென்று தண்டிலேயிருக்கிற தவக்கம் எழுதி முடியாது என்றும், அந்த மட்டுக்கும் மனம் பொறுக்கவேணுமென்றும், முன்னே மூவாயிரம் வராகன் சண்டையின்போது கொடுத் தார்களே, இப்போது மூவாயிரம் வராகன் கொடுத்தார்க ளென்றும் நீங்கள் வந்து போய்விட்டால் உங்களுக்கு மெத்த லகுவாகும். எங்களுக்கு இல்லாத பகையை நீங்களுண்டாக்கி விட்டீர்கள். இனிமேல் எப்படி என்று, இப்படியாகச் சேதி பாதுகள் பிறக்கிறது. இதுவெல்லாம் நிசக்கபுறு என்று சொன் னேன். மெய்தானென்று சொன்னுர், அபத்தமல்ல. உண்டா யிருக்குமென்று சொல்லி எத்தனை கபுறு வருகுது, அத்தனையு மொருசாடையாய்த்தானே இருக்கிறபடியினுலே அபத்தமல்ல வென்று மிது முதலாகிய சேதியெல்லாம் பேசியிருந்தேன். அப்பால் மகாநாடு எப்போது வருவார்களென்று கேட்டார்.

நாலரை மணிக்கு, ஐந்து மணிக்கு வருவார்களென்று சொன்னேன். மமுதல்லிகான் மாரிபத்திலே பறங்கிப்பேட்டை பவுஞ்சுதாரன் எழுதின காகிதமும், தான் வருகிறேமென்று எழுதின காகிதத்துக்கு நாம் வரச்சொல்லி எழுதினதற்கு ஏன் வராமற்போனனென்று சொன்னல் அன்வருதிகான் மாரிபத்திலே நடக்கிறது சம்மதியல்ல. தன் மாரிபத்திலே நடக்கிறதற்கு நான் எத்தனை பிரயாசைப்பட்டாலும் அந்த வழியிலே நடக்கிறார்களல்லவோ? ஆனபடியினலே, அப்படித்தானே நடத்திக்கொள்ளட்டுமென்று மமுதல்லிகான் சொன்னதாகப் பவுஞ்சுதாரன் எழுதச்சொன்னனென்று வேலாயுதப்பிள்ளை என்கிறவன் எழுதிஅனுப்பினனென்று சொல்னேன். அவர்கள் மாரிபத்திலே உடன்படிக்கையாகிறதில்லை, உன் மாரிபத்திலே தானே நடத்துகிறேமென் றெழுதச்சொன்னர். அந்தப்படிக்கெழுதி அனுப்புவித்தேன். அப்பால், பகலைக்குமேலாக நடந்தது: நாலு மணிக்குக் குவர்னதோரண்டைக்குப் போய், அங்கு சேஷாசலசெட்டியைக்கண்டு பேட்டிபண்ணிவைத்தேன். அப்பால் நாலரை மணி வேளைக்கு மகாநாட்டார் வந்து பேட்டிகண்டார்கள். அவர்களைச் சந்திக்கப்பண்ணுவித்த விடத்திலே கோவில்பேச்சுப் பேசப்போகிறார்களென்று முன்னே தானே துரை பேசாதபடிக்குப் பண்ணு என்று சொல்லியிருந்தார். அதற்கு நான் நல்லது, இரண்டு பேருக்கும் அருணசல செட்டிக்கும் கோவில் பேச்செடுக்கவேண்டாமென்றும் சொல்லுவித்தேன். அப்படியிருந்தும் மகாநாட்டார் அனைவரும் கோவில் பேச்சுப்பேசுகிறதாய்த் துவக்கினர்கள். என்னமாயடக்கினலும் முன்னிட்டு வருகிறதாயிருக்குது அந்தச் சாடை துரைகண்டு எழுந்து ஒரு உபசார வார்த்தையைச் சொல்லி மதாம் காம்பிருவுக்குள்ளே போய்விட்டார்.

இற்றைநாள் ராத்திரி எட்டு மணிக்குப் பெருமுக்கல் மியாசாயபு எனக்குச் சொல்லியெழுதினதைப் பெரியப்பிள்ளை வந்து சொன்னது என்னவென்றல்: நபாபு அன்வருதிகான் தன் பிள்ளைகள் மாபூசுகான் மமுதல்லிகான் இரண்டு பேரையுமழைப்பியாமல் இராச்சியமெல்லாம் பாழாய்ப்போச்சுதென்று கபுறுவந்தது. ஆனபடியினலே, ஒருவிதமாய்ச் சமாதானம் பண்ணிக்கொண்டு தண்டுவாங்கி ஆற்காட்டை வந்து சேரச் சொல்லி எழுதிவந்தது. அதன்பேரிலே மமுதல்லிகான் சீக்கிர

மத்துக்குச் சமாதானம் பண்ணிக்கொள்ளவேணுமென்றிருக்கிறான். இந்தச்சேதி நான் கூட இருக்கிறபடியால் தெரிந்திருந்த சேதியும் உங்களுக்கு எச்சரிக்கைபண்ணச்சொல்லி யனுப்பினேன் என்று எழுதிவந்ததே என்று பெரியப்பிள்ளை என்கிற ஷியாமன் கணக்குப்பிள்ளை வந்து சொன்னாரிந்தச்சேதி துரையுடனே சொன்னதற்குத் துரை சந்தோஷப்பட்டு நல்லது இவ்விடத்திலே நடக்கிற சாடைபார்ப்போம். நபாபுக்கு இருநூறு மாம்பழம் அனுப்பச் சொல்லியும், குலாபுசிங்குக்கு நூறு வராகன் அனுப்பச் சொல்லியும் சொன்னார். அந்தப்படிக்கு முஸ்தி பண்ணி நாளையதினம் அனுப்புகிறேனென்று கபுறு சொல்லிவிட்டு வந்தேன்.

*1747* ஆ சனவரி மீ 6 உ க்ஷ அக்ஷய ஞு மார்கழி மீ 26 உ சுக்கிரவாரம்.

இற்றைநாள் மூவிராசா பண்டிகை திருநாள், எப்போதுமல்லாதது இந்தவிசை நூதனமாய் நடந்ததென்னவென்றால்: மூன்று ராசாக்கள் வரச்சே வாசற்படியிலே வரிசைவைத்துத் தம்பூர் அடித்தது ஒன்று. அதிசயம். இரண்டாவது என்னவென்றால் மதாம் துய்ப்ளேய்க்சு, மெழுகுதிரியாலே ஒரு பிரபைப்போலே சோடித்து கோவிலுக்கு இற்றைநாள் காலத்தாலே கொடுத்தாள். அதைத் துரை பார்க்கத்தக்கதாகச் சம்பாகோவிலுக்குப் பெண்சாதியுடனேகூடப் போனார். இந்த இரண்டு அதிசயந் தவிர பின்னை வேறே அதிசயமில்லை. இது மதாம் துய்ப்ளேக்சு பண்ணிவைத்த விந்தை.

மற்றப்படி இற்றைநாள் நபாபு அன்வருதிகானுக்குத் துரையவர்களுக்குக் காகிதம் உபசாரமாக எழுதி இருநூறு மாம்பழமும் அனுப்புவித்தோம். என்பேருக்குக் குலாபுசிங்குக்கு மதனுந்த பண்டிதனை யறியாமல் காகிதம் எழுதுவித்து நூறு வராகனுங் கொடுத்தனுப்புவித்தோம். இது நம்முடைய குமாஸ்தா முகாந்திரமாய் அங்கேயிருக்கிற வக்கில் சுப்பய்யன் பேரிலே ருளிதாயெழுதினபடியினாலே யவரையறியாமல் அனுப்புவித்தோம். அவ்விடத்திலேயும் வக்கில் சுப்பய்யனை அறியாமல் அனுப்புவித்ததும் மற்றப்படி துரையழைத்தனுப்பிப்பின்னை ஏதாகிலும் சேதி வந்ததாவென்று கேட்டார்.

பின்னை வேறே சேதியில்லையென்று சொன்னேன். அதன் பேரிலே நேற்று ராத்திரி நம்முடையவர்கள் பாளையத்திலே போய் வெள்ளைக்காரர் பார்த்துவந்தார்கள். பாளையத்தை அரைக்ஷணம் சுட்டுத் தீர்த்துப்போடலாம். நம்முடையவர்க ளென்னுடைய உத்தரவில்லையென்று வந்தார்களென்று சொன்னார். ஆனாலவர்கள் ராசாவட்டம் பேசுகிறபடியினாலே இப்போது அப்படி செய்கிறது யுக்தமல்லவென்று சொன்னேன். அதற்குத் துரையிருந்துகொண்டு, அவர்கள் நியாயத்துடனே யல்லோ நடத்தினார்கள். நாமந்த அநியாயம் பாராட்டவேணு மென்று சொன்னார். அதற்கு நான் சொன்னது: நீர் நியாயத் துடனே நடத்தினபடியினாலே சுவாமி உமக்குச் செயங் கொடுக்கிறார். அவர்கள் நியாயத்தை நடத்தினபடியினாலே அவர்களுக்கு அபசெயங் கொடுத்துக்கொண்டே வருகுதென்று சொன்னேன். இதிலே முசியே பரிதி வந்தான். நான் அனுப்பு வித்துக்கொண்டுவந்துவிட்டேன்.

1747 ஆ சனவரி மீ 7 உ க்ஷய அக்ஷய ஹு மார்கழி மீ 27 உ சனிவாரம்

இற்றைநாள் காலத்தாலே மொகலாயத் தண்டிலே யிருந்து அன்வருதிகானண்டையிலேயிருந்து நம்முடைய மானேசியும் கும்பினீர் சேவக மங்கானும அன்வருதிகான் காகிதங் கொண்டுவந்தார்கள். அந்தக் காகிதத்திலேயிருந்த வயணம்: நீங்கள் அனுப்பின காகித வயணமும் எங்கள் சுவார் முகவார்த்தையாய் வந்து சொன்ன சமாசாரமும் கேள்விப்பட்டோம். ஆனால், சமாதானப்பேச்சு தக்கவிடம் நடத்துகிறதாயிருக்கவில்லை. இன்னும் நாலுநாள் சாவகாசத் தின்பேரிலேயாகவேண்டியதாயிருக்கிறது. அப்போது உங்களுக்கு எப்படி சம்மதியாயிருக்குதோ அப்படித்தானே ஆகட்டும். ஆனாலும், ஊங்கள் சினேகம் ரொம்பக் கோரி யிருக்கிறோம். சினேகஃ அபிவிர்த்தியாய் நடத்திக்கொண்டு வரவேண்டியதென்றும், மற்ற சமாசாரமெல்லாம் மானேசி யுடனே சொல்லியனுப்பினேன். அவன் வந்து சொல்லச்சே என்னுடைய அபிப்பிராயம் உங்களுக்குத் தெரியுமென்று மிப்படியாக எழுதியிருந்த வயணமெல்லாம் படித்துத் துரைக்குச் சொன்னோம். அப்பால் துரையவர்கள் கேட்டது:

மானேசியுடனே என்ன சொல்லி யனுப்பினுன் என்று கேட்டார். அப்போது மானேசியுடனே கேட்டதும் அவன் சொன்ன வயணமும் என்னவென்ருல்: அன்வருதிகான் உங்களுக்குச் சொல்லச் சொன்னது, தம்முடைய சலாஞ் சொல்லி அப்பாலே அப்படியு மிந்தக் காரியந் தீர்க்கலாமென்று யோசனைபண்ணினேன். ஆனல் மாபூசுகானுக்கும் அப்துல்சலீலுக்கும் சம்மதியில்லையென்றும், அதுவும் நீங்களின்னம் நாலு நாள் மனம் பொறுத்தால்தான் இச்சையாய் வழிபாட்டிலே இறங்குவார்களென்றும், அந்த மட்டுக்கும் நீங்கள் காகிதமெழுதவேண்டாமென்றும், நானெப்போது உங்களுடனே சிநேகம்பண்ணினேனே அப்போதுதானே உங்களவன் நானென்றும், பின்னையுமிப்படி அநேக உபசாரமாய்ச் சொல்லச்சொல்லி அனுப்பினுனென்றும் அவன் சொன்ன சேதியெல்லாம் சொன்னேன். அதற்குத் துரை இருந்துகொண்டு இங்கிருந்து போன குதிரை சுவார் என்ன சொன்னுனென்று கேட்டார். அப்போது நாமந்த நியாயம் சொல்லியனுப்பினபடிக்கு அவர்களுடனே விசிதமாய்ச் சொன்னுன். அதன்பேரிலே அவர்கள்பேரிலே சண்டைபண்ணினுல் நம்முடையவர்களுக்கு ஒருகாலும் செயம் வராதென்றும் சொன்னுனென்று அவன் சொன்ன விஸ்தாரமாம்படியே சொன்னேம். அதற்கவர்கள் இவனை யெழுந்துபோகச்சொல்லி, மமுதல்விகான், அப்துல் சலில், மாபூசுகான், அன்வருதிகான் நாலுபேரும் கூடித்தானிந்தக் காகிதம் எழுதி அனுப்பினதென்று சொன்னுன். அந்தச் சேதி துரை கேட்ட பிற்பாடு சந்தாசாயபு அவர்கள் முஸ்தி சாமாராயன் வந்து சொன்னதும் தக்காசாயபு அவர்கள் வக்கில் ஆற்காட்டிலே இருந்து ஆற்காட்டுச் சமாசாரமெல்லாம் எழுதின காகிதமும், மமுதல்விகான் தான் சண்டைபண்ணினதும், பிரான்சுக்காரருக்கும் தனக்கும் நடந்ததும், தகப்பனுக்கு எழுதின காகிதத்துக்குத் தக்கதாகத் தகப்பன் அன்வருதிகான் கில்லேதாரர்கள் எல்லாருக்கும் அதற்கு நக்கல் எழுதியனுப்பினுனென்றும், அந்த நக்கல் தக்காய் சாயபுக்கு வந்ததை ஷெ மகன் அல்லிநக்கீம் சாயபுக்கு அனுப்பினுன் என்றும் அந்தச் சவாது சேதியும் நிசாம் அன்வருதிகான் பேரிலே அனுப்பின தாசிதாரருக்குத் தாக்கீது எழுதின பற்வானுவுக்கு நக்கலும் படித்துக் காண்பித்துச் சொன்ன வயணம் தெலுங்கில் எழுதியிருக்கிறது. அதைப் பார்த்துக் கொள்ளவும்.

**1747 ஆ ஜனவரி மீ 8வ க்கு அக்ஷய ஸு மார்கழி மீ 28வ புதிவாரம்.**

இற்றைநாள் காலத்தாலே வேட்டவலத்துப் பாளையக்காரன் பெரிய அய்யா அண்டையிலேயிருந்து வந்தவர்கள் சொன்ன சேதி: தாங்கள் பாளையத்தின் பேரிலே போய் விழுந்து தலை வேணுமானாலும் கொண்டுவருகிறோம், அல்லவென்றால் மமுதல்வி கான் மாபூசுகான் பாளையங்கூட ஆற்காட்டுக்குச் சேரப்பண்ணுகிறோம் என்றும், அப்பால் தங்கள் குஞ்சுக் குழந்தைக்கு இடம் புதுச்சேரியிலே கொடுக்கவேணுமென்றும் தனக்கு ஏதாகிலும் சகாயமாய் சம்பத்து நடத்தவேணுமென்று மிதர முதலாகிய சேதி சொன்னதெல்லாம் நேற்றுதானே துரைக்குச் சொன்னேன். இரண்டாயிரம் கடுதாசியும் (Cartridges) வாங்கிக்கொடுத்து வெளியே போகிறதற்கு வாசற்படி சீட்டு வாங்கிக் கொடுத்திருந்தது. இற்றைநாள் அங்கேயிருந்து வந்த மணியக்காரனையும் தொண்டமானத்தம் வேங்கடாசல அய்யனையும் துரையண்டையிலே கொண்டுபோய் விட்டு அவர்கள் சொல்லியிருந்த வார்த்தையெல்லாம் அவர்கள் வாயினாலே சொல்லுவித்து அந்த வார்த்தையாம்படியே நான் துரையுடனே சொல்ல, அதற்குத் துரை சொன்னது: நல்லது நீ செய்கிற வேலைக்குத் தக்கதாக நாம் பின்னையுமுங்களுக்கு என்ன சகாயம் அந்தரங்கமாய்ப் பண்ணவேணுமோ அந்தபடிக்குப் பண்ணுகிறோபாயரங்கம் எங்கள் பேர், வெளிக்கு வரலாகாது என்று சொல்லி உங்கள் குஞ்சு குழந்தை வருகிறது யிருக்கிறதும் இரண்டாம்பேர் தெரியாமல் மறைவிடமாகத்தானே யிருக்கவேணும் என்று சொன்னார். அந்தப்படிக்கவர்களும் நல்லதுதான் என்று சொன்னார்கள். அப்பால் பாளையக்காரன் ஏதாகிலும் வெகுமதியனுப்பவேணுமென்று வந்தவர்கள் சொன்னார்கள். அந்தச் சேதியைத் துரைக்குச் சொன்னோம். துரை, என்ன அனுப்பவேணுமென்று கேட்டார். அப்போது ஒரு துப்பாக்கி, ஒரு பிஸ்தோல் சோடு ஒரு சிப்பம் சகலாத்து அனுப்பவேணுமென்று சொன்னேன். அந்தப்படிக்கு முசே கோர்னேயைக் கேட்டனுப்பினால் ஒற்றைக்குழல் துப்பாக்கியில்லையென்று இரட்டைக்குழல் துப்பாக்கி அனுப்புவித்தான். அந்தப்படிக்குப் பண்டாரத்தாருக்குக் கொடுத்தனுப்பித் தொண்டமானத்தம் வேங்கடாசல அய்யனையுங்கூட கூட்டி

என்றையதினம் மொகலாயர் தண்டிலே போய் விழுகிறார்களோ அன்றையதினமிவ்விடத்திற்கு உஷார்பண்ணினால் நாங்களும் வந்து அன்று ராத்திரி தண்டுபேரிலே விழுகிறோம் என்று சொல்லியனுப்பினோம். பயணம் சாகிப்போனார்கள். ஆலத்தூர் வேங்கடாசல நாயக்கனுக்கு ஆயிரத்தைந்நூறு வேட்டுக்குக் கடுதாசி வாங்கிக்கொடுத்து எழுபத்தைந்து வராகன் கொடுத்து அவனையுஞ் சீர்மையை லூட்டிப்பண்ணச் சொல்லி அனுப்புவித்தோம். அவர்களும் இற்றைநாள் பயணம் சாகிப்போனார்கள். இற்றைநாள் வந்த சேதி என்னவென்றால்: தேவனாம்பட்டணத்தார் முன் ஆண்டியப்பமுதலி முதலான வர்த்தகர்பேரிலே கும்பினீர் கோந்திராந்தும் புடவை சம்மதி முப்பதினாயிரம் வராகன் வரவேண்டியதைச் சென்னபட்டணம் கோட்டை வாங்கிக்கொண்டவுடனே தேவனாம்பட்டணம் குவர்னதோர் மேஸ்தர் அயின்து (M. Hinde) வர்த்தகரை யழைப்பித்துப் புடவைக்கட்டு இந்த மட்டுக்கும் போட்டதுபோக வண்ணாந்துறை யிருக்கிறது காரிக்கமாயிருக்கிறதுகூட நீங்கள் வெளியே கொண்டு போய் வைத்துக்கொள்ளுங்கோள். அப்பால் பார்த்துக் கொள்ளுவோமென்று நிறுத்திவைத்தான். அப்பால் கார்த்திகை மாதத்திலே அரைச் சலவையாயிருந்ததை எல்லாம் கட்டுப்போட்டுக்கொண்டான். மற்றது காரிக்கன் அந்த முப்பதுனாயிரம் வராகனும் நின்றது. அதிலே செலவுக்கு, இல்லையென்று ஆண்டியப்பமுதலி மகன் கையிலே பதினாயிரம் வராகன் வாங்கிக்கொண்டான். மற்றதைக் கேட்டால் சரக்கு இருக்கிறது வாங்கிக்கொள்ளுங்கோளென்று சொல்லிக்கொண்டிருந்தார்கள். அப்படியிருந்தது. இப்போது நாலைந்து நாளாய் பழய காரிக்கன் வெளியிலே போயிருந்ததும் நிலுவை இருபதினாயிரம் வராகனுக்கும் சரக்குக் கொண்டுவரச்சொன்ன விடத்திலே அந்த இருபதினாயிரம் வராகனுக்குமாகப் பாலையூர் பட்டாம்பாக்கம், சென்னப்பனாய்க்கன்பாளையம், தரகர் முன்னூறு கோடி மட்டுக்கும் கூடலூருக்கு அனுப்பினார்களென்றும், பழயக் காரிக்கன் நூறுகோடி மட்டுக்குமிருந்ததுகூட நானூறு கோடியும் கூடலூரிலே சிகப்பு தம்புமுதலி கிடங்கிலே போட்டிருார்களென்றும், இன்னும் நூறுகோடி மட்டுக்கும் தரகர் கொண்டுபோய் லெஸ்தரயாயிருக்குதென்று சென்னப்பனாய்க்

கன் பாளையத்துக்குப் போயிருந்த ராமலிங்க அய்யன் மச்சான் கிருஷ்ணய்யன் வந்து சொன்னான், அந்தச் சேதியை ராத்திரி துரையுடனே சொன்னதற்குத் துரையவர்களிதென்ன சாடையைக் கண்டு இவர்கள் காரிக்கன் அழைப்பிக்கிறது என்று கேட்டார். அவர்களுக்கேதாகிலும் கப்பல் வருகிற சாடை ஒன்றிருக்கவேணும். அதற்குப் பங்காளத்திலே இருக்கிற மோன்சியே பெத்தோமென்கிற சண்டைக் கப்பல்கள் கொம்மாந்தான் பங்காளத்திலே போயிருக்கிறவன், அவன் கப்பல்கள் மனுஷர். சிறிதுபேர் ஓடிப்போய்விட்டார்களென்றும், சிறிதுபேர் சண்டையிலே செத்தார்களென்றும், சிறிதுபேர் நோவாய், சிறிதுபேர் காயக்காரராய் இந்தப்படி சனங்கள் போய்விட்டார்களென்றும், சிறிதுபேரிருக்கிறவர்களைக்கொண்டு சண்டை கொடுக்கப்போகாதபடியினாலே அவர்களிந்த நேரம் புறப்பட்டுவருகிற யோசனை காண்பிக்கவில்லை என்றும் எழுதி வந்ததே, அதுவும் நியாயமுஞ் சரிதான். சென்னப்பட்டணம் பிடித்துக்கொண்ட கபுறு அறிந்திருந்தும் கார்த்திகை, மார்கழி மாதம் இந்த ரேவுகளிலே கப்பல் நில்லாது என்று அறிந்திருக்கிறவன், இந்தச் சமயத்திலே சென்னப்பட்டணத்தின் பேரிலே போய்ச் சண்டைக்குப் போகிறோமென்று வராமலிருக்கிறவன், இனிமேல் ஒரு பிலன் போயவன் வரவேணுமேயல்லாமல் சும்மா வரத்தக்கதில்லை. ஆனபடியினாலே, பங்காளத்துக் கப்பல் வரப்போகிறதில்லை. இதல்லாமல் நாலு வருஷமாய் சீர்மையை விட்டுப் புறப்பட்டுவந்தவனானபடியினாலே கப்பல்கள் மறுபடியும் சீர்மைக்குப் போய் அதற்குத் தக்கதாக வேலை செய்யாதபடியினாலே கப்பல்கள் ரொம்ப அலண்டுமிருக்கும். ஆனபடியினாலே, பங்காளத்துக் கப்பல்கள் வரப்போகிறதில்லை. இதல்லாமல் சீர்மைக் கப்பல்களேதாகிலும் வந்தால் சென்னப்பட்டணம் பிடிக்கப்பட்டது கபுறு அவர்களுக்குத் தெரியாமலே செவ்வையாய்ச் சென்னப்பட்டணமல்லவோ வந்து சேரவேணுமல்லவென்று தலைச்சேரி காலி முகனையிலே கப்பலை வைத்துப் பார்க்கிலும் ஒலாந்துக்காரர் வழியிலேயாகிலும் அவர்களுக்குக் கபுறு சொன்னால் அவர்கள் அறிந்தால் அங்கே தானே நின்று இவர்களுக்குக் கபுறு வந்து அதன்பேரிலே முஸ்திதுபண்ணிவைப்பார்கள. அல்லவென்று ஒலாந்துக்காரனுக்குப் பணம் அவசரமாய் விற்றுப்போட்டவர்களல்லவா?

இல்லையென்று துலுக்கர் எத்தனை நிற்கப்போகிறார்கள். இவ்விடத்தில் அப்பால் நமக்கும் கப்பல்கள் பிலனும் காணோமே. எதிரிகளும் கோட்டை வரங்குவோமென்று மேலாடிக்கொண்டிருக்கிறார்களே, கோட்டையை விட்டு நமக்குப் போகக்கூடாதே. எப்படியும் சண்டை பண்ணி நிருவாகம் பண்ணவேணும். அப்பால் நிருவாகத்துக்கு இல்லாமல்போனால் கோட்டையை ஒப்புவிக்கவேணுமே யல்லாமல் எக்கா எக்கியாய்க் கொடுக்கவும் யோசனைபண்ணிச் சரக்கை ஒலாந்துக்காரருக்கு விற்றோமென்றெண்பித்து அப்பால் தாண்டவைக்கவேணுமென்று மிதல்லாமல் அடகுவைத்துப் பணம் வாங்கவேணுமென்றும் இதிலே ஏதாகிலும் மாறு சம்மதியைக் குறித்து நடத்திருக்கவேணுமே மற்றப்படி சும்மா நடத்தினதாய்க் காண்பிக்கவில்லை என்று சொன்னதற்கு, எனக்குந் தெரியும். நீ இப்போது சொன்ன காரியத்திலே ஏதாகிலும் மாறுமென்றும், ஆனாலின்ன காரியமென்று ஏற்படவேண்டாமென்று கேட்டார். இன்னகாரியமென்றெப்படி இப்போதானே தெரியுங்கால் வெளியாக்கவேணும் என்று சொன்னேன் ஆனால், அதற்கேற்ற பேரைக்கொண்டு அதை நன்றாய்ப் பராமரித்துச் சொல்லவேணுமென்று சொன்னார். இதை விசாரியாமல் காரியமே யெடுத்துப்போச்சு. தேவனாம்பட்டணங் கோட்டை வாங்குகிற செலவுக் கிதைத்தானே நம்பி இருக்கிறது. இது போய்விட்டால் அப்புறம் என்னவிருக்கிறது என்று சொல்லி உங்களுக்கும் கும்பினியார் பணம் செலவில்லாமல் பார்த்தால் காரியமும் பத்தேயாய் லோகமெல்லாம் கீர்த்தி வருகிறது, கும்பினியாருக்கும் இராசாவுக்கும் சந்தோஷம் ஒன்றினாலே கும்பினியாருக்குச் செலவுக்குத் தக்கதாக வருத்து வந்ததென்று அதைப் பார்க்கிலும் கும்பினியார் சந்தோஷப்படுவார்கள்.

1747 ஆ ஜனவரி மீ 10 உ க்கு அக்ஷய ஸு தை மீ 1 உ செவ்வாய்க்கிழமை.

இற்றைநாள் காலத்தாலே துரையவர்கள் வீட்டுக்கு வந்தவிடத்திலே துரையவர்கள் என்னை யழைத்துத் தண்டு சமாசாரம் ஏதாகிலும் வந்ததாவென்று கேட்டார். நித்தியம் தண்டிலே ராமார் பயப்படுகிறது மவர்கள் நித்திரையில்லாமல்

குதிரை சேனி வைத்தவாக்கிலே யிருக்கிறது. இதோ வந்தார் கள் வெள்ளைக்காரர்கள். அதோ வந்தார்களென்கிற பயமும் ஐந்நூறு, அறுநூறு குதிரைமட்டுக்கும் அறிசபாக்கத்து மேல் பக்கம் தென்பக்கம் இரண்டுநாழிகை மட்டுக்கும் வந்து சுற்றிக் கொண்டு போகிறதும், அப்பாலே தேவனும்பட்டணம் குவர்னதோர் முன் மூவாயிரம் வராகன் இரண்டாவது மூவாயிரம் வராகனும் சிறிது வெகுமானமும் கொடுந்துத் தங்கள் கப்பல் ளிதோ வருகிறது, அதோ வருகிறது என்று ஆசை சொல்லிக் கொண்டு கப்பல்வந்தபிற்பாடு புதுச்சேரியின்பேரிலே சண்டைக் குப் போகிறதாகவும் கப்பல்கள் வந்தவுடனே மாபூசுகானுக் கும் மமுதல்லிகானுக்கும் திரண்ட பணங்கொடுக்கிறதாகவு மிப்படி இங்கிலீசுக்காரர் தப்பு ஆசைகள் சொல்லிக்கொண்டு எதிராளிகளை மயங்கப்பண்ணிக்கொண் டிருக்கிறார்களென்று சொன்னேன். அதன்பேரிலே ஆற்காட்டுச் சமாசாரம் ஒன்றும் வராமல் போச்சுதென்று கேட்டார். ஆற்காட்டிலேயிருந்து மாபூசுகானுக்கும் மமுதல்லிகானுக்கும் க்ஷாம காலத்தாலே சனங்கள் காபுருப்பட்டுப் போகிறார்களென்றும், இராச்சிய மெல்லாம் மழைத்தாட்சியாய்ப் பார். உலாந்து இராச்சியத் திலே பணங்காசு காண்கிறதாய் இருக்கவில்லை. நிசாம் அவர்கள் பணத்துக்குத் தாசில் சுறுக்காயிருக்கிறது. சீர்மைப் பணமுங்கள்பேரிலே விஸ்தாரமாயிருக்கிறது, எல்லாத்துக்கும் நாம் வந்து புதுச்சேரியின் பேரிலே இறங்கி அவர்களுக்குத் தக்கதாக நடப்பிக்கிறோமேயல்லாமல் நீங்கள் வந்துவிடவும் என்று எழுதி வந்ததென்று சொன்னதற்கு இவர்களேன் போக வில்லை என்று கேட்டார். இவர்கள் போகிறதற்கு இங்கிலீசுக் காரர் சொல்லியிருக்கிற ஆசையைத்தொட்டு நிற்கிறாப்போலே காணுதென்று சொன்னேன். அது மெய்தானென்று ஒத்துக்கொண்டார். தண்டிலே சிவனுகரெட்டி பிரபஞ்சமா யிருக்குதென்று சொல்லுகிறார்களே, அப்போதுதானே அவனை நான் பிடிக்கவேணும் என்று சொன்னதற்கு அவன் நம் முடைய பட்டணத்துக்குச் சமீபமாயிருக்கிறபடியினாலே நம்முடைய தயவு கோரி அப்துல் சலீலுக்கு முத் திரைப்போடப்போகாது. சீர்மையைச் சுட்டுப்போட்டுப் போ வார்களென்றெழுதினதாகச் சொல்லி நிறுத்திப்போட்டியே இப்போது அவன் நடப்பிக்கிற காரியத்தைப் பார்த்தாயாவென்று சொன்னார். அதற்கு நான் சொன்னது: அவர்கள் சீர்மை நாட்

டானுயிருந்து அவர்கள் கையிலே குத்தகை வாங்கிக்கொண்டு அவர்களிடமாயிருக்கிறவன் எசமான் கிட்டேவந்து உட்கார்ந்து கொண்டு வேலேயிட்டால் தள்ளக்கூடுமா என்று சொல்லிப் பின்னேயுமதற்கு அடுத்த நியாயங்களைச் சொன்னேன். அதற்குத் துரையவர்கள் சொன்னது: நீ எப்போதும் நியாயஞ் சொல்லுவாய், இந்த ரெட்டிக்கு எழுதி வந்தாப்போலேதானே எல்லாருக்கும் எழுதி வந்தது, அவர்களேதாகிலும் நடப்பித்தார்களா? என்று சொன்னுர். அதற்கு அவர்கள் சீர்மையெல்லாம் தூரமாயிருக்கிறது.

இவன் சீர்மை நம்முடைய பட்டணத்துக்கடுத்தாப்போலே இருக்குதென்று சொன்னதற்கு அப்படி நம்முடைய தயவு கோரினவனேயானுலே அவர்களிடத்திலேயிருக்கிறுப்போலேயிருந்து நமக்கு இதமாய் நடத்தப்போகாதா? இல்லே. தேவனும்பட்டணம் இவர்களிருக்கிற ஊரானபடியினுலே இங்கிலீசுக்காரருக்கும் மற்றது பண்ணி நடப்பித்துக் கொள்ளுகிறுன். நல்லது, எப்போதும் நடப்பிக்கிற காரியம் எங்கள் பிரான்சுக்காரர் இந்த ராச்சியத்திலே எத்தனே நாளிருக்கிறுர்களோ அதற்குள்ளாக அவனே விசாரித்துக் கொள்ளாமல் விடப்போகிறதில்லேயென்று சொல்லி எப்படியுமவனேப்பிடிக்க உபாயம்பாரென்று சொன்னுர். நல்லது, அப்படியே பார்க்கிறேன் என்று சொன்னேன். இரண்டு மூன்று நாளாய் முசே தெமெரோ என்கிறவன் என்னே அழைத்தனுப்பினவிடத்திலே போகக்கூடாமல் இற்றைநாள் காலத்தாலே துரை வீட்டுக்குப் போகிறதற்கு முன்னே முசே தெமெரோ என்னுடனே சொன்னது: சிறிது நேரம் லோகாபிரமமாய்ப் பேசியிருக்கச்சே முசே துய்பிளேய்க்சு சென்னப் பட்டணம் இங்கிலீசுக்காரருக்கு முசே லபூர்தோனே பதினெரு லட்சம் வராகனுக விற்றுப்போட்டதைக் கவையில்லே என்று அந்த உடன்படிக்கையைக் கிழித்துப்போட்டுவிட்டாரே, அதனுலே சீர்மையிலே முசே லபூர்தோனே பிராது பண்ணுல் முசே துய்பிளேய்க்சுக்கு நேரமுண்டாயிருக்கும். அது ஏனென்ருல், அவனே இந்தச் சண்டைக்குச் சயனுக்கி இங்கிலீசுக்காரர்கள் கப்பல்கள், பட்டணங்கள் பின்னேயும் இங்கிலீசு தாலுக்காக்கள் பிடிக்கலாமென்று மினிஸ்தர்களெழுதியிருக்கிறுர்கள். அந்த ஒடுதியவனுக்குக் கொடுத்திருக்கச்சே

அவன் தீர்த்துக்கொண்டு கையெழுத்துப்போட்டுக் கொடுத்ததைத் தள்ளப்போகாது. இதல்லாமல் அவன் எழுதிக் கொடுத்த உடன்படிக்கைக் காகிதத்திலே தன்பேரில்லைப் பாடுத்திதெல்றெயி என்றும் இங்கிலீசுக்கார ராசாவுடைய கும்பினீர் மனுஷன் மேஸ்தர் மாசுக்கு உடன்படிக்கை எழுதிக் கொடுத்தது என்றும் எழுதியிருக்கிறபடியினுலே பிரான்சு ராசாவையும், இங்கிலீசு ராசாவையும் அந்தக் காகிதத்திலே எழுதியிருக்கிறபடியினுலே மூசே லபூர்தோனே சாராது. இங்கிலீசு ராசாவையும் சேர்ந்த சம்மதியானபடியினுலே ஒரு ராசாவுடைய பாடுத்தியென்று எழுதப்பட்டால் எல்லாரும் அங்கீகரித்துத் தீரவேணும். அவன் எத்திதாட்சியாய் நடத்தினுல் பிரான்சு ராசாவுக்கறிக்கைப்பண்ணினுல் அவர் தண்டிப்பாரேயல்லாமல் பின்னை ஒருத்தரெழுதினதைத் தள்ளப்போகாது. அப்படி தள்ளுகிறதானுல் ஒருத்தன் நடத்தின காரியத்தை ஒருத்தன் தள்ளுகிறபோது அப்போது காரியமும் நடக்க அறியாது என்றிந்தப்படிக்கு ராசாகட்டளைபண்ணியிருக்கிருர். ராசக்கட்டளையைத் தள்ளப்போகாது. அவன் நியாயமானபடிக்கு நடப்பித்தாலும் நியாயத் தப்பிதமாய் நடப்பித்தாலும் சீர்மையிலே போய்ப் பேசவேணுமேயல்லாமல் இங்கே தள்ளப்போகாது. இங்கே தள்ளினபடியினுலே முசியே லபூர்தோனே சீர்மைக்குப் போவார். சீர்மையிலே சொன்னுல் முசியே துய்ப்ளேக்சுவை அழைத்தனுப்பிவைப்பார்கள்போலே காணுதென்று கெட்டியாய் எனக்குத் தோற்றியிருக்குதென்று சொன்னுன்.

அப்பாலிரண்டு மூன்று நாளைக்கு முன்பாக அரியாங்குப்பத்திலே யிருக்கிற சம்பாகோவிலிலே பிரேதத்தை யெடுக்கிற டோலி ஒன்று இருந்துதாம், காயம்பட்ட சொல்தாதையதிலே போட்டனுப்பினுர்கள் அந்தக் காயக்காரனை இஸ்பித்தாலிலே போட்டு அந்த டோலியைக் கொண்டுபோய் அரும்பாத்தபிள்ளை வீட்டண்டையிலே போட்டுவிட்டுக் கூலிக்காரர் புறப்பட்டுப் போய்விட்டார்கள். அந்த டோலிக்கு குருசொன்று போட்டிருக்குமாம். அதன்பேரிலே சம்பாகோவிலிலேயிருக்கிற பிரகாசனென்கிறவன் அந்தத் தெருவழியே போகச்சே இதைக் கண்டான். இவனுக்கு எப்படி தெரிந்ததென்ருல் டோலி சட்டமாயிராதே. பிரேதத்தை யெடுக்கிற

டோவி சாடை வேறேயானபடியினுலே இவன் பார்த்தாப் போலே தெரிந்து அதைச் சின்ன பரசுராமப்பிள்ளையண்டைக் குப் போய் இதேதுடோலி? எங்கள் கோவிலுதுபோலக் காணு தென்று கேட்டான். நானறியேன். அரியாங்குப்பத்திலேயிருந்து காயக்காரரை எடுத்துவந்த கூலிக்காரர் இங்கே போட்டு விட்டுப்போனுர்களாங்காட்டியும். இப்பவுங் கூலிகொடுக்கிறே னென்று என்றெடுத்துப் போகச்சொன்னுனும், நல்லதென்று சொல்லிவிட்டு அவன் போய் பாதிரிகடுத்துடனே சொன்னுனும் அவர் துரைக்கு ஒரு பெத்திஸியோ மெழுதி இந்த அரியாங்குப் பத்திலேயிருக்கிற பிரேதத்தை எடுக்கிற கட்டிலிலே குருசு போட்டிருக்கும். அதைக் கொண்டுவந்து அரும்பாத்தை வீட் டண்டையிலே தெருவிலே போட்டு அதன்பேரிலே பீயைக் கரைத்து ஊற்றிக் கல்லிலே போட்டு இப்படிப்பட்ட அலங் கோலம் பண்ணினுர்கள் என்றும், பின்னையும் அடுத்த ஙியா யங்களை எழுதி குவர்னதோருக்குக் கொடுத்தாப்போலே யும் அதைக் குவர்னதோர் பார்த்துக்கொண்டவுனே கிறேப்பியேர் முசியே தெமெரேனையும் இராசவுடைய புரோக் கிறதோர் முசே மேரையும், முசே மீராவையும் அழைப்பித்துக் கொண்டு பாதிரி கடுத்தேயையும் அழைப்பித்துக்கொண்டு அப்பால் மனுஷரையனுப்பி அந்தக் கட்டில் பல்லக்கை எடுத்துக்கொண்டு சின்ன பரசுராமப்பிள்ளையையும் அழைத் துக்கொண்டு வரச் சொன்னுர்கள். சின்ன பரசுராமப் பிள்ளை வந்தவுடனே இந்தக் கட்டில் பல்லக்குச் சேதி என்ன வென்று கேட்டார்கள். முன் அந்தப் பக்கத்திலே எழுதியிருக் கிறபடிக்கும் பரசுராமப்பிள்ளை வந்து சொன்னுன். அதற்குத் துரை யிருந்துகொண்டு அப்போதுதானே ஏன் அனுப்பி விடாமற்போனுய் என்று கேட்டார். எனக்கு ஆயிரம் அலுவல். கட்டில் பல்லக்கு இருந்த சேதியை நானறியேன். பாதிரி மனுஷன் வந்து எங்கள் கட்டில் பல்லக்குப்போலே இருக்கு தென்று கேட்டான். நானறியேன். அரியாங்குப்பத் திலே யிருந்து வியாதிக்காரரை எடுத்துவந்தார்கள். கூலிக் காரர் போட்டுவிட்டுப் போனுர்கள். இப்பவுங் கூலிக்காரரைக் கூட்டுகிறேன். எடுத்துப்போமென்று சொன்னேன். நல்ல தென்று போனவன், மறுபடி வராமற்போனுனென்று நடந்த சேதியைச் சொன்னுன்.

அப்பால் ராசாவுடைய புரோகிறதோரையும் கிறேப் பியேரையும் முசியே மீராவுடனேயுஞ் சொல்லி அந்தக்கட்டில் பல்லக்கிலே கல்லெறியப்பட்டிருக்குதா? நரகலைப்போட்டுப் பின்னையும் அலங்கோலம்பண்ணியிருக்குதா? சம்பாகோவில் பாதிரி கடுத்தேயையும் கூடவைத்துக்கொண்டு இம்போர்மா ரிட்டு அரியாங்குப்பத்திலே யிருந்து சப்பித்தான்மார் கோவிலி லேயிருந்த கட்டில் பல்லக்கை வாங்கி, காயக்காரனைப்போட்ட னுப்புவித்ததுமுதல் நீங்களுமிம்போர்மாரிட்டு தீர்க்கிற பரியந் தீர்த்து அதற்குள்ளே என்ன நடந்ததோ அதுகளெல்லாம் நீங்கள் போய் சவிஸ்தாரமாய் விசாரித்து வாருங்களென்று உத்தாரங்கொடுத்தார்கள். அதன் பேரிலே மேலே எழுதப் பட்ட நாலுபேரும் போய் அந்தக்கட்டில் பல்லக்கு அண்டை யிலே யிருந்து, தச்சமேஸ்திரியையும் அழைப்பித்துக் கல்லெறி பட்டிருக்கிறதா, நரகல் விழுந்திருக்கிறதாவென்று அதுகளெல் லாம் பார்த்து அந்தக்கட்டில் பல்லக்கிலே கல்லெறியப்பட்ட தும் நரகலில்லாததும் பார்த்துச்சம்பாகோவில் பாதிரி கடுத்து என்கிறவரை அழைப்பித்து நீங்களெழுதிக்கொடுத்த பெத்தி ஸியோமிலே கல்லெறிபட்டிருக்குதென்றும் நரகலைப் போட் டிருக்குதென்று மிப்படியெல்லாம் எழுதிப் போட்டார்களே, அப்படியிருக்கிற அடையாளக்குறிப்பு உண்டாயிருந்தால், காண்பியுங்கோவென்று மேலே எழுதியிருக்கப்பட்ட நாலு பேரும் கேட்ட விடத்திலே இதுகளெல்லாங் காஞ்சுப்போச் சுது. ஆனபடியினாலே தெரியவில்லையென்று சொன்னார். அதன் பேரிலே இவர்கள் நாலு பேரும் இருந்துகொண்டு நீங்களிப் படி அபத்தஞ் சொல்லுவீர்களா? தமிழருடைய கோவிலிலே நீங்கள் போட்ட நரகல் காஞ்சுப்போன பிறகும் அந்தச் சாடை தெரியாமல் போச்சுதா? கல்லெறியப்பட்டிருந்தால் அப்போதே தெரியாதா உங்களைப்போலொத்த பெரிய மனுஷ ரிப்படியப்படி பெரிய பொய் சொல்லுவார்களா? நீங்களில்லாத கலாபமெல்லாம் பண்ணிக்கொண்டு பட்டணத்திலே குடிகளைச் சேரவொட்டாமல் இப்படியெல்லாம் பண்ணுகிறீர்களென்று சொல்லிவிட்டு இந்த நாலுபேரும் துரையவர்களுடனே சொன் னார்கள். அதன்பேரிலே துரையவர்கள் சம்பாகோவிலிலே பெரிய பாதிரியாயிருக்கப்பட்ட பாதிரி கடுதே என்கிறவரை அழைப்பித்து இப்படிப்பட்ட அபத்தமான வார்த்தையை நீங்க

ளிப்படி பெத்திஸியோ மெழுதிப்போட்டீர்களென்று கேட்ட விடத்திலே, முன் சொன்னப்பட்ட சாடைபடிக்கு அதுகளெல்லாம் காஞ்சிப்போச்சுது. அதனாலே தெரிய வில்லையென்று சொன்னார். அதன்பேரிலே உம்மைப்போ லொத்த பெரிய மனிதர்கள் இப்படி பொய்சொல்லுவார்களா? நீங்கள் பண்ணுகிற காரியத்தினாலே பட்டணத்திலே இருக் கப்பட்ட சனங்களெல்லாம் கலைந்துபோகிறதேயல்லாமல் குடிகள் வந்து சேரமாட்டாது. ஆனால், நடந்த சேதியெல் லாம் கடுதாசியெழுதி அதைக் கோன்சேலிலே போடச்சொல் லிச்சொன்னார்கள். அதன்பேரிலே பாதிரியாயிருந்துகொண்டு அப்படி கொமிசேலிலே எழுதிப்போடப்போகாது. என் னுடனே வந்துசொன்ன மனுஷர் அப்படியென்று சொன்னார் கள். அவர்கள் பேச்சைக்கேட்டு மெய்யென்று நான் பெத்தி ஸியோ மெழுதிப்போட்டேன். அதென்னமோ தெரியாதென் கிறதாய்ப் போக்காய்ச் சொன்னார் அதன்பேரிலே நல்லது அப் படி சும்மாவிடப்போகாது கொமிசேலிலே யெழுதிப்போட வேணுமென்கிறதாய்ச் சொன்னார்களென்று முசியே தேப்ரேஸ் என்னுடனே சொன்னான். ஆனால் பின்னையும் நடந்த விசேஷம் அனேகமெல்லாம் உண்டு அதிலே சுருக்கமாய்ச் சாடையாய் எழுதினது நடந்தசேதியெல்லாமெழுத வேணுமென்றால் எழுதி முடியாது. இதுவுமில்லாமல் முசியே தேம்ரேனுடனே சொன்ன தென்னவென்றால், தானியப்பமுதலியார் போய்ச் சம்பாகோவில் பாதிரிகளுடனே சொன்னதென்னவென்றால்: இப்போது வந்தி ருங்கியிருக்கிற துலுக்கர் தண்டுபோகாமலிருக்கிறது எதனாலே யென்றால் ரங்கப்பன் அவர்களுக்கு உள்ளாந்த்ரீகமாய் எழுதிய னுப்புகிறதினாலேயும் அவனுடைய உபேக்ஷையின் பேரிலே அவர் களிருக்கிறார்களென்று மிதல்லாமல் தேவனாம்பட்டண மிற்றை நாள் வாங்கிப்போடலாம். அதுவும் ரங்கப்பனைத்தொட்டு தான் அட்டியாயிருக்குதென்று மிதுகளெல்லாமிவர் பண்ணு கிற திருக்கு என்றும் சம்பா கோவில் பாதிரிகளுடனே சின்ன முதலி லாசறு சொன்னதாகச் சம்பாகோவிலார் தம்முடனே சொன்னார்களுடனே முசியே தேம்ரே னென்னுடனே சொன் னான். இதல்லாமல் சம்பாகோவில் பாதிரிகள் பின்னையும் நாலத்து இரண்டு பேர் வெள்ளைக்காரருடனே சொன்னார்கள் அவர்களும் வந்து சம்பாகோவிலாரிப்படி சொன்னார்கள். லா சறு அவர்களுடனே சொன்னானாம். அதெப்படியென்று கேட்

டார்கள். அதற்கு நான் சொன்னது: அப்படி யொருக்காலும் நடக்காது. ஆனல் சம்பா கோவிலார் கட்டுகிற விசேஷமென்று அதற்கெப்படி சொல்லவேணுமோ அந்தப்படிக்கு அவருக்குச் சொன்னேம். அவர்களும் மெய்தானென்று ஒத்துக்கொண் டார்கள்.

*1747* ஆ. சனவரி மீ *11* உ க்ஷய அக்ஷய ளூ தை மீ 2உ புதவாரம் மாட்டுப்பொங்கல்.

இற்றைநாள் மச்சிலி பந்தரிலேயிருந்து முசே லெனுவார் ஒரு சேவகன் கையிலே கொடுத்து, துல்கோட்டா துலுக்கர் லாகையாய் மடித்து மகம்மது பந்தரிலே கரடி புச்சனுக்குக் கொடுக்கிறதென்று தெலுங்கிலே எழுதியனுப்புவித்தான், அந்தக் காகிதச் சேதி என்னவென்ருல் : முசே பரிதியைப் பிடித் துக்கொண்டாப்போலேயும், புதுச்சேரி சுற்றிலுங் துலுக்கர் சுற்றிக்கொண்டிருக்கிறதாய்ச் சேதி கேள்விப்பட்டதாயும் எழுதியனுப்பினன். காகிதங் கொண்டுவந்த சேவகன் சொன் னது: இங்கிலீசுக் கப்பல் பவழக்காட்டுக்கு வடவண்டை முல்வல ரவணய்யன் சாவடிக்கு நேராய்க் கிடக்கிறது. அந்தக் கப்பல் வங்காளத்திலே யிருந்து வந்ததாகவும் கமாண்டோர் மேஸ்தர் பேத்தோம் (M. Peyton) எஸ்க்காதுருஎன்று அதிலே ஒரு கப்பல் வந்து பவழக்காட்டுச் சேதியுஞ்சொல்லச் சிறிது காகிதமும் கொடு த்து மறுபடியும் சற்றே உசந்து போச்சுதென்று மந்தக்காகிதம் தேவனும்பட்டணத்துக்கவர்கள் அனுப்பினதாகவும் சொன் ன்ன். அந்தச் சேதியைத் துரைக்குக் கபுறு சொன்னதற்குத் துன்ர மெய்தான், இரண்டு மூன்று நாளைக்கு முன்பாகச் சென் னப்பட்டணத்துத் துறைக்கு நேராய் இரண்டொரு உருப்படி கண்டதாய் எழுதிவந்ததென்றுசொல்லி யது இங்கிலீசுக் கப்ப லாகவேணுமென்று சொன்னர்.

அப்பால் முசியே போதுவில் ( Mr. Boutville ) வந்து முசியே பேர்த்ராம் ( Mr. Bertram ) சம்மதிக்கு இருநூறு ரூபாய் ரங் கப்பன் சொல்லிக்கொண்டான். கொடுக்கமாட்டேன் என்று சொல்லுகிருன், முசியே பேர்த்ராம் பணம் கிறேப்பிலேயிருக் குதே யதிலேயாகிலும் கொடுக்கச்சொல்லவேணுமென்று கேட்டதற்கும் என்னை அழைத்துக்கேட்டதற்கும் நான் வயu

ணுஞ் .சொன்னதின்பேரிலே அவர் கிடங்கிலே மறியலிலிருந்த யச்சைப்பாக்கைக் கொடுத்துவிடச் சொல்லிக் கணக்கு ரங்கப் பிள்ளைக்கு உத்தாரங்கொடுத்தார். அப்பால் துரை பதினொரு மணிக்கு முசியே பொசேத்து தோட்டத்துக்கு முசியே ஒசே விருந்துக்குச் சாப்பிடப்போனார். நேற்று ராத்திரி நானூறு பேரும் தெத்தஷமான் மரிகிருஷ்ணுபுரமட்டுக்கும் போய் மறு படியும் அமிசபாக்கம் வந்ததாய் எழுதிவந்தது.

நேற்று ராத்திரி துலுக்கர் அறமாதும்பேரிலே போன தாசுமான் இரண்டு பிரிவாய்ப் போனவர்கள் ஒரு பிரிவுமாத் திரம் சாகியண்டை போனார்கள். அவர்கள் மாறியிருந்தார்கள். பின்னை ஒரு பிரிவு தாசுமான் வராதபடியினாலே சமீபத்திலே போன தாசுமான் ஒன்று சண்டைபண்ணாமல் வந்துவிட்டார் கள். அதிலே செஞ்சாக்தும் (M. Chengeac) பின்னை ஒரு ஒபிசி யேலுக்கும் கலாத்து வந்துவிட்டார்கள்.

இற்றைநாள் காலத்தாலே சென்னப்பட்டணத்திலிருந்து குவர்னதோருக்கு வந்த காகிதத்திலே இங்கிலீசுக் கப்பல் நாலு கப்பலும் ஒரு சுலுப்பும் சென்னப்பட்டணம் துறைக்கு நேராய்க் காண்பித்ததென்று சேதி வந்ததாகத் துரை சொன் னார். அப்பால் மேஸ்தர் மாசு குவர்னதோர், துபாசி லட்சு மணன் கையில் பறிபோனது மதாம் துய்ப்ளேக்சு முகாந்திர மாய் மேஸ்தர் மாசு பெண்சாதி, போன களவு கொடுக்கச் சொல்லி, துரைக்குச் சொல்லிவித்ததற்கு, துரை என்னுடனே சலவை சம்மதி மார்க்கமாய் கொடுக்கிறதாய்க் கொடுத்துவிடச் சொன்னார். அவர்கள் கையிலே பறித்தது இருபத்தேழு வரா கனும், அவன் நூறுவராகனுக்குப் போச்சென்று சொல்லு கிறேன் என்று சொன்னதற்கு என்னுடைய காரியமெல்லாம் நீ பிறக்கச்சே இதற்கு வழியெப்படியோ அப்படி ஒத்துக் கொள்ளப்போகாதா? என்னை இன்னங் கேட்கிறாயென்று சொன்னார். நல்லது அப்படியே மார்க்கமாய்த் தீர்த்துப் போடுகிறேன் என்று சொன்னேன்.

*1747* ஆ சனவரி மீ 13 உக்கு அக்ஷய ஷு தை மீ 4 உ வெள்ளிக்கிழமை

இற்றைநாள் காலத்தாலே வடக்கே கப்பல் கண்டவுடனே என்னை அழைத்து இப்போது வருகிறது தரங்கம்பாடி அச்

சைக்கப்பலோ அல்லவென்று ஒக்தோபர்மாதத்திலே இங்கே வந்து அச்சைக்குப் போய்வந்து தை மாதத்திலே மோக்காவுக்குப் போகுதேன்றும் அந்தக்கப்பல் ஒலாந்துக்கப்பலோ தெரியாதென்றும் சொன்னார். அந்த ஒலாந்துக்கப்பல்தானுமென்று சொன்னதற்கு இதிலே முசியே லபூர்தோனே இஸ்காதுருவே இரண்டு கப்பலும் முசியே தோடுதலேன் மூன்று கப்பலும் ஆக ஐந்து கப்பலும் அச்சி சேர்ந்த கபுறுவந்ததானால் அந்தக்கப்பால் இவ்விடத்துக்கு வருமென்றுமிதுசரியே யில்லாவிட்டால் முசியே லபூர்தோனே கூடக் கொண்டுபோனான் என்று எண்ணவேணுமென்று சொன்னார். அது உள்ளது தானே என்று சொன்னேன்.

இன்றையதினம் மத்தியானம் பனிரெண்டு மணிக்கு இந்த ஒலாந்தாக்கப்பல் ஓடிவந்து வைத்துப்பிடித்து ஒன்பது பீரங்கிப் போட்டான். துறையிலேயும் பதிலுக்கு ஒன்பது பீரங்கிப் போட்டார்கள். இந்தக் கப்பலிலே வந்தசேதி என்னவென்றால்: முசே தோடுதலேன் மூன்று கப்பலும், முசே லபூர்தோனே இஸ்கதுருலே இரண்டு கப்பலும் ஆக ஐந்து கப்பலும் அச்சை சேர்திருந்து இந்தக் கப்பல் பயணம் புறப்படுகிறதற்கு எட்டு நாளைக்கு முன்னே அந்த விடத்திலே இங்கிலீசுக்கப்பல் இரண்டு மூன்று கப்பல் வந்து திரியுதென்கிற கபுறு கேட்டு அந்தக் கப்பலைத் துரத்திக்கொண்டு போனார்களென்று அந்தச் சேதி இந்தக் கப்பலிலே வந்த கப்பித்தான் இறங்கினவுடனே ஷெ துரையவர்களுடனே சொன்னேன். அந்தமட்டிலே என்னை அழைத்தனுப்புவித்துச் சொன்தென்னவென்றால்: பார்த்தாயா, நீயும் நாமும் காலமே பேசிக்கொண்டிருந்த சம்மதிக்கு இப்போது இந்தக் கப்பலிலே வந்தசேதி. நம்முடைய கப்பல் ஐந்து கப்பல் அச்சையிலே வந்துசேர்ந்து அங்கேயிருந்து இங்கிலீசுக்காரர் கப்பலைக் கண்டு இந்தக் கப்பல் பயணப்படுகிறதற்கு எட்டு நாளைக்கு முன்னேதானே அந்த இங்கிலீசுக்கப்பலைத் துரத்திக்கொண்டதென்று கப்பல் கப்பித்தான் சொன்னான். ஆனபடியினாலே, இரண்டு மூன்று நாளையிலே அந்த ஐந்துக் கப்பலும் காணவேணுமென்கிறதாய்ச் சொல்லி இந்தச்சேதி சந்தோஷம்வந்து சகல சனங்களுக்கு மானபடியினாலே இந்தச் சந்தோஷத்தையெல்லாருக்கும் அறிக்கைப் பண்ணினேனென்று சொன்னார்

கள். அவர்களுடைய சந்தோஷ முகவிலாசமும் ஒரு மிதத்திலில்லை. இப்படிச் சந்தோஷமாயிருந்தார்கள்.

இற்றைநாள் சாயங்காலம் எட்டு மணிக்குச் சென்னப்பட்டணத்திலேயிருந்து எழுதி வந்த தென்னவென்றால்: மேலெழுதப்பட்டிருக்கிற முசியே தோடுதலேன் (M. Dordalin) மூன்றுகப்பலும் ஆக நாலுகப்பலும் முசியே லபூர்தோனே இஸ்காதுருலே ஒரு கப்பலும் ஆக நாலுகப்பலும் 2உ புதன்கிழமை சாயங்காலம் வந்து சென்னப்பட்டணம் துறை பிடித்ததாய்ச் சேதி எழுதிவந்தது. இந்தச் சேதி வந்தவுடனே துரையவர்களென்னை அழைத்து ரங்கப்பா, நல்லசேதி வந்தது. சென்னப்பட்டணத்துக்கு நாலுகப்பலும், ஒலாந்துக்காரனுது ஒரு சுலுப்பும் பிடித்துக்கொண்டு ஆக ஐந்து உருப்படியும் வந்ததென்று சொல்லி இனிமேலிந்தச் சேதி கேட்ட இங்கிலீசுக்காரருக்கும் மாபூசுகானுக்கும் மமுதல்லிகானுக்கும் அவர்கள் பாளையத்துக்கும் எப்படியிருக்குமென்று கேட்டார்கள். இடிவிழுந்தாப்போலே யிருக்கும். இனிமேல் பாளையம் ரொம்பநாளிருக்கமாட்டாது. பதினைந்து நாளையிலே கப்பல் வரும். பணம் தாரோமென்றும் சொல்லுகிற இங்கிலீசுக்காரர் பேச்சு பொய்யாய்ப் போச்சுதென்று அவர்களுக்குத்தானே ஒன்றுக்கொன்று பிகாடிக்கிறதும் போமென்று சொன்னேன். அதற்குத் துரை சொன்னது: நானப்படியென்று எண்ணுகிறேனென்றுசொன்னார். அப்பாலெப்போதும்போலே லோகாபிரமமாய்ப் பேசியிருந்து அனுப்புவித்துக்கொண்டு வந்து வீட்டுக்குப் பத்து மணிக்குப் போனேன்.

1747 ஆ சனவரி மீ 14 உ க்கு அக்ஷய ஞு தை மீ 5உ சனிவாரம்

இற்றைநாள் மத்தியானம் பனிரெண்டு மணிக்கு ஸ்ரீ துரையவர்கள் என்னை யழைத்தனுப்புவித்தார்கள். நான் போய்க் கண்டு பேசினவிடத்திலே, அச்சையிலேயிருந்து வந்த ஒலாந்தாக்கப்பலிலே வந்த ஸராஞ்சுபழத்தைக் கொடுத்துத் தண்டுக்கு அனுப்பிவைக்கச்சொல்லி உத்தாரங்கொடுத்தார். அந்த மட்டிலே அந்தப்பழத்தையெல்லாம் வாங்கிக்கொண்டு நம்முடைய பாக்குக்கிடங்கிலே வந்து கூண்டு பின்னிவைத்து

மாபூசுகானுக்கும், மமுதல்லிகானுக்கும், அல்வருதிகானுக்கும் மூன்று பேருக்கும் எண்பதெண்பது பழம் விழுக்காடு கட்டியவர்கள் பேருக்குக் கடுதாசியும் உபசாரமாயெழுதிக்கொண்டு கோண்டூர் தோப்பிலே இறங்கியிருக்கிற லஸ்கருக்கும் மானேஜியைக் கூட்டியனுப்புவித்தோம். இதல்லாமல் ஆற்காட்டுக்கு அசரத்து நபாபு அல்வருதிகான் அவர்களுக்கு நூற்றிருபது பழமும், சம்பத்துராயனுக்கு எண்பதும், உசேன் சாயபுக்கு எண்பது பழமும் கூண்டிலே போட்டு அவரவர் பேருக்குக் கடுதாசியும் உபசாரமாக எழுதி ஆற்காட்டிற்கு அனுப்புவித்தோம். அதன் பிறகு சாயங்காலம் எட்டு மணிக்குப் பறங்கிப்பேட்டை அமுல்தாரன் அண்டையிலேயிருந்து வேலாயுதப்பிள்ளை ஸ்ரீ துரையவர்கள் பேருக்கு ஒரு கடுதாசியும், நம்முடைய பேருக்கு ஒரு கடுதாசியும் கொண்டுவந்து கொடுத்துக் கண்டு வார்த்தை சொன்னார்கள். அதன்பேரிலே அந்தக் கடுதாசியைக் கொண்டுபோய்க் காண்பித்தவிடத்திலே துரையவர்களுக்குப் படித்துக் காண்பித்தவிடத்திலே அதையெல்லாம் பார்த்துக் கொண்டு மறு உத்தரவு இப்போதுதானே எழுதியனுப்பு என்று சொன்னார். அந்தக் கடுதாசியிலே எழுதச் சொன்ன வயணமென்னவென்றால்: அவுல்தாரனை வரச் சொல்லியும், வருகிறதற்குப் பின்னை ஒன்றும் சிந்தைபண்ணத் தேவையில்லை என்றும், வரச்சொல்லி எழுதச் சொன்னார்கள். அப்படியே பறங்கிப்பேட்டை அவுல்தாருக்குக் கடுதாசி எழுதி வேலாயுதப்பிள்ளை கையிலே கொடுத்துப் பத்து மணிக்கு அனுப்பி விட்டோம்.

இற்றைநாள் டாக்டர் மோக்ஷாவுக்கு ஒன்பதுகால் கிழிவு நூறுகோடி, இருபத்தைந்து கட்டுப் போட்டான்.

இற்றைநாள் ராத்திரி அச்சைக் கப்பலிலே வந்த துலுக்கர் சேவகன் வந்து என்னுடனே சொன்னதென்னவென்றால்: கப்பித்தான் போயரென்கிறவன் (M. Boyer) இங்கிலீசுக்காரன் தரங்கம்பாடியார் கப்பலிலே நூறு பாரம் நூற்றியைம்பது பாரம் சாம்பிராணியும் பின்னையும் அச்சையிலேயிருந்து வருகிற சரக்குகளும் நூற்றியைம்பதும், இரு நூறு கட்டிப் பொன்னும் ஏற்றினான். அந்தக் கப்பல் இரண்டு மூன்று நாளையிலே இந்த மார்க்கமாய்த்தானே வருமென்று சொன்ன

கபுறை துரைக்குச் சொன்னவிடத்திலே துரை சொன்னது: தரங்கம்பாடியார் எங்கள் சிநேகிதர்கள். அவர்களெங்களுக்கு அநேக காரியங்களிலே உதவி ஒத்தாசை பண்ணியிருக்கிறார்கள். ஆனபடியினாலே, அவர்கள் கப்பலிலே போகிற இங்கிலீசுக் காரனைப் பிடிக்கிறதும், அவனுடைமையை எடுக்கிறதும் நியாய மல்லவென்று சொல்லி நம்முடைய கப்பல் சென்னப்பட்டணத் துக்கு நாலு உருப்படி வந்ததே இந்தக் கப்பலைக் கண்டவுடனே பழவேற்காட்டு ரேவிலே கிடந்து இங்கிலீசுக் கப்பல்கள் ஓடிப்போய்விட்டது. ஒரு ஒலாந்து சுலுப்பு இருந்தது. அதைப் பிடித்துவந்தார்கள் என்று சொன்னார். எனக்குச் சென்னப்பட்டணத்திலே யிருந்து எழுதி வந்தது. இங்கிலீசுக் காரர் சுலுப்பு என்று சொன்னேன். அதற்குத் துரை யிருந்து கொண்டு உன் மனுஷர் கபுறு நன்றாய் விசாரித்தெழுதவில்லை. இனிமேலிப்படி தப்பு கபுறு எழுதாதபடிக்குப் பத்திரமாய் எழுதியனுப்பு என்று சொல்லி இந்தக் கப்பித்தான் போயருது தான் நேற்று அற்பிசி மாதத்திலே ஒரு சுலுப்பு வந்தது.

1747 ஆ ஜனவரி மீ 15 உக்கு அக்ஷய ஸு தை மீ 6 உ ஆதிவாரம்.

இற்றைநாள் மத்தியானம் பனிரெண்டு மணிக்கு ஒரு கப்பல் ஓடி வந்து துறை பிடித்தது. பதிமூன்று பீரங்கிப்போட் டான். பதிலுக்குக் கோட்டையிலும் பதிமூன்று பீரங்கிப் போட்டார்கள். இந்தக் கப்பல் முசியே லபூர்நோனே இஸ் காதுருவே வருகிறதென்றும் அது பெயர் சேன் லூய் என்று எழுதியிருக்கிறது. இந்தக் கப்பலுக்குக் கப்பித் தான் முசியே பேன்வா (Mr. Benoit). அந்தக் கப்பித்தான் போகாமல் இவ்விடத்திலேதானே யிருந்தபடியினாலே அவனுக் குப் பதிலாகக் கப்பித்தானாய்ப் போன முசியே சேன் தோஷோ (M. St. Dechoaux) என்கிறவன் வந்தான். இன்னம் பிறகாலே ஒரு சுலுப்பு காணுது. அந்த சுலுப்பும் பிமலிப்பட்டணத்தி லிருந்து நாகப்பட்டணத்திலே பக்குசலாயிருக்கிற (Paymaster) வனுடைய தட்டுமுட்டு மேற்றிக்கொண்டு இருபத்தைந்து கரிசை நெல்லும் ஏற்றிப் பழவேற்காட்டு கப்பித்தான் பேருக்கு ஒரு கடுதாசி எழுதி அந்தக் கடுதாசியிலே விலையெங்கே நிலவர

மாயிருக்குதோ அங்கே விற்றுப்போடச்சொல்லி எழுதி வந்த படியினுலே அந்த சுலுப்பு பழவேற்காடு துறையண்டையிலே வரும்போது பிராஞ்சுக்கப்பல்காரன் கண்டுபிடித்துக்கொண்டு இங்கிலீசுக்காரருடையது என்று சொல்லிச் சென்னப்பட்டணத்துக் கரைக்குக் கொண்டுவந்து அந்த சுலுப்பைப் பரிசோதித்தவிடத்திலே அந்த சுலுப்பு ஒலாந்துக்காரருடையதென்று நிஷ்கருஷையாய்த் தீர்ந்தபடியினுலே இவ்விடத்துக்கு வந்த கப்பல்களுடனே கூட கூட்டி இவ்விடத்துக்கனுப்பினுர்கள். அந்த சுலுப்பு இவ்விடத்துக்கு வந்தவுடனே ஸ்ரீ துரையவர்கள் நாகப்பட்டணத்துக்குக் கப்பித்தானுக்குக் கடுதாசியெழுதி இந்த சுலுப்பு உங்களுடையதுதானுவென் றெழுதியனுப்பினுர்கள். அந்தக் கடுதாசிக்கு உத்தரவு வந்தபிற்பாடு என்ன நடக்குமோ தெரியாது.

1747 ஆ சனவரி மூ 16 ௳ க்ஷய ஞ தை மூ 7 ௳ சோமவாரம்

இற்றைநாள் பறங்கிப்பேட்டை அவுல்தார் சேக்சாமது என்கிறவர் தாம்வருகிறுமென்று சொல்லி என்பேருக்குக் கடுதாசி யெழுதியனுப்பினுர். அந்தச் சேதியை ஸ்ரீ துரையவர்களுடனே போய்ச் சொன்னேன். அவ்விடத்திலே நல்லது அப்படிதானே அருமாத்தபிள்ளைசாவடி வந்து இப்படி வரச்சொல்லி எழுதியனுப்பென்று சொன்னுர்கள். அந்தப்படிக்கு நானெழுதியனுப்புவித்தபடியினுலே அவர்கள் அருமாத்தைபிள்ளைசாவடி வந்துசேர்ந்து சமாசாரத்துக்குச் சாயங்காலம் நமக்குக் கபுறு வந்தது. சேதிவந்தவுடனே நான் போய்த் துரையவர்களுடனே எச்சரித்ததற்கு அவர்கள் சொன்ன உத்தரவு என்னவென்றுல்: நீ எதிர்கொண்டுபோய் அழைத்துக்கொண்டுவா என்று சொல்லி, இருபதுபேர் கும்பினீர் சேவகரையும் கூடச்சொல்லி, வெள்ளைக்காரரிலே முசியே சேன்மடுத்தேனையும், முசியே ..... யுங்கூட அழைத்துக்கொண்டுபோ யழைத்துவரச் சொல்லியும் மற்ற வேண்டிய வயணமெல்லாஞ் சொல்லியும், அவன் வரச்சே பீரங்கிப்போடவேணுமாவென்று கேட்டார்கள். அவன் பெரிய மனுஷனுன்படியினுலே கெவுனிவாசலிலே பீரங்கிப் போடவேணுமென்று சொன்னேன், ஆனுலெத்தனை பீரங்கிப் போடச்சொல்லுவோமென்று கேட்டாரே, பீரங்கிப்போட

வேணுமென்று சொன்னேன். அந்தப்படியே பீரங்கி மேஸ்திரியை அழைத்துப் பீரங்கி சுடச்சொல்லி உத்தாரங் கொடுத்துப் போகச்சொல்லி உத்தாரங் கொடுத்தார்கள். அந்த மட்டிலே அனுப்புவித்துக்கொண்டிருக்கிற கிடங்குக்கு எட்டு மணிக்கு வந்தேன். இன்றையதினம் இராத்திரிக்கு அரும்பாத்தபிள்ளை சாவடியில்தா னிருந்தார்கள். ஆனபடியினாலே, காலமே போவோமென்று சொல்லி இன்றையதினம் ஏற்றிக் கொண்டுபோகவில்லை.

1747 ஆ ஜனவரி மீ 17 உ க்ஷய அக்ஷய வருஷம் தை மீ 8 உ செவ்வாய்க்கிழமை

இற்றைநாள் காலமே எட்டு மணிக்கு அரும்பாத்தபிள்ளை சாவடியிலே வந்திறங்கியிருக்கிற பறங்கிப்பேட்டை அவுல்தார் சேக்காமது என்கிறவருக்கு நாம் சொல்லியனுப்பின தென்னவென்றால்: நாங்களெதிர்கொண்டு வருகிறோமென்று சொல்லியனுப்பினோம். அதன்பேரிலே நேற்றையதினம் ஸ்ரீ துரையவர்கள் சொல்லியிருக்கிற உத்தாரப்படிக்கு இவ்விடத்திலேயிருந்து நானும், முசியே சேன்மடுத்தேனும், முசியே.........ம், ஒரு சேர்வைக்காரனும், இருபது முப்பது சேவகருடனே புறப்பட்டு 6 மணிக்கு எதிர்கொண்டுபோனோம். இதற்குள்ளே அவர்களும் புறப்பட்டு நம்முடைய தோட்டத்திலே வந்து சேர்ந்தார்கள். நாமும் போய் நம்முடைய தோட்டத்தண்டையிலே பேட்டி பண்ணிக்கொண்டு அவ்விடத்திலே உட்கார்ந்து சற்றுநேரம் பேசிக்கொண்டிருந்து அவர்களை அழைத்துக் கொண்டு வில்லியநல்லூர் வாசற்படியாலே புறப்பட்டுப் பட்டணத்துக்குள்ளே வரச்சே கெவுனியிலே ஏழு பீரங்கிப் போட்டார்கள். அந்நேரம் முசே தும்மா தோட்டத்திலே அவர்களுக்கு விடுதி விட்டு அந்தமட்டுக்கும் கூடப்போய் விடுதியிலே அவர்களை விட்டுவிட்டு வந்து துரையவர்களுக்குக் கபுறு சொன்னேன். அதன்பேரிலே துரையவர்களிருந்துகொண்டு நீபோய் அவ்விடத்திலே பேசிக்கொண்டிருந்து அவர் அபிப்பிராயமென்னமாயிருக்கிறது? அதைத் தெரிந்துகொண்டுவா யென்று சொன்னார்கள். அந்தப்படியே போய் அவரண்டையிலேயிருந்து கண்டு வார்த்தைச் சொல்லி அறிகிறவிடத்திலே அவர் சொல்லுகிற

உத்தரவுக்கெல்லாம் பதிலுத்தரவு அவரை வாய் எடுக்கவொட்டாமல் அதற்கெப்படி கட்டிப்பேசி அவர்கள்பேரிலே சுமத்திக் கட்டிப் பேசவேணுமோ அந்தப்படிக்கெல்லாம் சொல்லி, பின்னையும் சற்றுநேரம் பேசிக்கொண்டிருக்கிறவிடத்திலே ஸ்ரீ துரையவர்கள் என்னை அழைத்தனுப்பினார்கள். அங்கே யிருந்து துரையவர்கள் வீட்டுக்கு வந்து துரையவர்களைக் கண்டு வார்த்தைச் சொல்லிக்கொண்டு மறுபடி புறப்பட்டு நம்முடைய வீட்டுக்குப் போய்ச் சாப்பிட்டு வந்து பாக்குக் கிடங்கிலே இரண்டு நாழிகைமட்டுக்கும் நித்திரைபண்ணி, பிற்பாடு துரையவர்களண்டைக்குப் போய் அவர்கள் பேட்டிக்கு வருகிறார்களென்று சொல்லிவிட்டுப் பறங்கிப் பேட்டை அவுல்தார் சேக்காமது என்கிறவரண்டைக்குப் போய், அவரை அழைத்துக்கொண்டுபோய், அவரை அழைத்துக்கொண்டுவந்து சாயங்காலம் துரையவர்களைப் பேட்டிபண்ணுவித்தோம்; பேட்டியானவுடனே துரையவர்களும் சேக்காமது என்கிற துலுக்கனும் நானும் மூன்றுபேருமாய்த் தனித்திருந்து வெகுநேரமட்டுக்கும் பேசிக்கொண்டிருந்தோம். அவ்விடத்திலே நடந்த சேதி என்னவென்றால்: அந்தத் துலுக்கன் சேக்காமது இருந்துகொண்டு என்னுடைய ஆதிகத்திலே எல்லாம் ரங்கப்பனுடனே செல்லுகிறேமென்று சொன்னார். ஆனால், மெத்த நல்லதுதானென்று சொன்னார்கள். ஆனால், அந்தமட்டிலே அனுப்புவித்துக்கொண்டு அவரிருக்கிற விடுதிக்குப் போனார்கள்.

1747 ஆ சனவரி மீ 18 உந்த அக்ஷய ஞு தை மீ 9 உ புதன்கிழமை

இற்றைநாள் இந்தப் பட்டணத்திலே நடந்த சேதியென்னவென்றால்: முன்னாலே சென்னப்பட்டணத்துக் கலாபத்தின்போது வழியிலேயிருந்து துலுக்கர் பிடித்துக்கொண்டுபோய் ஆற்காட்டிலே வைத்திருந்த வெள்ளைக்காரர் மூசே இசுகாலமே உசேன் தயாறுகானவர்களும், அசரத்து நபாபு அவர்களும் காகிதமெழுதி அந்த வெள்ளைக்காரரையுங் கூட்டி அனுப்பினார்களென்று அவர்கள் வந்து திண்டிவனம் சேர்ந்தார்களென்றும் கபுறு இற்றைநாள் சேதி வந்தது.

*1747* ஆ சனவரி மீ 19 உக்த அக்ஷய ஞு தை மீ 10 உ பிரகஸ்பதிவாரம்

இற்றைநாள் நடந்த சேதி யென்னவென்றால்: காலமே 6 மணிக்கு நேற்று திண்டிவனத்திலே வந்திருந்த மூசே இஸ்துமவில் என்கிறவனும், மூசே கெற்சாமும், மூசே கோசும் சென்னப்பட்டணத்திலிருந்து முன் குவர்னதோரவர்களுக்கு இங்கிலீசுக்காரர் சமாசாரமெழுதியனுப்பி பிரான்சுக்காரர் சொல்தாதுகள், மத்தலோத்துகள், சிறிது ஒபிசியேல்மாரையும் காவல் வைத்திருந்தபோது அவர்கள் நாலுபேரும் இரண்டு பேருமாய் அனுப்பிக்கொண்டிருந்த சேதி கெவர்னர் மாசு அறிந்து, வரிசையிலே வைத்து அடித்துக் காவலிலே போட்டிருந்தவனை பிரான்சுக்காரர் வசம் கோட்டைபாணுப்போலே அவனை விட்டு ஒப்பிசியேல் உத்தியோகங் கொடுத்துவைத்திருந்தார்கள். மூசியே கெற்சாம், கோசு போகச்சே இவனுங் கூடப் போனபடியினாலே யவர்களைப் பிடித்துக்கொண்டு போனபோது இவனையுங் கூடப் பிடித்துக்கொண்டுபோயிருந்தார்கள். அவன் கூட நாலு பேரும் சேக்கு மகம்மத்தவக்கால் என்கிறவன் கூட வக்கீல் சுப்பய்யன் கூட வந்தார்கள். வந்தாப் போலே மூசியே கெற்சாம் முதலான பேர்களைச் சமஸ்தமான வெள்ளைக்காரரும் கட்டிக்கொண்டார்கள். துரையும் அம்மாளும் அப்படிதான். துரைக்கு மெத்த சந்தோஷத்தை அடைந்திருந்தார்கள். வந்த மகம்மத்தவக்கால் என்கிறவன் துரை பேட்டி பண்ணிக்கொண்டான். உட்காரவைத்துக்கொண்டு நபாபு அன்வருதிகான் உசேன் சாயபு முதலான பேர் நன்றாயிருக்கிறார்களா என்று குசல் பிறஸ்தினை கேட்க இவரிப்படி துரையைக் கேட்ட பிற்பாடு நல்லதுதான் நீர் போய் ஆசுதாவாயிருக்கட்டும். அப்படியே நாளை சாவகாசமாய்ப் பேசிக்கொள்ளுவோமென்று சொல்லி அனுப்பிவிட்டார்கள். அதன்பேரிலே அவன் கொண்டுவந்த நபாபு அன்வருதிகான் சாயபு அவர்கள் கடுதாசியும் துரையவர்கள் கையிலே கொடுத்தான். அந்தக் கடுதாசியை வாங்கித் துரையவர்கள் என் கையிலே கொடுத்துப் படித்துப் பார்த்துச் சொல்லச் சொன்னார்கள். அந்தக் கடுதாசியிலே எழுதியிருந்த வயணமென்னவென்றால்: தாங்கள் அனுப்பின மாம்பழம் வந்து சேர்ந்தது என்றும், பின்னையும் ரொம்பவும் உபசாரமாய் எழுதி, இப்ப

வும் சென்னப்பட்டணத்தை விட்டுவிடத்தக்கதாகவும் எழுதி இருந்தது. பின்னேயும் எழுதியிருந்த வயணமென்னவென்ருல்: சென்னப்பட்டணத்தை விட்டுவிட்டாலாச்சுது இல்லாவிட்டால் மறுபடியும் இந்த நாலு பேரும் வெள்ளைக்காரரையும் திரும்பியனுப்பிவிடச் சொல்லியுமிப்படியாக எழுதியிருந்தது. அந்த வயணமெல்லாம் துரையவர்களுடனே சொன்னேன். அதன்பேரிலே நீ போய் அந்த மகம்மதுதவக்கால் என்கிறவனைக்கண்டுபேசி அவருடைய அபிப்பிராய மென்னமாயிருக்குதென்று அதை நன்ருய்த் தெரிந்துகொண்டுவா என்று சொன்ஞர்கள். அதன்பேரிலே மகம்மதுதவக்கால் அனுப்புவித்துக்கொண்டு அவரிறங்கியிருக்கிற விடுதி சுங்குவார் கிடங்குக்குப் போஞர். நானும் பாக்குக் கிடங்குக்கு வந்துவிட்டேன்.

இற்றைநாள் ராத்திரி எட்டு மணிக்கு மகம்மது தவக்கால் என்கிறவன் இறங்கியிருக்கிற சுங்குவார் கிடங்குக்குப் போய் பத்து மணியடிக்கிற பரியந்திரம் வார்த்தைச் சொல்லிக்கொண்டிருந்த விடத்திலே லோகாபிரமமாய்ப் பேசிக்கொண்டிருந்த பிற்பாடு அவரிவ்விடத்துக்கு வந்த காரியத்துக்கு அடுத்த உத்தரவுகளாய்ச் சொன்ஞர். அதற்கு உத்தரவுபடி அவர் பேசுகிறதற்கு இடமில்லாமல் அவர்கள்பேரிலேதானே நேரத்தைச் சுமத்திக்கட்டி வார்த்தைச் சொன்னதின்பேரில் அவன் ரொம்பவும் சந்தோஷப்பட்டு, தாரிப்புபண்ணிஞன். அவ்விடத்திலே அவன்கையிலே அனுப்புவித்துக்கொண்டு இரிசப்ப செட்டி முத்து வீட்டுக்குப் போய் பால்பொங்கல் தாவென்று விசாரித்துவிட்டுப் பதினென்றரை மணிக்கு நம்முடைய வளவுக்கு வந்து சேர்ந்தோம்.

1747 ஆ ஜனவரி மீ 22உ க்கு அக்ஷய ஹு தை மீ 13 உ ஆதிவாரம்

இற்றைநாள் காலத்தாலே குவர்னதோர் என்னேயழைத்து மகம்மத்தவக்காலண்டைக்குப் போய் உனக்கு மனது சந்தோஷம் பண்ணிவிடுகிருேமென்று சொல்லி. அவன் என்ன கேட்கிருனே அது தருகிருேமென்று சொல்லிப் பேசித்தீர்த்துக்கொண்டு வாஎன்று என்னே போகச்சொன்ஞர். அதன் பேரிலே அவனண்டைக்குப் போய் பேச்சுப்பேச்சாய்ப் பேச்சுவாங்கி உன் மனதிலிருக்கிறதைச் சொன்ஞல் அந்தப்

படிக்கு நான் துரைக்குத் தெரியப்படச்சொல்லித் தீர்த்துப் போடுகிறேனென்று சொன்னேன். அதன்பேரிலே அவன் சொன்னது: எனக்கு இருபதினாயிரம் ரூபாய் கொடுத்தால் உங்கள் துரை மற்ஜீ பிரகாரம் தீர்த்துப் போடுகிறேனென்று நிசாம் தாக்கீது இவர்களை வரச்சொல்லி, வந்திருக்குதென்று மிவர்களுக்குச் சிப்பந்தியாலே முழுகிப் போகிறதாயிருக்கு தென்றும், அவர்களும் வேசாராயானபடியினாலே சமாதானம் பண்ணிக்கொண்டு போவோமென்றுதானிருக்கிறார்க ளிதுவல் லாமல் மருட்டியார் பாசிராயன் தம்பி சிமானுசிராவ் மகன் சதாசிவராயனுக்குக் கர்நாடகம் சவுத்தாய் சாவுராசா கொடுத்து முன்னிருந்த பாபோசி நாயக்கனைத் தள்ளிப்போட் டார்கள் என்றும். அவன் வருகிற சேதி சுறுக்கிலேயிருக் கிறபடியினாலே அந்தத் திகில் ரொம்பப் பிடித்திருக்கிறது. ஆனபடியினாலே, எப்படியும் உங்கள் மனதின்படிக்குத் தீர்த் துப்போடுகிறேனென்று இது முதலாகிய சேதியெல்லாஞ் சொல்லி, பின்னையும் நான் உங்கள் மாரிபத்திலேயிருந்து அவர் களுக்கு வாய்மூடத்தக்க சாடை, நீர் என் வாய்மூடத்தக்க தாகப் பேசினீரே இந்த நியாயமெல்லாம் எழுதி, அப்பால் அவர் களுக்கு இருக்கிற சனூர் எனக்குத் தெரியுமே! அந்தச்சாடை யுமிந்தச்சாடையு மிரண்டுங் கலந்து எழுதுகிறபோது எதிராளி எப்படிச்சொன்னால் அப்படி வருவான்? நான் மார்க்கமாய்த் தீர்த்துப்போடுகிறேனென்று இதற்கடுத்த நியாயமெல்லாம் சொல்லி, என் காரியமாத்திர மனுகூலமாய் நடத்துங்கோள். எப்படி வேணுமென்றால் அப்படி நடப்பிக்கிறேன் என்று சொன்னான். அதன்பேரிலே நல்லதுதானி கற்குத்தரவு சொல்லு கிறதற்குச் சாவகாசமில்லை. துரையழைக்கிறார் என்று சொல்லி விட்டுப் புறப்பட்டேன். நீ என் பேச்சு வாங்குகிறதேயல்லா மல் உன் அபிப்பிராயம் சொல்லுகிறதில்லை. இப்படியானா லுமக்கும் நமக்கும் என்ன நடக்கப்போகுது! நீரும் கலந்து பேசி னால் அல்லவோ என் மனதுக்குச் சமாதானமாயிருக்கும் என்று சொன்னான். அதற்கனுமான மென்ன விருக் கிறது. துரை சேவகர் இரண்டு பேர் வந்தார்கள், இதோ வருகிறேனென்று சொல்லிவிட்டு வந்து நடந்த சேதி கபுறு சொல்லி, துரைக்குச் சொல்லி, இதற்கென்ன சொல்லு கிறீர்களென்று கேட்டதற்கு, உனக்கு எப்படி உயுக்தமாயிருக் கிறதென்று கேட்டார், அவன் இருபதினாயிரம் ரூபாயல்லவோ

கேட்டான். இருபதினுயிரம் ரூபாயும் ஆயிரம் வராகனு மாகிறதே, அதற்கு நாலாயிரம் வராகன் கொடுக்கிறது உயுக்த மாய்க் காணுதென்று சொன்னேன். அது மெத்தவென்று அதற்கு நானந்த துலுக்கருக்கிருக்கிற தொகையிலே குறைத்து இவனுக்குக் கொடுக்கிறதானல்லவோ, இவனைத் தொட்டாலோ காரியம் வியக்கத்தக்கதா யிருக்கிறது என்று சொன்னேன். அது மெய்தான். ஆனால், பதினுயிரம் ரூபாய் ரொக்கமும், 2800 ரூபாய்க்குத் தினுசும் கொடுப்போம். இந்தப்படிக்குப் போய்ச் சொல்லிவிட்டு அவனைக்கொண்டு உசேன் சாயபுக்கு எப்படி எழுதிவைக்கவேணுமோ அந்தப்படி எழுதி வைத்து, இதல்லாமல் நபாபுக்குக்கூட எப்படி எழுதிவைக்க வேணுமோ அப்படி எழுதி அனுப்பிவைக்கச் சொல்லி உத்தாரங் கொடுத்துப் போகச்சொன்னார். அந்தப்படிக்கு நான் போய் மகம்மது தகவலைக் கண்டு பேசி பதினுயிரம் ரூபாய் ரொக்கமும் இரண்டாயிரத்தெண்ணூறு ரூபாய்க்குத் தினுசும் கொடுக்கிறோமென்று அவனுக்குச் சந்தோஷம் வரச்சொன்னதின்பேரிலே அவனுக்குக் காணுது கண்டாப் போலே வெகு சந்தோஷத்துடனே நீ என்னுடைய குரு. உன் வார்த்தைக்கு நான் கேரிசல்ல. நீ எப்படி சொன்னாலும் அப்படி கேட்கிறேனென்று அவன் சொன்ன உபசார மெழுதி முடியாது. அதன் பேரிலே உசேன் நயாருக்கும் சம்பதிராயனுக்கும் காகிதமெழுதின வயணம்: அவர்கள் வாயைத்திறவாமல் இவர்களொரு காசு கொடுக்கிறதாய்க் காண்பிக்கவில்லை. சண்டையின்பேரிலே நினைப்பாயிருக்கிறார்களென்றும், மருட்டியர் வருகிறார்களென்றும் உங்கள் பவுஞ்சு உங்களையும் நிசாமவர்கள் வரச்சொல்லி எழுதின சாடையும் உங்கள்பேரிலே நிசாம் மோசுல் வந்திருக்கிறது. இவர்களுக்கு எல்லாம் கபுருயிருக்கிறபடியினாலே இவர்கள் சம்மதிக்கிறதாய்க் காணவில்லை என்றும், பின்னையும் அதற்கடுத்த சங்கதிகளென்னவுண்டோ அந்தவயணமெழுதியனுப்புகிறேனென்று சொன்னான். அப்படியல்ல, இப்போதுதானே எழுதியனுப்புவிக்கவேணுமென்று சொன்னதற்கு, உங்களுக்கேன், இனிமேல் காரியமெனனுடையதல்லவா? நீங்களெனக்குச் சொன்னது எவ் கைக்குச் சேரப் பண்ணினாலும் உங்கள் காரியத்துடனே சேர்ந்தது. உங்கள் மனதின்படியே நான் தீர்த்துத்தருகிறேன் என்று சொன்னான். அதற்கு நான், உமக்கின்னம் சந்தேகமா? உமக்குச்

சொன்ன தொகைப்படிக்கு நானுத்தரவாதம் பண்ணுகிறேன். படிப்பு வேணுமென்ருலுந் தருகிறேன் என்று சொன்னல் அதற்கு நீ யுத்தரவாதியானல் சொன்னதற்குச் சரியென்று சொன்னன். நான்தானுத்தரவாதியென்று சொன்னதின் பேரிலே எட்டு நாளைக்குள்ளே பயிசல்பண்ணித் தீர்த்துப் போட்டுவிடுகிறேன் என்று சொன்னன். அந்தபடிக்கு குவர்னதோர், சாயபு அவர்களுக்குச் சொல்லு. உங்கள் மனதின்படிக்குத் தீர்த்துப்போடுகிறேன். இனிமேல் நானுங்களவனுக எண்ணிக் கொள்ளுங்களினிமேல் நீங்கள் பெயிக்கீர்மேலே இருங்கோளென்று சொன்னன். அதன்பேரிலே நானிருந்துகொண்டு இப்போது சொன்ன காரியம் கொஞ்சம் இனிமேல் நடத்துகிற காரியத்திலே யும்முடைய மனதிலேயிருக்கிறபடிக்குச் சந்தோஷம் வரும்படியாகச் சுவாமி தயவுசெய்து பண்ணுவார் என்று நானுமுபசாரமாய்ச் சொல்லிவிட்டு அனுப்புவித்துக்கொண்டு வந்து துரையவர்களுக்குச் சொல்னேன். நடந்த சேதியெல்லாம் கேட்டு, நீ சொன்னபடிக்குக் காகிதமெழுதியனுப்பினனுவென்று கேட்டார். இப்போதுதானே எழுதுகிருன். இப்போது அனுப்புவானென்று சொன்னேன். நல்லது பறங்கிப்பேட்டை பவுஞ்சுதாரன் சேக்கு ஆமது ஊருக்குப் போகிருமென்று சொன்னதாய் சொன்னியே, இவனு மவனையனுப்பிவிடச் சொல்லுகிருன் என்று சொன்னியே, நாலு மணிக்கு அனுப்பிவிடுவோம் வரச்சொல்லென்று சொல்லி யவனுக்கு என்ன தினுசு, எம்மாத்திரங் கொடுக்கவேணுமோ அதற்குச் சாப்பிதா எழுதி கொற்னே பேருக்கெழுதி, ஒரு தினுசு பண்ணச்சொல்லியும், மமுதல்லிகான் தனக்குக் கெடியாரம் முதலானது வேணுமென்று எழுதி அனுப்பினது முஸ்தீதுபண்ணுவிக்கச்சொல்லியும் உத்தாரங்கொடுத்தார். அந்தப்படிக்கு முஸ்தீதுபண்ணுவித்த மமுதல்லிகான் சேக்கு ஆமது இரண்டு பேருக்கும் கொடுத்தவெகுமான தினுசு வயணம்:

மமுதல்லிகானுக்கு அனுப்பினது மேஸ்தர் திராட்டன் கையிலே பூவராகன் நூற்றிப்பதினைந்துக்கு வாங்கின மணியடிக்கிற கிடாரம் ... ... ... ... ... 1

மாலுமை சாசரம் பார்க்கிற சமுக்கா... ... ... 1

| | |
|---|---|
| கப்பல் பார்க்கிற கண்ணுடிக் குழல்... ... ... | 1 |
| நெருப்பு விழுகிற கண்ணுடி பில்லே ... ... | 1 |
| மூக்கிலே போடுகிற கண்ணுடி... ... ... ... | 3 |
| விருத்தமாயிருக்கிறது பூதமுகம் காணுகிற கண்ணுடி... | 1 |
| பில்லே மூக்கில்லே கண்ணுடி யனேக முகங் காணுகிற கண்ணுடி ... | 1 |
| ஆக மொத்தம் | 9 |

சேக்கு ஆமதுக்குக் கொடுத்தது

| | |
|---|---|
| சிகப்பு சகலாத்து சிப்பம் ... ... ... ... | 3 |
| சிகப்பு முகமல் கெஜம் ... ... ... ... | 44 |
| பச்சை முகமல் கெஜம் ... ... ... ... | 4 |
| பெர்சு திவாசு ... ... ... ... ... | 2 |
| அச்சு அடிக்கிறது சகலாத்து திவாசு ... ... | 3 |
| ஆகுதொங்கேரி பியோல் ... ... ... ... | 6 |
| சம்பரேல் பியோல் ... ... ... ... ... | 6 |
| கத்திரி ... ... ... ... ... ... | 2 |
| சூரி கத்தி ... ... ... ... ... | 2 |
| அனேக முகங் காணுகிற கண்ணுடி ... ... | 1 |
| சின்ன கண்ணுடி ... ... ... ... | 1 |

இப்படி மூஸ்தீது பண்ணிவைத்த பிற்பாடு, முசியே தெலார்ஷ் (Mr. Delarche) வந்தவுடனே துரையவர்கள் மமுதல்லிகானுக்கு நாம் தேவனும்பட்டணம் கோட்டை வாங்கியதைச் சேர்ந்த கிராமங்களும் கூடலூர் பட்டணமும் கொடுத்துவிடுவோம். தேவனும்பட்டணம் கோட்டை மாத்திரம் சிறிதுநாள் வைத்துக்கொண்டிருந்து அப்பால் வேணுமென்ருல் கொடுத்துவிடுவோமென்று இந்தப்படியாக மமுதல்லிகானுக்கு ஒரு உடன்படிக்கை யெழுதி அனுப்பிவைக்கலாமாவென்று கேட்டார். எழுதியனுப்பலாம். அந்த உடன்படிக்கையிலே தம்முடைய பவுஞ்சு வாங்கிப் போகிறதானல் இந்த உடன்படிக்கைப்படிக்கு நடப்பிக்கலாமென்றும், மறுபடியும் அவர்கள் இங்கிலீசுக்காரருக்கு கொடுக்கத்தேவையில்லையென்றும் கண்டெழுதுகிறது நன்ருய்க் காணுதென்றுசொன்னேன். மெய்தான், அந்தப்படிக்கெழுதுகிறதுதான் யுக்தமாய்க் காணுதென்று சொல்லி முசியே தெலார்ஷைக்கொண்டு எழுதவேணுமே

யல்லாமல், பார்சி எழுதுகிற பார்ப்பான் அறியப்போகாதென்று சொன்னார். அதுதான் யுக்தம், ஆனால் முசே தெலார்ஷ் பேசுவான், படிப்பான், எழுதத்தெரியாதென்று சொன்னேன். நாலுபேச்சல்லோவுண்டானது. எழுதுவானென்று சொல்லி, முசியே தெலார்ஷை அழைத்தனுப்பினார் அவனும் வந்தான் வந்தவிடத்திலே யவனுடனே இந்தச் சேதியைச் சொல்லிக் காகிதமெழுதச் சொன்னார். அப்போது தனக்கெழுதத் தெரியாதென்று சொல்லிப் பார்ப்பானைக்கொண்டெழுதுவித்து ஒருத்தனுடனேயும் சொல்லாதபடிக்குப் பண்ணுவிக்கிறேன் என்று சொன்னான். அதற்கு அல்ல. இரண்டாம் பேர் அறியாதபடிக்கு இருக்கவேணுமென்கிறதைக் குறித்துச் சொன்னேன் என்று சொல்லி எழுதுவிக்கச் சொன்னார். அந்தப்படிக்கு மதனுந்த பண்டிதனை அழைத்துத் தன் வீட்டிலே வைத்துக் கொண்டு எழுதுவித்த வயணம். மேலெழுதப்பட்டிருக்கிறபடிக்குத்தானெழுதினது. அந்தக் காகிதத்தைக்கொண்டுவந்து மோகற் பண்ணிவித்து ஐந்தரை மணிக்குச் சேக்கு ஆமதுவை அழைப்பித்து அவனுடனே இந்த மோகத்து மமுதல்விகான் மாரிபத்திலே தீர்த்துக்கொள்ளவேணுமென்றுதான் நீரும் முன்னாலே யெழுதியனுப்பியிருந்தீரே. அந்தப்படிக்குத்தானே உம்மை அழைத்தனுப்புவித்தது. இதிலே நபாபு அன்வருதிகான் உத்தாரப்படிக்குத்தான் உசேன் சாயபு மாரிபத்திலே மகமது தவக்கல் வந்திருக்கிறபடியினாலே அவர்கள் மாரிபத்திலேதானே தீருகிறது நல்லது. நானூருக்குப் போகிறேனென்று நீர் சொல்லியனுப்பினபடியினாலே உம்மை ஊருக்கு அனுப்புகிறதற்கு நாம் சம்மதியாகிறது இல்லையானாலும் உம்முடைய மாரிபத்திலேதானே பைசல்பண்ணிப் போடுவோமென்று துரையவர்கள் சொல்ல; அதற்கு அவன், நானுங்களவனுங்காட்டும், எனக்குபசாரஞ் சொல்லக் கவையில்லையென்று அவன் சொன்னவுபசாரம் எழுதி முடியாது. அப்பால் மமுதல்விகானுக்கு எழுதின உடன்படிக்கைக் காகிதமும் கையிலே கொடுத்து அவருக்குக் கொடுத்த வெகுமானங் கெடியார முதலான வஸ்துகள் அந்தப் பக்கத்திலே எழுதியிருக்கிறபடிக்குக் கொடுத்து இந்தச் சேதியை நீர் சொல்லுகிறதிலே மமுதல்விகான் சம்மதித்துக்கொண்டால் காகிதத்தைக் கொடு மில்லாவிட்டால் கொடுத்த காகிதத்தை மறுபடி நம்மண்டைக்கு அனுப்பிவிடுமென்று சொல்லிக் காகிதமும் வெகுமானமும்

கொடுத்தார். அந்தப்படிக்குச் சம்மதித்து வாங்கிக்கொண்டு இதற்குத்தரவு பின்னமிரண்டு மூன்று நாளையிலே அனுப்புவிக்கிறேனிதற்குள்ளே தத்தாப்படவேண்டாமென்று சொல்ல, அப்பாலிவனுக்குக் கொடுக்கவேண்டிய வெகுமானமும் அந்தப் பக்கத்திலே எழுதியிருக்கிறபடி கொண்டுவந்து கொடுத்து வேலாயுதப்பிள்ளைக்கு இரண்டு கெசஞ் சகலாத்துங் கொடுத்துப் பத்திரமாய்க் காரியங்களையறிந்து எழுதியனுப்பச் சொல்லித் துரையவர்கள் சொல்ல, நல்லதென்று வேலாயுதப்பிள்ளையும் வெகுமானமும் வாங்கிக்கொண்டான். அதன் பேரிலே துலுக்கன் மமுதல்லிகான் நீங்கள் சிப்பாய் என்றும் நல்லவனென்றும் உம்முடைய சினேகமே கோரியிருக்கிறான். அது இனிமேல் காரிய அந்தரம் தெரியுமென்று மாபூசுகான் பேரிலே சகலநேரமும் உண்டென்று இப்படியாக உங்கள் காரியம் அனுகூலமாமென்று சொல்லி, நாளை பத்து மணிக்குத் தண்டுக்குப் போகிறேனென்று சொல்லியனுப்புவித்துக் கொண்டு போனான். நான் இராத்திரி வீட்டுக்கு வரவேணுமென்று சொன்னேன். நல்லது வருகிறேன் என்று இராத்திரி எட்டரை மணிக்கு வந்து பனிரெண்டு மணி மட்டுமிருந்து கேளிக்கை பார்த்துப் பாட்டுக்கேட்டுத்தேவடியாளுக்கு முப்பது ரூபாயுங் கொடுத்து நாம் கொடுத்த இரண்டு தாக்கா சிகப்பு பச்சையும் மட்ட சகலாத்தும் வெகுமானமும் வாங்கிக்கொண்டு விடுதிக்குப் போனான். வேலாயுதப்பிள்ளைக்கும் மானேசி பண்டிதனுக்கும் இரண்டு சகலாத்தும் ஒரு சல்லாவும் கொடுத்தோம். இன்றையதினம் ராத்திரிமட்டுக்கும் நடந்தது.

1747 ஆ சனவரி மீ 23உக்கு அக்ஷய ஸ்ரீ தை மீ 14உ சோமவாரம்

இற்றைநாள் காலத்தாலே பத்து மணிக்குத் துரையண்டைக்கு வந்து பறங்கிப்பேட்டை பவுஞ்சுதாரனை வழிவிட்டு வாரேனென்று சொல்லி அவன் போகச்சே ஒரு பீரங்கி வில்லியநல்லூர் வாசற்படியிலே போடச் சொல்லியும் வரிசை வைத்துத் தம்பூர் அடிக்கச்சொல்லியும் துரையவர்களைக் கேட்டதற்கு நல்லது என்று உத்தாரங் கொடுத்தார். அந்தப் படிக்கு பொம்பெடுத்தேருக்குச் சொல்லி வாசற்படிக்குச் சொல்லியனுப்பினார். அப்பால் நாமும் நயினரும் கூட கூட்டிக்

கொண்டு துலுக்கனிருக்கிறவிடுதி மூசே தும்மா தோட்டத்திலே போய் அவனுடனேகூட அவ்விடம் விட்டுப் புறப்பட்டு வில்லியநல்லூர் வாசற்படியண்டை போகச்சே வரிசை வைத்தான். அப்பால் போகச்சே ஒரு பீரங்கி சுட்டான். நான் நயினியப்பிள்ளையவர்கள் தோட்டத்துக்கு அப்புறமிருக்கிற மேட்டுமட்டுக்கும் போய் அனுப்புவித்துவிட்டு வந்து துரைக்கு கபுறு சொன்னேன்.

*1747* ஆ சனவரி மீ 24உ க்கு அக்ஷய ஞு தை மீ 15உ மங்களவாரம்

இற்றைநாள் காலத்தாலே குவர்னதோர் அவர்களையழைப்பித்துத் தேவனும்பட்டணம் சேதி அறமாது சேதி என்னவென்று கேட்டார். தேவனும்பட்டணத்திலே என்ன கபுறு கேட்டார். முன்னாலே தரகர் நானூறு கோடி ஒன்பதுகால் நெடுமுழம் போட்டார்களென்று சொல்லி நம்முடைய கப்பல்கள் சென்னப்பட்டணம் வந்து சேர்ந்ததென்றவுடனே அதெல்லாம் நிறுத்திப்போட்டார்கள் என்று சேதி வந்ததென்று சொல்லியிருந்தேன். இப்போது தலைச்சேரி அஞ்சதங்கலிலேயிருந்து நாலு மலையாளிகள் கப்பல் சேதி கொண்டுவந்தாப்போலேயும் அதன்பேரிலே தேவனும்பட்டணம் குவர்னதோர் அவர்களுக்குப் பேருக்குப் பேருக்கு ஐந்துவராகன் கொடுத்தாப்போலேயும் அது போதாது. நூறு வராகன்மட்டுக்கும் வெகுமானங் கொடுப்பார்களென்றும், சொல்லிப் போகச்சொன்னார்கள். அது கண்டு நாங்கள் வெகு சுறுக்காய் வந்து காகிதம் கொடுத்துச் சேதியுஞ் சொன்னோம். அப்படியிருக்க. இருபது வராகன் கொடுத்தால் எப்படியென்று சொன்னதின்பேரிலே பின்னையுமிருபது வராகன் கொடுத்து அவர்களை அழைத்துக் கொண்டு மாபூசுகான் மமுதல்லிகான் பாளையத்துக்குக் குவர்னதோர் கூடப் போய் இந்த மலையாளிகளை முன்னே விட்டுக் கப்பல்களும் சேதிகள் சொன்னதின்பேரிலே அவர்களும் பேருக்கு ஒரு பாகை கொடுத்தார்களாம். அதன்பேரிலே குவர்னதோர் பேசியிருந்து அனுப்புவித்துக் கொண்டு போனாராம். குவர்னதோர் கோட்டையைச் சேர்ந்தாப்போலே சலவைத்துறைக்கு முன் வந்த காரிகத்தை விட்டுச் சிறிது புடவை காங்குக்கு விட்டார்களாம்.

இந்தச் சேதியின்பேரிலே முகம் சற்றே தெளிவாயிருக்கிற தாகச் சேதிவந்ததென்று சொன்னேன். நல்லது துலுக்கர் அற மாது சேதி யென்னவென்று கேட்டார். அறமாதிலேயானால் சல்லிஸ பேச்சேயல்லாமல் வேறே சண்டைப்பேச்சைக் காணோம். புதுச்சேரியாரண்டைக்கு உசேன் சாயபு மாரிபத் திலே மகமத்தாக்கல் என்கிறவன் சமாதானம் பேசித் தீர்த்துப் போடத்தக்கதாக வந்திருக்கிறான். இனிமேல் சமாதானமேயல் லாமல் சண்டையில்லையென்று மிவ் விடத்திலேயிருந்து போகச்சே வழுதாவூர் சேத்துப்பட்டுக் கில்லாவின்பேரிலே மொகாம் பண்ணி வாங்குகிறதாகவும், அப்பால் பங்கானூர்— சாலானூர் அண்டைக்கு மராட்டியாரண்டைக்கு எதிர்போகிற தாகவும் இப்படியாகத் தண்டிலே வார்த்தை நடக்கிறது மல்லாமல் நூறும் ஐம்பதுமாய் குதிரைகள் வாங்கிப் போகுதென்று கபுறு வந்ததென்றும் சொன்னேன். இதெல்லாங் கேட்டுக்கொண்டேயிருக்கச்சே, கோன்சேல் காரரும் வந்துசேர்ந்தார்கள். அப்பால் கூடினார்கள். நாலு நாழிகைக்குக் கலைந்தார்கள். கலைந்தவுடனே முசியே ஒசே என்கிறவனை அழைப்பித்து இந்தமட்டுக்கும் சீர்மைக்குப் பயணம்பண்ண இரண்டு கப்பலுக்கும் ஏற்றின நாலூறு கட்டுமிறக்கிப்போடச்சொல்லி உத்தாரங்கொடுத்தனுப்பினார். ஏற்றின கட்டு இறக்கின சங்கதியென்னவென்று விசாரிக்கு மிடத்தில் சீர்மைக்குப் பயணமனுப்புகிறதை நிறுத்தி முசியே தொடுதலேன் இஸ்காதுரு மூன்று கப்பலும், சேன் லூய் (St. Louis) கப்பலும், பிரஞ்சு மரி என்கிற இங்கிலீசு கப்பலும் மாயேக்கு அனுப்புகிறதாய் அங்கே மாயேயிலே தலைவனாக இருக்கிற முசே லத்தி (Mr. Leyrit) யுடனே அங்கரியக்காரர் ஆறுயிரம்பேர் கூடுகிறோம். இங்லீசுக்காரருடைய தலைச்சேரி அஞ்சதங்கலி முதலான இங்கிலீசு ரேவுகளங்கேயிருக்கிறதை யெல்லாம் பிடித்துப்போடுவோமென்று சொன்னதாகவும், அந் தச் சேதி முந்தாம்நாள் வந்த மாயே டபாலிலே எழுதி வந் துதே அது நிமித்தியமிந்தக் கப்பல்கள் மாயேயிக்கு அனுப்பத் தக்கதாக யோசனைபண்ணித் தீர்த்ததாய், முசியே கொர்னே என்னுடனே சொன்னான். அல்லவென்று இரண்டு கப்பல்கள் அனுப்பினாலும் இந்தத் தொடுத்தலேன் இஸ்காதுரு கப்பல்கள் அச்சிக்குப் போய்த் துறைபிடிக்க நாலுநாள் முன்னே இங்கி லீசு ராசா சண்டைகப்பல் இரண்டும் கும்பினீர் கப்பல்களிரண்

டும் ஆக நாலு கப்பல்கள் அச்சுத்துறையிலேயிருந்து அப்பாலே ஓடிப்போய்விட்டதாம். அந்தச்சேதி இந்தச் சண்டைக்கப்பல் போனவுடனே கேட்டார்களாம். ஆனபடியினாலே, இந்த இரண்டு கப்பல்களும் போனால் அவர்கள் வழியிலே மறிப்பார்களிதல்லாமல் அப்புறம் எத்தனை கப்பல்களிருக்குதோ என்கிற யோசனையினாலேயும் போனாலிந்த ஐந்து கப்பலும் போகவேணுமில்லாவிட்டால் நிறுத்திப்போடவேணுமென்று யோசனை பண்ணி அந்த மூன்று கப்பலும் நிறுத்துகிறபடியினாலே இரண்டு கப்பலையும் அனுப்பப்போகாதென்று நிறுத்திப் போட்டதாகவும் சொன்னான். இந்த நாள் ஒலாந்தா சுலுப்பு காரைக்காலிலேயிருந்து நெல் ஏற்றி வந்தது. அதை மசுக்கரைக்கு அனுப்புகிறதாய் யோசனைபண்ணித் தீர்த்ததாய் முசியே கோற்னே சொன்னான்.

இற்றைநாள் மத்தியானத்துக்குமேல் பறங்கிப்பேட்டை பவுஞ்சுதாரன் சேக்கு ஆமது என்கிறவன் போனானே யேதாகிலும் சேதி வந்ததாவென்று கேட்டார். இன்னம் வரவில்லை என்று சொன்னேன். நாளையதினம் வருமென்று சொன்னேன். அரியாங்குப்பத்திலேயிருக்கிற பவுஞ்சை அழைப்பித்துக் கொள்ளுவோமா என்றுகேட்டார் இப்போது அழைப்பிக்கிறது உயுக்தமல்லவென்று சொன்னேன். ஏனென்றுகேட்டார். சமாதானப்பேச்சு நடக்கிறாப்போலே யிருக்குதே,. நாலைந்து நாளையிலே இரண்டிலேயொன்று தெரியுது. அப்பால் வேணுமானால் அழைப்பித்துக் கொள்ளுகிறது உயுக்தம். இப்போதேதான் சமாதானத்துக்கு வந்தாப்போலேயும் நாம் தளத்தை வாங்கினால் எப்போ எப்போவென்று காத்துக் காத்துக்கொண்டிருந்தார்கள்."பேருக்கு ஒரு விசேஷமாய்ச் சொல்லுவார்களென்று ஒரு லாடை பாஷையாய்ச் சொன்னேன். நீ சொல்லுகிறது உயுக்தந்தான். இன்னம் நாலு நாள் பார்க்கவேண்டியதென்று சொன்னார்.

இற்றைநாள் மத்தியானம் சந்தாசாயபு மகனும் சாத்தாராவுக்கப்புறம் பதினைந்து நோசிலேயிருக்கிற பொன்னு என்கிற துறக்கத்திலேயிருக்கிற சந்தா சாயபு அண்டையிலேயிருந்து இருபத்திரண்டு நாளையிலே வந்த அல்லி அக்பர் என்கிறவனும் சாமராயனும் முதலான முசத்திகளுடனே துரை

யண்டைக்கு வந்து சந்தாசாயபு அவர்கள் துரை பேருக்கு அனுப்பின காகிதமும் கொடுத்துச் சொன்ன சேதியென்ன வென்றால்: நிசாமண்டையிலேயிருக்கிற அமானத்துக்கான் என்கிறவர் சந்தா சாயபுக்கு அவர் குமாரனை அனுப்பச்சொல்லி எழுதினதாகவும், அன்வருதிகான்கூடச் சென்னபட்டணத் தண்டையிலேயிருக்கிற மயிலாப்பூர் சண்டையிலே பிராஞ்சுக் காரருக்கு நிற்கமாட்டாமல் காஞ்சிபுரத்துக்கு ஓடிப்போய் விட்ட சேதி நபாபு அசபுஷா அறிந்து அவர்கள்பேரிலே கோபமாயிருக்கிறதினாலே இனிமேலவர்களுக்கு ஆற்காட்டு சுபா நிற்க அறியாது. உம்முடைய குமாரனை அனுப்புவித்தால் உங்களுக்கு ஆற்காட்டு சுபா மோகர் பண்ணிக்கொடுக்கிறோமென்று வரச்சொல்லி எழுதினதாகவும், அதன்பேரிலே அபித்து சாயபை நிசாமல் சர்க்காருக்கு அனுப்புகிறதாய் எத்தனம் பண்ணியிருக்கிறாரென்றும், ஒரு வேளை நபாபு அசபுஷா சம்மதிக்கமாட்டார் என்றால் சவாபாசிராயன் முப்பதினாயிரம் குதிரை கூட்டி அன்வருதிகானைத் துரத்திவிட்டுச் சந்தா சாயபை வைக்கிறதாய் மோகர்பண்ணியிருக்கிறார்களென்றும், இதற்குச் செலவுக்கு நீங்கள் சொல்லியிருந்த லக்ஷம் ரூபாயிலேயும் ஐம்பதினாயிரம் ரூபாய் கடப்பைச் சேர்ந்தாப்போலே கொடுக்க உண்டிகை அனுப்பச்சொல்லியும் மற்ற ஐம்பதினாயிரம் ரூபாய் சத்தாரா செலவுக்கு அனுப்பச் சொல்லி எழுதி வந்தது என்றும். ... ... ... ... ... ...

1747 ஆ சனவரி ௴ 27 உ க்ரு அக்ஷய ௵ தை ௴ 18 உ வெள்ளிக்கிழமை

இற்றைநாள் ஆற்காட்டிலேயிருந்து நபாபு அன்வருதிகான்சாயபு அவர்களண்டையிலே யிருக்கிற குலாப்சிங்கு நமக்கு எழுதி வந்த காகிதத்தைப்பற்றின வயணமென்ன வென்றால்: நிசாமண்டையிலேயிருந்து சவாபுகளுக்கெல்லாம் தாக்கீது எழுதிவந்தது. எல்லாரையும் பயணப்பட்டு அவரவருடைய ஆனை சேனை பரிவாரத்துடனே வந்து கிருஷ்ணை ஆற்றோரம் சேரச்சொல்லி தாக்கீது எழுதி வந்திருக்கிறது. இவ்விடத்திலேயும் பயணப்படுகிறார்கள். நபாபு மாபூசுகானுக்கும், மமுதல்விகானுக்கும், அன்வருதிகான் எழுதியனுப்புகிறார்களென்று மிப்படியாக நமக்கெழுதி அனுப்பு

வித்தான். அந்தச் சேதியை ஸ்ரீ துரையவர்களுடனே போய்ச் சொன்னவிடத்திலே, அந்தக் கடுதாசி வயணமெல்லாம் கேட்டுச் சந்தோஷப்பட்டு இந்தக் கடுதாசி கொண்டுவந்த டலாயத்துக்கு இருபது ரூபாய் இனம் கொடுத்தார்கள் இதல்லாமல் தண்டுக்கு மாபூசுகானை வரச்சொல்லி எழுதிப் போகிற காகிதம் கொண்டுபோகிற அறக்காரனைக் கண்டு பேசின சேதிசொன்ன நம்முடைய சேவகனுக்குப் பத்து ரூபாய் இனம் கொடுத்தார்கள். அந்தமட்டிலே பின்னையும் அரைநாழிகை மட்டுக்கும் லோகாபிராமமாய் பேசிக்கொண்டிருந்து நானிருக்கிற பாக்குக் கிடங்குக்கு வந்துவிட்டேன்.

இற்றைநாள் சாயங்காலம் நாலுமணிக்கு வங்காளத்திலேயிருந்து ஒரு சுலுப்பு ஓடிவந்தது. அந்த சுலுப்பிலே முசியே லபூர்தோனே நல்மருமகன் முசியே பிரீந்நோன் (Mr Brignon) என்கிறவன் அந்தக் கப்பலுக்குக் கப்பித்தானாக வந்தான். அந்த சுலுப்பிலே அரிசி, பட்டு, சர்க்கரை தினுசு கொஞ்ச நஞ்சம் வந்தது. பின்னையும் பல தினுசுமாக வந்தது. இந்த சுலுப்பிலே வந்தசேதி என்னவென்றால்: வங்காளத்திலேயிருந்து பிராஞ்சுக் காரருக்கு நாலு கப்பல்கள் வருகுதென்று மிதல்லாமல் இங்கிலீசுக்காரர் கப்பலும் நாலு உருப்படி வங்காளத்திலேயிருக்கிறது. அதுவும் இவ்விடத்துக்கு வருகிற பயணமாயிருக்கிறார்களென்று இப்படியாகச் சொன்னார்கள்.

இற்றைநாள் ஆற்காட்டிலேயிருந்து உசேன் தயாறுகானவர்கள் இவ்விடத்திலே வந்திருக்கிற அவர் மனுஷன் மகம்மது தவக்கால் என்கிறவனுக்கு எழுதியனுப்புவித்த வயணமென்னவென்றால்: அசரத்து நபாபு அன்வருதிகான் அவர்கள் நம்முடனே சொன்ன வயணமென்னவென்றால்: இவ்விடத்திலே வந்திறங்கியிருக்கிற மாபூசுகான், மமுதல்லிகானவர்களை வாங்கிவிடச் சொல்லி எழுதியனுப்பிவிடுகிறோம். அதற்குப் பிரஞ்சுக்காரர் இனிமேல் நடப்பிக்கவேண்டிய வயணமென்னவென்றால்: சென்னப்பட்டணத்திலேயிருக்கிற வெள்ளைக்காரர் இனிமேல் வெளியே புறப்பட்டுக் கிராமங்களிலே தாம்தூம்பண்ணாமலும் ஊர்களைக் கொளுத்தாமலும் இதுகளையெல்லாம் நிறுத்திப்

போட்டு அவர்கள் மட்டுக்குள்ளே யிருக்கவும், அப்பால் சென்னப்பட்டணத்துக் கோட்டையிலே எட்டு நாளைக்கு மாத்திரம் பிராஞ்சுக் கொடியை வாங்கிப்போட்டு, பாச்சாக் கொடி போடவும், இப்போது தேவனும்பட்டணத்துக்கு மேலண்டையாய் வந்திறங்கியிருக்கிற மாபூசுகான், மமுதல்லிகான் அவர்களுக்கு வெகுமானம் சகுமானம்போலே மரியாதையாய் நடப்பிக்கத் தக்கதாகவு மிப்படி யெல்லாம் நபாபு அன்வருதிகான் அவர்கள் உசேன் தயாறுகானவர்களுடனே சொல்லி, அவர் குமாஸ்தாவாயிவ்விடத்திற்கு வந்திருக்கிற மகம்மத்தாக்கலுக்கு எழுதி ஸ்ரீ துரையவர்களுடனே சொல்லச் சொன்னதாக உசேன்சாயபு அவர்கள் மகம்துதாக்கலுக்கு எழுதி யனுப்பின கடுதாசியை அவர் வாசித்துப் பார்த்துக்கொண்டு மேலெழுதியிருக்கிற வயணப்படிக்கு அந்த வயணமெல்லாம் மகம்மதுதாக்கல் என்னுடனே சொன்னான். அதன்பேரிலே ராத்திரி எட்டுமணிக்குப்போய் ஸ்ரீ துரையவர்களுடனே இந்தச் சமாசாரமெல்லாம் சொன்னேன். அவரும் சந்தோஷப்பட்டு, நல்லது அவரை காலமே வரச்சொல்லென்று சொன்னார். அந்தமட்டிலே அனுப்புவித்துக்கொண்டு வீட்டுக்கு வந்து விட்டேன். பத்து மணிக்கு வீட்டுக்குப் போய்ச் சாப்பிட்டு அங்கேயிருந்து கிருஷ்ணராயர் வீட்டுக்குப் போய் இன்னைக்குப் பொங்கித்தா வென்று விசாரித்து அவ்விடத்திலே ஒரு மணி மட்டுக்குமிருந்து வளவுக்கு வந்துவிட்டேன்.

*1747* ஆ ஜனவரி மீ 28 உ க்ஷய அக்ஷய ஸு தை மீ *19* உ சனிவாரம்

இற்றைநாள் மத்தியானம் பத்து மணிக்கு மகம்மத்தாக்கல் என்கிறவன் ஸ்ரீ துரையவர்களண்டைக்கு வந்து நேற்றைய தினம் தமக்கு வந்த உசேன் தயாறுகான் சாயபு அவர்கள் கடுதாசி வயணம் என்னுடனே சொன்னபடிக்கு அந்த வயணமெல்லாம் சொல்லி, இனிமேல் மாபூசுகான் மமுதல்லிகான் அவர்களிவ்விடத்திலேயிருக்கிறதில்லை, வாங்கிப்போய்விடுவார்கள். நீங்கள் சென்னப்பட்டணத்திலேயிருக்கிற வெள்ளைக்காரர் வெளியே புறப்பட்டுக் கிராமங்களைச் சுடாதபடிக்குத் திட்டம் பண்ணி அவர்களுக்கு வெகுமானம் சகுமானம் பண்ணினாப் போலே மரியாதையாய் நடப்பித்தது உண்டானால் அவர்கள்

போய்விடுவாகள் என்றும். அப்பால் சென்னப்பட்டணத் திலே எட்டு நாளைக்கு மாத்திரம் பார்சா கொடி போடவேணு மென்றுஞ் சொன்னூர். நல்லது அவர்கள் எப்போது வாங்கிப் போவார்கள் என்று கேட்டார்கள். அதற்கு மகம்மது தாக்கல் சொன்னது: உங்கள் ராணுவம் அரியாங்குப்பத்திலே யிறங்கி யிருக்கிறுர்களே அவர்களை யிப்புறம் அழைப்பித்துக்கொண் டீர்களேயானல் அதன்பேரிலே அவர்களும் வாங்கிப்போய் விடுவார்கள் என்று சொன்னூர். அதற்குத் துரையவர்கள் சொன்னது: சென்னப்பட்டணத்திலே பார்சா கொடி போடு கிறதுக்கு யோசனை பண்ணிக்கொண்டு சொல்லுகிறேம். அரி யாங்குப்பம் ராணுவம் இப்புறம் வந்துவிடுகிற சேதிக்கு நாளை காலமே நாம் அரியாங்குப்பத்துக்குப் போய் அவ்விடத் திலேயிருக்கிற வெள்ளைக்கார ராணுவம் எல்லாரையும் அழைப்பித்துக்கொள்ளுகிறேம் என்று சொன்னூர்கள். அந்த மட்டிலே மகம்மத்தாக்கல் அனுப்புவித்துக்கொண்டு அவர் இறங்கியிருக்கிற சுங்குவ்ார் கிடங்குக்குப் போனூர். அவர் போகச்சே நம்முடைய தளம் அரியாங்குப்பத்திலேயிருக்கிற வர்களை நாளைக்கு அழைப்பித்துக்கொள்ள வேணுமென்று நீர் சொன்னபடிக்கு அழைப்பித்துக்கொண்டோம் என்றும், சென்னப்பட்டணத்திலேயிருந்து தாசுமான் வெளியே புறப் படாதபடிக்கு எழுதினூர்களென்றும், இரண்டாவது அனுப் பின காகிதத்துக்கு உத்தரவு வந்தவுடனே மற்றச் சம்ம தியும் தீர்த்துப்போடுகிறேமென்றும் எழுதி அனுப்பச் சொல்லி மகம்மத்தாக்கலுடனே சொன்னதற்கு. அந்தப் படிக்கு எழுதியனுப்புகிறேமென்றும், நீர் கொடுத்த சாராயம் ராத்திரிக்கு ராத்திரி வெகு சந்தோஷம் பண்ணுவிக்குதென் றும் சொல்லிவிட்டுப் போனூன். துரை என் கையிலே மோக்கா விலேயிருக்கிற கஞ்சிமிட்டாயா வென்கிற கொர்த்தியேருக்கு எழுதுகிற காகிதத்தைப் பிராஞ்சிலெழுதி இந்தப்படிக்கு முறி தாசு கையிலே குசிராத்திலே எழுதுவிக்கச்சொன்னபடிக்கு மத்தேசு அண்டைக்குப் போய் முறிதாசு கையிலே குசிராத் திலே எழுதுவித்தேன்.

1747 ஆ ஜனவரி மீ 29௳க்கு அக்ஷய ஸு தை மீ 20 ௳ ஆதிவாரம்

இற்றைநாள் காலத்தாலே மோக்காவுக்கு எசமானுக இருக்கிற குவர்னதோருக்குப் பாரிசிலே துரை காகிதமெழுதச்

சொல்லி வயணஞ் சொன்னூர். அந்தப்படிக்கு மதனூந்த பண்டிதருடனே சொல்லி எழுதச்சொன்னேன். அப்பால் குவர்னதோரென்னை அழைத்து நம்முடைய படை அரியாங்குப்பத்திலிருக்கிறதை அழைப்பித்துக்கொள்ளுகிறோம். அப்பாலவர்கள் அறமாது வாங்கிப் போகாவிட்டால் எப்படியென்று கேட்டார். நபாபு அன்வருதிகா னுத்தாரப்படிக்கு உசேன்சாயபு எழுதினதாக மகம்மத்தாக்சல் சொன்னபடிக் கழைப்பித்தால் அவர்கள் பவுஞ்சுவாங்கிப்போவார்களே. வாங்கிப்போகாவிட்டால் நபாபு உத்தாரப்படிக்கு நாளது வரைக்கும் நடப்பித்தோமிப்பவும் அப்படித்தானே நடத்தினோம் என்று அவர்கள்பேரிலே குற்றத்தைச் சுமத்தி அப்பால் நடத்துகிறதை நடத்தலாமென்று சொன்னூன். அதுவும் மெய்தானென்று சொல்லி, பத்து மணிக்குக் குடும்ப சமேதமாய் வண்டியிலேறிக்கொண்டு அரியாங்குப்பத்துக்குப் போனூர். போய் சாயுங்காலம் ஆறரை மணிக்கு வந்தார். வந்தவுடனே என்னை அழைத்தனுப்பி மோக்கா குவர்னதோருக்கும் அவ்விடத்துக் கொடுத்தியேர் கஞ்சிமிட்டய்யாபேருக்கு எழுதின காகிதமும் மோகற்பண்ணி முஸ்தீதர்யிருக்குதா வென்று கேட்டார். குவர்னதோர் காகிதம் மோகற்பண்ணிப் பையிலே போட்டிருக்குது. கொடுத்தியேர் காகிதம் மோகற்பண்ணி வைக்கவில்லை. கணக்கிலே உம்முடைய தஸ்கத்துக் கையெழுத் போடவேணுமென்று சொன்னபடிக்குக் கையெழுத்துப் போட்டபிறகு மோகற்பண்ணிக்கொடுத்தேன். அதை இந்த மோகற்பண்ணினது, ஒலாந்துக் கப்பலின்பேரிலே ஒதிதாசு ஏறிப் போய்விட்டானேயென்று மத்தேசு கையிலே கொடுத்து ஒலாந்தாக்காரர் கப்பித்தான் தாம்பேசல் (Tom Fazel) கையிலே கொடுத்து ஒதிதாசு கையிலே கப்பலிலே கொடுக்கச் சொல்லித் தண்டு சமாசாரம் வந்ததாவென்று கேட்டார். நேற்று அன்வருதிகான் காகிதம் போய்ச்சேர்ந்து பார்த்துக் கொண்டவுடனே மறுபடியும் காகிதமெழுதி சாரணிசுவார் கையிலே கொடுத்து ஆற்காட்டுக்கு அனுப்பினூர்களாம். உன் வயணமின்னதென்று தெரியாதென்று சொன்னேன். நீ சொன்னபடிக்கு அரியாங்குப்பத்திலேயிருக்கிற நம்முடைய அறமாதை நாளைக்கு வந்துவிடச்சொல்லச் சொல்லிவிட்டு வந்தேன். அவர்கள் தண்டு வாங்கிப்போகவேணுமேயென்று கேட்

டார். வாங்கிப்போகாவிட்டாலும் நாம் நபாபு அன்வருதி கான் உத்தரவின்பேரிலே வாங்கி வருகிறோமேயல்லாமல் நாமாய் வரவில்லையே. நாம் வாங்கிவந்தால் அவர்களையும் வாங்கிவரச் சொல்லச் சொல்லுகிறோமென்கிறதினாலல்லவா அவர்களை வந்துவிடச்சொல்லி எழுதினதற்கும் இதற்கும் தாக்கல் சரியாயிருக்கிறதே. அப்பால் போனால் நல்லதாச்சுது. போகாவிட்டால் நாம் நபாபுக்கு ஆதிமுதல் அந்தமதம் வரைக்கும் நீரெழுதுகிறபடிக்கு எல்லாம் நடப்பித்துக்கொள்ளு கிறோம். உம்முடைய குமாரன் நடப்பிக்கிறது இப்படியிருக் கிறது என்றும், எங்கள்பேரிலே குற்றமில்லையென்றும் எழுதி அனுப்புகிறதுதான் அதன்பேரிலே அவர்கள் குதிரை ஏதாகி லும் இந்தப்பக்கத்திலே வந்தாலும் சுலுமி சாஸ்தி நடப்பித் தாலும் அதற்குத் தக்கதாய்ப்போலே நடப்பிப்போமென்று அவருக்கெப்படி சமற்பகமாய்ச் சொல்லவேணுமோ அப்படி சமற்பகமாய்ச்சொல்லி அதன்பேரிலே சந்தாசாயபு மகன் கப்பல் பார்க்கப்போகிறார்களாம், போகிறோம் என்று கேட்கிறார்க ளென்று சொன்னேன். அதன்பேரிலே கப்பல் கப்பித்தான் முசியே தொடுந்தேலேனுக்குச் சொல்லி மரியாதைகள் நடப்பிக் கச் சொல்லியும் முசியே ஓசேக்கு சலங்குகொடுக்கச் சொல்லியும் அவனையுங் கூடப் போகச்சொல்லியும் உத்தாரங்கொடுத்தார். அந்தப்படிக்குச் சாமாராயனுக்குச் சொல்லி அனுப்புவித்த பிற்பாடு மகம்மதாக்கல் என்கிறவனையும் கூடப் போகச்சொல் லென்று சொன்னார். நல்லதென்று அவனுக்குச் சொல்லி அனுப் பினபிற்பாடு அவன் அவர்களுடனே கூடப் போகிறதில்லை. நான் தனியே போகிறேனென்று சொல்லி அனுப்பினான். அந்தச் சேதி துரையுடனே சொல்லுகிறதற்குச் சமயமில்லை. ஆனபடியினாலே பாக்குக் கிடங்குக்கு வந்தேன்.

1747 ஆ ஜனவரி ௴ 30 உ ௬ந்து அக்ஷய ஹு தை ௴ 21 உ சோமவாரம்

இற்றைநாள் காலத்தாலே சந்தாசாயபு குமாரன் ராசா சாயபு, மதக்கியாசாயபு குமாரன் அல்லிக்கேன் சாயபு முத லான பேர்கள், அவர்கள் தாலுக்கு மனுஷரெல்லாரும் கப்ப லின்பேரிலே ஏறிப் போய்ப்பார்த்திறங்கிவரச்சே தொடுத் தெலேன் கப்பலிலே பதினைந்து பீரங்கிப் போட்டார்கள். மற்றக்

கப்பலின் பேரில் சேர்மைக்கப்பல் நாலுலேயும் அந்தப்படி போட்டார்கள். ஏக காலத்திலே போட்டபடியினலே வெகு சம்பிரமமாய் இருந்தது.

அப்பால் எட்டரை மணிக்கு வாசுதேவய்யன் வெற்றிலை புகையிலையைக் குறைக்கவேணுமென்று முன் புரட்டாசி மீ 9௳ (21 செப்தம்பர் மீ 1746) சென்னப்பட்டணம் பத்தே ஆனபோது ஒன்பது வெற்றிலையும் பனிரெண்டு பலம் புகையிலையும் எப்போதையும்போலே விற்கச் சொல்லி உத்தாரங் கொடுத்த நாள் முதல் இன்றைய வரைக்கும் அவனுடைய பெண்சாதி பிள்ளைகள் செத்தாலெப்படி துக்கமாயிருக்குமோ அப்படி துக்க சாகரத்திலே முழுகியிருந்துகொண்டு குறைத்து விற்கவேணுமென்று நூறு தரமுண்டு. குவர்னதோர் மூசியே துய்ப்ளேய்க்ஸ் அவர்களுடனே சொன்னதும் கடைக்காரர்களுக்கெல்லாம் புகையிலை வெற்றிலை கொடாமல் காபுருபண்ணியும் தோட்டக்காரரை எடுத்துவிட்டுப் பிராதுபண்ணுவித்தும் நடத்தினதற்குக் குவர்னதோர் சம்மதியாமலிருந்து இற்றை நாள் இவன் போய் வெளியிலே ஐந்து வெற்றிலைக்குக் கொள்ளக் கிடைக்கவில்லை. புகையிலை பத்து பலம் கொள்ளக் கிடைக்கவில்லை. அப்படியிருக்க வெளி வெற்றிலையும் புகையிலையும் அமைப்பித்து ஒன்பது வெற்றிலையும் பனிரெண்டு பலம் புகையிலையும் விற்ருல் கும்பினீருக்கு வெகு நஷ்டம் வருகுது. வெளியாரிங்கே வந்து வாங்கிப்போய் வெளியிலே விற்கிருர்களென்று தப்புந்தாறுமாய்ச்சொல்லி, காசு ஒன்றுக்கு ஐந்து வெற்றிலையும், பணம் ஒன்றுக்குப் பத்து பலம் புகையிலையும் விற்கத்தக்கதாகத் துரைக்குச் சொல்லி உத்தரவு வாங்கிக்கொண்டவுடனே அவன் சந்தோஷம் நீதி. நிக்ஷேபயம் அகப்பட்டாப்போலேயும், முன் செத்தவர்களெல்லாம் பிழைத்து வந்தாப்போலேயும், லக்ஷந்தரம் போக்கடித்துக்கொண்டவனுக்கு மறுபடியும் அகப்பட்டால் எத்தனை சந்தோஷமோ அத்தனை சந்தோஷத்தை அடைந்து என்னண்டைக்கு வந்து புகையிலையும் வெற்றிலையும் மேலெழுதினபடிக்குக் குறைத்து விற்கச்சொல்லி உத்தாரமாச்சுது. தமுக்கும் போடுகிறதற்கு உத்தாரங்கொடுக்கவேணுமென்று கேட்டார். உமக்கும் மகத்தான பாக்கியம் வந்தது. சரீரமெடுத்தால் கீர்த்தி சம்பாதிக்கவேணுமில்லாவிட்டால் அபகீர்த்திச் சம்பாதித்தீர். வெகு சனங்க

ளுடைய இரத்தங்குடிக்கிறது உமக்கு நல்லதல்லவென்று சொல்லிவிட்டு நல்லது குமிசேல் கலைந்தவுடனே அப்படியே துரைக்கு எச்சரித்துத் தமுக்குப் போடுவிப்போமென்று சொல்லிப் போகச்சொன்னேன். அப்பால் நான் துரையண்டைக்குப் போய்ச் சொன்னதற்கு, நீ சொல்ல வருகிறது தெரிந்தது. சனங்கள் கஸ்திப்படுகிற சாடை சொல்ல வருகிறாய் அல்லவா? அது தெரிந்து வெளியிலேயிருந்துகொண்டு வந்து விற்கிறதினாலே கும்பினீருக்கு நஷ்டம் வருகுதே. ஆனபடியினாலே இன்னமொரு சமயம் பார்ப்போம். இந்நேரத்துக்குத் தமுக்குப் போடச்சொல்லென்று சொல்லிவிட்டு மறுபடி சற்றுநேரம் பொறுத்து இதற்கு ஒரு யோசனை பாரென்று சொன்னார்.

இற்றைநாள் அரியாங்குப்பத்திலேயிருந்த அறமாது புதுச்சேரி வந்து சேர்ந்தது. இவர்கள் வரச்சே ஐம்பது சொல்தாது, ஐம்பது சிப்பாய்கள், கும்பினீர் சேவகர் பதினாலு, வெங்கல பீரங்கியை வண்டியுடனே கொத்தளத்தின்பேரிலே வைத்துப் போட்டு. மற்றப் படைத்தலைவர் முசியே லத்தூர் முதலான பேர்களும் சமேதாரர்களும் வந்துவிட்டார்கள். இது நபாபு அன்வருதிகான் மகம்மதாக்கலுக்கு எழுதினபடிக்கு மகம்மதாக்கல் துரைக்குச் சொன்னபடிக்கு வந்துவிட்டார்கள்.

இற்றைநாள் சாயங்காலம் முசியே பரீவில் (M. Braville) முசியே லாஸ் (M. Lasse) சென்னப்பட்டணம் இங்கிலீசு சின்ன துரை முசியே மானிசனும் (M. Monson) சீர்மைக்குப் போகத் தக்கதாகத் தரங்கம்பாடி கப்பலிலே போகிறதற்கு இவ்விடத்திலேயிருந்து காரைக்காலுக்குப் போகிற சுலுப்பின் பேரிலே நீ அவரவர் தட்டுமுட்டுகளுடனே பயணம் சாகிப்போனார்கள்

சாயங்காலம் மகம்மதாக்கல் என்கிறவன் உசேன்சாயபு தனக்கெழுதின காகிதமும் எடுத்துக்கொண்டு நாலரை மணிக்குத் துரையவர்கள் அண்டைக்கு வந்தான். வந்த விடத்திலே நடந்த சேதி வயணம்: துரையவர்கள், முசியே தீலார்ஸ் நான் மூன்று பேரும் இருக்க மகம்மதாக்கல் பார்சிப் பேச்சிலே முசியே தீலார்ஸுடனே சொல்ல, முசியே தீலார்ஸ் பிரஞ்சு வார்த்தையிலே சொல்ல, அதற்குத் துரைசொல்லுகிற பதிலுத்தரவு பறங்கிப்பேச்சிலே சொல்ல இந்தப்படிக்கு நடந்த சேதி வயணம்.

உசேன் சாயபு, ஆனல் நமக்கெழுதியனுப்பின வயணம்: நீங்கள் கொடுக்கிற நசறின்னதென்று தெரிந்துகொண்டு எழுதியனுப்பச் சொல்லியும், கோட்டையிலே எட்டு நாள் மட்டுக்கும் பார்சா கொடி பறக்கவும், இந்தப்படிக்குச் சம்மதியானல் மோகராபண்ணி எழுதியனுப்பச்சொல்லி எழுதினர்கள். நீங்களென்ன சொல்லுகிறீர்களென்று கேட்டான். அதற்குத் துரை சொன்னது: சண்டா போடுகிறதற்குச் சம்மதி; ஒரு வெகுமானம் நபாபு அவர்களுக்கு லாய்க்குப் படிக்குக் கொடுக்கிறேமென்றும், உசேன் சாயபுக்குமப்படிதானென்றும், மமூதல்லிகான் அன்வருதிகானுக்கும் அவரவர்கள் லாய்க்குப்படிக்குக் கொடுக்கிறேமென்றும், உமக்கும் ரங்கப்பன் சொன்னபடிக்குக் கொடுக்கிறேமென்று மிப்படியாகச் சொன்னர். அதிலே நானிருந்துகொண்டு சம்பதிராயனுக்கும் கொடுக்கவேணுமென்று சொன்னதற்கு மகம்மதாக்கலிருந்து கொண்டு அவனுக்குத்தான் முன்னே கொடுக்கவேண்டியது என்று சொன்னன். அதற்குத் துரை யிருந்துகொண்டு அப்படியே செய்வோமென்று சொன்னர். அதன்பேரிலே மகம்மதாக்கலிருந்துகொண்டு மாபூசுகானுக்கோ? என்று கேட்டார். அதற்குத் துரை சொன்னது: மாபூசுகானுக்குமாத்திரம் நாம் பிரிச்சேதம் கொடுக்கிறதில்லையென்று சொன்னர். அதற்கு மகம்மதாக்கல் சொன்னது: அவன் கெட்ட வினைப்புள்ளவன். அவனுக்குக் கொடுக்கிறதில்லையென்று சொல்லி, நல்லது வெகுமானம் இவ்வளவென்று சொல்லவேணுமென்று கேட்டான். அதற்குத் துரை யிருந்துகொண்டு எங்களுக்கு ஒரு பாத்தியமுமில்லை (அவர்களுக்குக் கொடுக்கிறதற்கு). ரங்கப்பா அதற்கு நியாயஞ் சொல்லென்று சொன்னர். அதன்பேரிலே நான் நியாயம் சொன்னதற்கு அவன் ஒத்துக்கொண்டு, நான் வந்தன்னியேதானே ரங்கப்பன் இந்த நியாயமெல்லாம் சொன்னதற்கு உங்கள் பேரிலே நேரமில்லை. அவர்கள் பேரிலே தான் நேரம். ஆனலும், நீங்கள்தானே ஒரு வெகுமானம் பண்ணுகிறேமென்று சொன்னபடிக்கு அந்த வெகுமானம் இவ்வளவென்று நானெழுதவேண்டுமே. இவ்வளவென்று சொல்லவேணுமென்று கேட்டான். அதற்கு ஒரு பாத்தியமுமில்லை எங்களுக்கு. ஆகிலும், சிநேக தர்மத்தை விசாரித்து முப்பதினுயிரம் நாற்பதினுயிரம் ரூபாய்க்குத் தினுசுவாரியாகக் கொடுக்கிறேமென்றும் சொன்னர். அதன்பேரிலே ரங்கப்பன்

இருக்கிற கிடங்கிலே போய் இதற்கு உத்தரவு சொல்லுகிறே னென்று சொன்னான், நல்லதென்று மூசே தெலார்ஷையும் என்னையும் கூடப் போகச்சொல்லிச் சொன்னார். அதன்பேரிலே நம்முடைய பாக்குக் கிடங்கிலே வந்து உட்கார்ந்து பார்சிபேச்சிலே மகம்மதாக்கலுடனே தெலார்ஷ் என்ன சொல்லுகிறேனென்று கேட்டதற்கு மகம்மதாக்கல் சொன்னது: இந்த வெள்ளைக்காரர் மூன்று பேரும் வரச்சே சென்னப்பட்டணங் கோட்டை எப்படியாகிலும் வாங்கிக் கொடுக்கிறோமென்று சத்தியம் பண்ணிக்கொடுத்து வந்தார்கள். ஒரு வேளையிலே அதற்கு இனப்படாமற்போனால் நாங்கள் மறுபடியும் உங்களண்டைக்கு வந்து சேருகிறோமென்று உடன்படிக்கைச் சொல்லிப்போட்டு வந்தார்களென்றும், நீங்கள் முப்பதினாயிரம் நாற்பதினாயிரம் ரூபாய்க்கு வெகுமானம் கொடுக்கிறோமென்று யிதுவே அல்லாமல் வேறேயில்லையென்று சொல்லுகிறதற்கும் நபாபு அன்வருதிகானுடைய மனதிலே லக்ஷாந்திரம் வராகன் வாங்கவேணு மென்கிறதற்கும் பணம் பிய்க்கிறதில்லை ஆனபடியினாலே, வெள்ளைக்காரரைக் கூட்டினால் நாம் புறப்பட்டுப் போய்விடுகிறோமென்று சொன்னான். அந்தப் பேச்சை மூசியே தெலார்ஷ் கேட்டுக்கொண்டு நான் போய் குவர்னதோருடனே சொல்லி இதற்கும் மறுவுத்தரவு வந்து சொல்லுகிறேனென்று சொல்லிப்போட்டுப் போனான். போய்ச்சொன்னவுடனே அவரென்னை அழைக்கச்சொன்னாரென்றும், மறுபடி தெலார்ஷ் வந்து மகம்மதாக்கலை நீரிருக்கிற விடுதிக்குப் போம், நாங்களிப்போது இதற்கு மறுவுத்தரவு நீரிருக்கிற விடுதிக்கு வந்து சொல்லுகிறேனென்று சொல்லி அனுப்புவித்துப்போட்டு நாங்களிரண்டு பேரும் துரையண்டைக்குப் போனோம். அப்போது துரை யென்னைப் பார்த்து இப்புறம் இவன் போகிறானென்று சொல்லுகிறானே இதற்கு என்னயோசனை தோற்றுது உனக்கு என்று கேட்டார். எனக்குத் தோற்றுகிறது, அவன் போகப் போகிறதில்லை. இப்போது சொல்லுகிற வார்த்தை அவன் வந்த வக்காலத்துக்கு இணங்குகிற மட்டுக்கும் அவனப்படி சொல்லாதே பின்னை எப்படி சொல்லுவான், அதற்கு நாம் சொல்லவேண்டியது போகவேணுமென்றாலிப்போதுதானே போகலாம். வெள்ளைக்

காரரை உசேன்சாயபு அன்வருதிகான் அவர்களுக்கு ஒப்பு விக்கவேணுமென்றால் இந்த வெள்ளைக்காரருடனேகூட சிறிது வெள்ளைக்காரரைக் கூடக் கூட்டி அனுப்புவிக்கிறோமிவர்கள் வந்தவுடனே உசேன்சாயபு போய் உங்கள் வெள்ளைக்காரரை மூன்றுபேரையும் ஒப்புவித்துப்போட்டோமென்று சொல்விப் போட்டும் அப்பாலிந்த வெள்ளைக்காரர். ... ... ... ... ...

*1747* ஆ ஜனவரி மீ 31 உக்த அக்ஷய ஸ்ரீ தை மீ 22உ செவ்வாய்க்கிழமை

இற்றைநாள் காலமே மகம்மதாக்கலை அழைப்பித்து உசேன் சாயபுக்குக் காகிதமெழுதச் சொல்ல, அவனெழுதின வயணம்: சென்னப்பட்டணம் கோட்டையிலே நிசாம் எட்டு நாள் பறக்கவும், அதன்பேரிலே துரை நபாபுக்குச் சென்னப் பட்டணம் கோட்டை தயவுபண்ணிக் கொடுக்கவேணுமென் றும் எழுத, அந்தப்படிக்கு அவர்கள் கொடுத்தோமென்று எழுதியனுப்ப, அதன்பேரிலே பிரான்சுக்கொடி போட்டுக் கொள்ள ஒரு வெகுமானம் முப்பதினாயிரம், நாற்பதினாயிரம் ரூபாயிலே கொடுக்க இந்தமட்டும் இங்கிலீசுக்காரர் பாரிசத் திலே நீங்களிருந்ததற்கு உங்களுக்கு வந்த அபகீர்த்தியும், சிப் பந்தி லுக்சான் நூருசன் கிடைத்ததே யல்லாமல் கீர்த்தியும் ஆதாயமுமில்லையே. இப்போது எங்கள் பாரிசமாயிருங்கோள். உங்களுக்குச் சிப்பந்தி செலவில்லாமல், உங்களுக்கு ஒரு பிர யாசையுமில்லாமல் நீங்களிருக்கிற ஸ்தானத்திலே நீங்களிருக்க உங்களுக்குக் கீர்த்தியும் சிறிது ஆதாயமும் வருவித்திருக் கிறோம். இந்தப்படிக்குப் பாருங்கோளென்று புதுச்சேரி குவர்னதோர் சொல்கிறார். இதுவேயல்லாமல் இந்த மொகத்தி மாவுக்கு வேறே ஒரு காசும் பிரயோசனம் வருகிறதா யிருக்க வில்லை. இந்தப்படிக்குச் சம்மதியானால் எழுதியனுப்பவும் இல்லாவிட்டால் என்னை வந்துவிடச் சொல்லி எழுதினால் வந்து விடுகிறோமென்றும் இதற்கவர்கள் சொல்லுகிற நியாயத்தி னாலே இதுதானும், உங்களுக்குந் தங்களுக்கும் முன்னாலே யிருந்த சிநேகத்துக்கு நடுவாந்திர மொரு சண்டையென்று.

1747 ஆ பிப்ரவரி மீ 5 உக்த அக்ஷய ஸ்ரீ தை மீ 27உ ஆதிவாரம்

இற்றைநாள் காலத்தாலே முசே தெப்ரே வீட்டுக்குப் போய் மசுக்கரைக்கு ஒரு ஒலாந்தா சுலுப்புப் பயணமாயிருக்கிறபடியி

ஞலே சீர்மைக்கு மூசே தும்மாவுக்கு ஒரு காகிதமும், மூசே நதுக்கு ஒரு காகிதமும் எழுதுவித்து அவன் கையிலேதானே கொடுத்து கும்பினீர் காகிதம் சீர்மைக்குப் போகிறதுடனே கூட அனுப்பச் சொல்லிக் கொடுத்துவிட்டுக் குவர்னதோர் வீட்டுக்குப் பத்து மணிக்கு வந்தேன். குவர்னதோர் சொன்னது: அறமாது சமாசாரம் ஏதாகிலும் வந்ததாவென்று கேட்டார். நேற்றையதினம் பாளையம் கூச்சயா யிவ்விடத்துக்கு வருகிறதாய்ச் சேதி வந்து சொன்னூர்களே, அவ்விடத்திய சேதியானல் குதிரைக்காரர் சம்பளமில்லையென்று அங்கலாய்க்கிறவர்களும் குதிரைகளைப் போக்கடித்துக்கொண்டவர்களுக்குக் குதிரை வாங்கிக்கொடுக்கிறேமென்று சொன்னதொன்றும் நடத்தாதேபோனபடியினலே அவர்களெல்லாரும் தலையிலே கையை வைத்துக் கொண்டு அழுதுக்கொண்டு திரிகிறவர்களும் சேவகரெல்லாம் புதுச்சேரியார் சற்றே இதன்பேரிலே வந்தால் அதைச் சாக்கிட்டு நாங்களோடிப்போவோமாவென்று சொல்லுகிறவர்களும் இந்த இங்கிலீசுக்காரர் தங்களுக்கு இருபது கப்பல் வருகுது மூப்பதுகப்பல் வருகுதென்று ஆசைசொல்லி இந்தமட்டுக்கும் ஒன்றுங்காணேம்என்றும் மராட்டியர் பவுஞ்சின் பேரிலே நாசற்சங்கு பதினையாயிரங்குதிரையுடனே வருகிறனென்றும், ஆற்காட்டு முதலான சுபாவுகளுக்கெல்லாம் அவரவர்கள் பவுஞ்சுடனேகூட அவரவரை கிருஷ்ணஅண்டையிலே வந்து சேரச்சொல்லியும் நாசற்சங்கு பர்வாணவும் நிசாம் பர்வாணவும் வந்து அதன்பேரிலே அடிக்கடி மகன் வரச்சொல்லியும், மமூதல்லிகான்போவோமென்றும் அடிக்கடி அழைக்கச்சேயும் மாபூசுகான் போகமாட்டோமென்றம், என்க்கு வந்த அபகீர்த்தி உங்களுக்கு வந்தாற்போலே அப்போது தெரியுமென்று இப்படியாக எல்லாம் நடக்குது. புதுச்சேரியின்பேரிலேயும் வில்லியநல்லூரிந்தப் பக்கத்திலேயும் வந்திறங்கி முத்திக்கைப் போடுகிறதாய்ப் பேச்சுவார்த்தை நடக்குதென்று சேதி சொன்னேன். அதற்குத் துரையிருந்துகொண்டு அப்படி வந்திறங்குவார்கள்போலே காணுதாவென்றுகேட்டார். என் யோசனைக்கு வந்திறங்கமாட்டார்கள். அதெப்படியென்றுல், அவர்களுக்கு வரச்சொல்லி, காகிதங்கள் சுறுக்காய் வருகிறபடியினலேயும் நிசாமிடத்திலிவர்கள் பதிலாமைப்பட்டு ஓடிப்போனனென்கிற அபகீர்த்தி வந்திருக்கிறதையும் பரிகரித்துக்கொள்ளுகிறதற்கு

தமக்குப்பண்ணி வெளிக்கு சமாதானம் பண்ணிக்கொண்டோமென்றும் எண்பித்துக்கொண்டு போகிறவனேயல்லாமல் நிற்கத்தக்கதில்லை என்று சொன்னேன். ஆனால் நாம் கொடுத்த வெகுமானத்தை அந்தரங்கத்திலே வாங்கிக்கொண்டு வெளிக்கு விஸ்தாரமாய் வாங்கிக்கொண்டோமென்று சொல்லிவிட்டுப் போகிறதுதானேயென்று சொன்னார். அப்படித்தான் போவார்கள். ஆனால், இங்கிலீசுக்காரர் பேச்சை நம்பி சிப்பந்தி வைத்தார்கள். அவர்கள் பணம் கொடாதேபோனபடியினாலே தாங்கள் சிப்பந்தியிலே முழுகிப்போகிறதாயிருக்குதென்கிற நினைப்பினாலே பின்னையும் பத்து பணம் விசேஷித்து வாங்கவேணுமென்றும் நினைப்பினாலே அந்த யோசனையின்பேரிலே இருக்கிறதாய்ச் சேதி கேட்டேன் என்றுப்போலே சொன்னேன். அதற்குத் துரை யிருந்துகொண்டு இங்கிலீசுக்காரரல்லவோ வரச்சொன்னது. அவர்கள் கையிலே வாங்கிக்கொள்ளுவார்கள் என்று சொன்னார். அதற்கு நான் மெய்தானென்று சொன்னேன். இப்படி பேசியிருக்கச்சே கொமிசேல்காரரெல்லாருங் கூடினார்கள். அப்பால் கொமிசேல் கூடி... ... ... ... ...

*1747* ஆ பிப்ரவரி மூ 7 உக்கு அக்ஷய ஞு தை மூ 29உ மங்களவாரம்

இற்றைநாள் சாயங்காலம் ஐந்தரை மணிக்குச் சென்னப்பட்டணத்திலே சென்றுலாயிருந்து துரைத்தனம் பண்ணின மேஸ்தர் மாசு இவ்விடத்திலே யிருந்து தலங்கம்பாடிக்குப் போய் அவ்விடத்திலே யிருந்து சீர்மைக்குப் போகத்தக்கதாகப் பயணப்பட்டார். அவர் பிழைத்த பிழைப்புக்கு ஒரு ரெட்டைச் சலங்கு தானும் விலாசமில்லாமலும் ஒரு மாசிலி படகிலே ஏறிப்போனார். அவருடனேகூட ஒரு கணக்கனும் அவர் துபாசி வெங்கணனும் இந்த மூன்று பேர் தவிர வேறே ஒருத்தருமில்லை. இதுவுமல்லாமல் இந்த வாங்கு சலங்குடனேகூட ஒரு கட்டுமரமாகிலும் இல்லை. இப்படிப்பட்ட அதிசயத்துடனே பயணப்பட்டுத் தலங்கம்பாடிக்குப் போனார். இவர் சலங்கின்பேரிலே ஏறச்சே சின்னதுரை லெகுரூமட்டும் வந்து படகின்பேரிலேறுகிறமட்டும் கூடவிருந்து படகிலேறிப்போகச்சே இருபத்தொரு பீரங்கிப்போட்டார்கள். அந்தமட்டிலே ஏறி வெள்

ஊக்கொடியும் போட்டுக்கொண்டு பாயெடுத்துத் தலங்கம் பாடிக்கு ஓடிப்போச்சுது. அவர் பெண்சாதியும், தட்டு முட்டும், பிள்ளைகளுமிவ்விடத்தில்தானே வைத்துப்போட்டுத் தலங்கம்பாடிக்குப் போய் அவ்விடத்திலேயிருந்து சுலுப்பு அனுப்பு விக்கிறேம் என்றும் அதிலேறிவரச்சொல்லிவைத்துப் போட்டுப் போனார். அந்தச் சுலுப்பு வந்தவுடனே அவர்கள் தட்டுமுட்டு மேற்றிக்கொண்டு அவர் பெண்ஜாதியும் பிள்ளைகளும் பயணமாகி இனி நாலைந்து நாளையிலே போவார்களென்று சொல்லுகிறார்கள்.

இதல்லாமல் முத்துமல்லாரெட்டியார் நமக்கெழுதி அனுப்புவித்ததென்னவென்றால்: ஆலத்தூர் வேங்கடாசல நாயக்கன் வந்து அந்த வட்டமெல்லாம் ஊர்களைக் கொளுத்திக் கொள்ளையிடுகிறானென்றும், அவனுக்குத் தாக்கீது பண்ணச்சொல்லியும் எழுதியனுப்பினார். அதற்கு உத்தரவு அவனை தாக்கீது பண்ண வெங்களுக்கென்ன காரியம். எங்கள் ஊர் மனுஷனானால் பிராஞ்சுக்காரர் ஏதாகிலும் சுலிமிபண்ணினால் நாமதுக்குத் தாக்கீது பண்ணி நிறுத்தலாம். அது தவிர மற்றப்படி பாளையக்காரர் ஒருத்தருக்கொருத்தர் ஆகாதபடிக்குப் பதினாயிரம் பேர் பதினாயிரங்காரியம் நடத்தப் போகிறார்கள். அது நமக்குத் தெரியாது என்று நாமெழுதி விட்டதின்பேரிலே முத்துமல்லாரெட்டி நம்முடையபேரிலே பிராதாய் ஸ்ரீ துரையவர்களுக்கு ஒரு கடுதாசியும், மூசியே துலாமழுக்கு ஒருகடுதாசியும், மூசே கோஞ்செல்காரர்களுக்கும் ஒரு கடுதாசியும் நம்மையல்லாமல் தானப்ப முதலியாருக்கு ஒரு கடுதாசியும் எழுதி அவர் முகாந்திரமாய்க் கடுதாசிகளைத் துரைகளுக்குக் கொடுத்துப் பிராதுபண்ணச்சொல்லி எழுதியனுப்பினான். அந்தச் சமாசாரத்தை நான் போய் துரையவர்களுடனே சொன்னேன். அந்தமட்டிலே அவன் கொண்டுவந்த கடுதாசியை வாங்கிவைத்துக்கொண்டு வந்த மனுஷனைக் காவலிலே வைக்கச்சொல்லி உத்தாரம் பண்ணினார் அந்நேரமே அந்தப் பிராமணனைக் கொண்டுபோய்க் காவலில் வைப்புவித்தோம்.

1747 ஆ பிப்ரவரி மீ 8 உ க்கு அக்ஷய ஞு தை மீ 30 உ புதவாரம்.

இற்றைநாள் காலத்தாலே இந்தப்பட்டணத்திலே நடந்த அதிசயமென்னவென்றால்: அசரத்து நாசற்சங்கு பர்வானை

வும் வெகுமானமும் முந்தாநாள் சாயங்காலம் கொண்டுவந்த மனுஷன் கெவுனிக்கு வெளியிலே நம்முடைய தோட்டத்திலே இறங்கியிருந்துகொண்டு நமக்குச் சொல்லியனுப்பினார்கள். அந்தக் கபுறு வந்தவுடனே துரையவர்களண்டைக்குப் போய் இந்தச்சேதியைச் சொன்னேன் அதன்பேரிலே அவர்கள் சந்தோஷப்பட்டு அவர்களெங்கே வந்திறங்கியிருக்கிறார்களென்று கேட்டார். அதற்கிப்படி வெளியிலேதானே நம்முடைய தோட்டத்திலேயிறங்கியிருக்கிறார்களென்று சொன்னேன். நல்லது அவர்களுக்குப் படி பந்தலை விசாரிக்கச் சொல்லியும் உத்தாரங் கட்டளையிட்டும் அவர்களை இவ்விடத்திலேதானே யிருக்கச் சொல்லியு மிந்தப்படிக்கு நம்முடைய தோட்டத்திலேயிருந்தவர்களை எதிர்கொண்டு போய் அழைத்துக்கொண்டு வந்திருக்கிற சிரோப்பாவும் பர்வானாவும் வாங்கிக்கொண்டு வரத்தக்கதாக இவ்விடத்திலேயிருந்து புறப்பட்டுப்போன சகல சம்பிரமத்தினுடைய அதிசயத்தை நான் தெரிந்தமட்டுக்கும் எழுதுகிறேன். அதெப்படியென்றால்: இற்றைநாள் காலமே ஒன்பது மணிக்கு இவ்விடத்திலே ஸ்ரீ துரையவர்கள் அரண்மனையண்டையிலே மாயே சிப்பாய்கள் நூறுபேரும், கர்நாடகச்சேவகர் நூறுபேரும், பாளையக்காரர் சேவகர், ஈட்டிக்காரர் ஐம்பதுபேரும், குதிரையின்பேரிலே நவபத்துமாகத் தேவடியாள், மேளக்காரர் சமஸ்தமான பேரும்வந்து பாறு வைத்துக்கொண்டு நிற்கத்தக்கதாக ஸ்ரீ துரையவர்கள் வெளியே புறப்பட்டார்கள். துரையவர்கள் புறப்படச்சே ஆறு குதிரை கட்டின ரதம் முன்னேயும், அதன் பின்னோடே கொத்தளக்குதிரையும், அதற்கடுத்தாப்போலே துரையவர்கள் பல்லக்கும், பல்லக்குக்கு முன்னே குமாராபாணமும், அதற்கு அடுத்தாப்போலே வெள்ளைக் கொடையும், இருபாரிசத்திலேயும் வெள்ளைப்பாவாடையும், மயில்கொத்து சவுரி யிருபுறமும் சலாம்சாமரம் விசிறிக்கொண்டு வரத்தக்கதாகவும் முன்னே புல்லாங்குழல் நாகசுரம் வாத்தியம் பண்ணிக்கொண்டு . கொம்புதமுக்கு நவபத்து முழங்கத்தக்கதாக இருபாரிசமும் பதினாறு குதிரை குவாடுது வெள்ளைக்காரர் வரத்தக்கதாகவும் சகலசம்பிரமத்துடனே வெளியே புறப்பட்டு அவர் பிறகே சின்னதுரை, முசியே துலாராம், நம்முடைய அப்பாவு, சேஷா

சலசெட்டியார், பாளையக்காரன், மதனந்தபண்டிதர், கிருஷ்ண ராயன் இவர்களெல்லாரும் குதிரைகள் பேரிலேயும் காடிகள் பேரிலேயுமாகப் புறப்பட்டு எதிர்கொண்டு மகாசம்பிரமத் துடனே நடந்தார்கள். இப்படியிருக்கச்சே, காலமே ஆறு மணிக்குக் கெவுனிக்குச் சொல்லியனுப்பி வழுதாவூர் கெவு னிக்குவெளியே அகிலுக்குள்ளாகத்தானே கூடாரம் போடு வித்து இரண்டு பாஸ்தாங்கி சொல்தாதுகளையும் அனுப்பிப் பாறு வைத்துக்கொண்டிருக்கச்சொல்லி யனுப்பியிருந்தபடிக் குக் கூடாரமும் போட்டுச் சொல்தாதுகளும் பாறுவைத்துக் கொண்டு ஆசிலாயிருந்தார்கள். அப்படியிருக்கச்சே, இவ் விடத்திலேயிருந்து புறப்பட்ட துரையவர்களும் மற்றுமுண் டான துரைத்தனக்காரர் தமிழ்ப் பிரபுக்கள் அனைவரும் ஒன்பது மணிக்குப் புறப்பட்டுக் கெவுனிக்கு வெளியிலேயிருக் கிற கூடாரத்திலே போயிறங்கித் துரையவர்கள் மாத் திரம் அவ்விடத்திலேயிருந்து சின்னதுரை முதலிய குமிசல் காரர், தமிழ் பிரபுக்கள், பல்லக்குக்காரர், குதிரைக்காரர் முதலாகிய பேர் எல்லோரையும் கோட்டத்திலேயிறங்கி யிருக்கிற நாசற்சங்கு மனுஷரண்டைக்கு அனுப்புவித்தார் கள். அதன்பேரிலே நான் கூடப்போய் அந்த வெகுமானத்தை யும் பர்வானாவையும் எடுப்பித்துக்கொண்டு வந்து கூடாரத் திலேயிறங்கியிருக்கிற துரையவர்கள் முன்னே விட்டோம். அவர்களைக் கண்டமாத்திரத்திலே துரையவர்கள் எழுந்திருந்து பத்தடி நடந்து வந்து அந்த வெகுமானத்தை வாங்கிக்கொண் டார்கள், வெகுமானத்தைக் கையிலே வாங்கினவுடனே கொத்தளத்தின்பேரிலே பதினைந்து பீரங்கிப் போட்டார்கள். அந்தமட்டிலே அந்த சிரொப்பாவை வாங்கி துரையவர்கள் பல்லக்கின்பேரிலே வைத்துக்கொண்டு துரையவர்கள் ஆறு குதிரைகள் கட்டியிருக்கிற வண்டியின்பேரிலேறிக்கொண்டு மற்றப்பேரெல்லாரும் அவரவரேறிக்கொண்டு வந்த வாகனத் தின்பேரிலேறிக்கொண்டு இவ்விடத்திலேயிருந்து போன சம் பிரமத்துடனே பின்னையும் வேடிக்கையாகத்தானே புறப்பட்டு வழுதாவூர் கெவுனிவிட்டுப் புறப்பட்டுக் கடைத்தெருவு வழியாய் வந்து நம்முடைய மாளிகைக்கு நேராய்த் தெற்கே திரும்பி முத்தியப்பிள்ளை வீட்டுத் தெருவே புறப்பட்டுக் கிழக்கு உருக கோக்கிச் சின்னதுரை வீட்டுக்குச் செம்மை யாய் வந்து துரையவர்கள் வீட்டுக்கு வடவண்டை

வாசற்படியிலே உள்ளே போனார்கள். துரையவர்கள் வீட்டுக்குள்ளே நுழைந்தவுடனே இருபத்தொரு பீரங்கிப் போட்டார்கள். அதன்பேரிலே கூடவந்த நாசற்சங்கு மனுஷரிரண்டுபேரையும் உட்காரச்சொல்லி உத்தாரங்கொடுத்துச் சற்றுநேரம் மட்டுக்கும் பேசிக்கொண்டு பாக்கு வெற்றிலை பன்னீர் கொடுத்து அவர்களை விடுதிக்குப் போகச்சொல்லி உத்தாரங்கொடுத்து அவர்களை யனுப்புவித்துக்கொண்டு விடுதிக்குப் போனார்கள். அதன் பிற்பாடு பதினொரு மணிக்கு முசியே துலாராம் வந்து நானிறங்கியிருக்கிற பாக்குக் கிடங்குக்கு வந்து தெருவிலே நின்று அழைத்தனுப்பினார். அதன் பேரிலே நான் வெளியே புறப்பட்டுச் சலாம்பண்ணினேன். அதன்பேரிலே அவரென்னைக் கிட்டே யழைத்துச் சொன்ன வயன மென்னவென்றால்: இப்போது நாசற்சங்கு வெகுமானம் வந்தது மெய்தானாவென்று கேட்டார். மெய்தானென்று சொன்னேன். ஆனால் துலுக்கருடைய மாமூலா? இனிமேலைக்கு நடக்கிற சமாசாரம் அந்நேரத்துக்கந்நேரம் நீ என்னுடைய வீட்டுக்கு வந்து சொல்லவேணுமென்று சொன்னார். அதன் பேரிலே நான் யோசனைபண்ணி இவனுடனே நாம் ஏதாகிலும் சொன்னோமேயானால் இவன் நாக்கு நீண்டவன். அப்போதே ஒருத்தனுடனே சொல்லுவான். அது துரையவர்கள் காதிலே விழுந்துதானால் நன்றாயிராது. அல்லவென்றும் மாமமான வார்த்தைகளை மறைத்து லோகாபிராமமாய் பயிரங்கமாயிருக்கிற பேச்சை மாத்திரம் சொல்லுவோமென்று பார்த்தாலும் அதற்கும் அவன் வாய் சும்மாயிருக்கிறதில்லை. ஆனபடியினாலே, ஒருபேச்சும் இவனுடனே சொல்லுகிறதில்லை. இதுவுத்தமமாயிருக்கிறதென்று யோசனைபண்ணி மனதிலேவைத்துக்கொண்டு, நல்லதென்று சொல்லிவிட்டு வந்துவிட்டேன். அவரும் வீட்டுக்குப் போய்விட்டார்.

இற்றைநாள் நடந்த அதிசயமென்னவென்றால்: அந்தப் பக்கத்திலே எழுதியிருக்கிற நாசற்சங்கு வெகுமானமிப்போது வந்தது எதனாலேயென்றால், நிசாம் அண்டையிலே இமாம் சாயபு இருக்கிறபடியினாலே அவர் அறிக்கைபண்ணி நாசற்சங்கு காகிதம் வாங்கி ஆற்காட்டிலே யிருக்கிற அவர் குமாஸ்தாவாகிய அவாயிசாயபு அண்டைக்கு அனுப்புவித்தார் அவ்விடத்திலேயிருந்து அவர் மனுஷன் அவாயிசாயபு பிறகே

நாசற்சங்கு மனுஷரும் வெகுமானமும் பர்வானுவும் வந்தது. அந்த பர்வானுவிலே எழுதியிருந்தது என்னவென்றால்: ஆனு விந்த விசை வந்த வெகுமானத்துக்கு எதிர்கொண்டு போகச்சே நூதனமாய் அதிசயமாய் நடந்ததென்னவென்றால்: வெள்ளைக் கொடை, வெள்ளை சாமரம், மயில்கொத்து சுவுரி, புல்லாங் குழல் நாகசுரமேளம் இதுகள் அதனமாய் நடந்தது.

இற்றைநாள் றகோசி போசுரு வண்டையிலேயிருந்து ஸ்ரீ துரையவர்கள் பேருக்கு ஒரு கடுதாசியும் நம்முடைய பேருக்கு ஒரு கடுதாசியும் எழுதிவந்தது. அந்தக் கடுதாசி சந்தாசாயபு வீட்டிலே பணம் தண்ட வந்திருக்கிற ஜெயராம் பண்டிதர் கொண்டுவந்து நம்முடைய கடுதாசியைக் கொடுத்தார். அதைப் பார்த்துக்கொண்டு பிற்பாடு அவரை அழைப்பித்துக்கொண்டு போய் துரையவர்கள் பேட்டிபண்ணுவித்தோம். அப்போது ஜெயராம் பண்டிதர் ஐந்து வராகன் நசர்வைத்து பேட்டிபண்ணிக்கொண்டு அவர் கொண்டுவந்த காகிதத்தையும் கொடுத்தார். அதைத் துரையவர்கள் வாங்கி என் கையிலே கொடுத்து அதிலே எழுதியிருந்த வயணம் என்னவென்றால்:

இற்றைநாள் சாயங்காலம் மகம்மதாக்கலுக்கு உசேன் சாயபு காகிதமும் ஷெ குமாரன் காகிதமும் வந்தது. அதிலெழுதியிருந்த வயணம்: புதுச்சேரி குவர்னதோர் அகிபால் கொடுக்கிறது தாமாய்ச் சொல்லுகிறதில்லை. நம்மை எழுதியனுப்பச் சொல்லுகிறேன் என்று எழுதினீரே, அவர்கள் கொட்டிதரப் படியாய்ச் சென்னப்பட்டணம் மயிலாப்பூரிலே கொள்ளையிட்டு எடுத்துக்கொண்டார்களென்றும், அதிலே பாதிகொடுக்கிறது நியாயமென்றும், இல்லாவிட்டால் பத்து லட்சம் ரூபாய் மட்டுக்கும் கொடுத்தால் சம்மதியென்றாலும் அல்லவென்றால் எட்டு லட்சம் ஏழுலட்சம் கடைசி ஐந்துலக்ஷம் ரூபாய் கொடுத்தால் சம்மதியென்றும், அப்பால் குவர்னதோர் மனசு எப்படியோ அப்படி சற்றேறக்குறைய தீர்த்து எழுதியனுப்பினால் மாபூசுகான் பவுஞ்சும் மமுதல்லிகானையும் வந்துவிடச் சொல்லி எழுதியனுப்புகிறோமென்றும் இது சீக்கிரமதுக்குக் கடுதாசியெழுதியனுப்பச் சொல்லியும், அப்பால் தாங்கள் குருக்கள் தஸ்தகிரிசாயபு தட்டு முட்டுக் கொடுக்கச் சொல்லியும், அமிசபாகத்தின்

பேரிலே மாபூசுகான் குதிரைக்காரர் கபாடக்காரர் வராமல் படிக்குத் தாக்கீது நபாபு கையிலே வாங்கி அனுப்பினேரு மென்றும் எழுதிவந்தது.

இதல்லாமல், இன்றையதினம் துறையிலேயிருந்த கப்பல் முன்னே சென்னபட்டணத்திலே அந்தத் துறையில் பெருங் காற்றிலே அடிபட்டுக் கம்பங்கள் முறிந்து வந்திருந்த கப்பல் இவ்விடத்திலே முஸ்தீதுபண்ணின கப்பல் 2, சேன் லூய் என் கிற கப்பல் 1 ஆக மூன்று கப்பலும். இதல்லாமலும் அச்சை யிலேயிருந்து ஓடிவந்த தொடுதலேன் கப்பல் 2. ஆக ஐந்து கப்பலுஞ் சண்டைமுஸ்தீதுபண்ணி அதற்கடுத்த சாமான்கள் குண்டு மருந்துகள். பீரங்கி, றஸ்து சகல சண்டைமுஸ்தீதும் நிறபாரமாய் ஏற்றி அஞ்சாங்கல் தலைச்சேரி மலையாளம் அந்த வட்டத்திலே இங்கிலீசுக்காரர் கப்பல்கள் வந்திருக்கிற கபுறி னால் சண்டைக்குப் போய் அந்தக் கப்பலைப் பிடிக்கத்தக்கதாக வும், அஞ்சாங் தலைச்சேரி பிடிக்கவும் பயணம்பண்ணி அவ் விடத்திலே ஆறுயிரம் பேர் அங்கடியார் மற்றது வருகிறே யென்றும், அவர்களைக் கூட அழைத்துக்கொண்டு போகச் சொல்லியும் ராசாபேருக்கு கடுதாசியெழுதி அங்கடியாரை மற்றது கூட்டச்சொல்லியும் எழுதிக் கொடுத்து இந்தக் கப்ப லிலே கொடுத்து இந்த ஐந்து கப்பலு மிற்றைநாள் சூரிய உதயமாக ஒரு சாமம் பத்து நாழிகை என்றச்சே பாயெடுத்து ஓடிப்போச்சுது. இதல்லாமலிவ்விடத்திலே யிருந்த சுலுப்பு 1 மசுக்கரைக்குப் பயணமாய் இந்தக் கப்பலின் பின்னேடே பாயெடுத்து ஓடிப்போச்சுது. இந்தச் சுலுப்பிலே முசியே லேதெ வில்பாது ஏறிப்போனர்.

1747 ஆ பிப்ரவரி மீ 9 உக்கு அக்ஷய ௵ மாசி மூ 1 உ வியாழக்கிழமை

இற்றைநாள் காலத்தாலே உசேன் சாயபு தங்கள் பெரிய தகப்பன் மியா சாயபு தட்டுமுட்டு தானியமும், இரண்டு வீடும், இரண்டு தோட்டமுமிருக்குதென்றும், அந்த தானியம் விற்று எடுத்துக்கொள்ளுகிறதற்கும் வீடும் தோட்டமும் வழிபோகாமல்படிக்குச் சென்னப்பட்டணம் கோமாந்தான் பேருக்குக் காகிதம் அனுப்புவிக்கவேணுமென்றும், இது

துரைக்குத் தெரியப்படச்சொல்லி உத்தாரம் வாங்கியனுப்பு விக்கச்சொல்லி எனக்கு இமாம் சாயபு காகிதமும் வந்தது. இது சேதி துரையவர்களுக்குஞ் சொன்னேன். நல்லது அப்படியே உத்தாரம் அனுப்புவோமென்று சொன்னார். இங்கிலீசு சொல்தாதுகளெல்லாம் ஒரு பெத்திஸியோம் எழுதினதை அந்த மத்தலப்படியே துரையவர்களுடனே சொன்னதற்கு நகைத்து மேஸ்தர் மாசு முதலானவர்களை அனுப்பவேண்டிய ஞியாயப்படிக்கு வார்த்தைப்பாடு வாங்கிக்கொண்டு அனுப்புவித்தோம். இவர்களை அப்படி விடக்கூடாதென்று சொன்னார். அப்பால் திரும்பியும் பார்ப்போமென்று சொன்னார். அப்பால் துரை இருந்துகொண்டு சமேதாரன் அப்துலாயிமான் பேரிலே சந்தேகமாயிருக்குது. தண்டிலேயிருக்கிறவர்களுக்கும் இவனுக்கும் உளவு நடக்கிறாப்போலே இருக்குதென்று சொன்னார்.

முன்னொருதரம் நடந்தது. அப்பால் அது நின்றுப்போச்சுதென்றும் உமக்குக் கபுறு சொன்னேனே இதன் பிற்பாடு காணோமென்று சொன்னேன். அதற்கு இரண்டு பேரைக் கூட்டி, கெட்டிக்காரராய்ப் போட்டுவைத்துக் கபுறு அப்போதைக்கப்போது தெரிந்துக்கொள். இதல்லாமல் வெள்ளைக்காரர் தெருவிலேயும் சிறிதுபேரைப் போட்டுக் கபுறு தெரிந்துக்கொள் என்று சொன்னார். முன்னமேதானே மனுஷரை வைத்திருக்குதென்று சொன்னேன். நன்றாய் விசாரித்துக்கொள்ளென்று சொன்னார்.

அப்பால் பகலைக்குமேலே மாயே டபால்வந்தது. ஆறாயிரம் ஆங்கிலேயர் வந்து தலைச்சேரியின்பேரிலே சுற்றிக்கொண்டதாகவும் மூன்று கப்பலிருக்குதாம். அதையும் சுற்றிக்கொண்டாப்போலேயுட இப்படி சேதிவந்தது. இன்னங்கபுறு நன்றாய் விசாரிக்கவேணுமென்றும் டபால் பனிரெண்டு நாளையிலே வந்தது. அவசரமாய்ப் போகத்தக்கதாகச் சொன்னார்களென்று வந்த அய்யமார்கள் சொன்னார்கள்.

1747 ஆ பிப்ரவரி மீ 10 உக்கு அக்ஷய ஞு மாசி மீ 2 உ வெள்ளிக்கிழமை

இற்றைநாள் நடந்த சேதி, நேற்று ராத்திரி நடந்த சேதி ராத்திரி பதினொரு மணிக்கு அசறத்து மாபூசுகான் அவர்களண்டையிலேயிருந்து கடுதாசி வந்தது.

1747 ஆ பிப்ரவரி மீ 11 உ க்ஷய அக்ஷய ஸூ மாசி 3 உ சனிக்கிழமை

இற்றைநாளிப்படி பட்டணத்திலே நடந்த அதிசயம் என்னவென்றால்: முன்னாலே பழவேற்காட்டிலேயிருந்து ஓடி வந்த ஒலாந்தாக்காரன் சுலுப்பு, பிளான்ஷி என்கிற பேருடைய சுலுப்பிலே வந்த தானியத்தையெல்லாமிறக்கி அளவு பிடித்து, ஊரிலேயிருக்கிற விலைக்குக் கிரயம் வைத்து, அந்தக் கிரயம் உண்டான வராகனுக்கு ஏற்றுமதியாயிருக்குது. அதன் செலவு தள்ளி ரொக்கம் சுலுப்பு கப்பித்தான் பத்திரம் என்கிற சிரங்க ரகுநாயுகுலுவும் புதுச்சேரி எட்டு மாற்று வராகன் அதுவுபார்த்துத் தொளாயிரத்தி முப்பத்தைந்தும், பணம் இருபத்திரண்டும், காசு இருபத்தைந்தும் கொடுத்தார்கள்,

இற்றைநாள் இந்தப் பட்டணத்திலே நடந்த அதிசயம் என்னவென்றால்: ஸ்ரீ துரையவர்கள் நம்மையழைப்பித்து, நீ போயிப்படி உசேன் சாயபு அவர்கள் மனுஷன் மகம்மதாக்கலண்டைக்குப் போய், முன்னாலே நீ சொன்னதென்னவென்றால்: உங்கள் பவுஞ்சு அரியாங்குப்பத்திலே தாளையமிருக்கிற ராணுவத்தை அழைப்பித்தீர்களானால் துலுக்கருடைய பாளையமும் வாங்கிப் போய்விடுவார்களென்று சொன்னீர்களே, அந்தப்படிக்கு நம்முடைய பவுஞ்சை அழைப்பித்துக்கொண்டிருக்க, இப்போது அவர்கள் பாளையம் கதலுகிறது. துலுக்கர் குதிரைகள் இருநூறு குதிரைக்காரர் புறப்பட்டு அழிசபாக்கம் திருக்காஞ்சி இந்தமட்டும் வந்து ரூட்டிபண்ணிக் காரியமென்னவிருக்குது? ஆனபடியினாலே இனிமேல் எங்கள் பவுஞ்சு புறப்பட்டுவிட்டால் என்ன நடக்குமோ தெரியாதென்று அதற்கு எப்படி சொல்லவேணுமோ அப்படிச் சொல்லச் சொல்லி உத்தாரங் கொடுத்தார். அந்தப்படிக்கு நான் போய் மகம்மதாக்கலுடனே சொன்னதற்கு, எட்டு நாளைக்கு முன்பாக ஆற்காட்டிலேயிருந்து உசேன் சாயபு அவர்கள் கடுதாசி நமக்கு வந்ததிலே எழுதிவந்த வயணமென்னவென்றால்: மாபூசுகான் மமுதல்லிகான் அவர்கள் நபாபு அன்வருதிகான் சாயபு அவர்கள் தாக்கீது எழுதியனுப்பி இருக்கிறார்கள். இனிமேல் அப்படி நடவாதென்று. ஆனால், கபாட்காரர் ஆரென்ன நடப்பித்தார்களோ தெரியாது. எசமான்கள் அறிந்து நடந்த காரி

யங்களல்லவென்று சொல்லி என் பிறகே கூடப் புறப்பட்டு மகம்மதாக்கல், துரையவர்கள் வீட்டுக்கு வந்து துரையவர்களுடனேயும் மேலே எழுதியிருக்கிறபடிக்கு நம்முடனே சொன்னபடிக்குச் சொல்லி இனிமேலப்படி நடவாது; மாபூசுகான் மமுதல்லிகான் அவர்களுக்கு நானெழுதியனுப்புவிக்கிறேன் என்று சொன்னான். அப்படியவர்களதிலேயிருந்தாலாச்சுது, இல்லாவிட்டால் உங்கள் சீர்மையிலே எங்கள் பவுஞ்சு புறப்பட்டுவந்தால் அப்புறமென்ன நடக்குமோ! தெரியாதென்று சொன்னார்கள். அப்படி யொருக்காலும் வரத்தகத்தில்லையென்று சொல்லி அனுப்புவித்துக்கொண்டு அவர் விடுதிக்குப் போய்விட்டார்.

*1747* ஆ பிப்ரவரி மீ *13* உ க்கு அக்ஷய ௵ மாசி மீ 5 உ சோமவாரம்

இற்றைநாள் காலத்தாலே வந்த சமாசாரம் என்னவென்றால்: பறங்கிப்பேட்டை அமுல்தாரன் ஷேக்கு ஆமேது என்கிறவனும், பறங்கிப்பேட்டை ஆண்டியப்பமுதலி அண்டையிலே முன் கணக்கனுப்பியிருந்த வேலாயுதப்பிள்ளையும் இவவிடத்துக்குத் துரை மூசியே துய்ப்ளேய்சு அவர்கள்பேருக்கு அலாய்தாய் காகிதமொன்றெழுதி நம்முடைய கும்பினீர் சேவகர் கையிலே கொடுத்து வாக்கூர் வழியாய் அனுப்புவித்ததாகவும், அதை இங்கிலீசுக்காரர் மனுஷர் பிடித்துக்கொண்டுபோய் தேவனாம்பட்டணம் குவர்னதோர் முன்னே விட்டவிடத்திலே அவர் தம்முடைய துபாசி ரங்கப்பநாயக்கனைக் கூட்டிக் காகிதங்களையுங் கொடுத்து மாபூசுகானண்டைக்கு அனுப்பினவிடத்திலே, மாபூசுகான் பாரீசு காகிதங்களைப் படித்துப் பார்த்தவுடனே அவருக்குக் கோபம் வந்து, பறங்கிப்பேட்டைக்குப் போகத்தக்கதாகப் பாதிரிகுப்பத்தண்டையிலே போகிற வேலாயுதப்பிள்ளையை மனுஷரை அனுப்பிப் பிடித்துக்கொண்டு போய் தேவனாம்பட்டணம் கோட்டையிலே போடச்சொல்லியும், சேக்கு ஆமதைப் பிடித்துப் பத்து பேர் குதிரைக்காரர் வசம் பண்ணியும், வேலாயுதப்பிள்ளையைப் பிடிக்கப் போனவர்கள் அடித்த அடி கணக்கு வழக்கு இல்லை. அடியிலே காதறுந்து போச்சுது என்றும், களைத்தால் ரத்தம் ரத்தமாய்த் தக்குகிறான் என்றும், பிழைக்கமாட்டான் செத்துப்போவான்

என்றும், அவனைக் காலிலே விலங்குபோட்டுக் கோட்டையிலே போட்டார்கள் என்றும், காகிதத்திலெழுதின வயணம்: தேவனும்பட்டணத்துக் கோட்டையிலே பலன் இல்லை என்றும், துலுக்கர் தண்டிலேயிருந்த குதிரையெல்லாம் வெகுவாய்ப் போச்சுதென்றும் இப்போதிருக்கிற பவுஞ்சு கொஞ்சமிதை உங்கள் புதுச்சேரிக்குச் சமீபமாகிய வில்லிய நல்லூர் வழியிலே கொண்டுவந்து இறங்கப்பண்ணுகிறோ மென்றும் உங்கள் பவுஞ்சு புறப்பட்டு வந்து அடித்தால் அந்த மட்டுக்கும் ஆற்காடு போகத்தக்கதாக யோசனை சொல்லிக் கொண்டு போகிறோமென்று மிப்படியாகக் காகிதத்திலே எழுதியிருந்ததாக அவ்விடத்திலே யிருந்தவர்கள் எழுதியனுப் பினார்கள். அந்தச் சேதியைத் துரைக்குச் சொன்னேன். துரை அப்போது நம்முடைய பொருட்டா இப்படி வரலாமா என்று தாவந்தப்பட்டார்.

*1747* ஆ. பிப்ரவரி மீ *14* உ க்கு அக்ஷய ஸு மாசி மீ *6* உ மங்களவாரம்

இற்றைநாள் அதிசயமென்னவென்றால்: நேற்றையதினம் வெள்ளைக்காரருக்குக் கரணவால் பண்டிகையானபடியினாலே துரையவர்கள் ராத்திரி வெகுநேரம் விழித்துக்கொண்டிருந்த படியினாலே இன்றையதினம் பதினொருமணி மட்டுக்கும் எழுப்பவேண்டாமென்று சொல்லிப்படுத்துக்கொண்டு நித் திரைக்குப் போனார்கள். அப்படியிருக்கச்சே. ஒழுகரையிலே யிருந்து சேதிவந்ததென்னவென்றால் கொண்டூர் தோப்பிலே யிறங்கியிருந்த மாபூசுகானுடைய குதிரைகளிலே நானூறு குதிரையும், இருநூறு இருநூற்றைம்பது சஞ்சால் துப்பாக்கி யும், இருநூற்றைம்பது பேர் கத்திகேடயக்காரரு மாக. அரியாங்குப்பத்துக்குச் சமீபமாக வந்ததாகவும். அரி யாங்குப்பம் கொத்தளத்தின் பேரிலே தாணையமிருந்த வெள் ளைக்காரர், நாற்பத்தேழு பேர் வெள்ளைக்காரர் வெளியே புறப் பட்டுக் குதிரைக்காரரைத் துரத்திச் சுட்டார்கள். அதிலே ஒரு குதிரை விழுந்தது. அந்தமட்டிலே குதிரைக்காரர் புறப் பட்டோடிப்போனார்களாம். அதன்பேரிலே வெள்ளைக்காரர் மறுபடியும் அரியாங்குப்பத்துக்கு வந்துவிட்டார்களாம். ஓடிப்போன குதிரைக்காரர் கிளிஞ்சிகுப்பத்தின் பேரிலே

விழுந்து ரெட்டிகள் வீட்டுக் குடியானவர்கள் வீட்டிலே புகுந்து புடவை, சீலை, தட்டுமுட்டுகள், சமஸ்தமுங் கொள்ளையிட்டுக்கொண்டு திருக்காஞ்சி கோவிலை அடித்துப் பிடித்துக்கொண்டு இதற்கு எசமானாய் வந்திருக்கிற நாசறு கொல்லிகானிருந்துகொண்டு சுவர் போடுவிக்கிறான் என்றும், அதேனென்றால் மாபூசுகானும் மமுதல்லிகானும் அவ்விடத்துக்கு வந்திறங்கியிருக்கவேணுமென்றும் வருகிறதாகச் சொல்லுகிறார்களென்றும் சேதி வந்தது. பத்து மணி நேரமுண்டு சேதி வரச்சே. அந்நேரமே துரை வீட்டுக்குப் போய்க், கபுறுசொல்ல வேணுமென்று போனவிடத்திலே துரையவர்கள் தூங்கினபடியினாலே அவரெழுந்திருக்கிற மட்டுக்கும் காத்திருந்து எழுந்தவுடனே இந்த வயணமெல்லாஞ் சொன்னோம். அதன்பேரிலே முன்னூறு பேர் சொல்தாதுகளையும் பயணம் பண்ணி, மூசேலந்தூரையும் அவர்களுக்கு எசமானாகப்பண்ணி ஒழுகரைக்கு அனுப்புவித்தார்கள். அவர்களவ்விடத்திலேயிருந்து மூன்று மணிக்குப் பயணப்பட்டுச் சண்டை முஸ்திதுடனே ஒழுகரைக்குப் போய்த் தாளையமிறங்கினார்கள். இதல்லாமல் அரியாங்குப்பத்திற்குப் போய்த் தாளையமிருக்கத்தக்கதாக இவ்விடத்திலேயிருந்து வெள்ளைக்காரர்... ... ...மாயே சிப்பாய்கள் முன்னிருந்த பேர்... ... ...இப்போது இவ்விடத்திலே பயணம் பண்ணி இதுகளையும் முசியே துப்பி (M. Goupie) என்கிறவனை எசமானாகப்பண்ணி அரியாங்குப்பத்துக்கு அனுப்புவித்தார்கள். அதன்பேரிலே உசேன் சாயபு அவர்களுடைய ஸ்தானாபதியாய் வந்திருக்கிற மகம்மதாக்கலென்கிறவரை அழைப்பித்து அவரைப் போய் இப்போது திருக்காஞ்சி ஆற்றண்டையிலேயிறங்கியிருக்கிற குதிரைகளுக்கு எசமானாய் வந்திருக்கிற நாசறுகொல்லிகான் அண்டைக்குப் போய்க் கண்டு பேசி, நீங்களென்ன சண்டைக்கு வந்தீர்களா அல்லவென்று ஆற்காட்டுக்குப் பயணம் போகிற நிமித்தியம் ஏதாகிலும் தண்டு கதலி பாளையம் கூச்சுபண்ணிப்பார்த்து இது வழியாய் வந்தீர்களா அல்லவென்று அவர்களுடைய அபிப்பிராயம் என்னமாயிருக்குதென்று உசாவிப்பேசி தெரிந்துகொண்டு வரச் சொல்லி மகம்மதாக்கலைப் பயணம்பண்ணினார்கள். அதன் பேரிலே துரையவர்கள் தானேயிருந்துகொண்டு இன்றைய தினமே எங்களுக்குக் கர்ணவாலி பண்டிகையானபடியினாலே இன்றைய ராத்திரிக்கு வெள்ளைக்காரர் வேஷம் போட்டுக்

கொண்டு கூத்தாடுவார்கள். அந்த வேடிக்கையெல்லாம் ராத்திரிக்கு இருந்து பார்த்துவிட்டுக் காலமே போமென்று சொன்னார்கள். அப்படியே போய்த் தெரிந்துகொண்டு வருகிறோமென்று சொல்லி அனுப்புவித்துக்கொண்டு அவர் நம்முடைய பாக்குக் கிடங்குக்கு வந்திருக்கும்போது ஏழு மணி வேளைக்குத் துரை என்னையும் மகம்மதாக்கலையும் அழைப்பித்துச் சங்கீதம் பாடுகிறதையும் வெள்ளைக்காரர் துரோம்பேத் (Trumpet) முதலான சின்னங்கள் நகரா அடிக்கிறதும், அந்தச் சங்கீதத்துக்கு இந்த வாத்தியங்களெல்லாம் சரியாய் முழக்கத்தாயிருக்கப் பாடுகிற பாட்டைக் கேட்கச்சொல்லி அழைப்பித்துப் பார்க்கச் சொன்னார். அந்தப்படிக்கு எட்டரை மணி மட்டுக்கும் சங்கீதம் கேட்டுக்கொண்டிருந்துவிட்டு அப்பால் மகம்மதாக்கல் அனுப்புவித்துக்கொண்டு போகச்சே வழியிலே வாசற்படியிலே வெள்ளைக்காரர் தடையில்லாமல் விட்டுவிடுகிறதற்கும் மறுபடி உள்ளே வருகிறதற்கும் தடை பண்ணாமல் சீட்டு எழுதிக்கொடுத்துக் காலத்தாலே போகச் சொன்னார். அவனுமனுப்புவித்துக்கொண்டு விடுதிக்குப் போனான். நானும் பாக்குக்கிடங்குக்கு வந்தேன். அப்பால் மகம்மதாக்கல் போனால் என்ன பழி வருமோவென்று போகிறதற்கு வெகு யோசனை பண்ணினான் அதன்பேரிலே நான் தெரியப்படச்சொல்லி, பயணம் சாகிப்போகச்சொல்லி அனுப்புவித்தேன். இதல்லாமல் உசேன் சாயபு காகிதம் ஆற்காட்டிலேயிருந்து மகம்மதாக்கல் பேருக்கு வந்தது. அதிலெழுதியிருந்த வயணம்: நாகோசி பண்டிதன் வந்து சொன்ன முக வார்த்தையும் கேள்விப்பட்டோம். உம்முடைய காகிதமும் பார்த்தோம். புதுச்சேரி குவர்னதோர் நாற்பதினாயிரம் ரூபா வெகுமானம் கொடுக்கிறோமென்கிறார். அதற்கு அதனம் வருகிறப்போலே யிருக்கவில்லையென்றும், தேவனாம்பட்டணங் கோட்டை வழிபோகத் தேவையில்லையென்றும், எழுதினதற்கு மறு உத்தரவு எழுதத் தேவையில்லையென்றும் ஐந்து லட்சம் ரூபாய்க் கொடுத்துத் தேவனாம்பட்டணம் கோட்டை வழி போகிறதில்லையென்றெழுதினால் அந்தப்படிக்குப் பத்திரம் பண்ணிக்கொண்டு எழுதியனுப்பச்சொல்லியும், இல்லாவிட்டால் அவர்கள் சம்மதியில்லாமல் முப்பதினாயிரம் நாற்பதினாயிரம் ரூபாயென்றுதானே சொன்னால் புறப்பட்டு வந்துவிடச் சொல்லியுமிப்படியாக எழுதி வந்ததென்றும் வந்து சொன்னார்.

சொல்லிவந்த காகிதத்தை என் கையிலே கொடுத்தானிந்தச் சேதி குவர்னதோருடனே சொன்னேன், அதற்கவர் நல்லது எல்லாவற்றிற்கும் நாளைக்கு யோசனை பண்ணிக்கொள்ளுவோமென்று சொன்னார்.

கோபாலகிருஷ்ணய்யர் மாசி மீ முதல் தேதி (9 உ பிப்ரவரி மீ 1747) எழுதின காகிதத்திலே முத்தியப்பிள்ளையவர்களண்டையிலேயிருந்த கணக்கப்பிள்ளைகள் மூன்று பேரை பிரத்திக்குப் பிரத்தியேகமாய் காவல் வைத்ததாகவும், முத்தியப்பிள்ளை பெரிய மனுஷன் அவன் வழி போகப்போகாதென்று முசியே தெப்பிரமேனி, முசியே பிரியேலுக்குச் சொன்னதாகவும் கந்தப்பன் ஓடிப்போனானே அவன் வீடு சோதிக்கப் போகிறார்களென்று மிப்படியாக எழுதிவந்த காகிதம் வந்தது.

*1747* ஆ பிப்ரவரி மீ *15* உக்கு அக்ஷய ஹு மாசி *7* உ புதன்கிழமை.

இற்றைநாள் காலத்தாலே தண்டிலேயிருந்தும், அரியாங்குப்பத்திலேயிருந்தும், ஒழுகரையிலேயிருந்தும் சேதி வந்ததென்னவென்றால்: இன்றைய தினம் காலையிலே மறுபடியும் நேற்று வந்ததல்லாமல் இன்றையதினம் ஆயிரம் குதிரை வந்து திருக்காஞ்சி ஆற்றிலேயிறங்கியிருக்கிற தண்டுடனே கூடச் சேர்ந்தார்களென்றும், மாபூசுகானும் மமுதல்லிகானும் பாளையம் கதலி வாக்கூரண்டையிலே வந்திறங்கியிருக்கிறார்களென்றும், பாளயத்துக்குள்ளேயிருக்கப்பட்ட குதிரைக்காரர் சிறிதுபேர் புறப்பட்டு அழிசபாக்கத்தைக் கொளுத்திக் கொள்ளையிட்டும், கொம்மையபாக்கம் கிளிஞ்சிகுப்பமிதுகளெல்லாம் தாம்தூம் பண்ணுகிறார்களென்றும், அடிக்கடியிவ்விடத்துக்குச் சேதி வந்துகொண்டேயிருக்குது. அழிசபாக்கத்துக்கடுத்த கிராமங்களாயிருக்கப்பட்ட தெருவாநத்தம், திம்மப்பநாயக்கன்பாளையம், பூரணாங்குப்பம், பின்னையும் சுற்றுப்பட்டிலேயிருக்கப்பட்ட கிராமங்களெல்லாம் தாம்தூம் பண்ணிச் சேதப்படுத்துகிறார்களென்கிற சேதி வந்துகொண்டேயிருக்கிறது.

இற்றைநாள் காலமே சூரிய உதயத்துக்கு முன்னே மகம்மதாக்கல் இவ்விடத்திலேயிருந்து புறப்பட்டுத் திருக்காஞ்சி

யிலே வந்திறங்கியிருக்கிற நாசறுகொல்லிகானண்டைக்குப் போய்க் கண்டுபேசி வார்த்தைச்சொல்லி. அவனைக்கொண்டு அழிசபாக்கம், கிளிஞ்சிகுப்பம் இந்த வட்டாரங்களுக்குப் போய்க்கொள்ளையிட்டு ஊரைக்கொளுத்துகிறவர்களை அழைத்துவரச்சொல்லி அறக்காறரர்களையும் குதிரை சுவார்களையும் அனுப்பிவிட்டு அப்பாலே வாக்கூரிலேயிறங்கியிருக்கிற மாபூசுகான் அண்டைக்கு மகம்மதாக்கல் புறப்பட்டுப்போகச்சே நபாபு மமுதல்லிகான் வந்தானும். அவனுக்கு ஐந்து ரூபாய் நசர் வைத்தவிடத்திலே அவர் கட்டிக்கொண்டு நீ எப்போது வந்தாய். வந்தகாரியமென்ன? புதுச்சேரி மொகத்துமா பைசலாச்சுதா? என்று கேட்டார். சால்சவாபுகள் நடக்குது இவர்கள் சொல்லுகிறது நாங்கள் கொடுக்கிறது ஙியாயமில்லை. ஆகிலும் பெரியமனுஷர் வந்தால் ஒரு அதியால் கொடுக்கவேணுமே அந்தப்படிக்கு முப்பதினுயிரம் நாற்பதினுயிரம் ரூபாயிலே அதியால் கொடுக்கிறோமென்று சொல்லுகிறார்கள் என்றும், நபாபு உசேன் தயாறுகான் (Nawab-Husain Tahir Khan) சாயபு ஆனால் ஐந்து லட்சம் ரூபாய் பதிலுக்கு எழுதி இந்தப்படிக்குச் சம்மதியானால் தீர்த்துக்கொண்டு தேவனும்பட்டணத்து மேலேயும் சண்டை பண்ணமல் சென்னப்பட்டணத்திலே எட்டுநாளையக் காரியங் கொடிபோட்டுக்கொண்டிருந்து, அப்பாலவர்கள் கேட்கிறாப்போலேயு மிவர்கள் கொடுக்கிறாப்போலேயும் அப்படி செய்கிறதற்குச் சம்மதியானால் எழுதியனுப்பவும், இல்லாவிட்டால் கவையாய் ஆற்காட்டுக்குப் போய்வருகிறோமென்று சொல்லிவிட்டு வந்துவிடச்சொல்லியும் எழுதி வந்ததாகவும், இதற்கு உத்தாரப்பிரதியுத்தாரம்நடக்கிறதற்குமுன்னே உங்கள் பவுஞ்சு வந்து இறங்கித் தாம்தூம் பண்ணினதின் பேரிலே சண்டைபண்ணுகிறதானல் சொல்லி அனுப்புவித்து அந்தப்படிக்கு நடத்தவேணும், சல்லா பேசினல் அந்தப்படி பேசவேணுமேயல்லாமல் ஒரண்டையிலே இப்படி நடத்துகிறதென்னவென்றால்: உங்கள் அபிப்பிராயம் அறிந்துவரச்சொல்லி அனுப்பினர்கள் என்று சொன்னதற்கு, நல்லது நான் சொன்னல் கேட்கவில்லை, கூட வாருமென்று மமுதல்லிகான் மகம்மதாக்கலைக்கூட அப்பாலே வாக்கூரிலேயிருக்கிற மாபூசுகானண்டைக்கு அழைத்துக்கொண்டு போனர்கள். அவ்விடத்திலேயும் ஐந்து ரூபாய் நசர் வைத்துக் கண்டானும். அதன்பேரிலே அவர் சொன்னது: நீ போய்

ஒரு மாதமாச்சுது. மோகத்துமா பைசலாச்சுதாவென்று கேட்டார். மகட்சி உத்தாரம் உசேன் தயார்கான் சாயபு எழுதின காகித வயணமும் இவர்கள் அதற்கு முன் சொன்ன உத்தாரமும் தொகையும் வகையுஞ் சொன்னவிடத்திலே அவர்களப்படி அட்டியாய் வைத்திருப்பானேன்? ஆம் அல்ல வென்று உத்தாரம் சொல்லித் தீர்த்துப்போடாமல் வைத் திருப்பானேனென்று கேட்டாராம். அதற்கு மகம்ம தாக்கல் சொன்னது: உசேன் தயார் கட்சிக் காகித வயணம்: மேலே மமுதல்லிகானுடனே சொன்னபடிக்கு மாபூ சுகானுக்குஞ் சொல்லி இதிலே உங்கள் தண்டு வருகிற தாகவும், தங்கள் கிராமங்களை லூட்டிப்பண்ணக் காரியம் என்னவென்றும் சண்டைக்கு வருகிறதானால் சந்தி பேசாம லிருந்து வரவேணும், அப்போது நாங்களும் சண்டை முஸ்தீப் பாய் புறப்படுவோம். அப்படியில்லை கலாபமும் ஒரு புறத் திலே சண்டையுமா? இப்பவும் உங்களுடைய மனசு என்ன? உங்கள் மனதிலேயிருக்கிற அபிப்பிராயமென்ன? சண்டைக்கு வருகிறதானால் அதையுங் கேட்டுவரச் சொன்னார்கள் என்றும் மகம்மதாக்கல் சொன்னாராம். அதற்கு மாபூசுகான் சொன் னது: இப்போது அவர்கள் சென்னப்பட்டணங் கோட்டை விடுவார்களா, விடமாட்டோம் என்கிறார்களா? அதென்ன வென்று கேட்டாராம். அதற்கிவர் சொன்னது: பிரஞ்சுக்காரர் சொல்லுகிறது என்னவென்றால், நாங்களென்னசெய்வோம், சீர்மையிலேயிருந்து எங்கள் ராசாவினுடைய கட்டளைப்படிக் குக் கப்பலுக்கு எசமானாய் வந்தவர், போய்ச் சண்டை பண்ணிப் பிடித்துக்கொண்டு, அந்தக் கோட்டையை எங்கள் வசம் பண்ணிப்போயிருக்கச்சே இனிமேல் எங்கள் ராசாவினுடைய உத்தாரமில்லாமல் நாங்களாய் விடப்போகாதென்றும் சொல்லுகிறார்களென்றும் சொன்னா ராம். அதற்கு மாபூசுகானிருந்துகொண்டு, அப்படி அவர் களுக்குமிவர்களுக்கும் தண்ணிமேலே சண்டையானால் அந்த மட்டிலேயிருக்கவேணுமேயல்லாமல் சென்னப்பட்டணத்தைப் பிடிக்கக் காரியமென்னவென்று கேட்டாராம். அதற்கு இவர் சொன்னது: பாற்சா மிசான்போட்டு பாற்சாபேருக்கு மணிலா வுக்கு அனுப்பின கப்பலைப் பிடித்துக்கொண்டு போனார்கள். அதல்லாமல் மணிலாக்கப்பல், மோக்காகப்பல், அச்சைக்கப்பல்' இப்படி பலவிதத்திலேயும் இருப்து லட்சம் வராகனுக்குண்டு

அவர்களெடுத்துக்கொண் டிருக்கிறார்கள். அது நிமித்தியமாய் நாங்கள் போய்ச் சண்டைபண்ணி எங்கள் சத்துருவை ஜெயித்துக் கோட்டையைப் பிடித்துக்கொண்டோம் என்றும், இதல்லாமல் முன்னாலே நபாபு அன்வருதிகான் சாயபு அவர்கள் இவ்விடத்துக்கு வந்தபோது நாங்கள் போய் எதிர்கொண்டு அழைத்துக்கொண்டுவந்து வெகு மரியாதைகளெல்லாம் நடப்பித்து இப்படியானால் பாச்சா நிசான் போட்டு அனுப்பின கப்பலை மரியாதை இல்லாமல் பிடித்துக்கொண்டார்கள்.

இதல்லாமல் எங்களுடைய கப்பல்களை அநேகமாய்ப் பிடித்துக்கொண்டிருக்கிறார்களாம் என்றும் சொன்னதற்கு, ஆனால் நீங்கள் சும்மாயிருப்பானேன். உங்களுக்குச் சத்துருவாயிருக்கிறவன்பேரிலே சண்டைக்குப் போகவேணுமென்றால் நாமும் மற்றதாய்க் குதிரை ராணுவம் அனுப்புவிக்கிறோமென்று சொல்லியிருக்க, உங்களுக்கென்னத்துக்குப் பிரயாசமென்கிறதாய் நாங்கள்தானே போய்ச் சண்டைபண்ணிக் கரை துறையிலேயிருக்கிற எங்கள் சத்துருவினுடைய பட்டணத்தை நாங்கள் பிடித்துக்கொண்டோமென்று சொல்லுகிறார்களே, அவர்களுக்குத்தரவு என்னவென்று சொல்லுகிறதென்று சொன்னாராம். நல்லது, அப்படியானால் நம்முடைய பேரிலே மயிலாப்பூரிலே சண்டைக்கு வரக் காரியமென்னவென்று கேட்டாராம். ஆனால், நீங்கள் வந்திறங்கியிருந்த மட்டுக்கும் சும்மாவிராமல் குமபினீர் தோட்டத்தை அத்துப் பிடித்துக்கொண்டு தாளையமிறங்கிப் பட்டணத்தின்பேரிலே சண்டை கொடுக்கப்போகிறோமென்று சண்டை முஸ்தீதாயிருந்துகொண்டு சண்டை கொடுக்க இவ்விடத்திலேயிருந்து சென்னப்பட்டணத்துக்குப் போகிற வெள்ளை ராணுவத்திற்கு வழி மறித்து விலகிப்போகாமல் தடைபண்ணிச் சண்டைக்கு வந்தபடியினாலே அவர்களுந் தன்னைக் கொல்லவந்தப் பசுவைக் கொல்லென்று சொல்லி அவர்களும் அவர்கள் கையிலே ஆனபடிக்குப் பார்த்தார்களென்று சொன்னாராம். நல்லது பிராஞ்சுக்காரருக்கும் இங்கிலீசுக்காரருக்கும் சண்டையானால் சென்னப்பட்டணத்திலேயிருக்கிற வெள்ளைக்காரர் வெளியே புறப்பட்டு எங்கள் தீவானத்தைக் கொளுத்தக் காரியமென்னவென்று கேட்டாராம். நீங்கள் முன்னே யிவ்விடத்துக்கு வந்தவிடத்திலே அவர்கள் கிராமமாகிய அழிசபாக்கத்தை முன்னே

நீங்கள் கொளுத்தினதின்பேரிலே அவர்கள் புறப்பட்டுச் சரிப் போனபடிக்கு நடத்தினுர்கள். அவர்கள் சொல்லுகிறதைக் கேட்கப்போனுல் எல்லா நேரமும் உங்கள் பேரிலே சுமத்தி அவர்கள் நடப்பிக்கிறதெல்லாம் ஙியாயமாய்ச் சொல்லுகிருர்க ளென்றும் மகம்மதாக்கல் சொன்னுராம். அதன்பேரிலே மாபூ சுகானிருந்துகொண்டு இப்பாலவர்கள் என்ன சொல்லுகிருர் கள் என்றும் கேட்டாராம். சென்னப்பட்டணம் கோட்டை யிலே எட்டு நாளைக்கு நம்முடைய கொடி போடவும் இதற்கு மேல் அவர்களுக்கு நாமாய்க் கொடுக்கிருப் போலே கொடுத்துவிடவு மிப்படி நடத்தப்போகாதென்றும் கேட்டா ராம். அப்படிச் சம்மதி பண்ணுவித்தேன். பணப்பேச்சு உடன்படிக்கை ஆகவில்லையென்றும், அவர்கள் சொல்லுகிற தற்கும் இவர்கள் சொல்லுகிறதற்கும் பத்திலே ஒரு பங்கா யிருக்குதென்று மிப்படியாகவிருக்குது கடைசி காகிதத்துக்குச் சால்சவாபு நடக்கிறதற்குள்ளே உங்கள் பவுஞ்சு வந்து தாம் தூம் பண்ணுகிறபடியினுலே சண்டைக்கு ஆசிலாயிருக்கிறும்; சல்லா வுடுத்தத் தயாராயிருக்கிறும். எதுவேணுமென்று கேட்கிருர்களென்று சொன்னுராம். அதற்கவரும் இரண்டுக் கும் ஆசிலாயிருக்கிறுமென்று சொன்னதாகவுமிப்படியாகவா னுல் நான் இருக்கத்தேவையில்லையென்று சொன்னதாகவும், ஆனுல் உன் நிமித்தியம் மறுபடியும் போகிறும். சீக்கிரமத்துக் குத் திர்த்தெழுதி அனுப்பு என்றும் பின்னையும் உபசாரமான வார்த்தைகளுமாய்த் தானுமவனுமாய்ச் சொன்னதாகச் சொன் னுர். அந்தச் சேதியெல்லாம் துரைக்குச் சொன்னேம். பின்னை யும், மகம்மதாக்கல் சொன்ன உத்தாரம் அதற்குத் துரையவர் கள் சொன்ன உத்தாரமிப்படியாகப் பிரதியுத்தாரம் சேனே எல்லாம் நடந்தது. ஆக்கிருக்கு-மாபூசுகானை யிவ்விடத் துக்கு அழைக்கப்போகாதா. அப்படியே யிவ்விடத்துக்கு அவர்களை அழைப்பித்து அது உண்டானுல் பேசவேண்டிய பேச்சுக்க ளென்னவுண்டோ அதுகளெல்லாம் பேசிக்கொண்டு இதல்லா மல் பின்னையும் பேசவேண்டிய பேச்சுகளுமுண்டு. அதுகளெல் லாம் முகதாவிலே பேசிக்கொண்டு அதற்கு மகம்மதாக்கல் சொன்னதென்னவென்ருல்: காகித முகாந்திரத்திலே எழுதி யனுப்பி அழைப்பிக்கப்போகாது. அப்படியானுல், நான் போக வேணுமென்று சொன்னுர். ஆனுல், நீர்தான் போய் அழைப்

பித்துக்கொண்டு வாருமென்று போகச்சொன்னுர்கள். அதன் பேரிலே மகம்மதாக்கலிருந்துகொண்டு நான் காலமே போகிறேன் நான் வருகிற சேதி அவர்களுக்குத் தெரிந்திருக்கத்தக்கதாக எல்லாவற்றிற்கும் நான் காலமே தண்டுக்கு வந்து கண்டு பேசிக்கொள்ள காரியமிருக்குதென்று முன்னே கடுதாசி எழுதியனுப்பவேணுமென்று சொன்னுர். நல்லதென்று அந்நேரமே மாபூசுகான் முதல்விகான் அவர்களுக்கு ஒரு கடுதாசியெழுதி அந்நேரமே கெவுனி திறந்துவிடத்தக்கதாகக் கெவுனிக்கும் ரூக்கா எழுதிக்கொடுத்துத் தண்டுக்குக் கடுதாசி அனுப்பிவிட்டார்கள். அவரும் காலமே தண்டுக்குப் போகத்தக்கதாகப் பயணம் ஆசிலாயிருக்கிருர்கள்.

இற்றைநாள் பங்களாவிலேயிருந்து பிடுதீசுக்காரன் கப்பல் முன் பிராக்கு வருஷமெல்லாம் இவர்களுக்குக் கப்பல் வரக்கூடாமலிருக்கச்சே பங்காளம் மாயேக்கும் மசுக்கரைக்கும் சேதிகள் கொண்டுபோகச் சரக்குகள் ஏற்றிக்கொண்டு வந்துகொடுக்க இப்படி திரிகிற பிடிந்நுங்கால் ராரா (Portugal) பாசு போர்ந்து (Passport.)

*1747* ஆ பிப்ரவரி மா *16* உ பிரு அக்ஷய ஸு மாசி மீ *8* உ வியாழக்கிழமை

இற்றைநாள் அழிசபாக்கத்திலே வீட்டைக்கொளுத்தின பெண்டாரிகள், கபாடக்காரரைப்பிடிக்கவேணுமென்று அரியாங்குப்பத்திலேயிருந்து மூசியே லந்நூசு முப்பது பேர் சொல்தாதுகளும், இருபது பேர் மாயே சிப்பாய்களும் அழிசபாக்கமட்டுக்கும் போனுர்கள். அவ்விடத்திலே போன உடனே இந்த வெள்ளைக்காரரைக் கண்ட மாத்திரத்திலே ஊரைக்கொளுத்தின பெண்டாரிகள், கபாடக்காரர் எல்லாரும் புறப்பட்டு ஓடிப்போனுர்களாம் அதிலே மூன்று பேர் அகப்பட்டு அந்த மூன்று பேரையும் பிடித்துப் பின்கட்டு முறையாய்க் கட்டி இவ்விடத்துக்கு அனுப்புவித்தார்கள். அவர்கள் மூன்றுபேரையும் கொண்டுபோய்த் துரையவர்கள் முன்னே விட்டவிடத்திலே இவர்களாரென்று கேட்டார். இவர்கள்தானய்யா அழிசபாக்கத்திலே வீட்டைக் கொளுத்தினவர்கள் என்று சொன்னுர்கள். அந்த வார்த்தைச் சொன்னவுடனே துரையவர்களுக்குக் கோபம் வந்து அந்த மூன்று பேரையும்

வேப்பமரத்திலே கட்டச்சொல்லி, காப்பிரிகளை விட்டு, ஐம்ப தைம்பதடி அடிக்கச்சொல்லி அந்த அடியின்பேரிலே உப்பும் காடியும் விட்டு மேலே தேய்க்கச்சொல்லி தேய்ப்பித்துக்கோட் டைக் கிடங்கிலே கொண்டுபோய்ப் போடச்சொல்லி உத்தா ரங்களைச் செய்தார், அந்தப்படிக்குக் கொண்டுபோய்க் கோட் டையிலே போட்டார்கள். ஆனல், இவர்களை அடித்தது காப் பிரிகளானபடியினலே அடி நன்ருய்த்தானே உறுதியாய் ரத் தம் ஒழுகத்தக்கதாக அடிபட்டது.

இற்றைநாள் மத்தியானம் இரண்டு மணிக்குமேல் மகம்ம தாக்கல் பயணப்பட்டு மாபூசுகான் மமுதல்லிகான் அவர்களைக் கண்டு பேசி அவர்களை அழைத்துக்கொண்டு வருகிறேனென்று போனர். அவர் பிறகே யிவ்விடத்திலேயிருந்து கும்பினீர் சேவகர் நாலு பேரும் ஸ்தானபதி சுப்பய்யனையும் கூடக் கூட்டி அனுப்புவித்தோம். அவர் போகச்சே, துரையவர்கள் மாபூசுகான் பேருக்கு ஒரு கடுதாசியும் எழுதிக்கொடுத்து மமுதல்லிகான் பேருக்கு ஒரு கடுதாசியும் எழுதிக்கொடுத்து அனுப்பினர்கள். அந்தக் கடுதாசியிலே எழுதின வயணமென்ன வென்ருல்: நீங்களிவ்விடத்துக்கு வந்தவுடன் அது உண்டா னல் முகதாவிலே கண்டு பேசிக்கொண்டால் எந்தப் பேச்சு எப்படி பேசவேணுமோ அந்தப்படிக்குக் கலந்து பேசிக்கொள் ளலாமென்று எழுதி முத்திரை போட்டு மகம்மதாக்கல் கை யிலே கொடுத்து இரண்டு மணிக்குப் பயணம் புறப்பட்டுத் தண்டுக்குப் போனர்.

இற்றைநாள் நடந்தசேதி யென்னவென்ருல்: நேற்றைய தினம் அழிசபாக்கத்திலே வீடுகளைக் கொளுத்திப்போட்டார்க ளென்கிற கபுரு நமக்கு வந்தவுடனே மகம்மதாக்கலை அழைப் பித்து, நீர் போய்ச் சமாதானம் பேசி வந்ததென்ன? பிறகாலே தானே குதிரைக்காரர் புறப்பட்டுக் கிராமங்களைக் கொளுத்து கிறதென்ன நியாயமென்று கேட்டவிடத்திலே அதற்கவர் சொன்னது: எசமான்களை அறிந்து நடந்த காரியமல்ல, ஆனல் நான் எழுதி அனுப்புவிக்கிறேன் என்று சொல்லி நேற்றைய தினம் திருக்காஞ்சியண்டையிலே வந்திறங்கியிருக்கிற நாசறு கொல்லிகானுக்கு ஒரு கடுதாசி எழுதி அனுப்பிவிட்டு மகம்மதாக்கல் புறப்பட்டு இன்றையதினம் தண்டுக்குப் போய்

விட்டதானபடியினலே அந்த கடுதாசிக்குப் பதில் நாசறு கொல்லிகான், மகம்மதாக்கல் பேருக்கு எழுதியனுப்பின கடுதாசி இங்கே வந்து சேர்ந்தது. மகம்மதாக்கலவ்விடத்திலே யில்லாதபடியினலே அந்தக் கடுதாசியைப் பிரித்து நாம் போர்த்தோம் அதிலெழுதியிருந்த வயணம் என்னவென்று கேட்டால் ஊர்களைக் கொளுத்துகிற பெண்டாரிகள் கபாடக்காரர்களை நாமெத்தனையாய் தாக்கிதுபண்ணி கண்டிப்பு பண்ணினலும் நம்முடைய கட்டுக்குள்ளே நிற்கவில்லை. ஆனபடியினலே குவர்னதோர் சாயபு அவர்களுடனே சொல்லி, கிராமங்களிலே வீடுகளைச் சுடுகிற பேரைக் கண்டவிடத்திலே சுட்டுப்போடச் சொல்லுங்கோள் என்று இது உண்மையாய் சத்தியமாய் எழுதியிருந்தது. இதல்லாமல் மாபூசுகானண்டையிலேயிருந்து மகம்மதாக்கல் பேருக்கு ஒரு கடுதாசி வந்தது. அந்தக் கடுதாசியும் பிரித்துப்பார்த்தோம். அதிலே பின்னையொன்றுமில்லை. நீர் வருகிறேமென்றெழுதினீரே எல்லாவற்றிற்கும் சீக்கிரமத்துக்கு வந்து கண்டு பேசிப்போகவும் என்று எழுதியிருந்தது. அந்த இரண்டு கடுதாசியும் மகம்மதாக்கல் இவ்விடத்திலே இல்லாதபடியினலே நாம் பிரித்துப் படித்துப் பார்த்தோம். மறுபடியும் முத்திரைபோட்டு வைத்து இரண்டு கடுதாசி வயணமும் ஷை துரையவர்களுடனே சொன்னேம். அதற்கவர் மூசே பாதியை அழைத்துக் காகிதம் அத்தலப்பை அவருடனே சொல்லச்சொன்னர். அந்தப்படிக்கு அவருடனே சொன்னதற்கு அவர் சொன்னதாவது: நான் குவர்னதோராயிருந்தால் இப்படி ஒருக்காலும் மனம் பொறுக்கிறதில்லை. என் கையை நான்தானே தின்றுகொண்டிருக்கிறேன். எனக்கு உத்தாரங் கொடுத்தால் மூன்னூறு சொல்தாதுகளுடனே போய் மாபூசுகான் தலையையும் மமுதல்லிகான் தலையையும் கொண்டுவருகிறேன். ஆனலினிமேல் பொறுக்கிறது மரியாதையல்லவென்று சொல்லச்சே குவர்னதோர் மூசியே துய்ப்ளேய்க்சு வந்தார். அந்தமட்டுக்குமா யிருவரும் பேசிக்கொண்டாப்போலே போனர்கள். நான் புறப்பட்டுப் பாக்குக்கிடங்குக்கு வந்தேன். அப்பாலென்னை யழைத்துவரச் சொல்லி மகம்மதாக்கல் தண்டுக்குப் போய்ச் சேர்ந்த சேதி வந்ததாவென்று கேட்டார். எப்படி வருமென்று சொன்னேன். நாளையதினம் வருமே, வந்தவுடனே சொல்லென்று சொன்னர். நல்லதென்று வந்துவிட்டேன்.

1747 ஆ பிப்ரவரி மீ 17 உ க்ரு அக்ஷய ஹு மாசி மீ 9 உ சுக்கிரவாரம்.

இற்றைநாள் சமாசாரமென்ன வென்றால்: முன் பறங்கிப் பேட்டை அமுல்தாரன் சேக்கு ஆமேது என்கிறவன் மகம் மதல்லிகான் தரப்பிலே வந்திருந்து மறுபடி போகச்சே மமு தல்லிகான் வாங்கி அப்புறம் போய்விட்டாலே தேவனும் பட்டணமும் கூடலூர் வகையரா கிராமங்களும் நாங்கள் பந்தேபண்ணிக்கொண்டு உங்களுக்கு நசர் வைக்கிறோமென் றெழுதிக்கொடுத்துத் துரை மோகப்பண்ணி அனுப்பின காகிதத்தை மறுபடியுமிற்றைநாள் மட்டுக்கும் வைத்திருந்து இதுகாரியம் அனுகூலப்படாதென்று சேக் ஆமேது என்பேருக் குக் காகிதமுமெழுதி அந்த உடன்படிக்கைக் காகிதமும் அனுப் பிவிட்டான் மமுதல்லிகான் துரைபேருக்கு அனுப்பின காகி தத்திலே செல்மாத்திரம் எழுதி சேக்கு ஆமேது ரங்கப்பன் பேருக்கு எழுதியனுப்பின காகிதம் பார்த்துக்கொண்டால் தெரியவருமென்று எழுதியிருந்தது. இந்தச் சேதியெல்லாம் துரையவர்களுடனே சொன்னேன். துரையிருந்துகொண்டு எது நிமித்தியம் மறுபடி அனுப்பிவிட்டானென்று கேட்டார். தகப்பனுக்கினியிலே இருக்கிறவன் தமையனுக்கு விரோ தமாய் நடந்துகொள்ளுவானா என்று சொன்னேன். அதற் குத்தாரஞ் சொல்லாமற்போனார்.

இற்றைநாள் நாலு மணிக்குத் தண்டுக்குப் போயிருந்த வன் துரைபேருக்கு மமுதல்லிகான் மாபூசுகான் காகிதமிரண் டும் கொண்டுவந்தான். காகிதத்திலே எழுதியிருந்த வயண மென்னவென்றால். பின்னை ஒன்றும் எழுதவில்லை எல்லா சமா சாரமும் மகம்மதாக்கல் வந்து சொல்லச்சே. சகலமும் தெரிய வருமென்று எழுதியிருந்தது. அதன்பேரிலே மகம்மதாக்கல் சொன்ன வயணம்: ஸ்ரீ துரையவர்கள் முன்பாக முசே தீலார்சு துலுக்குப்பேச்சுக்குத் துவாசித்தனம் பண்ணத்தக்கதாக அவர் சொன்ன வயணமென்ன வென்றால்: மாபூசுகானும் மமு தல்லிகானும் சொன்னது அப்படியே நாங்கள்தானே வந்து

துரையவர்களுடனே ரூபுரூபாய்க் கண்டுபேசிக்கொள்ளு கிறோமே யல்லாமல் நாங்கள் வந்தால் எங்களுக்கு நடக்கிற மரியாதை யென்னவென்றால், ஒழுகரை அண்டையிலேயாவது அல்லவென்று நம்முடைய தோட்டத்தண்டையிலேயாவது டேராப்போட்டு அந்த டேராவில் ஐந்தாறு பேர் கிசுமுதுக்கா ரரும் நாங்களும் வந்திருக்கிறது அந்த மட்டுக்கும் துரையவர் கள் எதிர்கொண்டுவந்து டேராவுக்குள்ளே வந்து உங்கள் வீடிருக்கிறது. உங்கள் வீட்டுக்கு நீங்கள் வருகிறதற்குத்தடை என்ன விருக்கிறது என்கிறதாய்க் கையைப் பிடித்தழைத்துக் கொண்டு போகிறதானால் நாங்கள் வருகிறோமென்று சொன் னார்களென்று சொன்னார். அதன்பேரிலே துரை இருந்து கொண்டு அவர்கள் சொன்னபடிக்கு நான் வருகிறதற்குத் தடையென்ன விருக்கிறது என்று கேட்டால், எங்கள் ராசா வினுடைய உத்தாரம், கோட்டை கில்லேதாரனாயிருக்கிறவன் என்ன காரியமிருந்தாலும் சரியே, கோட்டையை விட்டு வெளியே போகக்கூடாது. அந்தப்படிக்கு எங்களுடைய ராசா வினுடைய உத்தாரத்தைத் தள்ளி நடக்கப்போகாது. அதனா லவர்களப்படி சொல்லுகிற மட்டுக்கும் கோட்டைக்கு வெளி யிலே அகறத்தி தாண்டி சேந்துனேர் கார்க்கிறனே அந்த மட்டுக்குமெதிர்கொண்டு வந்து கேடயம் பிடித்தழைத்துக் கொண்டு வருகிறோம். மற்றப்படி சின்ன துரை, குமிசேல் காரர், மற்றப் பேரை வேண்டுமென்றால் எதிர்கொண்டுபோய் அழைத்துக்கொண்டு வரச்சொல்லி அனுப்புவிக்கிறோம். அதுவேயல்லாமல் நானந்த மட்டுக்கும் போகக்கூடாது. நமக் கும் அவர்களுக்கும் பேதகமென்னவிருக்கிறது. நமக்கு அந்தப் படிக்கு இராசா உத்தாரமில்லாவிட்டால் இப்போதுதானே அவர்களுடைய தண்டுக்குப் போய் அழைத்துக்கொண்டு வரு வோம். அதற்கு ஆலோசனை என்ன விருக்கிறது என்கிறதாய்ச் சொன்னார்கள். அந்தச் சேதிக்கு மகம்மதாக் கலைக்கொண்டுதானே மாபூசுகான் மமுதல்லிகானுக்குக் கடு தாசி எழுதியனுப்பச் சொல்லச் சொன்னார்கள். ஆனபடியினா லே மகம்மதாக்கல்தானே அந்நேரமே கடுதாசி எழுதி பத்து மணிக்குப் பயணம்பண்ணி அறுக்காறுவை அனுப்பிவிட்டார் கள். கெவுனிக்கும் ரேக்கா எழுதிக்கொடுத் தனுப்பிவிட்டார் கள்.

*1747* ஆ பிப்ரவரி மீ 18உக்கு அக்ஷய ஷு மாசி மீ 10வ சனிவாரம்

இந்த நாள் நடந்த சேதி யென்னவென்றால்: அசறத்து மாபூசுகானவர்களும், மமுதல்லிகானவர்களும், மகம்மதாக்கலுக்கு எழுதியனுப்புவித்த வயணமென்னவென்றால்: குவர்னதோர் சாயபு அவர்கள் எழுதினபடிக்கு நமக்குச் சம்மதிதான். இப்பவும் ஆனந்தரங்கப்பன் வந்தவுடனே கண்டுபேசிக்கொண்டு அவரை அழைத்துக்கொண்டு நீயுமவரும் மூன்றாஞ் சாமத்துக்கு வருகிறோமென்றெழுதியிருந்தது. அதன்பேரிலே அந்தக் கடுதாசி வயணம் பார்த்துக்கொண்டு துரையவர்கள் உடனே என்னையும் முசே நீலார்சையும் மகம்மதாக்கலையும் மூன்றுபேரையும் பயணமாய்ப்போகச்சொல்லி ஸ்ரீ துரையவர்களுத்தாரங் கட்டளையிட்டார்கள்.

அந்த உத்தாரப்படி யின்றையதினம் மத்தியான மிரண்டு மணிக்குப் பயணப்பட்டு மாபூசுகானண்டைக்குப் போனோம். அவருக்கு நசர்வைத்துப் பேட்டிபண்ணிக்கொள்ளுகிறதற்கு இருபத்திரண்டு மோகரி என்கையிலே கொடுத்தார்கள். அதுவுங்கூட கொண்டுபோனோம். அவ்விடத்திலே போனவுடனே யோசனைபண்ணிப் பதினொரு மோகரி பண்ணினால் போதுமென்று மனதிலே யெண்ணிக்கொண்டு பதினொரு மோகரியை வைத்துக்கொண்டு திருக்காஞ்சியிலே இறங்கியிருக்கிற மாபூசுகானவர்களண்டைக்குப் போனோம். நான் போய் பதினொரு மோகரையும் நசர்வைத்துப் பேட்டிபண்ணிக்கொண்டவுடனே எழுந்திருந்து கட்டிக்கொண்டு உட்காரச்சொல்லி உத்தாரங் கொடுத்தார்கள். அதன்பேரிலே அவரும் சொல்லவேண்டிய உபசாரமான வார்த்தையாய்ச் சொன்னார் அதற்கு உத்தரவு அதற்கேற்றபடிக்கு ரொம்பவும் உபசாரமாய்த்தானே உத்தரவு சொன்னோம். அதன்பேரிலே சிரொப்பா கொண்டுவரச் சொல்லி நமக்கு நூற்றைம்பது ரூபாயிலே சிரொப்பாவுங் கொடுத்துத் தம்முடைய கையினாலே நடுகட்டும் கட்டிவிட்டுத் தாம் கையிலே வைத்திருக்கிற கட்டாரியை எடுத்து என்னுடைய அறையிலே சொருகிவிட்டு இனிமேல் உனக்குச் சத்துருவாயிருக்கப்பட்ட பேரையெல்லாம் செயிக்கத்தக்கதாக கொடுத்தோம் என்கிறதாய்ச் சொல்லி, தம்முடைய பேரிலே போத்திக்கொண்

டிருந்த சாலுவையை எடுத்து என் மேலே போத்தி உம்முடைய சினேகிதம் நமக்கு இருக்கவேணுமினிமேல் நம்முடைய காரியத்திலேயிருக்கவேணும். என்னுடைய வெட்கம் உன்னுடையதேயல்லாமல் மற்றப்படியல்லவே. ஆனபடியினாலே அதற்கெப்படி உண்டோ அந்தப்படி நடப்பித்துக்கொள்ளவுமென்று சொல்லி மூசே தீலார்சுக்தும் நாற்பதைம்பது ரூபாயிலே ஒரு சிரொப்பாவும் கொடுத்து, மகம்மதாக்கலே அழைத்து, இப்போதேயானால் பொழுதுபோச்சுதே நாளைய சூரிய வுதயத்துக்கு வருகிறோமென்று சொல்லி அனுப்பிவிட்டார்கள். அனுப்புகிறபோது அவ்விடத்துக் கவை உங்களுக்குச் சம்மதியானபடியென்று சொன்னார்கள். நல்லதென்றனுப்புவித்துக்கொண்டு புறப்பட்டு ஏழு மணிக்கு ஸ்ரீ துரையவர்களண்டைக்கு வந்து அவ்விடத்திலே நடந்த மரியாதைகளெல்லாம் சொல்லிக் கட்டாரி கொடுத்ததும் சொன்னோம். அந்தக் கட்டாரியை வாங்கிப் பார்த்து வெகு சந்தோஷப்பட்டு அந்தக் கட்டாரியை இருபது முப்பது தரம் உண்டு அதை வாங்கிப்பார்க்கிறதும் வருகிற குமிசெல்காரர், வெள்ளைகாரர், சமஸ்தமான பேர், வெள்ளைக்காரர் பெரியமனுஷர் வருகிற பேருக்கெல்லாம் காண்பிக்கிறதும் ரங்கப்பன் சிப்பாய் ஆனானென்கிறதும் சந்தோஷமாகச் சொல்லிக்கொண்டேயிருந்தார். பிற்பாடு என்னை அழைத்து இந்தக் கட்டாரி உனக்கெதற்காகக் கொடுத்தாரென்று கேட்டார். உங்களுக்குத் தெரியாமலிருக்குதாவென்று சொன்னேன். ஆனாலும், ஒருவேளை அவர்கள் சமாதானத்துக்கு வராவிட்டால் அவர்களைக் கூட செயிக்கத்தக்கதாகக் கொடுத்தார் என்று சொன்னேன். மெய்தானென்று சொல்லி, இந்தக் கட்டாரி கொடுத்ததைத்தானே வெகு நேரம் பிரஸ்தாபம் பண்ணிக்கொண்டிருந்து சந்தோஷப்பட்டுச்சொண்டிருந்தார்கள். பிற்பாடு நபாபு மாபோசுகான் வந்தாலிவ்விடத்திலேயிறங்கியிருக்கிறதற்கு விடுதி வேணுமேயென்று யோசனை பண்ணித் துரையவர்கள் வீட்டுக்குக் கீழண்டையாயிருக்கிற குமிசேல் வீட்டை முஸ்தீதுபண்ணியிருக்கிறோம். அதைக் கொண்டுபோய் மகம்மதாக்கலுக்குக் காண்பியுமென்று சொன்னார்கள். அதன்பேரிலே மகம்மதாக்கலே அழைத்துக்கொண்டு போய் குமிசேல் வீட்டைத் திறந்து காண்பித்தோம். அதைப் பார்த்து நபாபு இருக்கிறதற்கு இதுதான் வசதியாயிருக்குதென்று சொன்னார். அந்தப்படியே ஸ்ரீ துரையவர்களண்டைக்

குப் போய்க் கபுறு சொல்லிவிட்டுப் பத்துமணிக்கு நம்முடைய பாக்குக்கிடங்குக்கு வந்து ஒரு மணி நேரமட்டுக்குமிருந்து பதினொரு மணிக்குப் புறப்பட்டு வீட்டுக்குப் போனோம்.

*1747 ஆ பிப்ரவரி மீ 19 உ க்ரு அக்ஷய ஞு மாசி மீ 11 உ ஆதிவாரம்*

இற்றைநாள் காலமே ஐந்து மணிக்கு நபாபு மாபூசுகான் அவர்களை அழைத்துக்கொண்டுவரத்தக்கதாக இவ்விடத்திலே யிருந்து மகம்மதாக்கலும், மதனாந்தபண்டிதரும், நானும் பெடுத்தலமே என்கிற வெள்ளைக்காரரும், பாளையக்காரனும் கொம்பு தமுக்குடனே திருக்காஞ்சிமட்டுக்கும் போனோம். போன உடனே அவ்விடத்திலேயிருந்து அசரத்து மாபூசுகான் அவர்களும் பத்து குதிரைக்காரர்களுடனே ஆனையின்பேரிலே நிசான் பிடித்துக்கொண்டு புறப்பட்டுக் கூடத்தானே வந்தார்கள். வரச்சே தேவநாயக்கன்செட்டிச்சாவடி யண்டையிலே சின்ன துரையவர்களும் முசியே திலார்சும், முசியே கில்லியாரும் மூன்று பேரும் எதிர்கொண்டு வந்திருந்தார்கள். அவ்விடத்திலே மாபூசுகானவர்கள் வந்தவுடனே நபாபு பல்லக்கின் பேரிலே யிருந்தபடியே சின்ன துரையவர்கள் நின்றுகொண்டிருந்தவர்கள் நவாபுடைய பல்லக்குமட்டுக்கும் நடந்துபோய்க் கிட்டே வந்தவுடனே நபாபு பல்லக்கின்பேரிலேயும் சின்ன துரை நின்றபடிக்கு ஆலிங்கனம் பண்ணிக்கொண்டு உபசாரம் பண்ணினார்கள்.

பின்னோடே முசியே திலார்சையும், முசியே கில்லியரையும் ஆலிங்கனம் பண்ணிக்கொண்டு உபசாரஞ் சொன்னவுடனே அவரவர் பல்லக்கின் பேரிலே அவரவர் ஏறிக்கொண்டு கூடத்தானே வந்தார்கள். வரச்சே நம்முடைய தோட்டம் தாண்டிப் புறம் உப்பாற்றண்டை வரச்சே துவக்கி இருபத்தொரு பீரங்கிப் போட்டார்கள். அந்தமட்டிலே அகழிக்கு வெளியே போட்டிருக்கிற கூடாரத்திலே வந்திறங்கி உட்கார்ந்தார்கள். அந்தச் சேதி அகழிக்குள்ளாகக் கெவுனிக்கு வெளியே போட்டிருக்கிற கூடாரத்திலே வந்திறங்கியிருக்கிற முசியே துய்ப்ளேய்க்சு அவர்களுடனே சொன்னார்கள். அவ்விடத்திலேயிருந்து ஸ்ரீ துரையவர்கள் புறப்படச் சம்பிரமம் என்னவென்றால், துரையவர்கள் கால்நடையாய் நடந்து வரச்சே இருபுறமும் இரண்டு வெள்

ளைக் குடையும், ஒரு சுருட்டியும் வெள்ளைப் பாவாடை விசறத் தக்கதாக இரண்டு புறமும் மயில் கொத்தும் ஈச்சம் சவுரியும் புடை சூழத்தக்கதாக அரிகையும் பிடித்துக்கொண்டு அவருக்கு முன்னே இருபுறமும் ஐம்பது பேர் சொல்தாதுகள் வரத்தக்க தாக மத்தியே சேருவைக்காரரும், காப்பிரிகளும், இசாபுதார மாய்ச் சந்தடிகளை விலக்கிக்கொண்டு வரத்தக்கதாகச் சகல சம்பிரமத்துடனே நபாபுடைய வளவண்டையிலே போன வுடனே நபாபு எழுந்திருந்து ஆலிங்கனம் பண்ணிக்கொண்டு ஒருத்தருக்கொருத்தர் உபசாரம் பண்ணிக்கொண்டார்கள். துரையவர்களும் நபாபும் சந்திக்கச்சே 21 பீரங்கிப் போட்டார் கள். அதன்பேரிலே துரையவர்களிருந்துகொண்டு உங்கள் வீட்டுக்கு நீங்கள் வருகிறதற்குத் தடையென்னவிருக்கிறது? வாருங்கோளென்று கையைப்பிடித்து நபாபை அழைத்தார். அப் படியே வருகிறோமென்று சொல்லி ஸ்ரீ துரையவர்களுடைய பல் லக்கின்பேரிலே நபாபு மாபூசுகானும், மாபூசுகான் பல்லக்கிலே துரையவர்களும் ஏறிக்கொண்டு நவபத்து நாகசுரமேளம் முழங் கத்தக்கதாக இரண்டுபேர் பல்லக்கும் சோடாய் வரத்தக்கதாகக் கெவுனிக்குள்ளே புல்லுக்கடை மட்டுக்கும் இருபுறமும் சொல் தாது பாறுக்குள்ளாகச் சகல சம்பிரமத்துடனேயும் புறப்பட் டுச் செம்மையாய்ப் பத்து மணிக்கு வந்து ஸ்ரீ துரையவர்கள் வீட்டுக்கு வந்து சேர்ந்தார்கள். நபாபு வந்து துரையவர்கள் வீட்டிலே இறங்கினவுடனே கோட்டையிலே இருபத்தொரு பீரங்கிப் போட்டார்கள். அந்தமட்டிலே இரண்டு நாழிகை மட்டுக்கும் பேசிக்கொண்டிருந்து துரையவர்கள் வீட்டிலே யிருந்தபடியே குமிசெல் வீடாகிய விடுதிக்கு வந்தார் கள். வரச்சே துரையவர்களும் கூடவந்து விடுதியிலே விட்டு விட்டுச் சற்றுநேரம் பேசிக்கொண்டிருந்து துரையவர்களும் மறுபடி வீட்டுக்குப் போனார். ஆனால் இவர்களுக்கு மத்தியானம் சாப்பாடு எங்கேயென்றால், நவாபு வருகிற சேதிக்கு நேற்றைய தினம் நான் வந்து ராத்திரி எழு மணிக்குச் சொன்னவுடனே அந்நேரமே பரசுராமபிள்ளையை அழைத்து நபாபு மாபூசுகா னுக்குச் சமையல்பண்ணச்சொல்லி, இமாம்சாயபு அவர்கள் மனுஷன் அவர் சாயபுடனே சொல்லி, அவரை சமைக்கச் சொல்லித் திட்டம்பண்ணி, அவரென்ன தேவையாய்க் கேட் கிறாரோ அதையெல்லாம் தடையில்லாமல் கொடுக்கத்தக்க

தாகத் திட்டம்பண்ணி யிருந்தபடிக்கு இற்றைநாள் மத்தியா னம் சமையல்பண்ணி அவாய்புசாயயு அனுப்புவித்தார். அந்தப் படிக்குச் சமையலாயிவந்தவுடனே ஸ்ரீ துரையவர்கள்கூட வந் திருந்து சாப்பாடு விசாரித்தார்கள். சாப்பாட்டிலே யிறங்கின வுடனே இருபத்தொரு பீரங்கிப் போட்டார்கள். இன்றைய தினம் எல்லாம் இவ்விடத்திலேதானே யிருக்கிறபடியினாலே சாப்பிட்டுச் சற்றுநேரம் இருந்து பிற்பாடு படுத்துக்கொண் டிருந்து நாலு மணிக்கு எழுந்திருந்து சற்றுநேரம் தமாஷாகப் பார்த்துக்கொண்டிருந்து வெள்ளைக்காரர் வெளியிலே பாறு வைத்து மாயேசிப்பாய்களையும் பாறு வைத்துக்கொண்டிருந் தார்கள். நபாபு அவர்களும் அந்த வீட்டிலே யிருந்தபடியே சற்றுநேரம் பார்த்துக்கொண்டிருந்து பிற்பாடு உசந்த மெத்தையின்பேரிலே ஏறி நச்சுக்குழல் வைத்துப் பார்த்துக் கொண்டிருந்து மறுபடியும் இறங்கிவந்து மெத்தையின்பேரிலே தானே யிருந்தார்கள். அப்பால் ஒப்பு உடன்படிக்கைச் சமா தானப் பேச்சுகளென்னவுண்டோ அதுகளெல்லாம் ஒரு அறை யிலே துரையவர்களும், நபாபு அவர்களும், மூசே மீலார்சும் மூன்றுபேருமாக இருந்து பேசிக்கொண்டிருந்தார்கள். அவர்கள் பேசிக்கொண்டிருந்த காரியமென்னவென்றால்: இந்தப்படி உடன்படிக்கைப் பேசிக்கொண்டிருந்தபடி சமாதானமாய் ஸ்ரீ துரையவர்களுக்கு ஒரு குதிரையும், நாலு நகை வெகுமானமும்; மதாமவர்களுக்குச் சரிகை சாமேவார் 2, ஒடினி 1, துரையவர்கள் குமாரத்திக்குச் சரிகை ஒடினி 1. சரிகை சாமேவார் 1. இந்தப் படிக்கு வெகுமானம் கொடுத்தார். அதன்பேரிலே ஒப்பு உடன்படிக்கைப் பேச்சுமூச்சு பேசவேண்டியதெல்லாம் பேசிக் கொண்டு சமாதானமாய்த்தானே வெளியே புறப்பட்டார்கள். அந்தமட்டிலே வெளியே இருந்த சொல்தாதுகள் மாயே சிப்பாய்கள் அந்தமட்டிலே ராத்திரிக்குச் சமையல்பண்ணிக் கொண்டுவந்து குண்டு போடச்சே சாப்பிட்டார்கள். பிற்பாடு உட்கார்ந்து கேளிக்கைப் பார்த்துக்கொண்டிருந்து பதினொரு மணிக்கு எழுந்திருந்து அவரவர் வீட்டுக்கு அவரவர் போய் விட்டார்கள். நவாபும் படுத்துக்கொள்ளப் போனார். நானும் நம்முடைய வளவுக்குப் போய்ச் சாப்பிட்டுப் படுத்துக்கொண் டேன். வெள்ளைக்காரர் வீணைவாத்தியமும் அவர்கள் கூத்தாடி னதும் வெகுநேரம் வேடிக்கையாய்ப் பார்த்துக்கொண்டிருந் தார்கள்.

1747 ஆ பிப்ரவரி மீ 20 உ க்கு அக்ஷய ஹு மாசி மீ 12 உ சோமவாரம் நாள்.

இந்த நாள் நடந்தசேதி அதிசயமென்னவென்றால்: நவாபு மாபூசுகான் அவர்களை துரையவர்கள் தம்முடைய வளவுக் கழைத்துக்கொண்டு போய் அவ்விடத்திலேயிருக்கப்பட்ட அதிசயங்களெல்லாம் காண்பித்தார்கள். அதன்பேரிலே மத்தியானம் சாப்பிட்ட பிற்பாடு ஸ்ரீ துரையவர்கள் போய் நவாபை அழைத்துக்கொண்டுபோய்த் தம்முடைய வளவிலே கொண்டுவந்து வைத்திருந்த வெகுமான தட்டுமுட்டுச் சாமான்களெல்லாம் நவாபு அவர்களுக்குக் காண்பித்தார்கள். அதுகளெல்லாம் கண்ணினாலே பார்த்துக்கொண்டுவந்து நடுச்சாலையிலே உட்கார்ந்திருந்தார். அதன் பேரிலே ஸ்ரீ துரையவர்களும் வந்து கிட்டே உட்கார்ந்து கிழண்டை பக்கம் முசியே திலார்சு உட்கார்ந்தார். மற்றப்படி நபாபு பிறகே வந்த சுவாருகளெல்லாம் வரிசையாய் நாற்காலியின் பேரிலே உட்கார்ந்தார்கள். அதன்பேரிலே பன்னீர் கொண்டுவந்து பன்னீர்ச் செம்பைக் கொண்டுபோய்த் துரையவர்களின்கையிலே கொடுத்தேன். அவர் வாங்கி மாபூசுகானுக்குக் கொடுத்து ஒரு தட்டிலே பாக்கு வெற்றிலையும் கொடுத்தார்கள். பாக்கு வெற்றிலை கொடுக்கச்சே இருபத்தொரு பீரங்கிப் போட்டார்கள். அப்போது நாலு மணியடித்ததுப் பாக்கு வெற்றிலை வாங்கிக் கொண்டவுடனே அனுப்புவித்துக்கொண்டு நபாபு மாபூசுகானவர்கள் ஒரு பல்லக்கிலேயும், துரையவர்கள் ஒரு பல்லக்கிலேயும் ஏறிக்கொண்டு வெளியே புறப்பட்டார்கள். வெளியே புறப்படச்சே துரையவர்கள் வீட்டுமெத்தையின் பேரிலே துரும்பேத்தும் (Trumpet) நாதசுரமேளமும் வாத்தியம் பண்ணினார்கள். இப்புறம் வாசற்படி தாண்டினவுடனே வெள்ளைக்காரர் பாறுவைத்துத் தம்பூர் அடித்துக்கொண்டு ஆனையின்பேரிலே நிசான் பிடித்துக்கொண்டு போகத்தக்கதாக நபாபு பல்லக்குத் தென்னண்டையும், துரையவர்கள் பல்லக்கு வடவண்டையும் சோடு பல்லக்காய்ப் போட்டுக்கொண்டு இருபுறமும் வெள்ளைச்சாமரம், மயில் கொத்து, ஈச்சஞ்சவுரி, வெள்ளைக் கொடை, நாதசுரமேளம், புல்லாங்குழல், நாதசுரமிப்படியாகச் சகல சம்பிரமத்துடனே முன்னே மாயே சிப்பாய்களும், அதன்பிறகே பாளையக்காரருடைய சேவகரும், அதன்பிறகே

நபாபு பல்லக்கும், துரையவர்கள் பல்லக்கும் வரத்தக்கதாக வும் அதன்பிறகே குதிரை சுவார்களும், அதன்பின்னேடே பாறுமாக இந்தப்படிக்குச் சகல சம்பிரமத்துடனே பயணம் புறப்பட்டுப் போகச்சே கடைத்தெருவிலேயிருக்கிற சுங்கு வார் கிடங்கு முதற்கொண்டு கெவுனிமட்டு மிப்புறமுஞ் சொல்தாதுகள் பாறுவரிசையாய் நிற்கத்தக்கதாக நபாபு மா:பூசுகான் அவர்கள் பயணம் புறப்பட்டுப் போனார்கள் போய்க் கெவுனி தாண்டினவுடனே துரையவர்கள் செலவு வாங்கிக்கொண்டவுடனே கொத்தளத்தின்பேரிலே இருபத் தொரு பீரங்கிப் போட்டார்கள் அலங்கத்துக்கு வெளியே, அகறத்திற்குள்ளாக, வாசற்படிக்கு இருபுறமும் சுவரின் பேரிலே சொல்தாதுகள் வரிசையாய் நிற்கத்தக்கதாக அலங்கத்தின்பேரிலே இரு பாரிசமும் மாயே சிப்பாய்கள் நிற்கத்தக்கதாக நபாபு அனுப்புவித்துக்கொண்டு அப்புறம் நடந்தார்கள். நான் போய் அலங்கத்தின் வெளியிலே போட்டிருக்கிற கூடாரத்திலே போய் நான் நின்றேன். அதன் பேரிலே மாபூசுகான் அவர்கள் வெளியே புறப்பட்டவுடனே நான் போய் அனுப்புவித்துக்கொண்டேன். அவர் அப்புறம் நம்முடைய தோட்டத்துக்கு அப்பாலே போகிறமட்டுக்கும் துரையவர்கள் அகரத்தின் மேட்டின்பேரிலே ஏறிக்கொண்டு பார்த்துக்கொண்டிருந்தார்கள். அவர் அப்புறம் போய்விட் டார். பிற்பாடு துரையவர்கள் புறப்பட்டு வளவுக்குப் போய் விட்டார்கள். நபாபு பிறகாலே மகம்மதாக்கலும் கூடப் போனார். அவரை நிறுத்திக்கொண்டேன். அதேனென்றால், அவரிந்தக் காரியத்திலே பிரயாசைப்பட்டபடியினாலேயும் பிலம்பாய் வெகுமானம்பண்ணி அனுப்புவிக்கவேணுமென்று நிறுத்தி வைத்தோம். அசறத்து நபாபு மாபூசுகானவர்களுக்குக் கொடுத்த வெகுமானமென்னவென்றால், வெகுமான வயணம் :

நபாபு மாபூசுகானுக்குக் கொடுத்தது:

| | |
|---|---|
| பெரிய கண்ணாடி | 2 |
| மணிக்கூண்டு | 1 |
| வெள்ளிப்போட்ட பெரிய துப்பாக்கி | 2 |
| பித்தளைப்போட்ட பெரிய துப்பாக்கி | 2 |
| இரட்டைக் குழா துப்பாக்கி | 2 |

| | |
|---|---|
| வெள்ளிப்போட்ட பிஸ்தோல் | 4 |
| பித்தளைப்போட்ட பிஸ்தோல் | 4 |
| சிகப்பு முகமல் கிசம் | 160 |
| எக்தோபு பொன் பூ போட்டது சீர்மை சுருட்டி | 87 |
| இங்கிலீசு சட்டம் சகலாத்து | 10 |
| பிராஞ்சு சட்டம் சகலாத்துக் கட்டு | 10 |
| பன்னீர்ச் சொம்பு | 18 |
| சீனுபெட்டி விந்தைவிந்தையாய்க்காணுகிற பெட்டி | 2 |
| புட்டேதார் சகலாத்து திவாசு | 10 |
| மெழுகுவத்தி | 140 |
| மெழுகுவத்தி வைக்கிற வீதர்கூண்டு | 6 |
| நச்சுக்குழல் சின்னது | 10 |
| நச்சுக்குழல் பெரியது | 1 |
| இருபுறமும் இரண்டு வர்ணமாயிருக்கிற சகலாத்துச் சிப்பம் | 1 |
| கற்கண்டு பவுண்டு | 290 |
| பொன்கலாம் இங்கிலீசு சீர்மை இது '0 மார்க்கு அவுன்சு | 1 |
| சீர்மை பொன் கலாம் மார்க்கு 15 ஓ 4 | 4 |
| சீர்மை வெள்ளி கலாம் 9 அவுன்சு | 4 |
| சூரிகத்தி | 12 |
| சின்னக்கண்ணாடி | 7 |
| ஆகுதே மெல்விஸ் சீசா | 24 |
| ஆகுசம்பீரியேல் சீசா | 24 |
| ஆகுதுங்கிரி சீசா | 24 |
| ஆனைக்குட்டி | 1 |
| சங்கீதப் பெட்டி | 1 |
| பொன்வேலை செய்த சூரிகத்தி | 1 |
| உக்கா மேலே சுங்கான், மேலே மூடுகிற கொட்டி பொன்னுலே பண்ணினது | 1 |
| ஆக திலுசு வராகன் | |

நபாபு மாபூசுகான் தம்பி நசமல்லிகானுக்குக் கொடுத்தது:

| | |
|---|---|
| இரட்டைக் குழாய் துப்பாக்கி | 1 |
| தபாக்கி | 1 |

| | |
|---|---|
| சூரிகத்தி | 8 |
| சிகப்பு முகமல் கிசம் | 17 |
| ஏகதோப்பு பொன்பூபோட்டது சீர்மை சுருட்டி | 12 |
| வெள்ளி சீர்மை கலாமார்க்கு | 4 |
| புட்டேதார் சகலாத்து திவர்சு | 4 |
| விந்தையாய் விந்தையாய்க்காணுகிற சினுபெட்டி | 1 |
| பச்சை மகமல் கிசம் | 15 |
| சகலாத்துக் கட்டு | 2 |
| பொன்கலாம் சீர்மை பத்து மார்க்கு | 7 |
| இசுபஹான் கலாம் மார்க்கு 2 அவுன்ஸ் | 4 |

ஆக தினுசு கிரயம் கூடின வராகன்......

இந்தப்படிக்கு வெகுமானம் கொடுத்தார்கள். அதுகளை வாங்கிக்கொண்டு ராகியாய் இற்றைநாள் சாயங்காலம் நாலு மணிக்குப் பயணம் புறப்பட்டுப்போய்விட்டார்கள்.

இற்றைநாள் அசறத்து நவாபு மாபூசுகான் அவர்கள் சாயங்காலம் பயணம் புறப்பட்டுப்போகச்சே மமுதலிகான வர்கள் மாபூசுகானவர்கள் பேருக்கு அனுப்பின காகிதம், மாபூசுகானுக்கு வழியிலே எதிர்ப்பட்டு அறுகாறுகள் கொண்டு வந்து கொடுத்தார்கள். அந்தக் கடுதாசியை அவர் பார்த்துக் கொண்டவுடனே அந்த அறுக்காரருடைய கையிலேதானே கொடுத்துத் தன்னுடைய சோப்புதாரரையும் கூடக்கூட்டித் துரையவர்களண்டைக்கு அனுப்புவித்தார். அந்தக் காகிதத் திலே எழுதியிருந்த வயணமென்னவென்றால்: எனக்கானால் சரீரம் சொஸ்தமாயிருக்கிறது. பல் நோயும் சற்று லகுவாய் இருக்கிறது நீரானால் சகோதரத்தினுடைய வீட்டுக்குப் போய் அவ்விடத்திலே விருந்து சாப்பிட்டுக்கொண்டு வேடிக்கையாய் விளையாடிக்கொண்டு இரண்டுநாளாக அவ்விடத்திலேதானே இருந்துவிட்டீர்கள். இவ்விடத்திலேயானால் ஆற்காட்டிலே யிருந்த பெரிய நபாபு அவர்கள் உம்முடைய பேருக்கு ஒரு கடுதாசியும் என் பேருக்கு ஒரு கடுதாசியும் எழுதி வந்திருக்கிறது. சீக்கிரமாய் வரவும் என்றெழுதி யிருந்தது. அந்தக் காகிதத்தைப் படித்துப் பார்த்துக்கொண்டு அந்த அறுக்காரருக்கு ஐந்து ரூபாய் அதியாகவும் கொடுத்து அந்தக் கடுதாசியை மறுபடியும் கொடுத்து நபாபு மாபூசுகான் பேருக்குக் கடுதாசி ஒன்று

உபசாரமாக எழுதி மாபூசுகானவர்களிடத்திலே யிருந்து பயணமாய்ப் போகச்சே அவர்களுக்குச் சமைத்த சோறும் மீந்திருந்தது. நூறு பேருக்கு உண்டு மீந்திருந்த சோற்றையெல்லாம் எடுப்பித்து நாசறு கொல்லிகானுக்கு அனுப்பிவிட்டார்கள்.

1747 ஆ பிப்ரவரி மீ 21 உ ர்க்த வக்ஷய ஞு மாசி மீ 13 உ செவ்வாய்க்கிழமை

இற்றைநாள் காலமே ஐந்து மணிக்கு மூசே நிலார்சும் மகம்மதாக்கலும் பயணப்பட்டு மகம்மதல்லியை இவ்விடத்துக்கு அழைத்துக்கொண்டு வரத்தக்கதாக அனுப்புவித்தார்கள். அவர்களிவ்விடத்திலேயிருந்து ஐந்து மணிக்குக் காலமே புறப்பட்டு ஒன்பதரை மணிக்குத் தண்டுக்குப் போய்ச் சேர்ந்து மமுதல்லிகானவர்களை பேட்டி பண்ணிக்கொண்டு, சண்டு வார்த்தைச் சொல்லி அவரை அழைத்ததற்கு அவர் சொன்ன உத்தரவும், தமக்குப் பல்நோயிருக்குது என்று மிவ்விடத்துக்கு வருகிறது சுரெட்டாயிருக்குதென்றும் எழுதி அனுப்பின கடுதாசி நாலு மணிக்கு வந்து சேர்ந்தது. வந்த அறுகாறுகன் சொன்ன சேதி யென்னவென்றால்: அசறத்து மாபூசுகான் மமுதல்லிகான் இரண்டு பேருங்கூட இப்படி வந்து ஆற்காட்டுக்குப் போகிறார்களென்கிற கபுறு ஒன்று. இல்லாமல் மமுதல்லிகான் மாத்திரமிப்படி ஆற்காட்டுக்குப் போகிறதாகவும் மாபூசுகானப்படிதானே திரிச்சினுப்பள்ளிக்குப் போகிறாரென்று மிப்படி இரண்டு விதமாய்ச் சேதி சொன்னார்கள். அப்பால் அவர்களுக்கு எப்படி சம்மதியாயிருக்குமோ அப்படி நடக்கும்.

இற்றைநாள் சாயங்காலம் ஐந்து மணிக்கு மமுதல்லிகான் சாயபு அவர்களை அழைக்கப்போன மூசியே நிலார்சும் மகம்மதாக்கலும் இரண்டு பேருமிவ்விடத்துக்கு வந்தார்கள். அவர்கள் வரச்சே மமுதல்லிகான் அவர்கள் துரையவர்களுககுக் கொடுத்த வெகுமானமும் கூடக் கொண்டுவந்தார்கள். வெகுமானமென்னவென்றால்: வெள்ளைக்குதிரை 1, சிரொப்பா 1, சின்னதுரைக்கு சிரொப்பா 1, மதாம் துய்ப்ளேய்க்சுக்கு சாமேவார் 2, ஒடினி 1, ஷெ குமாரத்திக்குச் சாமேவார் 2, ஒடினி 1, இந்தப்படியாகக் கொண்டுவந்த வெகுமானத்தை எல்லாம்

வெளியிலேதானே ஒரு தோட்டத்திலே வைத்துவிட்டு மகம்ம தாக்கலும் திலார்சும் வருகிறதற்கு ஸ்ரீ துரையவர்களுக்குச் சொல்லி அனுப்பினார்கள். அதன்பேரிலே துரையவர்களிருந்து கொண்டு வெகுமானத்தையும் வைத்துக்கொண்டு மகம்மதாக் கலையும் இருக்கச்சொல்லி வைத்துவிட்டு, திலார்சுவை மாத் திரம் வரச்சொல்லச்சொல்லி அனுப்புவித்தார்கள். அந்தச் சேதி போனவுடனே முசியே திலார்சு புறப்பட்டு வரச்சே மகம்ம தாக்கலும் கூடத்தானே புறப்பட்டு வரவேணுமென்கிறதா யிருக்கச்சே நானவர்கள் அண்டைக்குப் போனேன். நானும் அவர்களும் பேசிக்கொண்டு வெகுமானத்தை மாத் திரம் வெளியிலேதானே வைத்துவிட்டு இரண்டு பேரும் கூடத்தானே வந்துவிட்டோம். வெகுமானங் கொண்டு வந்ததை ரேக்கா அருக்காருவும் வெகுமானமும் நம்முடைய் தோட்டத்திலே வைக்கச்சொல்லித் துரையவர்கள் சொல்லி அனுப்பினபடிக்கு வைத்து அவர்களுக்கு சிதாவுங் கொண்டு போய்க்கொடுக்கச்சொல்லி சொன்னபடிக்குக் கொடுத்தார்கள். முசியே திலார்சு வந்து சொன்ன சேதி யென்னவென்றால்: மமு தல்லிகான் வருகிறதற்குப் பல் நோயினாலே தாடை வீங்கியிருக் கிறது. சுரம் காய்கிறபடியினாலேயும் வரவில்லையென்றும் மற்றப்படி எங்கள் தமையன் மாபூசுகால் வந்து உடன் படிக்கைப் பண்ணிக்கொண்டு சாப்பிட்டு வெகுமானம் வாங் கிக்கொண்டு வந்தபடியினாலே எங்கள் பேச்சு தப்புகிறதில்லை யென்றும், இப்பவும் நீங்கள் பெரிய மனுஷர் நபாபு அன்வருதி கான் சாயபு அவர்களுக்கு நீங்கள் அனுப்புவிக்கவேண்டிய மரி யாதைப் பிரகாரம் அனுப்புவிப்பீர்கள். அந்தப்படிக்கு அனுப்புவிக்கிறோமென்றும் எங்களைக் கூச்சுபண்ணிக்கொண்டு எப்போது போகச்சொல்லி எழுதி அனுப்புகிறார்களோ அப் போது பாளையம் கூச்சுபண்ணிக்கொண்டு போகிறோமென்றும், மகம்மதாக்கலிந்தச் சமாதானம் பண்ணின உடன்படிக்கையி னாலே இவனுக்கு இரண்டு கைக்கும் இரு நூறு வராகனிலே பொன் காப்புப் பண்ணிப்போட்டு என்றைக்கும் அடையாளமா கத் தக்கதாக வைத்திருக்கவேணுமென்று மினீமேல் புதுச்சேரி காரியமிவன் மாரிபத்திலே நடப்பிக்கவேணுமென்று மிந்தச் சமாதானமிவன் மாரிபத்திலே நடந்தபடியினாலேயிவனுக்கு ஒரு பேர் கொடுக்கவேணுமென்றும், இப்படியாகச் சொன்னார். இந் துச்சேதி சொன்னவுடனே துரையிருந்துகொண்டு என்னைப்

பார்ந்துநேற்றுதானே பேர்கொடுத்தோமே, அந்தப் பேரெப்படி என்று கேட்டார். சலாகதாதுகான் என்றுசொன்னேன், சொன்னப்போலே துரையிருந்துகொண்டு சலாகதாதுகானென்று அழைத்துக்கொண்டு கனகராய முதலியார் போட்டிருந்த மெதாலிப்படிக்கு ஒரு மெதாலியோர் சாபிகூர் எழுதியிருக்கிறது ஒன்று கொடுக்கிறேன். காப்பு இருநூறு வராகனிலே பண்ணச்சொல்லியும் எனக்கும் சொல்லி அவனுக்கும் சொல்லிச்சொன்னார். அந்தப்படிக்கு அவனுக்குச் சொன்னபிற்பாடு வீட்டுக்குப் போனார். வீட்டுக்குப்போய் ஆசுதாவாய்ப் படுத்துக்கொண்டிருந்து காலமே வாருமென்றுசொல்லி அனுப்பிவிட்டார். காலத்தாலே வெகுமான மழைப்பித்துக்கொள்ளுகிறதற்கு எப்படிநடக்கிறதென்று கேட்டார். இரண்டுபேர் கொமிசேலியர்கள் மேளதாளத்துடனே போய்க்கொண்டுவருகிறதென்று சொன்னேன். அந்தப்படிக்கு முஸ்தீதாயிருக்கச் சொல்லு என்று சொன்னார். நல்லதென்று சொல்லிவந்தேன். நேற்றுச் சாயங்காலம் குவர்னதோர் முசே தூப்ளேய்க்கு மாபூசுகானை கெவுனிமட்டுக்கும் கொண்டுபோய் விட்டுவந்த பிற்பாடு மகம்மதாக்கல் வந்தான் வந்தாப்போலே மாபூசுகான் சந்தோஷமாய்ப் போனானென்று கேட்டார் சந்தோஷமாய்ப் போகவில்லையென்று சொன்னான். அதன்பேரிலே துரையிருந்துகொண்டு கோபம்பண்ணி அவன் தண்டு வாங்கிப் போகாமலிருந்தானாகில் இங்கேயிருந்து சொல்தாதுகளை அனுப்பி அவன் தேவனாம்பட்டணத்தண்டையிலே தண்டிலே யிறங்கியிருக்கிறவனைத் தண்டோடுகூட அவனைகூடச் சுட்டுப்போடச் சொல்லுகிறேன். நீ இந்தப் பேச்சு என்னவென்று சொல்லுகிறாய். நீ இப்போது நான் கொடுக்கிற வெகுமானம் நபாபு அன்வருதிகான் அவர்களுக்குக் கொடுக்கிற வெகுமானத்தை வாங்கிக்கொண்டுபோனால் போ, இல்லாவிட்டால் இந்த க்ஷணமே இந்தவூருக்கப்பாலே கொண்டுபோய் விட்டுவிடச் சொல்லுவேனென்று சொல்லச்சொன்னார். அந்தப் பேச்சு முசே நிலார்சு சொல்லாமல் நின்றான். சொல்லென்று சொன்னார். எப்படிச் சொல்லுகிறதென்று சொன்னான். அப்பால் சோபுதாரனை விட்டு முசே தெலார்சை கையைப் பிடித்து அப்பாலே யிழுத்துவிடச் சொன்னார். அதன்பேரிலே சொல்லுகிறேனென்று சற்று மார்க்கமாய்ச் சொன்னான். அதன்பேரிலே உங்கள் வேலைக்காரன் எங்கள்பேரிலே ஏன்

கோபம் பண்ணுகிருனென்று வணங்கிச் சொன்னபிற்பாடு சற்றே சந்தோஷமாய்ச் சொன்னர். அதன்பேரிலே அனுப்பு வித்துக்கொண்டு பாக்குக் கிடங்கிற்கு வந்து தாபந்தப்பட்டு ரொம்ப பயந்து சொல்லிக்கொண்டான். பயப்படாதே, நான் சமாதானம் பண்ணிப்போடுகிறேன். துரை சொன்னபடிக்குக் காலத்தாலே நீயும் தேலார்சும் மமுதல்லிகானண்டைக்குப் போங்களென்று சொல்லித் தைரியமாய்ப் போ; துரைக்கு எப்போதும்போலே சந்தோஷம் வரப்பண்ணிப் போடுகிறேன் என்று சொல்லி நேற்று உசேன் சாயபு உனக்கெழுதின கடுதாசி வயணம் சொல்லென்று சொன்னேன். லக்ஷம் ரூபாய் அன்வருதிகானுக்கு தீர்த்துப்போட்டுவிடச்சொல்லியும், அப்பால் மார்பூசுகானுக்கும் மமுதல்லிகானுக்கும் வேறே வேறே வெகுமானம் கொடுக்கச்சொல்லியுமிந்தப்படி தீர்த்துப்போடச் சொல்லியும் எழுதி வந்ததென்று சொன்னனிந்தப்பேச்சு நீயென்னுடனே சொல்லிவிட்டாலும் நானுனக்கு வந்தக்காகித சாடையறிந்து துரைக்குச்சொன்னேனென்று சொன்னேன். இதுவுனக்கெப்படி தெரிந்ததென்று மார்பூசுகானுடனே, நீயேன் உசந்து பேசுகிருய் உசேன்சாயபு சுலுவாய்த்தீர்த்து எழுதி அனுப்பிவிட்டார் என்று நீ சொன்னதாய்ச் சொன்னியே. அப்போது என்னுடனே மார்பூசுகானிரண்டு லக்ஷமாய்த் தீர்த்துப்போடென்று நீகூடவிருக்கச்சே சொன்னதற்கு அப்படி வராதென்று நான் சொன்னதின்பேரிலேதானே உன்னை அழைத்துக்கேட்டதும், நீ உசேன் சாயபு காகிதம் காண்பித்தேன் என்று சொன்னதும். ஆனபடியினலே இந்தச் சாடை பார்த்து லக்ஷம் எழுதி வந்திருக்குமென்றுஞ் சொல்லி, யோசனை பண்ணி, துரையுடனே சொல்லிப்போட்டேன். அதன் பேரிலேதான் துரை உனக்கு வந்த காகிதத்திலே சுலுவாயெழுதியிருக்குதென்று அந்தக் காகிதத்தைக் காண்பிக்கச் சொல்லிக் கேட்டதென்று சொன்னேன். மெய்தானென்று சொல்லி, இனிமேல் அந்தப் பேச்சு ஏன். உன்பேரிலே தயவு வரத்தக்கதாகத் துரையுடனே சொல்லுகிறேன். சந்தோஷமாய்க் காலத்தாலே மமுதல்லிகான் தண்டுக்குப் போ என்று அனுப்பிவிட்டேன்.

*1747* ஆ பிப்ரவரி மீ 22 உக்கு அக்ஷய ஸூ மாசி மீ 14 உ புதவாரம்.

இற்றைநாள் நடந்த அதிசயமென்னவென்ருல்: மமுதல்லிகானவர்கள் நேற்றையதினம் சாயங்காலம் அனுப்பின வெகு

மானம் நம்முடைய தோட்டத்திலே வந்திருந்ததை இற்றை நாள் காலமே ஒன்பது மணிக்கு இவ்விடத்திலேயிருந்து இரண்டு பேர் கொமிசெல்காரரும், மகம்மதாக்கலும், சமேதாரனும் நானும் ஸ்ரீ துரையவர்களுடைய பல்லக்கும், கொடியும், பாளையக்காரனும், சேவகர், சவுளிகழிக்காரர், மாயே சிப்பாய்கள், துப்பாக்கிகாரர் அறுபது எழுபதுபேரும் கொம்பு தமுக்கு, தேவடியாள், மேளதாளத்துடனே எதிர்கொண்டு போய் நம்முடைய தோட்டத்திலே வைத்திருந்த வெகுமானத்தை யெடுத்துப் பல்லக்கின் பேரிலே வைத்துக்கொண்டு இந்த வெகுமானங் கொண்டுவந்த துலுக்கன் ஒருத்தன் மகம்மது இசுமாயில் என்கிறவனையும் அழைத்துக்கொண்டு சகல சம்பிரமத்துடனேயும் வரச்சே கெவுனியிலே யிருபத்தொரு பீரங்கிப்போட்டார்கள். பிற்பாடு துரையவர்கள் வீட்டுக்கு வந்தவுடனே வெகுமானத்தைக்கொண்டுபோய்த் துரையவர்கள் கையிலே கொடுத்தவுடனே கோட்டையிலே இருபத்தொரு பீரங்கிப் போட்டார்கள்.

வெகுமானம் வந்த வயணம் ஸ்ரீ துரையவர்களுக்கு: —

| | |
|---|---|
| குதிரை | 1 |
| சிரொப்பா | 1 |
| சின்ன துரையவர்களுக்கு சிரொப்பா | 1 |
| மதாம் துய்ப்ளேய்ச்சுக்கு சாமெவார் | 2 |
| ஒடினி | 1 |
| ஷை குமாரத்திக்கு ஒடினி | 1 |

இந்தப்படிக்கு வெகுமானம் வந்தது. துரையவர்கள் முன்னே கொண்டுபோய் வைத்தவுடனே அவரவர் வெகுமானத்தை அவரவருக்குக் கொடுத்துவிட்டுச் சின்னதுரைக்கு வந்த வெகுமானத்தை மாத்திரம் அவருக்குக் கொடாமல் எடுத்துவைத்து முசியே தெப்பிரமேனிக்குச் சென்னப்பட்டணத்துக்கு அனுப்புகிறதாக இருக்குது. துரையவர்களுக்கு வந்த வெகுமானம் சிரொப்பாவிலே முகிஷி பாகையை மாத்திரம் எடுத்து ஒரு துலுக்கனைக் கட்டச் சொல்விக் கட்டினபாகையை வாங்கி துரையவர்கள் சிரசிலே தரித்துக்கொண்டார்கள். தரித்துக்கொண்டவுடனே வெள்ளைக்காரரெல்லாரும் வந்து எதிரே நின்றவர்கள் அவரவர், சலாம்பண்ணினார்கள்.

அதன்பேரிலே துரையவர்களும் சந்தோஷமாய்ப் பேசிக் கொண்டிருந்து வெகுமானங் கொண்டுவந்த துலுக்கனைப் பார்த்து விடுதிக்குப் போய் ஆசுதாபண்ணிக்கொள்ளச் சொல்லி உத்தாரங்கொடுத்தார்கள். அந்தமட்டிலே அவரு மனுப்புவித்துக்கொண்டு அவருடைய விடுதிக்குப் போய் விட்டார். அவருக்குச் சீதா அனுப்புவிக்கச் சொல்லுவித் தார்கள். அந்தப்படிக்குப் பரசுராமப்பிள்ளையை அழைத்து வந்திருக்கிற மனுஷருக்குச் சாப்பாடு மற்றதுகள் பத்திரமாய் விசாரிக்கச்சொல்லிச் சொன்னோம். ஆனால், நபாபு மமுதல்லி கான் அனுப்பின வெகுமானம் சிரோப்பாவிலே பாகைமாத்திர மிழுத்துக்கொண்டு கட்டிக்கொண்டது. எதனாலேயென்றால் துரையவர்களும், மமுதல்லியவர்களும் அண்ணன் தம்பி என் கிற மரியாதையினாலே அவர் பாகையை இவர் கட்டிக் கொள்ளுகிறதும், இவருடைய பாகையை அவர் கட்டிக்கொள்ளு கிறதுமாகச்சே பேதகமில்லாமல் எடுத்துக் கட்டிக்கொண் டார்.

இற்றைநாள் காலமே ஒன்பது மணிக்கு மமுதல்லிகான் அண்டையிலே யிருந்து வெகுமானங் கொண்டுவந்து மகம்மது இசுமாயில் என்கிறவனுக்குத் துரையவர்கள் கொடுத்த வெகுமானம்:

| | |
|---|---|
| சிகப்பு சகலாத்துச் சிப்பம் | 1 |
| ஆகுதுங்கரி சீசா | 4 |
| கத்திரிக்கோல் | 2 |
| சூர் கத்தி | 2 |

இதுகள் வெகுமானம் கொடுத்தார்கள்.

நபாபு மமுதல்லிகானுக்கு அனுப்பின வெகுமானம்:

| | |
|---|---|
| வெள்ளிகட்டின பெரிய துப்பாக்கி | 1 |
| வெள்ளிகட்டின பிஸ்தோல் சோடு | 2 |
| பித்தளைகட்டின பிஸ்தோல் சோடு | 2 |
| பச்சை முகமல் கிசம் | 20 |
| பொன்பிடிபோட்ட கத்தி | 1 |
| விநோதமாய்த் தெரிகிற சீனாபெட்டி | 1 |
| சகலாத்து புட்டேதார் திபாசு | 4 |
| இரண்டு வர்ண சகலாத்துச் சிப்பம் | 1 |

| | |
|---|---|
| காவாக்கொட்டை மூட்டை | 2 |
| சில்னோர் | 1 |
| ஆகுதுங்கரி சீசா | 24 |
| ஆகுதுங்கரி மெலீசு சீசா | 24 |
| இசுப்பாஞ்சு பொன் கலாம் மார்க்கு | 7 |
| ஆனைக்குட்டி | 1 |
| வெள்ளி கலா மார்க்கு | 2 |
| கத்திரிக்கோல் | 10 |
| இங்கிலீசு சட்டம் சகலாத்து கட்டு | 10 |
| பிரான்சு சட்டம் சகலாத்து கட்டு | 8 |
| இரட்டைக்குழாய் துப்பாக்கி | 1 |
| மெல்லீசு துப்பாக்கி | 1 |
| பொன் எகத்தோபி கிசம் | 44½ |
| சிகப்பு மக்மல் சிப்பம் | 2 |
| பன்னீர் சீசா | 18 |
| மெழுகுவத்தி மூடுகிற வீதர் | 4 |
| கப்பல் பார்க்கிற சின்ன நச்சுக்குழல் | ¼ |
| கற்கண்டு பெட்டி | 1 |
| கண்ணாடி | 2 |
| அளுக்காம் ஓடு பிடிபோட்ட கத்தி | 6 |
| ஆகுதோ சம்பரோ சீசா | 2¼ |
| முசுக்கத்தோ ரென்கிற பொன்கலாம் மார்க்கு | 12 |
| அவுன்சு | 5 |
| பொன்கெண்டை மார்க்கு | 2 |
| பொன் கலாம் அஷுரூர் மார்க்கு | 2 |
| மெழுகுவத்தி பெட்டி | 1 |
| சகலாத்து புட்டேதார் சிப்பம் | 1 |
| கப்பல் பார்க்கிற நீள நச்சுக்குழல் | 1 |
| ஆக தினுசு கிரயம் வராகன் | |

ஆக தினுசுகளெல்லாம் ஏகத்துக்குக் கட்டி நபாபு மகம்மதல்லிகான் அவர்கள் அண்டைக்கு வெகுமானம் அனுப்புகிறதற்குக் கட்டித் தயாராய் வைத்திருக்கிறது.

நவாபு அன்வருதீகான் சாயபு அவர்களுக்கு வேதமான தினுசு வயனம்:—

| | |
|---|---|
| அருகுகலான் போட்டுத் தைய்த்திருக்கிற மொகமல் மெத்தை | 1 |

| | |
|---|---|
| அந்தச் சோடு அருகு கலான் போட்டுதைத் திருக்கிற தலைக்காணி | 3 |
| பொன்கலாம் மார்க்கு | 5 |
| பொன்கலாம் இஸ்பாஞ்சுது மார்க்கு 9 அவுன்சு | 4 |
| பின்னை ஒரு சட்டம் பொன்கலாம் 4 அவுன்சு 12 மார்க்கு நீள முகமல் வேலைப்பாடு செய்திருக்கிற கிசம் | 20 |
| சிகப்பு முகமல் கிசம் | 118½ |
| சிகப்பு முகமல் புட்டேதார் இங்கிலீசு சட்டம் சிப்பம் | 2 |
| பன்னீர் சீசா | 18 |
| தோப்புதோர் கிசம் சிப்பம் | 4 |
| இரட்டைக்குழாய் துப்பாக்கி | 2 |
| நாணைய துப்பாக்கி | 2 |
| பித்தளை வேலைசெய்த பிஸ்தோல் சோடு | 4 |
| புட்டேதார் சகலாத்து பிச்சர்ணு திவாசு | 4 |
| கப்பல் பார்க்கிற சின்ன நச்சுக்குழாய் | 6 |
| கண்ணாடி | 4 |
| மெழுகு வத்தி மூடுகிற வீதர் | 6 |
| இரண்டு வர்ண சகலாத்து சென்னப்பட்டணம் | 23½ |
| கற்கண்டு பெட்டி | 1 |
| கத்தி | 6 |
| கத்திரிக்கோல் | 12 |
| சின்ன கத்தி | 12 |
| ஆருது மெல்லீசு சீசா | 24 |
| ஆகுதுங்கரி சீசா | 24 |
| பொன் கெண்டை மார்க்கு | 10 |
| சகலாத்து புட்டேதார் சிப்பம் | 1 |
| இங்கிலீசு சட்டம் சகலாத்து கட்டு | 20 |
| பிரான்சு சட்டம் சகலாத்து கட்டு | 20 |
| மணிலாவேலை பன்னீர்சொம்பு பொன்முலாம் பூசின சொம்பு | 2 |
| அதை வைக்கிற தட்டு வேலைப்பாடு மூன்று பாதம் வைத்திருக்கிற தட்டு | 2 |
| திராசு | 1 |

இந்தப் பிரகாரம் நபாபு அன்வருதிகான் அவர்களுக்கு வெகுமானங் கட்டினார்கள்.

1747 ஆ பிப்ரவரி ௴ 23 உக்கு அக்ஷய ஸு மாசி ௴ 15உ

இற்றைநாள் காலத்தாலே மகம்மதாக்கல் என்னண்டைக்கு வந்து எனக்கு மூன்று நாளாய்ப் பிடித்து ராமாரு தூக்கமில்லை. சாப்பாட்டு மேலேயா மனதில்லை. ஏனென்றால், நபாபு அன்வருதிகானுக்கு உசேன் சாயபு பேசித் தீர்த்தானால் லட்சம் ரூபாய் நசர் கொடுக்கத் தீர்த்து எழுதி அனுப்புவித்தார். அதற்குச் சம்மதியாமல் எங்கள் மனதுக்கு சம்மதியானது தினுசுகளாய்க் கட்டி அனுப்புவிப்போமென்று சொன்னால் நான் செய்யவேண்டியதென்ன? அவர்களானால் பதினைந்து லட்சம் இருபது லட்சம் என்றிருந்ததெல்லாம் போய் லட்சம் ரூபாய் மட்டுக்குள்ளே சம்மதித்து வந்ததுண்டானால் இந்த வேலையிலே என்னைத்தானே போய் மாபூசுகானை அழைத்துக்கொண்டு வரச்சொல்லி எல்லாவற்றிற்கும் மாபூசுகானிவ்விடத்துக்கு வந்ததுண்டானால் முகமுகமாய்ப் பேசிக்கொண்டால் இவர்கள் வீட்டுக்கு வந்த முகாதர ஒன்றிருக்குமிதல்லாமல் அவர்களையும் மனதுக்குச் சம்மதியானபடிக்குத் தீர்த்துப்போடுகிறேமென்று சொல்லி என்னை நீர் மோசஞ்செய்துபோட்டீர். என் குடி கெட்டுப்போச்சுது. நான் மெத்த கெட்டிக்காரனென்றும் நான் போனதுண்டானால் பின்னையும் விசேஷித்தக் காரியமுஞ் சேகரம் பண்ணிக்கொண்டு வருவேனென்று என்னை அனுப்புவித்ததற்கு நான் போய் அவர்கள் முகத்துக்கு முன்னே நின்று என்ன உத்தரவு சொல்லப்போகிறேன். இத்தனையும் உம்மைத்தொட்டு மடிப்பு வந்ததென்று சொல்லி ரொம்பவும் அங்கலாய்த்துக்கொண்டான். அதன்பேரிலே நானிருந்துகொண்டு நீரொன்றுக்கும் பயப்படாதேயும், சுவாமி இந்தமட்டுக்கும் நடப்பித்தவர் முற்றிலும் நன்மையாய்த்தானே நடக்கும். அதற்கு நீரொன்றும் சிந்தை பண்ணத்தேவையில்லை. தைரியமாய்த்தானேயிரும். உமக்கென்ன நபாபு அன்வருதிகானுக்குக் கட்டுகிற தினுசு மாபூசுகான் மமுதல்லிகானுக்கும் கொடுத்ததுமல்லாமல் உசேன் சாயபுக்கும், சம்பதிராயனுக்கும், அன்வருதிகானுக்கும் இவர்கள் மூன்று பேருக்கும் வெகுமானம் அனுப்பத்தக்கதாகப் பண்ணுகிறேன்.

அதுகூட சற்றேறக்குறைய லக்ஷம் ரூபாய்க்குக்கிட்டுபடியாய்ச் சரியாகுதே! உமக்கென்ன யோசனையென்று சொன்னேன். அதேது நீர் அவர்களுக்கு வெகுமானம் கொடுக்கிறதேதென்று கேட்டார். அதற்கு நான் சொன்னது: முன்னே ஒரு நாளிந்தப் படிக்கு உக்ந்த சமாதானம் நடக்கிறதற்கு ஆரம்பிக்கச்சே, துரையவர்களிருந்துகொண்டு அவர்கள் சமாதானத்துக்கு வந்ததுண்டானால் அவர்களுக்கென்ன கொடுக்கவேணுமென்று கேட்டார்கள். அதற்கு நான் சொன்னது: எனக்கென்ன தெரியுமென்றும், ஆண்டவனே உங்களுக்குச் சகலமும் தெரிந்திருக்கச்சே நான் சொல்லவேண்டியதெல்லாம் என்னவிருக்கிறது, ஆனாலும், எனக்குத் தோன்றுகிறதைச் சொல்லுகிறேன் என்று சொல்லி, அப்பால் நான் சொன்னது: அவர்களுக்குப் பலவிதமும் வெகுமான சகுமானம் சகலமும் லக்ஷம் ரூபாய் மட்டுக்கும் கொடுக்கலாம்போலே தோற்றுது. அப்பாலே தேவரீரவர்கள் சித்தத்திற்குச் சம்மதியானபடி யென்று சொன்னேன். அதற்கவர் சொன்னது: நீ நல்ல யோசனை சொன்னாய். என்னுடைய மனதிலேயும் அந்தப்படித் தான் நினைத்தேன். சரிப்பட்டுதென்று சொன்னார். ஆனபடியினாலேதானந்தப்படிக்கு மேலே எழுதியிருக்கப்பட்ட மூன்று பேருக்கும் கொடுப்பிக்கிறது கூட லக்ஷம் ரூபாய்க்குச் சரிக்கட்டி வருமென்று சொன்னேன். அந்தமட்டிலே ஸ்ரீ துரையவர்களண்டைக்குப் போய்த் தெரியப்படச்சொல்லுவோம் என்கிறதாய் மகம்மதாக்கல்கூட துரையவர்கள் வீட்டுக்கு வந்தான். அதன்பேரிலே முசே நீலார்ஸையும் கூட அழைத்துக்கொண்டுபோய் ஸ்ரீ துரையவர்களுடனே ரொம்பவும் தெரியப்படச்சொல்லி, மகம்மதாக்கலானால் ரொம்பவும் தாபந்தப்படுகிறார் என்று வயணப்படுத்திச் சொன்ன விடத்திலே அதற்கவர்களிருந்துகொண்டு நாமேதாகிலும் அவர்களுக்குக் கொடுக்கவேணுமா? நம்மைத் தொட்டு வந்த சேதமேதாகிலுமுண்டா? நாம் கொடுக்கத்தக்க காரியமென்னவிருக்கிறது? ஆனாலும், அவர்களுடைய சிநேகத்தைக் குறித்துச்செய்கிறதேயல்லாமல் மற்றப்படி கொடுக்கக்கூடிய காரியமே என்று ரொம்பவும் தகரார்பண்ணினார்கள். அதுகளுக்கெல்லாம் மார்க்கமாய் ரொம்பவும் தெரியப்படச் சொன்னோம். அதன்பேரிலே நல்லதுதான், ஆயிரம் வராகன் இரண்டாயிரம்

வராகன் மெத்த பெரிய காரியமல்ல. அவர்கள் மனதுக்குச் சம்மதியானபடிதானே நடப்பிப்போமேயல்லாமல் இப்பவும் இப்போது நபாபு அன்வருதிகான் சயாபுக்குக் கட்டுகிற தினுசு சாப்பித்தாவை கொண்டுபோய் மாபூசுகானவர்களுக்குக் காண்பித்து இன்னமிதற்குமேல் விசேஷித்து எவ்வளவு ஆகிலும் கட்டுகிறதா? அந்த வயணம் நீர் போய் மாபூசுகானைக் கண்டு வார்த்தைச் சொல்லித் தெரிந்துகொண்டு வாருமென்கிறதாய் மகம்மதாக்கலைத் தண்டுக்குப் போகச்சொன்னார்கள். இதல்லாமல், துரையவர்கள் பின்னையும் சொன்ன வயணமென்னவென்றால்: நீர் மாபூசுகானண்டைக்குப் போனவிடத்திலே சொல்லுகிற வயணமென்னவென்றால்: மாபூசுகானுக்குக் கொடுத்தபடிக்கு உசேன் சாயபு அவர்களுக்கும் சம்பஇராயரவர்களுக்கும் அன்வருதிகானுக்கும் வெகுமானம் கொடுத்தனுப்புகிறோம். எல்லாம் லக்ஷம் ரூபாய்க்குச் சரிகட்டிக் கொடுக்கிறதாய்ச் சொல்லி அவர்கள் தண்டை அப்புறப்பட்டுப் போகச்சொல்லி அனுப்பிவிட்டு வாரும் என்று சொல்லி இவ்விடத்திலே ஆதிவாரத்தன்றைக்குப் பண்டிகை கொண்டாடப் போகிறோமென்று சொன்னார்கள். அதன்பேரிலே நல்லது போய்வருகிறேன் என்று அனுப்புவித்துக்கொண்டு அவன் வீடுதிக்குப் போய்விட்டான்.

அந்தப்படிக்கு மாபூசுகானவர்கள் வெகுமானமும் மமுதல்லிகானவர்களுடைய வெகுமானமும் எடுப்பித்துக்கொண்டு நபாபு அன்வருதிகான் சாயபு அவர்களுக்குக் கட்டுகிற வெகுமானத்துக்குச் சாப்பித்தாவும் இதுகளிலெல்லாம் எடுப்பித்துக் கொண்டு மகம்மதாக்கல் பயணப்பட்டுத் தண்டுக்குப்போனார்.

இற்றைநாள் நடந்த அதிசயமென்னவென்றால்: ஆசறத்து மமுதல்லகானவர்கள் எனக்கு வெகுமானம் அனுப்பினார்கள். அதென்னவென்றால்: தம்முடைய கையிலே காசா வைத்துக் கொண்டிருக்கிற குப்பத்து வேலை செய்திருக்கிற, பருஞ்சி போட்டிருக்கிற

| | |
|---|---|
| பெரிய கத்தி | 1 |
| முக்கிஷி பாகை | 1 |
| பாளா பந்து | 1 |
| கில் காப்பு | 1 |

இதுகளெல்லாம் வெகு தயவாய் நமக்கு அனுப்புவித்தார்கள். ஆனால் அந்தக் கத்தியை எல்லாரும் பார்த்து மெத்த நேர்த்தியாயிருக்குதென்று ரொம்பவும் தாரீபு பண்ணினார்கள். அதன்பேரிலே இந்த வெகுமானத்தைத் துரையவர்களண்டை கொண்டுவரச்சொல்லி நான் முன்னே போய் இந்தச் சேதியைச் சொன்னேன். அவர்களும் ரொம்பவும் சந்தோஷமாய்த் தானே இருந்தார்கள். அப்படியிருக்கச்சே வெகுமானத்தைக் கொண்டுவந்து துரையவர்கள் முன்னே வைத்தார்கள். துரையவர்கள் பார்த்து அவர் கையிலே கொடுத்துக் கொடுத்தார். அதைக் கொடுத்து எனக்குபசாரவார்த்தைப் பறங்கிப்பாஷையிலே சொன்னார்கள். அதன்பேரிலே நானுமதற்கேற்றபடிக்கு உபசாரமாய்ச் சொல்லி வெகுமானத்தை வாங்கிக்கொண்டு பாக்குக்கிடங்குக்கு வந்தேன்.

இதல்லாமல் முன் (14 உ) நடந்த சேதி என்னவென்றால்: மதனாந்தபண்டிதர் வந்து சொன்னதென்னவென்றால்: மதாம் துய்ப்ளேய்க்ஸ் தன்னை அழைத்து அவர்கள் மாதாவின்பேரில் ஆணையிட்டுவித்துக்கொண்டு சிறிது சம்மதிகேட்டதாய் மதனாந்தபண்டிதர் வந்து சொன்னார், அதென்ன சம்மதி யென்று கேட்டார். சொல்லுகிறேன் கேளுங்கோளென்று சொன்ன சேதியாவது: ரங்கப்பன் மெத்த பொல்லாதவன். அவனுக்குக் கடனிருக்கிறது. அந்தக் கடனை சென்னப்பட்டணத்து வர்த்தகரை அழைப்பிக்கிறதற்குள்ளேயும் இந்த நபாபு சம்மதி தீருகிறதற்குள்ளேயும் தன் கடனை அடைத்துப்போடவேணுமென்று யோசனைபண்ணி துரையினாலிவன் பொய் சொல்லுகிறவனல்ல. தன்பேரிலே பட்சமாயிருக்கிறவனென்கிறதைத் தோன்றியிருக்கிறது. இவனுக்கு நன்றாய்த் தோன்றியிருக்கிறபடியினாலே இவன் துரைக்குப் போய், பொய்களைச்சொல்லிக் கொண்டு, ஆற்காட்டிலே யிருந்து வந்த ஸ்தானாதிபதி துலுக்கனை கைக்குள்ளே வைத்துக்கொண்டு அங்கே ஒன்று சொல்லுகிறது மிவர்களுடனே ஒன்று சொல்லுகிறதும் இவர்கள் மார்க்கத்திலே வராமற்போனார்களென்று தண்டை திருக்காஞ்சியிலே கொண்டுவந்து இறக்கி வைத்தாரென்று இவன் நடத்துகிற தம்முடைய தப்பு சம்மதிகளெல்லாம் நானன்றறிவேன். அதுகளுக்கெல்லாம் நான் விசாரித்திருக்கிறேன் என்றும் இவனை ஐந்தாறு நாளையிலே பசீதுபண்ணிவைக்கிறோ

மென்றும், இதுகள் நடந்த சமாசாரங்களென்னவென்று கேட்டதாகவும், அதற்குத் தான் சொன்னது: ஏது அம்மா அப்படி யுள் வட்டம் புறவட்டம்பண்ணி லக்ஷாந்திரமாய்க் கொண்டுபோகிறதற்கு இவன் கைக்குள்ளே துரைகள் ரொக்கமாயிருக்கிறார்களா அல்லவென்று துரைகள் கொடுக்கப் போகிற துகைதான் உங்களுக்குத் தெரிந்திருக்கிறதே, அதுவும் தினுசு. அதற்கு அவர்கள் மனுஷன் கையிலே துரையவர்கள் ரூபுருபாய் ஒப்புவிக்கப்போகிறார். அப்பால் எசமான்களுக் குத் தினுசு சாப்பித்தாப்படிக்கு அவர்கள் ஒப்பித்துக் கொள்ளுகிறது. இதற்குப் பாரிசு பேசுகிற துபாசி மூசே தெலார்சு சமஸ்தமான பேச்சும் அவன் மாரிபத்திலே நடக் கிறது. துரை சொன்னபடிக்குக் காகிதத்தைக் கொடுக்கிறது மாத்திரமே யல்லாமல் பின்னை ஒன்றுங் காணேமென்று சொன்னதாகவும் இதன்பேரிலே மதாம் துய்ப்ளேய்க்சு இருந்து கொண்டு உனக்கொன்றுந் தெரியாது. அதுகளெல்லாம் நான் நன்றாய் விசாரித்திருக்கிறேன் என்று மினிமேல் நடக்கிற சேதி அப்போதைக்கப்போது வந்து சொல்லச்சொல்லியும், தான் கேட்ட சேதி ரங்கப்பனுடனே சொல்லவேண்டாமென்று சொன்னுளென்றும், சின்னமுதலியார் அறியப்போகாதென்றும் சொன்னபடியினாலே அவர் சொன்னதாய்க் காணுதென்றும் இப்படிச்சொல்லி நீங்களிந்தப் பேச்சு வெளியிலே சொல்ல வேண்டாமென்றும் பரவசமாய்க் கேட்டாள். எனக்கொருத்த ருடனே சொல்லக் கவையில்லை. என்னவிருக்கிறது. அப்படிச் சொல்லுகிறதில்லை. இப்போதல்ல, இந்தத் துரை வந்து ஐந்து வருஷமாச்சுது. கனகராயமுதலி செத்து ஒரு வருஷமாச்சுது. கனகராயமுதலி நாலு வருஷமிருந்தாரே அந்த நாலு வருஷ மும் என் மாரிபத்திலேதானே நடந்தது. அப்போது சேனே சம்மதி சேனே வழக்குகள் தீர்ந்தது. அப்படி வாங்கவேணு மானால் லக்ஷம் வராகன் சம்பாதிப்பேன். அப்படிப்பட்ட புத்தி யைச் சுவாமி இன்றையவரைக்கும் கொடுத்ததில்லை. இனிமேல் என்னமாய் சுவாமி நடத்தவிருக்கிறாரோ, நானறியேன். அம் மாளிப்போது விளங்குகிறோமென்னபடிக்கு விளங்கினால் நல்லதென்று சொன்னவுடனே இந்த மாபூசுகாவ் வந்து சமாதானமாகாமற்போனால் அம்மாளுங்கள் பேரிலே பழி வைப்பாள். தெய்வாதீனமாய்ச் சமாதானமாய்ப் போனது கொண்டு ஒன்றுமில்லாமற் போச்சுது. சொன்னவர்கள் முகம்

கருப்புப்பண்ணிக்கொண்டார்கள் என்றும் மதனுந்த பண்டி தர் சொன்னுர். அதற்கு நான் சொன்னது: இந்தத் துரைக்குக் கீர்த்திப் பிரதிஷ்டை யுண்டாகவேணுமென்று நான் சுவா மிக்குப் பொதுவாய் நடந்தாலப்பாலே அவர்கள் என்ன சொன் னுல்தானென்ன? பயமா! மடியிலே கனமிருந்தால் வழியிலே பயமென்று பெரியவர்கள் சொல்லுகிறது பொய்யா! ஆனுல் ஒருமாதத்திற்கு முன்னே அம்மாள் தூலுங்கர் சம்மதியென்ன நடக்குதோ அதெல்லாம் அடிக்கடி வந்து கபுறு சொல்லு என்று சொல்லுவாள். துரையானுலிந்தப் பேச்சுகள் ஒருத்த னுடனேயாகிலுஞ் சொல்லவேண்டாமென்று சொல்லியிருக் கிருர். பிரபுமனதிலே யிவன் வெளியிலே சொல்லாதவனென்று எந்தப் பேச்சும் தாராளமாய் என்னுடனே அவர் சொல்ல, அப்பால் நான் சொன்னுல் அது நமக்கு சுவாமி துரோக மாகுது. அவருத்தாரந் தள்ளுகிறபோது இரண்டாவது விளை யாட்டுப் பேச்சல்ல. சமஸ்தமானதுடனே சேர்ந்த பேச் சுகள் இது சொல்லாமலிருக்கிறதே யுக்தமென்று யோசனை பண்ணினேன். ஆனுலிதைத்தொட்டு அம்மாள் மனதுக்குத் தாங்களாயிருக்கு மிதன்பேரி லேதாகிலும் புனைச்சுருட்டு முடைவாள். இல்லாததும் பொல்லாததும் துரைக்குச் சொல்லு வாள். துரை கேட்கிறதில்லையென்றும் அறிவாள். அதற்குப் பக்கத்திலேயிருக்கிற வெள்ளைக்காரரைக்கொண்டு சொல்லு வித்தாகிலும் ஒரு தொந்திரவுபண்ணுவாளென்று அறிவேன். என்னவந்தாலும் வரட்டும். நாமே எந்தப்பிரபுவின் கீழேயிருக் கிருேமோ அவருத்தாரப்படிக்கு அவருக்கு வஞ்சனை பண்ணு மல் நடந்துகொண்டால் வந்ததெல்லாம் வரட்டுமென்று தீர்க்க யோசனை பண்ணிக்கொண்டு என்ன சேதி வந்ததென்று கேட் டால், நான் வந்து சொல்லுகிறேனென்று வெளிப்பேச்சாய்ச் சொன்னதின்பேரிலே. இவன் வாரிக்கொண்டு போகிற கொள் ளையை நாம் வாரிக்கொள்ளுவோமென்றுந் திரிகிருர்கள். உள் புகுந்து பார்த்தால் அப்போது தெரியும். வந்ததெல்லாம் வரட் டும். சுவாமியிருக்கிருர் என்று நான் யோசனை பண்ணிக் கொண்டு மதாம் கேட்கிறதற்கு வெளிக்கபுருய்ச் சொல்லுகிற தேயல்லாமல் உண்மைப் பசுமைக்கபுறு சொல்லுகிறதில்லை. அந்தக் கோபம் ஒன்றுக்கிரண்டாவது சென்னப்பட்டணம் வர்த்தகர்களை அழைப்பிக்கச் சொல்லி ஸ்ரீ துரையவர்களென்

நேரமும் கோபம் பண்ணுகிறதைத்தொட்டு நான் சென்னப் பட்டணத்து வர்த்தகர் வெளியே போயிருக்கிறவர்களண்டைக்கு மனுஷரை அனுப்பிக் காகிதங்களும் அனுப்பிப் பேச்சு வார்த்தை நடப்பிக்கிறதற்கு நான் வெகு திரவியமவர்களைத் தொட்டு பிரயோசனங் கொண்டுபோகிறதாய் அது தன் வழியிலே வரத்தக்கதாகப் பண்ணிக்கொண்டு அதனாலே வெகு திரவியம் சம்பாதிக்கலாகும் என்று மனதிலே வைத்துக் கொண்டும் இதல்லாமல் சென்னப்பட்டணங் குபேரன்பட்டணம் கொள்ளைப் போச்சுது. அவனவன் போனவனெல்லாம் பதினாயிரமும், இருபதினாயிரமும், லக்ஷமுமிரண்டுலக்ஷமும் சம்பாதித்தார்கள். நமக்கொன்றுமில்லையென்று ராத்திரியும் பகலும் இதுவே நினைப்பாயிருக்கிறவளானபடியினாலே இந்தச் சந்து காட்டிலே சும்மாவிருந்தால் ஆகாதென்று யோசனைபண்ணி இதற்கு நம்முடைபேரிலே உபாயமாய் ரங்கப்பனல்லவோ துரையிடத்திலே பேசுகிறவன். இவனில்லாமற்போனால் நாம் சம்மதியானபடி நடத்தலாமென்று யோசனைபண்ணி இதற்கு நம்முடைய பேரிலேதாகிலும் ஒரு பேச்சுகளைக் கிட்டேயிருக்கிறவர்களைக்கொண்டு சொல்லிவைக்க வேணுமென்று இப்படி நடத்துகிறான். இதல்லாமல் பத்து நாளைக்கு முன்னே அப்புடனே சொல்லி அனுப்பி எனக்குச் சொல்லச்சொன்னது: நீ துரையுடனே சொல்லுகிறதெல்லாம் பொய்யேயல்லாமல் மெய்யில்லை. இதை நான் துரையுடனே சொல்லுவேனென்று சொல்லி அனுப்பினதற்கு அப்படியேதாகிலும் உண்டானால் நன்றாய் விசாரிக்கலாம். அப்போது தெரியுமென்று சொல்லியனுப்பினேன். இப்படி இவன் பண்ணுகிறது எசமானுக்கு அபகீர்த்தியாய் நிற்கும். நடக்கிறதெல்லாம் பார்த்துக்கொண்டிருப்போம். ஆனாலிது காரியத்தளவிலே மதனாந்த பண்டிதனைத் தொட்டும் அம்மாளுடனே சொல்லியிருக்கிறது எவ்வளவாகிலும் உண்டாயிருக்கும். அதெப்படியென்றால், சின்ன முதலிக்கு இந்த உத்தியோகம் வரவேணுமென்கிறவன் மனதிலே ஆசையாயிருக்கிறபடியினாலேயும் சின்ன முதலியுமிவனும் ஒருமையானபடியினாலேயும் இவனுமென்னமாகிலும் சொல்லியிருப்பான்போலே காணுது. ஆனாலுமிவனப்படியேதாகிலும் சொல்லுகிறதற்கு இவ்விடத்திலே யிடமிருந்தால் அல்லவோ சொல்லப்போகிறான். ஆகிலுமிவன் சொல்லப்போகிறதென்னவென்றால்: துரையவர்கள் சொல்லு

கிற உத்தாரத்தின்படி நடத்துகிறதுமுண்டு. அதல்லாமல் சிறிது காரியங்கள் தன் மனதின்படி நடக்கிறதுமுண்டு என்று அது ஒரு சூனுதையர்க்குறித்து அந்தச் சாடையாய் ஏதாகிலும் சொல்லியிருப்பான்போலே காணுது. ஆனுல் சுவாமியினுடைய கிருபையிருக்கிறபடியினுலே ஆரென்ன சொன்னுலும் என்ன, நடக்கிற காரியம் உள்ளபடிக்கு நடக்கப்போகுது. நான் பார்க்கிற காரியம் தெய்வமத்தியஸ்தமாகி, சுவாமிக்குப் பொதுவாய் நடந்துகொள்ளுகிறேன். இந்தத் துலுக்கர் காரியம் வந்தவிடத்திலே இந்நக் காரியம் எந்தவிதமாகிலும் ஒரிசுபடுத்தித் துரையவர்களுக்குங் கீர்த்தி வருவித்து நாமும் பிரதிஷ்டைப்படவேணு மென்கிறதாய்த் தன்னளவிலே, என்னுடைய கைப்பணத்தையும் செலவுபண்ணி இரவு பகல் நித்திரையில்லாமல் எந்தெந்தப்படி உபாயமுண்டோ அந்தப் படிக்கெல்லாம் பிரயத்தனம் பண்ணி அவர்களைச் சமாதானத்துக்குக் கொண்டுவந்து விடப்பட்டபாடு தெய்வத்துக்கும், என் மனதுக்கும், துரையவர்களுக்குந் தெரியுமேயல்லாமல் பின்னை ஒருத்தருக்கும் தெரியாது. ஆநச் சேதி, இதனுலே துரையவர்களுக்கு மகத்தாகிய கீர்த்தி வந்தத.

1747 ஆ பிப்ரவரி மீ 23 உ க்கு அக்ஷய ஞூ மாசி மீ 15 உ வியாழக்கிழமை

இற்றைநாள் மத்தியானம் அவ்வாய் சாயபும் சொக்கப்ப முதலியும் இரண்டு பேரும் போய்ச் சகலாத்துக் கேட்டவிடத்திலே துரையவர்களிருந்துகொண்டு பிரஞ்சு சட்டம் எடுத்துக்கொண்டு போவென்று சொல்லச் சொன்னவிடத்திலே சொக்கப்ப முதலியென்கிறவன் துலுக்கன் கிட்டே போய் அதுவேண்டாம் இங்கிலீசு சட்டம் சகலாத்துக் கேளென்று சொன்னுன். அந்தச்சாடை துரையவர்கள் கண்டு சொக்கப்ப முதலியைப் பார்த்து நீ மெத்த ஆகாதவன். மெத்த திருடன். அப்பாலே போகச்சொல்லென்கிறதாய் ரொம்பவுங் கோபம் பண்ணினுர்கள். அந்தமட்டிலே வாயை மூடிக்கொண்டிருந்தான். அதன்பேரிலே முப்பதினுயிரம் ரூபாய்க்குச் சகலாத்தும் முப்பதினுயிரம் ரூபாய் ரொக்கமும் கொடுக்கச்சொல்லி முசியே துலாராம் பேருக்குச் சீட்டுக் கொடுத்தார்கள். அதை வாங்கிக்கொண்டு அனுப்புவித்துக்கொண்டு போய்விட்டார்

*1747* ஆ பிப்ரவரி மீ 24உ க்கு அக்ஷய ஹு மாசி மீ 16உ வெள்ளிக்கிழமை.

இற்றைநாள் நபாபு மாபூசுகான் அவர்கள் கடுதாசி எழுதி யனுப்பின வயணம் என்னவென்றால்: இவ்விடத்திலேயிருந்து வெகுமான தினுசுகளெல்லாம் மகம்மதாக்கல் கொண்டு போனாரே அதுகளெல்லாம் சாப்பித்தாப்படிக்கு அவ்விடத் திலே சரிபார்க்கிறவிடத்திலே ஒரு கப்பல் பார்க்கிற நச்சுக் குழல் ஒன்றை மறந்துபோய் இவ்விடத்திலேதானே போட்டு விட்டுப் போனபடியினாலேயும் இவ்விடத்திலே குறைந்தது. ஆகையினாலே அந்தத் துருபினை அனுப்புவிக்கச்சொல்லி எழுதி வந்து அதை விசாரிக்குமிடத்தில் துரையவர்களிருந்துகொண்டு, அதை எடுத்துக் கொடுத்துப் பதில் காகிதமும் எழுதிக் கொடுத்து அனுப்பிவிட்டோம். இதல்லாமல் மகம்மதாக்கல் என் பேருக்கு ஒரு கடுதாசி எழுதினார்கள். அந்தக் கடுதாசியிலே எழுதியிருந்த வயணமென்னவென்றால்: நபாபு அன்வருதிகான் சாயபு அவர்களுக்கு வெகுமானங் கட்டுகிற சாப்பித்தாவைப் பார்த்தவுடனே அவர்களுக்குச் சம்மதிப்படாமல் ஒருத்தருக் கொருத்தர் உத்தாளப்பட்டு ரொம்பவும் கோபித்துக்கொண்டு இன்னம் பின்னையும் விஸ்தாரமாய்க்கட்டவேணுமென்றவிடத் திலே இவரிருந்துகொண்டு நீர் போய் முகமுகமாய்க் கண்டு பேசி ஒருத்தருக்கொருத்தர் ராசியாய் வெகுமானமும் வாங்கிக் கொண்டு வந்திருக்க, இனிமேலுக்குச் சம்மதியல்லவென்று சொன்னீர்களானால் அதனாலே விருதா பொல்லாப்பு மாத் திரமே யல்லாமல் காரியமில்லையென்று சொன்னதாகவும் அதன்பேரிலே சம்மதித்து அந்தச் சாப்பித்தாப்படிக்கு வெகு மானங் கட்டியனுப்பச் சொன்னார்களென்றும் அவர்கள் அண்ணன் தம்பி இரண்டுபேரும் நாளை பாளையங்கூச்சுப் பண்ணி ஆற்காட்டுக்குப் பயணமாய்ப் போகிறார்களென்றும் இவர்கள் பயணம் புறப்பட்டுப் போனபிற்பாடு நானனுப்பு வித்துக் கொண்டு புதுச்சேரிக்கு வருகிறோமென்றெழுதியனுப் பினார். அந்தக் கடுதாசியிலே எழுதிய வயணமெல்லாம் ஸ்ரீ துரையவர்களிடத்திலே சொன்னவிடத்திலே அவர்களும் ரொம்ப சந்தோஷப்பட்டு இன்றையதினம் நம்முடைய மனதின் படி சரிப்படுத்துகிற ரங்கப்பா இத்தனை நாளும் நீ பிரயாசைப் பட்டதற்கு இன்றையதினம் சபலமாச்சுதென்று சொல்லி

ரொம்பவும் சந்தோஷப்பட்டுக்கொண்டிருந்தார்கள். எனக்கு மின்றையதினம் மனது குதிர்ப்பட்டது. இதல்லாமல் மமுதல் லிகான் கடுதாசி துரையவர்களுக்கு வந்ததிலே எழுதியிருந்த வயணமென்னவென்றால்: நீர் அனுப்புவித்த வெகுமானத்தை நல்ல மனதுடனே அபகரித்துக்கொண்டோமென்றும் அந்தத் தினுசிலே விந்தைவிந்தையாய்க் காணுகிற பெட்டி ஒன்று கெட்டுப்போச்சுது. அதை மறுபடியும் அனுப்புவித்தோம் அதைச் செப்பனிட்டு அனுப்புவிக்கச் சொல்லியும், ஒரு பெட்டி கூட அனுப்புவிக்கச் சொல்லியும் ரொம்ப ரொம்ப உபசாரமாயெழுதி அனுப்புவித்தார். அந்தக் கெட்டுப்போன பெட்டியைச் செப்பனிடக் கூடாமல் அதற்குப் பதில் புதிதாய் வேறு பெட்டி ஒன்றிருந்தது. அதைக் கொடுத்து இனிமேல் வேறே பெட்டியில்லை யென் றுபசாரமாய் எழுதினீரெப்படி யும் வரவேணுமென்று எழுதியும்னுப்பினார்களிதல்லாமல் மகம்மதாக்கலுக்கும் மறுகடுதாசியெப்படியும் மமுதல்லிகானை அழைத்துக்கொண்டு நீர் சீக்கிரமாய் வாருமென்று எழுதி அனுப்பினார்கள்.

*1747* ஆ பிப்ரவரி மீ 25 உ க்கு அக்ஷய ஸ்ரீ மாசி மீ *17* உ சனிவாரம்.

மத்தியானம் தண்டுக்கதலி நபாபுக்கும் துரைக்கும் சமாதான மானதற்குத் திங்கட்கிழமைக்கு இங்கே பண்டிகைக் கொண் டாடுகிறாப்போலே சென்னப்பட்டணத்திலேயும் பண்டிகைக் கொண்டாடச்சொல்லி நாலு மணி வேளை முசே தெப்பிரமேனி பேருக்குக் காகிதமெழுதி டபாலிலே நாளைய சாயங்காலம் கொண்டுபோய்க் கொடுக்கச்சொல்லித் தாக்கீது பண்ணிக் கொடுத்தனுப்பச் சொன்னபடிக்குக் கொடுத்தனுப்பினேன்.

இற்றைநாள் காலமே தண்டிலேயிருந்த மகம்மதாக்கல் ஸ்ரீ துரையவர்கள் பேருக்கு ஒரு கடுதாசியும் என் பேருக் கொரு கடுதாசியும் எழுதியனுப்பினார். அந்தக் கடுதாசி ஒன் பது மணிக்கு வந்து சேர்ந்தது. அந்தக் கடுதாசியில் எழுதி யிருந்த வயணமெல்லாம், இற்றைநாள் காலமே தண்டு கூச் சாய்ப் பயணப்பட்டுப் பாளையம் கதலி அப்புறம் சாகிப் போனார்களென்று எழுதி வந்தது. இதல்லாமல் மாபூசு

கானும் மமுதல்லிகானும் பறங்கிப்பேட்டைக்குச் சிதம்பரத்து மேலே போகிறதாய்ச் சண்டா கொண்டுபோய்த் திருவதி, பண்ணுருட்டி, கிரம்பாலையூரண்டையிலே போட்டதாகவும் நம்முடைய மனுஷர் வந்துச் சேதி சொன்னார்கள். இந்தச் சேதி ஸ்ரீ குவர்னதோரிடத்தில் சொன்னவிடத்திலே, அவர் சந்தோஷஞ் சொல்லிமுடியாது. அந்தக் காகிதங் கொண்டுவந்த மகம்மதாக்கல் மனுஷனுக்குப் பதினைந்து ரூபாயும், கும்பினீர் சேவகனுக்கு மூன்று ரூபாயும் இனாங் கொடுக்கச்சொல்லிச் சொன்னபடிக்குப் பரசுராமப்பிள்ளை கையிலே வாங்கிக்கொடுக்கச்சொல்லி உத்தாரங்கொடுத்த பிற்பாடு சந்தோஷமாய்ப் பேசியிருந்தும், அப்பாலென்னை அழைத்து, வேட்டவலம் பாளையக்காரனுக்குச் சொல்லி யனுப்பி, அன்னாருடைய ராணுவத்தை அழைப்பிக்கச் சொல்லி உத்தாரங்கொடுத்தார். அந்தப்படிக்கு காகித மெழுதி அனுப்புவித்தேன். இதல்லால் மாபூசுகானும், மமுதல்லிகானும் பயணம் புறப்படச்சே தேவனாம்பட்டணம் துபாசி ரங்கப்பனாயக்கன் வந்து இந்தமட்டுக்கும் உங்களை நம்பியிருந்தோம். இத்தனை நாளும் காப்பாற்றிக் கடைசி யிலே எங்களுக்குக் கப்பல் வருகிற சமயத்திலே விட்டு விட்டுப் போய்விட்டால் எங்களுக்கு எப்படியென்று மெத்த வும் பதிமாலிச் சொல்லிக்கொண்டானும். அதற்கவர்கள் சொன்னது: நாங்கள் என்னசெய்வோம். நீங்கள் சொன்ன படிக்கெல்லாம் கேட்டோம். கப்பல் வருகுதென்று வருகு தென்று சொன்னீர்கள். இந்தமட்டுக்கும் பார்த்தோம் வரா மற்போச்சுது. நீங்கள் சொல்லுகிறதெல்லாம் பொய் வார்த் தையேயல்லாமல் ஒரு பேச்சாகிலும் நிசமில்லை. உங்கள் பேச்சை நம்பப்போகாது. எங்களுக்கானால் சிப்பந்தி கருசு விஸ் தாரமாய்ச் சென்றிருக்கிறது. எங்களை என்ன செய்யச் சொன்னாயென்றும், ஆனாலும் புதுச்சேரி குவர்னதோர் சாய புக்கு எழுதியனுப்பித் தேவனாம்பட்டணத்து வழி போக வொட்டாமல் சொல்லி எழுதி அனுப்புவிக்கிறோமென்று சொல்லிவிட்டு இரண்டுபேரும் பயணப்பட்டுப் போய்விட் டார்கள்.

இற்றைநாள் ஸ்ரீ துரையவர்கள் என்னை அழைத்து வேட்டவலம்பாளையக்காரனுக்குச் சொல்லியனுப்பி ராணுவம்

அழைப்பிக்கச்சொல்லிச் சொன்னமட்டுக்கும் உடனே தேவனும் பட்டணமட்டுக்கும் அத்தின மேலே ராசகாரிய மெத்தனம் பண்ணிப்போகிற சாடையாயிருக்கிறது. அப்பால் நடக்கிறது அறியவேணும்.

இதல்லாமல் இற்றைநாள் நாசறுசங்கு அவர்களுக்கு ஒரு கடுதாசியும் இமாம் சாயபுக்கு ஒரு கடுதாசியும் ஆக மூன்று கடுதாசியும் ஸ்ரீ துரையவர்கள் பேருக்கு பாரிசிலெழுதி அவ்வாயி சாயபு கையிலே கொடுத்து அவர்களண்டைக்கு அனுப்புவிக்கச்சொல்லிச் சொன்னேம். அந்தக் கடுதாசியிலே எழுதின வயணமென்னவென்றால்: அன்வருதிகான் பிள்ளைகள் மாபூசுகான், மாபூசுகான் அவர்கள் வந்து தண்டிலே தங்கியிருந்தார்கள். அவர்களாய்த்தானே ராசவட்டம் விட்டுச் சமாதான மாய்ப்போவோமென்று உடன் படிக்கைக்கு வந்தார்கள். ஆகச்சே, அவர்களும் நிசாமவர்களுடைய மனுஷனுனபடியினாலேயும், நிசாமவர்கள் மனதுக்குச் சந்தோஷம் வரவேணுமென்கிறதாய்ச் சமாதானம் பண்ணிக் கொண்டோமென்கிறதாகவும், இமாம் சாயபு எழுதினபடிக்கு முப்பதினுயிரம் ரூபாய்க்குச் சகலாத்துக் கொடுத்தோமென்றும், ரொக்கம் முப்பதினுயிரம் ரூபாய்க் கொடுத்தோமென்றும், நாசறுசங்கு அனுப்புவித்தது ரூபின் என்கிற நச்சுக் குழலைச் செப்பனிட்டு அனுப்புவித்தோம் என்றும் உபசாரமாய்க் கடுதாசிகளெழுதி அந்த நச்சுக்குழலும் அவாயி சாயபு கையிலே கொடுத்து அவ்விடத்துக்கு அனுப்புவிக்கச்சொல்லிச் சொன்னேம்.

இற்றைநாள் சாயங்காலம் நாலு மணிக்குத் தண்டுக்குப் போயிருந்த மகம்மதாக்கலும் நம்முடைய வக்கீல் சுப்பய்யனும் வந்தார்கள். அவர்கள் வந்து சொன்ன சேதி என்னவென்றால்: மாபூசுகானும் மமுதல்லிகானு மிறங்கியிருந்த கோண்டூர் தோப்புவிட்டுப் பாளையங்கூச்சுபண்ணி அப்புறப்பட்டுப் பயணம் புறப்பட்டுப்போன பிற்பாடு இவர்களிரண்டு பேரும் வந்தார்கள். இவர்கள் வரச்சே சென்னப் பட்டணம் கப்பித்தான் மூசே தேப்பிரமேனிக்கு மாபூசுகான் சிரொப்பா ஒன்றும், மமுதல்லிகானுக்குச் சிரொப்பா ஒன்றும் கடுதாசி ஒன்றும் கொடுத்தார்களென்றும், மகம்மதாக்கல்

கொண்டுவந்து கொடுத்தார்களென்றும், அந்தச் சீரொப்பாவும் கடுதாசியும் கொண்டுபோய் துரையவர்கள் கையிலே கொடுத்து மகம்மதாக்கலேயும் அழைத்துப்போய் முன்னே விடச்சொன்னோம். அவர்களும், மாபூசுகானும், மமுதல்லிகானுஞ் சொன்ன உபசார வார்த்தைகளும் சொல்லித் தண்டு அப்புறம் சாகிப்போன பிற்பாடு நாங்கள் புறப்பட்டு வந்தோம் என்று சொன்னார்கள். அதன்பேரிலே ரொம்பவுஞ் சந்தோஷப்பட்டு மகம்மதாக்கலுக்கு வெகுமானம் பண்ணத் தக்கதாகப் பொன் காப்பும், அங்கியும் முஸ்தீதுபண்ணச் சொல்லி உத்தாரங்கொடுத்தார். திங்களன்று பண்டிகை கொண்டாடவேண்டும் என்று பட்டணத்திலே தமுக்குப் போட்டுவித்துத் தெருவீதிகளிலெல்லாம் தண்ணீர்த் தெளித்துத் தோரணங்கள் கட்டி, அங்கங்கே வாழைமரங்கள் கட்டி, அவரவர்கள் வீட்டிலே விளக்குகள் வைத்து, தெருவுகளிலெல்லாம் விளக்குகள் வைக்கத்தக்கதாகச் சொக்கப்பனைகள் கொளுத்திவைக்கச்சொல்லி. கோட்டையின்பேரிலே விளக்கு வைத்து, வாணவேடிக்கை பார்த்துச் சகல சம்பிரமத்துடனே பண்டிகை கொண்டாடத்தக்கதாக எல்லாரும் தயாராக எல்லாம் பண்ணிவையென்று உத்தாரங்களைக் கட்டளையிட்டுப் போட்டார்கள். அந்தப்படிக்கு நயினாருக்குச் சொல்லத்தக்கதைச் சொல்லி அப்பால் விளக்குவைக்கிறதற்கும் வாணவேடிக்கைக்கும் சின்ன பரசுராமப்பிள்ளையுடனே சொன்னேன். மமுதல்லிகான் மாபூசுகான் அவர்கள் போனவுடனே நெருப்பைப் போட்டு அவர்களிருந்த பாளையத்தையெல்லாம் கொளுத்திப்போட்டார்களென்றும், மகம்மதாக்கல் வந்து குவர்னதோருடனே கபுறு சொல்லுகிறதற்கு முன்னமே நான் சொன்னதுபோலே குவர்னதோர் சொன்னதும் மாபூசுகான் மாத்திரம் போனான்: மமுதல்லிகான் போனதில்லையென்று சொன்னார். அதற்கு நானிருந்துகொண்டு நம்முடைய சேவகர் கூட இருந்தவர்கள் வந்து கபுறு சொன்னார்கள். ஆனாலவர்கள் போய்ச் சொல்லியிருக்கவேணும், மகம்மதாக்கலும் நம்முடைய வக்கீல் சுப்பய்யனும் வந்தார்களே அவர்கள் சொல்லச்சே தெரியவருமென்று சொன்னதற்கு மகம்மதாக்கல் வந்தானுவென்று கேட்டார். மகமதாக்கலும் நம்முடைய வக்கீலும் வந்தார்களென்று சொன்னேன், மகமதாக்கலே ஏனழைத்துவரவில்லையென்று கேட்டார்,

மகமதாக்கல் வந்தவுடனே மூசியே தேலார்சு மனுஷரை யனுப்பிவிட்டு அழைத்துக்கொண்டான். இனிமேல் அவ் விடத்திலேயிருந்து வந்த பிற்பாடு சேதி யறியவேண்டி யதென்று சொன்னதற்கு அவன் வீட்டுக்குப் போகக் காரிய மென்ன விருக்கிறது என்று கேட்டார். இது மாத்திர மென்ன! பின்னையும் அனேகம் விந்தையெல்லாம் நடக் குது. அதுகளெல்லாஞ் சொல்லவேணுமென்றால் அனேக மெல்லாமிருக்குது. அதுகளெல்லாம் நான் உங்களுடனே சொல்லுகிறதில்லை. அப்படி அடிக்கடி நான் வந்து சொன்ன துண்டானால் உங்கள் மனதிலே கோபம் வரப்போகுதென்கிற தாய், ஆரென்ன சொன்னாலும் சொல்லட்டும். எவர்கள் எப் படி நடப்பித்தாலும், எந்த விசேஷம் எப்படி நடந்தாலும் காரியம் மாத்திரம் அனுகூலப்பட்டால் சரியென்று பார்த்ததே யல்லாமல் மற்றப்படியில்லை. அந்தப்படிக் கொருவழியாய் நடந்தபடியினாலே விசேஷங்களும் வெளிக்கு வராமல் காரியமும் அனுகூலமாய் நடந்தது இப்படியாக இருக்கவில்லை, விசேஷங்கள் நாலாவிதத்திலேயும் வெளிக்கு வருகிறது என் கிறதாய்ச் சொன்னேன். அதற்குத் துரையவர்கள் நகைத்து, மெய்தான்! அது நானுமறிவேன். அதுகளுக்கெல்லா மின்னம் நாலைந்து நாளைக்குள்ளே மார்க்கஞ் சொல்லுகிறேனென்று சொன்னார்கள். மதாமிருந்துகொண்டு என்பேரிலே ஒரு குணிதை சம்பாதிக்கவேணுமென்கிறதாய்ச் சின்னமுதலியை அழைத்து மாபூசுகானும் மமுதல்லியும் போய்விட்டார்களா இருக்கிறார்களாவென்று கேட்டார்களாம். அதன்பேரிலே வீரவுக்கல்வியன் என்கிறவனைத் தண்டுக்கனுப்பி மாபூசுகான் மமுதல்லிகான் போய்விட்டார்களாவென்று சிவனுகிரெட்டி யைக் கேட்டவிடத்திலே அவன் சொன்னது: அவர்களின்னம் போகவில்லை, இருக்கிறார்களென்று வந்து சொன்னதாகச் சொன்னானும். அந்தச் சேதியைச் சின்னமுதலி போய் மதா முடனே சொன்னதின்பேரிலே மதாம் போய்த் துரையுடனே ரங்கப்பன் வந்து தப்புந்தாறுஞ்சொல்லி உம்மை மோசம் பண்ணிக் கொள்ளையிட்டுக்கொண்டு போகிறான். துலுக்கனு ருல் இன்னம் போகவில்லையாம். அப்படியிருக்க, போய் விட்டார்களென்று வந்து சொன்னார்களென்று வந்து சொன்

ளாம். அதனாலேதான் துரையவர்கள் அந்த வார்த்தைச் சொன்னது. இதல்லாமல் அவ்விடத்திலே பாரிசுபாமுனி எழுதுகிற மதனாந்தபண்டிதனென்கிறவனும் அடிக்கடி மதாமண்டைக்குப் போய்ச் சேதிபாதி சொல்லுகிறதுமுண்டு. சின்ன முதலியண்டைக்கும் போய் பாதிசொல்லுகிறதுமாயிருக்கிறான்.

1747 ஆ பிப்ரவரி மீ 26உ-க்கு அக்ஷய ஸு மாசி மீ 18உ ஆதிவாரம்

இற்றைநாள் நடந்த சேதியென்னவென்றால் சென்னப்பட்டணத்திலே எட்டு நாளைக்கு நபாபு கொடிபோட்டுக்கொள்ளுகிறதென்று முன்னாலே விசேஷம் நடந்திருந்ததே அது காரியத்துக்காகச் சென்னப்பட்டணத்துக்குப் போகிறதற்குச் சண்டாளம், ஆறுபேர் குதிரை சுவார்களும், பத்துபேர் சேவகரும் தண்டிலேயேயிருந்து இற்றைநாள் காலமே வந்தவர்கள் வந்த சுவார்களையுஞ் சேவகரையும் செவுனிக்கு வெளியேதானே இறங்கி யிருக்கச்சொல்லி அவர்களுக்குப் படிச்செலவும் மற்ற சிதா கொடுத்தனுப்பச்சொல்லி உத்தாரங் கொடுத்தார்கள். அந்தப்படிக்குச் செவுனிக்கு வெளியிலேதானே இறங்கியிருக்கிறார்கள். இற்றைநாள் காலத்தாலே மகம்மதாக்கலாகிய சாலிக்தாவுத்கானுக்கு மூஸ்தீதுபண்ணப்பட்ட சீர்மை அரை பொன் பத்தாக்கு இசத்திலும், சின்னசின்ன வச்சிரம் பதித்து முஸ்தீதுபண்ணி வந்ததைக் குவர்னதோர் என் கையிலே கொடுத்து இரண்டு பட்டை பொன் கொலுசு கோர்க்கச்சொல்லிக் கொடுத்து நாளைக் காலமே வெள்ளைக்காரர் சமஸ்தமான பேர்களுமிங்கே வருவார்கள். அப்போது சாலிக்தாவுத்கானுக்கு எல்லோர் முன்பாகக் கொடுக்கவேணுமென்று சொன்னார். நல்லது அந்தப்படிக்கே மூஸ்தீதுபண்ணுவிக்கிறேன் என்று சொன்னேன். அப்பாலப்பட்டை சமஸ்தமானபேருங் கூடி பேட்டிக்கு வரச்சொல்லென்று சொன்னார். அந்தப்படிக்கு முஸ்தீதுபண்ணியிருக்கிறேன் என்று சொன்னேன். ஆனால், நாறு பேர் அசர்பி கொடுத்து அவர்களையும் நமக்கு அசர்பியாயிருந்தீர் அவர்களையும் தாம் வைத்ததாகப்பண்ணிவையென்று சொன்னார். நல்லதென்று வந்தேன். தெருவீதிகள் அலங்கரித்து தோரணங்கட்டி ராத்திரிக்குச் சொக்கப்பனை கொளுத்தி விளக்குவைக்கச்சொல்லித் தமுக்குப் போடுவிக்கச்சொல்லி

உத்தாரங்கொடுத்தார். பலப்பட்டையும் நாளை காலத்தாலே வரச்சொல்லச்சொல்லி அனுப்புவித்தேன். [சுவாமியினுடைய கிருபாகடாக்ஷத்தினாலே கும்பினீர் காரியத்துக்கு என்னை நேமிக்கவு மிந்தக் கலாபம் வந்ததற்கும் நான் சமஸ்தமான காரியமும் வந்ததுக்கும், ராத்திரி பகல் சகல சாக்கிரதையும் பட்டுச் சமஸ்த யோசனையுஞ் சொன்னதற்கும் சருவசிவதயா பரனுடைய கடாக்ஷத்தினாலே யிந்த இராச்சியத்துக்கு எசமானா யிருக்கிறவன் தானே சண்டைக்கு வந்து அபசெயப்பட்டு அப்பால் உங்கள் சமாதானம் வேணும் என்று பலவந்தமாய் வந்தானே, வந்து நம்முடைய பிரபு இருக்கிறவிடத்துக்கு வந்து பிரார்த்திக்கவந்த யோகத்தையும் அப்பால் சமாதானம் பண்ணிக்கொண்டு பிரபுமுன் ஆதியிலே எந்தப்படிக்கு என்னுடனே சொல்லியிருந்தானோ அதிலேயும் அனேகம் பத்து பங்கு குறையத்தக்கதாகச் சம்மதித்துக்கொண்டு கொடுத்த வெகுமானத்தையும் வாங்கிக்கொண்டு பிரபுவின் சம்ஷமத்துக்கு வந்தவிடத்திலே நம்முடைய பிரயாசையும் காரிய சவரணையும், தம்முடனே பேசின சாதுரியம், நியாயச் சம்மதியும் சகலமும் பிரபுவுக்குக் கொடுத்த வெகுமானத்தையும் வாங்கிக்கொண்டுபோன கீர்த்தி யெனக்குக் கிடைத்தாற்போல முன்னூற்றுக்காதவழிக்குள்ளாகத் தெற்கு வடக்கு டில்லி முதல் மலையாள பரியந்திரமும், கிழக்கு சமுத்திரம் முதற்கொண்டு மேற்கு சமுத்திரம் பரியந்திரமிதற்குள்ளே யிருக்கப்பட்ட சமஸ்தானாதிபதிகள், தோராதுரைகள், பெரிய மனுஷாள் சகல சனங்களும் ஆனந்தரங்கப்பன்போலே தன் தந்திரத்திலேயும், புத்திசாதுரியத்திலேயும், தைரிய விதரணங்களிலேயும், சகல அம்சையிலேயும் இப்படிக்கொத்த புருஷன் நாம் பார்த்த பேரிலேயுங் கேள்விப்பட்டிருக்கிற பேரிலேயும் ஒருத்தரையும் பார்த்ததுமில்லை கேள்விப்பட்டதுமில்லை என்று சகலமான பேரும் கொண்டாடத்தக்கதாக எனக்குக் கீர்த்தி கிடைத்தாற்போலே ஒருத்தருக்குங் கிடைத்ததில்லை. இந்தச் சேதிகளெல்லாம் விஸ்தாரமாக ஆற்காட்டிலேயிருக்கிற வர்க்கர், வீனிசுகள், கும்பினீசுகள் வர்க்காபாதுகள் எழுதி நிசாமுக்கனுப்பி, நிசாம்மசுக்கரையிலே யிருக்கப்பட்டவர், கானிசுகள் அதை தஸ்திரத்திலே தாகலாபண்ணி, வார்சாபாதுகள் அனேகமெழுதி டில்லி சாத்தரா, பங்களா, காசி, சிக்கல் தேசங்களுக்கும், வர்க்காபாத்துகளெழுதி அனுப்புவிக்க அவ்விடங்

களிலேயிருக்கிற துரைகள், அமீர், வசீர், அமுல்தார், சுபேதார் பெரிய சாவுகாரிகள் சகல சனங்களும் பார்த்துக்கொண்டு அத்தியந்த ஆச்சரியத்துடனே யிப்படி நடந்த சாமர்த்தியம் எங்கும் கண்டதுமில்லை, நாங் கேட்டதுமில்லை. அதை எழுதினுலோ என்றால் இராச்சியத்திலேயும் யுக்தம் பண்ணுகிற பேருமுண்டு. சந்தி சமாதானம் பண்ணுகிற பேருமுண்டு. அந்த சந்திஒசந்தகையாய் வெகுதனத்துடனேயிருக்கிற பேருக்குத் தாழ்க்கையாயிருப்போர் சந்திப்பேசுவைத்து தனத்தினுலே அவர்களுக்கு விசேஷமாய் ஆசை சொல்லி, அதன்பேரிலே சந்திபண்ணுவிப்பார்கள். ஆகையால், அதெல்லாம் ஆச்சரியமல்ல. இப்போது இந்த ஆற்காட்டு சுபேதாரனுக்கும் புதுச்சேரி பிராஞ்சுக்காரனுக்கும் ஆனந்த ரங்கப்பிள்ளை என்கிற மகா ஓதாவான புருஷன், அந்தப் புருஷன் புதுச்சேரியிலேயிருந்தபடியினுலே மகத்தான காரியமாய் வந்து திவானத்துப் பகைகளும் இனத்தார் பகைகளும் வந்து மூண்டதற்கும் வெண்ணெயிலே மயிர் வாங்கினுப்போலேயும், சூரிய உதயம் கண்ட பனி நீங்கினுப்போலேயும் சுலுயாசமாய்ச் சமாதானம் பண்ணிவைத்துச் சகல தேசங்களிலேயுங் கீர்த்தி கொண்டாடத்தக்கதாகப் பிரதிஷ்டை வந்தது. அது எதனுலேயென்றால், பிராஞ்சுக்காரருக்கும் இங்கிலீசுக்காரருக்கும் அவர்கள் சீர்மைலே ராசாக்களுக்கு ஒருத்தருக்கொருத்தர் வெகுகாலமாய் வெகு சண்டைக்கு ஆரம்பித்து அது நிமித்தியம் கரை துறைகளிலேயும் சமுத்திரத்திலேயும் இவர்கள் கப்பல்களை அவர்கள் பிடிக்கவும், இப்படி வந்து நேரிட்ட விடத்திலே இந்தக் கரை துறைகளுக்குள்ளே இங்கிலீசுக்காரர் கையிலேயிருக்கிற சென்னப்பட்டணம் பாதுஷா டில்லிவரைக்கும் பேராகி அனேகம் பெரிய பெரிய சாவுகாரிகளும், வெள்ளைக்காரரும், பீரங்கி, மருந்து, குண்டு, பாணங்கள், ரஸ்து, ரசவர்க்கம் சகலமுஸ்தீதுகளும் கபுறு சஷ்த்தாயிருக்கிறது, பார்சா அவர்கள் திரும்பி அதன்மேலேயும் யுத்தத்திற்குப் போனுலும் சாதிக்கக்கூடாது. அப்படியிருக்கிற பட்டணம் இங்கிலீசுகள் (இராச்சியம் சமீபம்) இருக்கிறது. அவர்கள் கப்பல்கள் இந்தப்பிராந்தியத்திலே வெகுபேர் திரளாகி சஞ்சரிக்கிறது. அப்படியிருக்க இங்கிலீசு ராசாவுமிவர்களுக்கும் அதிக பலனுண்டாகும்படியாய்ச் சண்டைகப்பல் தம்முடைய கப்பலாய் அதிலேயும் யுத்த சன்னுதங்களதற்குள்ள மனுஷரும் ஏற்றுவித்துக் கப்பல்களுக்கும்

இரும்பினாலே சிராக்கள் போடுவித்து அனேகங் கப்பல்கள் அனுப்புவிக்க அந்தக் கப்பல்களும் இவ்விடங்களிலே சஞ்சரிக் கிற கப்பல்களும் எல்லாவற்றையுஞ் சேகரித்துக்கொண்டு பிராஞ்சுக்காரர் கப்பல் வியாபார நிமித்தியம் தீவாந்திரங் களுக்குப் போய் வருகிறதிலே அவர்களுக்கிப்படி கலாபம் என் கிறது தெரியாதபடியினாலே அவர்கள் நிம்மதியாய் வருகிற விடத்திலே போய் அதாட்டாய் சுற்றிக்கொண்டு. கப்பலைப் பிடித்துக்கொண்டு, அதிலேயிருந்த திரவியங்களையும் சென்னப் பட்டணத்திலே கொண்டுபோய்ச் சேர்த்தார்கள். அதன் பேரிலே பிராஞ்சுக்காரன் புதுச்சேரியாரெங்கள் கப்பல்களை நீங்கள் பிடித்ததென்னவென்று சொல்லியனுப்புவித்ததற் குச் சென்னப்பட்டணத்தார் சொன்னது: நாங்கள் பிடிக்க வில்லை. எங்கள் தேசத்திலேயிருந்து ராசாவினுடைய கப்பல் காரர் வந்து பிடித்து எங்கள்கிட்டே ஒப்புவித்தார்கள் அவர் களுத்தாரமும் ராசாவினுடைய உத்தாரமும் அன்றியிலே எங் களாலே கொடுக்கப் போகாதென்று எழுதியனுப்புவித்து இத னாலே என்ன கலாபம் வருமோ என்று சென்னப்பட்டணங் கோட்டை கொத்தளங்களெல்லாம் முஸ்தீதுபண்ணி, கோட் டைக்கு வெளியிலே எல்லாம் மைதானங்களாகப்பண்ணி உபரியாய்ப் பதினாயிரம் பேர் மட்டுக்கும் இராணுவம் எழுதி, பின்னையுமவர்கள் தேவனாம்பட்டணம் கூட சபுறுசஷத்து பண்ணிக்கொண்டிருந்தார்கள். அப்படியிருக்கிறதிலே புதுச் சேரியார் ஆலோசனைபண்ணி நம்முடைய கப்பலைச் சென்னப் பட்டணத்தார் பிடித்து இப்படி எழுதியனுப்புவித்தார்கள் என்று நம்முடைய சீர்மையானால் வெகுதூரமிந்தக் கப்பல்கள் பிடித்த சேதி நம்முடைய இராசாயதியார் நாமானால் கொஞ்ச தளத்துடனேயிருக்கிறோம். இனிமேல் கப்பல் வியாபாரம் எப்படி நடக்கிறது. சென்னப்பட்டணத்திலே என்றால் நானா சாதியிலேயும் பெரியமனுஷர், பெரியவர்த்தகர் ரொம்ப இருக் கிறார்கள். நம்முடைய பட்டணத்திலே ஆனந்த ரங்கப்பன் ஒருத்தனிருக்கிறான். ஆனாலென்ன, தெய்வம் அவர்களுக்கு இந்த விடத்திலே இந்த வேளைக்குச் சகலமுஞ் சனக்கட்டும் தனபலமும் கொடுத்தது தெய்வந்தானே. நம்முடைய பங்கிலே தைரியமும் க்ஷாத்திரமும் இரண்டுங் கொடுத்து அந்தச் சென் னப்பட்டணத்திலே யிருக்கிற பெரிய மனுஷாள் வர்த்தகர்க

ளுடைய யோசனை புத்திகள் எல்லாம் ஒரு நட்சத்திர காந்திகள்போலேயும், நம்முடைய ரங்கப்பனுடைய புத்தியும், சாதுரியமும், சாமர்த்தியமும், தைரியமும் சகல அம்சையிலேயுஞ் சூரியகாந்திபோலேயும் நமக்குத் தெய்வங் கொடுத்தது என்று தைரிய லக்ஷ்மியை அடைந்து அதன்பேரிலே ஆற்காட்டிலே சபைக்கு மிசாம் நேமித்திருக்கிற அன்வருதிகானுக்குக் காகிதமெழுதி உங்கள் சீர்மையிலே நாங்களுஞ் சென்னப்பட்டணத்தாரும் பந்தர் கட்டிக்கொண்டு தீவானத்து ஆசிரயித்து வரும்படியாக வியாபார சாபாரங்கள் பண்ணிக்கொண்டிருந்தோம். இப்படியிருக்கிறதிலே சென்னப்பட்டணத்தார் எங்கள் பந்தருக்கு இமாம்சாயபு பேருக்கு வந்தக் கப்பலைப் பிடித்துக்கொண்டார்கள். இது நீங்கள் இவ்விடத்திலே யல்லவோ விசாரித்து வாங்கித்தர வேணும் என்று நியாயத்துக்கப்படியே எழுதியனுப்பி விசாரித்து அனுப்புவித்ததற்கு அன்வருதிகான் சென்னப்பட்டணத்தாருக்குத் தர்க்கிதுபண்ணி அவர்கள் பந்தருக்கு வந்த கப்பலை நீங்கள் பிடிக்கக் காரியமென்னவென்று வாங்கிக்கொடுப்பிக்கிறதற்குக் கையினாலே ஆகாமல் சென்னப்பட்டணத்தாரிருக்கிற பலனும் இம்மாத்தையும் பார்த்து இது நம்மாலே ஆகிறதென்று உங்களுக்குள்ளே நீங்கள் வேணது செய்துகொள்ளுங்கோளென்று புதுச்சேரிக்குப் பதிலெழுதி அனுப்புவித்தார்கள். அதன்பேரிலே புதுச்சேரியிலே யிருக்கிற ஆனந்த ரங்கப்பன் ஒருத்தனும் புதுச்சேரி பிரபுவும் ஒரு யோசனைபண்ணிக்கொண்டு அந்தப் பிரபுவும் ஒரு சூரியனும் ஆனந்த ரங்கப்பன் சூரியனுடைய காந்தியுமாய்ப் பிரகாசித்து யுத்த சன்னாகத்துக்கார் ஆரம்பித்துக்கொண்டு, சகல முஸ்தீதுகளும்பண்ணிக்கொண்டு தங்கள் சொந்தக் கப்பல் மசுக்கரையிலே யிருந்த எட்டு கப்பலை அழைப்பித்துக்கொண்டு ஆனைக் கூட்டத்தில் சிங்கம் பிரவேசித்தாப்போலே போய்ச் சென்னப்பட்டணத்திலே பிரவேசித்துக் கோட்டையைச் சுற்றிக்கொண்டு ஒரு நாளையிலே அதிலேயிருந்த துரை ஆலோசனைக்காரர், சாவுகாரிகள், பெரிய மனுஷர் சகலமான பேரையுந் திக்குமுக்கட்டாய்ப்பண்ணி அந்தப் பட்டணத்து மேலேயும் நெருப்பு மயமாய் நெறித்த மறுநாளெல்லாம் இந்த ஞு புரட்டாசி மீ 6வ பகல் 12 நாழிகைக்குக் கோட்டையைச் செயித்துத் தங்கள் சண்டாவையுங்கொண்டுபோய்ப் போட்டுப் பட்டணமெல்லாம்

கைவசம் பண்ணிக்கொண்டு நக்ஷத்திர தேசுகளெல்லாம் செகத்திலே யிருக்கிற பேர்களுக்குத் தெரியாதபடிக்கு, சூரியனுடைய காந்தியை செகமெல்லாம் பரவத்தக்கதாகச் சூரியனப்படி விளங்கினார்கள். அதன்பேரிலே சென்னப்பட்டணத்து வர்த்தகர் காரியக்காரரிலே சிறிதுபேர் தப்பிப் ஓடிப்போய்க் காடுகள், மலைகள் சேர்ந்து ஒளித்திருந்துகொண்டு, அங்கேயிருந்து ஆற்காட்டுக்கு ராசாவட்டங்களனுப்பி, உங்களுக்கு வெகு திரவியங்கள் தருகிறோம், தண்டு கற்சுக் கொடுக்கிறோம், நாங்களும் முன்னின்று சண்டை கொடுக்கிறோம். நீங்கள் தண்டு சேகரித்துப் பாளையக்காரரையுஞ் சேகரித்துக் கொண்டு வரவேணுமென்று திவானத்தாருடனே பேச அவர்கள் திரவியாபேக்ஷையினாலே முன் தாங்கள் எழுதியனுப்புவித்த நியாயத்தையும் விட்டுவிட்டு, வெகு தனங்களுடனே மாபூசு சென்னப்பட்டணத்தின்மேலே இறங்கிச் சுற்றிக் கொண்டவிடத்திலே புதுச்சேரியார் அந்த எட்டுக் கப்பலிலேயும் சென்னப்பட்டணத்திலே அகப்பட்ட திரவிய சாமான்களெல்லாம் தங்கள் சீர்மைக்கு அனுப்பினாப்போலே யனுப்பிப் போட்டு இங்கிலீசுக் கப்பலைச் சண்டைபண்ணி முழுக்கடிக்க அதுபோகையிலே அகப்பட்ட கப்பலை இரண்டு மூன்று உருவை வைத்துக்கொண்டு சமுத்திரத்திலே இங்கிலீசுக்காரர் கப்பலென்கிற பேரில்லாமற்படிக்கு அடித்துத் துரத்திப்போட்டு இங்கிலீசுக்காரருக்கு உபனுலாயிருந்த ஒலாந்தாக்காரரையும், அவர்கள் கப்பல்களையும் பிடித்து, அவர்களையும் இதற்கிருந்தாளாய்ப் பண்ணிக்கொண்டு கரைமேலே புதுச்சேரிக்கும் சென்னப்பட்டணத்துக்கும் பன்னிருகாத வழி ஐந்நூறு பேருடனே புறப்பட்டு மயிலாப்பூரிலே அன்வருதிகானுக்கு மூத்தப் பிள்ளையாயிருக்கிற மாபூசுகான் ஆறுயிரங் குதிரையும், முப்பதினாயிரம் ஷத்தோமும் (காலாட்படை), இரண்டாயிரம் சேசாலும் (Rocket), பதினையாயிரம் துப்பாக்கியும், முப்பது பீரங்கியுமிது முதலாகிய சாமான்களுடனே தான் கூட தண்டிறங்கிச் சுற்றிலு மோற்சாமம் மற்றதுக்கொண்டு வெகு சாக்கிரதையாக இருக்கிற தண்டிலே சூரிய உதய வேளையிலே போய் விழுந்த ஒரு நாழிகைக்குள்ளே தண்டெல்லாஞ் சின்னபின்னமாகத் தக்கதாக அடித்து வெகுவாய்க் குதிரைகளையும் சனங்களையும் சங்காரம் பண்ணி அனேகங் குதிரைகளையு மொட்டைகளையும் நவபத்துக்காலன் சென்

டாவும் காவந்து ஏறியிருந்த பல்லக்கும் தலைப்பாயும் கசானுமீது முதால்தெல்லாம் பாளையம் தமாம் கொள்ளை யிட்டுத் தண்டையும் முக்காத வழி துரத்திப் பிழைத்துப் புனர்ச் சன்மமென்று தப்பி ஒருத்தன் போனவழி ஒருவனுக்குத் தெரியாமல் ஓடிப்போகத் தக்கதாகத் துரத்திச் சகல செயத் துடனே சென்னப்பட்டணஞ் சேர்ந்தார்கள். அதன்பேரிலே பாதுஷா தீவானத்தைக்கூட இத்தனை அடித்தபோதே இனி மேலே புதுச்சேரி வாங்காமல் விடத்தக்கதில்லையென்ற வெகு ரோஷத்துடனே தலைப்பாகுகூட அகப்படாமல் அன்வருதிகான் பிள்ளை மாபூசுகானும், அவன் தம்பி மமுதல்விகானும், தகப்ப னாகிய அன்வருதிகானுடனே சொன்னவிடத்திலே புதுச்சேரி யார் மெத்தப் பொல்லாதவர்கள் வெகு க்ஷாத்திரவந்தார்கள். அதில் புருஷரத்தினமாயிருக்கிற ஆனந்த ரங்கப்பிள்ளை ஒருத்தன் கூடியிருக்கிறான். ஆனபடியினாலே அந்தப் புதுச்சேரிப் பட்டணம் சாதிக்கிறதற்குப் பாதுஷாவாலேயுங் கூடாது. அந்தப் பட்டணத்தைச் சாதிக்கிறோமென்று ஏன் ஆத்திரப் படுகிறது. அந்த ஆனந்த ரங்கப்பிள்ளை புத்திக்கு இந்த ஆற் காடு சாதிக்கவேணுமென்று தோன்றினால் நாழிகை இரண்டிலே சாதிப்பான். அது நியாயமல்ல. தெய்வத்துக்கு ஒப்பாவிராது. இன்னும் வெருமனே இருக்கிறான். ஆனபடியினாலே நீங்கள் அந்த வழியிலே போகிறது சங்கதியென்னென்று வேணவிதத் திலே புத்தி சொன்ன விதத்திலேயும், அவர் குமாரன் மாபூ சுகான் தனக்கு வந்த அவமானத்தினாலே அந்த புத்தி தகப்பன் சொன்னதெல்லாம் சம்மதிப்படாமல் ஒன்று தன் பிராணன் போகிறது, அல்லவென்றால், புதுச்சேரி சாதிக்கிறது இதற்கு நீர் தடை சொன்னால் இந்தட்சணங் கழுத்திலே புடவையைக் கிழித்துப் போட்டுக்கொண்டு பக்கிரியாகி மக்காவுக்குப் போய் விடுகிறேன் என்று சொல்ல; ஆனால் உன் மனது என்று தகப்பன் சொல்லி அதன்பேரிலே மாபூசுகானும் மமுதல்வி கானும் ஆற்காட்டிலே யிருக்கிற சகல குதிரைச் சுவார்களையும் சேகரித்துக்கொண்டு, வெகு தனங்களையும், பாளையக்காரரை யும் சேகரித்துக்கொண்டு கூடலூர் தேவனாம்பட்டணத்திற்கு மேல்புறமாய் வந்து பாளையமிறங்கி ஆறாயிரங் குதிரையும், இருபதினாயிரம் மஷத்தோமமும், பாளையக்காரர் சைனியத் திலே இருபதினாயிரம் பேரும் வந்து இறங்கினார்கள். இவர்கள் தேவனாம்பட்டணத்தாரையுங் கூட சேகரித்துக்கொண்டு

பாளையம் பலத்து இறங்கினார்கள். அப்படி மேல்புறமாய் பெரியதண்டு தீவானம் இறங்கியிருக்கக் கீழ்ப்புறமாகிய தேவனும்பட்டணத்துக் கோட்டையிலே வெள்ளைக்காரர் இரண்டாயிரம் பேரும், தமிழர் ஐயாயிரம் பேரும் வெகு முஸ்தீதாக நெருப்புமயமாயிருக்கிறதிலே புதுச்சேரியார் ஆயிரம் பேர் வெள்ளைக்காரரும் மாயே சிப்பாய்களுமாகப் புறப்பட்டு ஐந்து பீரங்கியுங்கொண்டு ஆட்டுக்கிடையிலே பெரிய புலி விழுந்தாப்போலே நடுவிலே போய்ப் பூந்து தீவானத்துத் தண்டுமேலே திரும்பி வெகு குதிரைகளையும் கால்பலன்களையும் கொன்று, தளங்களெல்லாம் சின்னாப்பின்னமாய்ப்பண்ணி, நபாபுக்குப் பட்டத்தானையாயிருக்கிறதை ஒரு குண்டினாலே கபாலம் பிளந்து கூக்குரலிட்டுக்கொண்டு பத்துநாழி வழி ஓடி சாகத்தக்கதாக அடித்துச் சகல செயத்தையும் அஞ்சிப்போன சனங்களுக்கு ஒருத்தருக்காகிலும் காயம் அன்னிலே புதுச்சேரியை வந்து சேர்ந்தார்கள். அதன் பிறகு மாபூசுகான் இங்கிலீசுக்காரரை அழைப்பித்து அவர்களுடனே சொன்ன சேதி: பிராஞ்சுக்காரருடைய சவுரியப் பிரதாபமும் ஆனந்தரங்கப்பிள்ளை, யொருத்தன் அவர்களிடமாய்ச் சேர்ந்திருந்துகொண்டு அவன் நடத்துவிக்கிற தந்திர சாமர்த்தியமும் நமக்கு மைலாப்பூரிலேதானே நன்றாய்த் தெரியும். அப்படியிருக்க, உங்கள் பேச்சுகளையும் உங்களையும் நம்பி நம்முடைய தகப்பனார் சொன்ன புத்தியுந் தட்டிவிட்டு நீங்கள் இங்கே கீழ்ப்புறமாய் இருக்கிறபடியினாலே சமீபத்திலே நீங்கள் வந்து நிருவாகம்பண்ணுவீர்களென்று முழிகண் குருடன் கிணற்றிலே விழுந்தாப்போலே இங்கே வந்து பாளையமிறங்கினோம். சென்னப்பட்டணத்தைப்போலொத்த பட்டணமும் அதற்குத் தக்கன சாமான்களும் கையிலேயிருக்கிறதிலே அற்ப பலனுமன்னிலே புதுச்சேரியார் கொஞ்ச பலனோடே வந்து ஒரு நாழிகையிலே கோட்டையைக் கட்டிக்கொண்டு போனான். அப்படிக்கொத்த இங்கிலீசுக்காரர்கள் நீங்கள் உங்கள் கிட்டே காரியரும் நீங்கள் திராசு பிடிக்கிறபோது உங்களுக்கு நிறை கல் எடுத்துக்கொடுக்கத் தக்கன பேரேயல்லாமல் டச்சமா வேளையிலே தன் தந்திர சாமர்த்தியம் அந்த ஆனந்தரங்கப்பிள்ளைக்கு ஒருத்தனுக்கேயல்லாமல் இவர்களுக்குத் தெரியுமாவென்று இது முதலாகிய உத்தாரங்

களை எல்லாம் அவர்களுக்கு ரோஷம் வரத்தக்கதாய்ச் சொல்லி அதன்பேரிலே இங்கிலீசுக்காரர் சொன்ன சேதி: எங்களுக்கு விசேஷமாய்க் கப்பல் வந்தாலன்னியில் நாங்கள் புதுச்சேரியார்மேலே எதிர்த்துப் போகத்தக்கதில்லை. நீங்களெங்கள் பேரிலே இத்தனை கோபம் பண்ணிக்கத்தேவையில்லை. இன்றுமுதல் திவானம் தண்டுக்கு முன்னதாய் நாங்கள் இறங்கினோம். உங்கள் தண்டு செலவுக்கு நீங்கள் சொன்னபடிக்குத் தட்டுமுட்டுசாமானாகிலும் விற்றுக்கொடுக்கிறோம் என்று சொல்லி அவர்களும் கோட்டைக்கு வெளியிலேயும் தண்டுக்கு உபளுவாய் வந்திறங்கியிருக்கிற இதுவல்லாமல் மாபூசுகானும் அவன் தம்பி மமுதல்லிகானும் திருச்சினாப்பள்ளி முதலான ஸ்தானங்களுக்கும் எழுதியனுப்புவித்து அவ்விடத்திலேயிருக்கிற குதிரை ராணுவத்தையும் சேகரித்துக் கொண்டு புதுச்சேரிக்குச் சமீபத்திலே வந்திறங்கி வெகு பத்திரமாயிருந்தவிடத்திலே ஆனந்தரங்கப்பிள்ளை இத்தனை அதிருக்கும் மனது சஞ்சலியாம லித்தனை தண்டையும் ஒரு திரணமாகவெண்ணி, புதுச்சேரி துரைக்கு எப்படி தைரியஞ் சொல்லவேணுமோ அப்படிச்சொல்லி ஊரிலேயிருக்கிற சனங்களும் மலைக்காதபடிக்கு எத்தெந்த மார்க்கங்களிலே ஆராரை நேமிக்கவேணுமோ அவர்களை நேமித்து தானும் ராத்திரியிலும் பகலிலும் நித்திரை ஆகாரமில்லாமலும் வெகு சாக்கிரதையாய்க் கோட்டையைச் சுற்றிலும் மூன்று நாழிகை வழிக்கு அகழிக்கோட்டையாய்ப் போட்டுக்கொண்டு லக்ஷம் குதிரை வந்தாலும் பரவாயில்லாமற்படிக்குச் சிறு பிள்ளைகளுக்குக் கூட, தோன்றத்தக்கதாக வெகு சபுருஷத்துடனே க்ஷாத்திரமே வகித்து தைரியலக்ஷிமியுடனே இருக்கிற நடவடிக்கையெல்லாம் மாபூசுகான் அறிந்து செகத்திலே யிவனல்லவோ புருஷன்! இவன் தைரியமிவனை வெல்லுகிறதற்கு ஒருத்தராலேயுமாகாது. நம்முடைய தகப்பனார் சொன்ன வார்த்தை நிசமே. சரி! நாமெத்தனை நாளிருந்தாலும் புதுச்சேரி கோட்டையைக் காணக் கண்ணெடுத்துப் பார்க்கப்போகாது. நம்முடைய பாளையமிருக்கிற அபந்தரைக்கும் இங்கிலீசுக்காரர் நம்முடைய தண்டு மறைவிலே வந்து திகிலெடுத்திருக்கிறதற்கும் சதி பார்த்து ஆனந்தரங்கப்பிள்ளை கோட்டைக்கு வெளியேயிருக்கிற சனத்திலே இரண்டு முகத்து சனம் இரண்டாயிரம் பேரை சற்று கண்காட்டிவிட்டானால்

இரண்டு நாழிகையிலே நம்முடைய தண்டு முழுகி நமக்கும் வடகம் வரும். ஆகையினாலே இனிமேல் நாம் வெருமனே அரைநாழிகையாகிலுமிருக்கப் போகாது. இந்த இங்கிலீசுக் காரரெங்கே போனாலென்ன? இனி ஆர் பேச்சும் நாம் கேட்கத்தேவையில்லை, ஆரென்ன சொல்லிக்கொண்டா லும் சொல்லிக்கொள்ளட்டும். நம்முடைய பிராணன் பிழைத்து நம்முடைய தலைப்பாகையும் பிடுங்கிக்கொண்டானே அவன் கையினாலேதானே நம்முடைய பாகையுங் கட்டுவித்துக் கொண்டு சினேகம் பண்ணிக்கொண்டு தண்டு வாங்கிப் போகிறதே பெரிய காரியமென்று திர்க்காலோசனை பண்ணிக் கொண்டு இதற்கு ஆனந்தரங்கப்பிள்ளை கிட்டே போய் அவனுடனே பேசி வர்த்தகன் போகிறானென்றும் விசாரித்து அதற்குள்ளே உளவனாயிருக்கிற மமுதாக்கல் என்கிறவனைப் பயணப்படுத்தி அனுப்புவித்துப் பேசுவித்தவிடத்திலே, அந்த ஆனந்தரங்கப்பிள்ளை மகாபோதனையானபடியினாலே எதிர்த்த வனுடனே காரியமேயல்லாமல் வணங்கினபேருடனே க்ஷாத் திரம் பண்ணவேண்டிய தென்னவிருக்கிறது. ஒரு நாளைக்கு நாலுநாழிகை முச்சட்டையாய் நபாபு முன்னே சண்டை விளை யாட்டுக் காண்பித்துப் போடலாமென்றிருந்தோமிப்போதும் அவர் மனதிலே அப்படித் தேவையில்லை யென்கிறதாகத் தோன்றியிருந்தால் நபாபு அவர்களுக்கு எப்படி சம்மதியோ அப் படி நடந்துகொண்டு வருகிறது, எங்களுக்கு விகிதமான காரியம் அல்லாமல் வேறல்லவே. நபாபு மாபூசுகான் அவர்கள் இங்கி லீசுக்காரருடைய பலமும் எங்கள் துரை அவர்களுடைய பல மும் பார்க்கவேணுமென்று தமாஷாவாலே பார்த்தார்கள். அந்தச் சென்னப்பட்டணத்துக் கூட்டமெல்லாம் ஒரு மலையா கிய செத்தேயும், பிரான்சுக்காரரென்கிற பேர் ஒரு நெருப்பு என்று யோசனைபண்ணாமல் அவர்களிங்கிலீசுக்காரர் சொல்லு கிற பேச்சை நிசமாயெண்ணி வேடிக்கைப் பார்த்தார்கள், ஆனாலென்ன இப்போதும் நம்முடைய குவர்னதோர் அவர் களுக்கும் நபாபு அவர்களுக்கும் மிலாகத்துப் பண்ணிவைத்து நம்முடைய குவர்னதோர் அவர்கள் கிட்டே சகல வெகுமதியும் வாங்கிக்கொடுத்துப் பாகையுங் கூட்டிவைத்து அனுப்புவிக் கிறோமென்று சொல்ல அந்தச் சேதியை அங்கே நபாபு மாபூசு கானண்டையிலே யிருந்து போன காரியக்காரன் மறுபடி வந்து

மாபூசுகானுடன் சொல்ல ஆனந்தரங்கப்பிள்ளை சொன்ன சேதியெல்லாம் மாபூசுகான் கேட்டு மெத்தவுஞ் சந்தோஷத்தை அடைந்து, மாபூசுகான் சொன்ன சேதி ஆனந்தரங்கப்பிள்ளை வந்து என்னை அழைத்துக்கொண்டுபோனால் நான் அவசியமாய் வருகிறேன். மற்றப்படி யாரையும் நம்பி நான் வரத்தக்கதில்லை அவிவேகிகளுடைய சத்துருத்துவம் நல்லதென்று உலக வாடிக்கையாய்க் கேட்டிருந்தோம். ஆன்படியினாலே, இப்போதும் நீர் போய் அவனை அழைத்துக்கொண்டு வந்தால் நாம் ஆனந்தரங்கப்பிள்ளை கிட்டே நம்பிக்கைக் கேட்டுக்கொண்டு புதுச்சேரிக்கு வருகிறோம். ஆகையினாலே நீர் சீக்கிரமாய் போய்க் கேட்டுக் கூட்டிக்கொண்டு வரவேணுமென்று சொல்ல, உடனே அந்த மாபூசுகான் வக்கீலாம் மமுதாக்கல் என்கிறவன் புதுச்சேரிக்கு வந்து மாபூசுகான் சொன்ன சேதியெல்லாம் கேட்டு உடனே அவர் துரையண்டையிலே போய் இப்படி நபாபு மாபூசுகான் அவர்கள் என்னை வரச்சொல்லச் சொல்லியனுப்பினார்கள். நான் அவரண்டைக்குப் போய் அவருக் குற்ற பிரியம் பிறக்கும்படியாகச் சொல்லி அழைத்துவருகிறேன். நமக்குத் திவானத்தாருடனே பகை என்னவிருக்கிறது. அவரை யழைத்துவந்து அவருக்கு நல்ல வெகுமானம் பண்ணி அனுப்புவிக்கவேணுமென்று குவர்னதோருடனே ஆலோசனைக் காரரையும் கூட வைத்துக்கொண்டு ஆனந்தரங்கப்பிள்ளையுடனே சொன்ன சேதி யென்னவென்றால்: இந்த நாளையிலே துலுக்கரை நம்பப்போகாது. அதிலேயும் மாபூசுகான் நம்முடைய கையினாலே ரொம்ப அவமானப்பட்டிருக்கிறவன். அதிலேயும் நீ இவ்விடத்திலிருந்துகொண்டு இத்தனை காரியமும் பண்ணுகிறாயென்றும் அவனுக்குத் திரளாய் துக்கம் உன் பேரிலே யிருக்கும். அப்படி யிருக்கிற விடத்திலே அவன் வெகு தண்டுடனே இறங்கியிருக்க, அதிலே நீ எப்படி போகிறது? உன்னை நாங்களித்தனை பேரும் எங்களுடைய கண்ணாக எண்ணி எவன் வந்தாலும் அவனவனுக்குத் தக்கதாகத் தந்திரம் பண்ணி நடத்துகிறதற்கு நீ இருக்கிறாய் என்கிற பலத்திலே யிருக்கிறோம். உன்னை அவனண்டைக்கு நானனுப்பத்தக்கதில்லை, அப்படி அவனுக்கிங்கே வருகிறதற்குப் பயந்தோன்றியிருந்தால் அவனினத்திலே ஒரு பெரிய மனுஷரையுமிங்கே அனுப்பட்டும். நாமுமிங்கேயிருந்து ஒரு ஆலோசனைக்காரனை

அனுப்புவிக்கிறோம். அதன்பேரிலே வரட்டுமென்று துரை சொல்ல அதற்கு ஆனந்தரங்கப்பிள்ளை சொன்ன சேதி: இத்தனை இராசகாரியமு மிங்கிலீசுக்காரர் பேச்சைக் கேட்டுக் கொண்டு நடத்தி வெகு சனங்களை சாகக்கொடுத்து இனிமேல் கலாபம் பண்ணுகிறதினாலே காரியமில்லையென்று தோன்றிச் சந்தியை முக்கியமென்று ஆசித்துச் சொல்லி அனுப்புவித்தமட்டுக்கும் நான் போகாதேபோனால் என்னைப் போலே பயந்தவனொருத்தருமில்லையே. ஆகையினாலே நீங்கள் இந்தக் காரியத்துக்குத் தடை சொல்லத் தேவையில்லை. உங்கள் தயவினாலே நான் போய் அழைத்து வருகிறேன் என்று துரையுடனே அனுப்புவித்துக்கொண்டு புறப்பட, அந்த வேளையிலே பட்டணத்திலிருக்கிற சகல சனங்களும் மலப்புத்தோன்றிச் சொல்ல. அதற்கு மனங் கலங்காமல் அவர்களுக்குந் தைரியஞ் சொல்லிவிட்டுப் புறப்பட்டு மாபூசுகானண்டைக்குப் போக, இவர் வருகிறாரென்று சேதி மாபூசுகான் கேட்டவுடனே வெகு ஆச்சரியத்தை அடைந்து, அங்கே இருக்கிற பெரிய சமேதாரர்களை எல்லாம் பார்த்துத் தைரியமென்றால், ஆனந்தரங்கப் பிள்ளையுதே தைரியம். இந்தத் தைரியமிந்த உலகத்திலே ஆருக்கும் வராது என்று வெகுவாய்த் தோத்திரம்பண்ணி ஆனந்தரங்கப்பிள்ளை போய்க் கண்டவுடனே மாபூசுகான் எழுந்திருந்து வந்து, ஆலிங்கனம்பண்ணிக்கொண்டு, கையைப் பிடித்து, தனித்த ஒரு விடத்திலே கூட்டிப்போய் வைத்துக் கொண்டு, இரண்டு நாழிகைவரைக்கும் தன் மனதிலே இருந்த துக்கமெல்லாம் சொல்லிக்கொண்ட விடத்திலே அதற்கு ஆனந்தரங்கப்பிள்ளை மாபூசுகானுக்கு மறு உத்தாரந் தோன்றும்படிக்கு நியாயத்துடனேயுஞ் சன்மதுகளுடனேயுஞ் சொன்னவிடத்திலே மாபூசுகான் வெகு சந்தோஷத்தை அடைந்து அப்போது அவன் சொன்ன சேதி: உன்னைப்போலொத்த புருஷன் பாதுஷா அண்டையிலே மந்திரியாயிருக்க வேணும். அல்லவென்றால் நிசாமண்டையிலேயாகிலும் மந்திரியாயிருக்கவேணும். பிராஞ்சுக்காரர் செய்த அதிருஷ்டம் அவர்களுக்குக் கிடைத்தது. இப்போதும் நீ எந்தப்படி சொன்னாலும் அந்தப்படி நாங்கள் கேட்கிறோம். உன்னை நம்பி வருகிறோம் என்று கேட்க, அந்தப்படியே என்னை நம்பி வாரும். சிந்தனை என்னவிருக்குது என்று சொன்னவுடனே, மாபூசுகான் தன் கையிலேயிருக்கிற கட்டாரியும் கத்திரமும் ஆனந்தரங்கப்

பிள்ளை கையிலே கொடுத்துச் சகல வெகுமானமும் பண்ணி அவர் பிறகாலே புதுச்சேரிக்குப் போனான். அந்த வேளையிலே தண்டிலே வந்திருந்த இங்கிலீசுக்காரரெல்லாரும் உங்கள் சேர்த்து ஒருத்தன் போன வழி ஒருத்தனுக்குத் தெரியாமல் தேவனாம்பட்டணம் போய்ச் சேர்ந்தார்கள். தண்டிலே யிருந்த சகல சனங்களுக்கும் மெத்தவுஞ் சந்தோஷமுண்டா யிருந்தது. அந்தவேளை எப்படியிருந்ததென்றால், ஆனந்த ரங்கப்பிள்ளையாகிய பிரம்மதேவன் பிரதிஷ்டையாகி தண் டிலே வந்து சகல சனங்களும் ஆயுசுங் கொடுத்துச் சீவதாரை யும் வார்த்தாப்போலேயிருந்தது. அதன்பேரிலே ஆனந்த ரங்கப்பிள்ளை மாபூசுகானை அழைத்துக்கொண்டு புதுச்சேரிக் குப் போய் குவர்னதோருக்கு மிலாக்காத்துப் பண்ணிவைத்துச் சகல வெகுமதியும் வாங்கிக்கொடுத்துப் பாகையையுங் கட்டி வைத்து வெகுமரியாதையும் பண்ணிவைத்து அனுப்புவித்தான். அந்த மாபூசுகானும் அந்த குவர்னதோர் முன்னே இரண்டு நாழிகை ஆனந்தரங்கப்பிள்ளை குணாதிசயங்களை யெல்லாம் நன்றாகச்சொல்லி வெகுமானம் வாங்கிக்கொண்டு தண்டுக்கும் போய் தண்டையுங்கூட்டிக்கொண்டு ஆற்காட்டுக்குப் போய்ச் சேர்ந்தான்.

இந்தச் சாமர்த்தியமிந்த செகத்திலே யொருத்தருக்கு மில்லை என்று சகல பெரிய மனுஷர் தோராதுரைகளும் சொல் லத்தக்கதாக எனக்குக் கிடைத்த கீர்த்தி சுவாமி கடாட்சத் தினாலே கிடைத்ததேயல்லாமல் என்னுடைய சாமர்த்தியத் தினாலே கிடைத்ததென்று மிதுவல்லாமல் நானிந்தக்காரியத்திலே பிரயாசைப்பட்டதெல்லாம் நம்முடைய புதுச்சேரிப்பட்டணத் திலே யிருக்கப்பட்ட வெள்ளைக்காரரும் கும்பினியாரும் சீர் மைக்கு எழுதுகிற கடுதாசிகளிலே நான் இராப்பகல் நித்திரை யில்லாமல் கும்பினீர் காரியத்திலே வெகு சாக்கிரதையாய் நடந்துகொண்டதும் அதனாலே செகமெல்லாம் கும்பினியா ருக்குச் சகல கீர்த்தியும் பிரதாபமும் டில்லி பாதுஷா முதலான தோரா துரைகள் எல்லாம் அறியத்தக்கதாய் நடந்ததும் அவ ரவர்கள் பேசிக்கொள்ளுகிறபடியினாலே இந்தப்படிக்குச் சீர் மைக்கு எழுதுவார்கள். கும்பினீர் காரியத்திலேயும் ரங்கப்பன் ரொம்ப பிரயாசைப்பட்டானென்று எழுதுவார்கள். இந்தச் சேதி பிராஞ்சு முதலான ஏரோப்புராச்சிய மெல்லாம் பேருண்

டாம். இந்தக் கீர்த்தி நான் சம்பாதிக்கவேணுமானால் பத்து லட்சம் வராகன் செலவழித்தாலும் வாராத கீர்த்தி. என் பேரிலே ஆண்டவன் கடாட்சம் வைத்துச் சுலுயாசமாய் லபிக்கப்பண்ணின ஆச்சரியத்தை என்னவென்றெழுதப்போகிறேன். ஆனதினாலே, வரப்பட்ட கீர்த்தியை விஸ்தரித்து எழுதுவேன். தன் பெருமையைத்தான் எழுதிக்கொள்ளுகிறது அப்புத்தமான படியினாலே சூசனையாய் எழுதிவைத்தேன்.

இதல்லாமல் நபாபு மாபூசுகான் என்னுடைய கீர்த்தியைத் தோத்திரம் பண்ணுகிறதேயல்லாமல் ஸ்ரீ துரையவர்கள் முன்பாகப் பண்ணின தோத்திரமென்னவென்றால்: ஆனந்தரங்கப் பிள்ளை உங்களுடைய சமஸ்தானத்திலே யிருந்தபடியினாலே உங்களுக்கு இப்படி பளுவாய் வந்தக் காரியத்தை அவன் புத்தியினாலே உங்களுக்கு இப்படி ஒன்றுமில்லாமல் செய்து என்னை உங்களிடத்துக்கு சேர்பா யழைத்துக்கொண்டு வந்து சமாதானம்பண்ணிப் போட்டான். இவனுடையபுத்திக்குஇந்த விடம் போதாது. நிசாம் கிட்டே மந்திரியா யிருக்கவேணும் அல்லது பாதஷா விடத்திலே மந்திரிதனத்துக்கு யோக்கியனே யல்லாமல் மற்றப்படி பின்னை யொருவிதமாய்ச் சொல்லக்கூடாதென்றும் பின்னையும் அநேகவிதமாய் தாரீபுபண்ணினதற்குத் துரை இருந்துகொண்டு மெய்தான் இவன் மெத்த புத்திசாலி, மகா நிருவாகி. அவனுக்கிவன் தகப்பன் மெத்த புத்திசாலி, அவன் பிறந்தமட்டுக்குமிவனிடத்திலே தேவரீர் தாரீபு பண்ணுகிறமட்டுக்கும் புத்தி யிருக்கிறது. ஆச்சரியமல்லவென்று துரையவர்கள் ரொம்ப தாரீபு சொன்னார்கள் இப்படி எல்லாம் ராச்சியாதிபத்தியம் பண்ணுகிறவன்கூட நம்மை தாரீபு பண்ணவும் நம்மை பகவான் போகிறப்போலே போகப்பட்டதாகக் கிடைத்தது. சுவாமியினுடைய கடாட்சம் என் பேரிலே பரிபூரணமாயிருக்கையிலே இப்படி நடந்ததென்று எண்ணிக் கொண்டேன் என்று எண்ணத் தேவையில்லை. சமஸ்தமான சனங்களுமிப்படியே ராச்சியமெல்லாம் சொல்லிக்கொண்டார்கள். அதுகளை நான்தானே விஸ்தரித்து எழுதுகிறது நியாயமல்லவென்று எழுதவில்லை.

இற்றைநாள் மத்தியானம் மூன்று மணிக்கு அறக்காரர் ஒட்டகம் ஒன்று வந்தது. அந்த ஒட்டகக்காரன் மகம்மதாக்கல் பேருக்கு நவாபு அன்வருதிகான் சாயபு அவர்கள் கடுதாசி

ஒன்று கொண்டுவந்து கொடுத்தானும். அந்தக் கடுதாசியிலே எழுதியிருந்த வயணமென்னவென்றால்: நீரும் ஆனந்தரங்கப் பிள்ளையும் போய் மாபூசுகானை அழைத்துக்கொண்டு வந்து குவர்னதோர் சாயபு அவர்கள் பேட்டிபண்ணுவித்துச் சமாதானம் பண்ணுவித்தீர்கள் என்கிற சமாசாரம் கேட்டு அத்தியந்தமான சந்தோஷமாச்சுது. ஆனந்தரங்கப்பிள்ளையினுடைய பேர் இப்போது சூரியனைப்போலே பிரகாசமாச்சுது என்று ரொம்பவும் தாரிபு பண்ணி எழுதி தமக்கு வருகிற வெகுமானத்தை விசேஷித்துக் காட்டத்தக்கதாகப் பண்ணுவிக்கச் சொல்லியும் இப்படியாக எழுதியிருந்தது. இதல்லாமல் நபாபு அன்வருதிகான் சாயபு அவர்கள் மாபூசுகான் பேருக்கும் கடுதாசி எழுதி அனுப்பினாராம். அந்தக் கடுதாசியிலே மகம்மதலிகான் புதுச்சேரி குவர்னதோர் சாயபு அவர்கள் பேட்டிக்கு ஏன் போகவில்லையென்று ரொம்பவும் கோபமாயெழுதினானென்றும் மாபூசுகானையும் மமுதல்லிகானையும் ஆற்காட்டுக்கு வரச்சொல்லியும் எழுதியனுப்பினார்கள். தண்டு உடையார் பாளையத்துமேல் புறப்பட்டதை நிறுத்தி இப்படி தானே இரண்டு பேரும் ஆற்காட்டுக்குப் போகத்தக்கதாகப் பாளையமிப்படி திரும்பித்தென்று மிப்படியாகச் சொன்னான், சுறுக்காய் வரச்சொல்லி எழுதியிருந்தபடியினாலே இன்றைய தினம் ராத்திரி விழுப்புரந் தாக்கல், நாளையதினம் செஞ்சி தாக்கலாம், மறு நாளைக்கு அப்புறம் போய் ஆற்காடு சேருவார்கள் என்று வந்த அறுக்காரர் ஒட்டைச்சுவார் சொன்னானும்.

1747 ஆ பிப்ரவரி மீ 27 உ க்கு அக்ஷய ஹு மாசி மீ 19 உ சோமவாரம்

இற்றைநாள் காலமே ஆறுமணிக்கு, கும்பினீர், வர்த்தகர் டங்காசாலையார், மளிகைக்காரர், செட்டி வர்த்தகர், சவுளிக் கடைக்காரர், காசுக்கடை வர்த்தகர், மணியக்காரர், சேஷாசல செட்டியார், சலது வெங்கடாசலசெட்டியார், வாசுதேவ பண்டிதன், குண்டுகிராமத்தார், அரியாங்குப்பத்தார், அப்பாச்சி நீலகண்ட நாயக்கன், பலசரக்குக்கடைக்காரர், பின்னையும் பலபட்டைச் சகல சமஸ்தமான பேரும் நம்முடைய பாக்குக் கிடங்கிலே வந்து கூடினார்கள். அதன்பேரிலே யிவ்விடத்திலே எல்லாரும் வந்து கூட ஆயத்தப்படுகிறதற்கு எட்டுமணி மட்

டுக்கும் சென்றது. அப்பால் துரையவர்களெழுந்திருக்கிறதற்கு ஒன்பது மணி மட்டுக்கும் சென்றது. அதன்பேரிலே எல்லாரையும்பாக்குக்கிடங்கிலேதானே யிருக்கச்சொல்லி வைத்துவிட்டு துரையவர்களண்டைக்குப் போய் வர்த்தகர், மகாநாட்டார் எல்லாரும் தேவரீரவர்களை சந்திக்க வந்திருக்கிறார்கள் என்று போய்ச் சொன்னேன். ஆனால், அவர், வரச்சொல்லென்று சொன்னார், அதன்பேரிலே நான் போய் மகாநாட்டாரெல்லாரையும் கூட்டிக்கொண்டு மேள தாளத்துடனே சகல சம்பிரமத்துடன் ஸ்ரீ துரையவர்களை சந்தித்து முபார்க்கு பாதி சொல்லத்தக்கதாக அவரவருக்குத் தோன்றினபடிக்கு மோகரிகளந்திரங் கொண்டுபோய் வைத்துப் பேட்டிபண்ணிக்கொண்டார்கள். அதன்பேரிலே வர்த்தகர் மற்றப்பேரெல்லாரும் சொல்லத்தக்க வுபசாரமெல்லாஞ் சொன்னார்கள். அதன்பேரிலே துரையவர்களுக்குச் சந்தோஷப்பட்டு அவரவர்களுக்குச் சந்தோஷமாய்த்தானே உத்தரவு சொல்லி இந்தச் சந்தோஷமெல்லாம் சுவாமியைத் தொட்டு வந்ததானபடியினாலே பகலைக்கு மேலே நாங்கள் கோட்டை கோயிலுக்குப் போய்ப் பூசையைக் கேட்டுச் சுவாமியை வேண்டிக்கொள்ளத்தக்கதாகப் போகிறோம். மகாநாட்டார் வர்த்தகர் எல்லாரும் பகலைக்கு மேலாய்க் கோட்டைக்கு வந்து வேடிக்கைப் பாருங்கோளென்று உத்தாரங் கொடுத்தார்கள். அந்தமட்டிலே அனுப்புவித்துக்கொண்டு மகாநாட்டார் போய்விட்டார்கள். மத்தியானம் துரையவர்கள் வீட்டிலே பெரிய மேசை போட்டுக் கொமிசேல்காரர், வெள்ளைக்காரர், பெரிய மனுஷர், வெள்ளைக்காரிச்சிகள் சமஸ்தமான பேரும் வந்து விருந்து சாப்பிடத்தக்கதாக மத்தியானம் பன்னிரண்டு மணிக்கு மேசையிலே உட்காரச்சே 21 பீரங்கிப் போட்டார்கள். சாப்பிட்டவுடனே சாராயங் குடிக்கச்சே 21-ம், தித்திப்பு மேசை போடச்சே 21 பீரங்கியும், சாப்பிட்டு எழுந்திருக்கச்சே 21 பீரங்கியும் இந்தப்படியாய்ப் பீரங்கிப் போட்டார்கள். அதன் பிற்பாடு மூன்று மணிக்குத் துரையண்டைக்கு மகம்மதாக்கலை அழைத்துக்கொண்டு நாமும் துரையவர்கள் வீட்டுக்குப் போனோம். அதன்பேரிலே நாலு மணிக்கு மகம்மதாக்கலாகிய சலா ஆதாதுகான் அவர்களுக்கு வெகுமானம்

பண்ணினார்கள். ஆனால், அவருக்கு வெகுமானம் என்ன வென்றால்:

இருநூறு வராகனெடை தங்கத்திலே காப்பும், பதக்கமும் இரண்டு பேட்டைச் சரப்பளியிலே கோத்துக் கழுத்திலே போட்டார்கள். இதல்லாமல், சீர்மை சுருட்டியிலே வெள்ளிப்பூ போட்டிருக்கிற சுருட்டி கிசம் 1-க்கு விலை வராகன் 12, பெத்த சுருட்டியிலே பத்து கிசம் ஒரு அங்கியும், முகிஷிப்டாகை ஒன்றும், பாளாபந்து ஒன்றும் வெகுமானம் பண்ணினார்கள். அவருக்கு வெகுமானம் பண்ணச்சே பதினொரு பீரங்கிப் போட்டார்கள். அங்கேயிருந்தபடியே ஐந்து மணிக்குத் துரையவர்கள் புறப்பட்டுக் கோட்டை கோவிலுக்குப் போகச்சே, கோட்டைக்குக் கீழ்ப்புறத்திலே வெள்ளைக்காரரை வரிசைவைத்துக் கோட்டையின் பேரிலே சுற்றிமாயே சிப்பாய்களை வைத்துக்கொண்டிருந்தார்கள். அதன் பேரிலே கோட்டைக்குப் போய்ப் பூசையைக் கேட்டு ஒரு தரம் முன்னே 21 பீரங்கிப் போட்டார்கள். அதன்பேரிலே வெளியிலே வைத்திருக்கிற வரிசையெல்லாம் ஒரு வரிசை தீர்ந்தார்கள். கோட்டையின்பேரிலே சுற்றி இருக்கிற மாயே சிப்பாய்கள் எல்லாரும் ஒரு வரிசை துப்பாக்கிச் சுட்டார்கள். அந்தப்படிக்குத் தாழேயிருந்த வெள்ளைக்காரரும் கோட்டையின்பேரிலே இருக்கிற சிப்பாய்களும் மூன்று வரிசை தீர்ந்தார்கள். அதன்பேரிலே 21 பீரங்கிப் போட்டார்கள். அந்தமட்டிலே கோட்டையிலே பூசை கலைந்து துரையவர்கள் வெளியே புறப்பட்டு வீட்டுக்கு வந்தார்கள். துரையவர்கள் வளவுக்குத் தென்னண்டையிலே, கோட்டைக்குவடவண்டையிலே வாணங்கள் கட்டிக் கோட்டையின்பேரிலேயும் துரையவர்கள் வீட்டுத் தோட்ட மதன் மெத்தையின்பேரிலேகூட எங்கும் விளக்கு வைத்துத் தயார்பண்ணினார்கள். அதன்பேரிலே நேற்றைய தினம் தமுக்குப் போடுவித்தபடிக்கு இன்றையதினம் ராத்திரிக்குப் பட்டணத்திலே வீதிக்கு வீதி சொக்கப்பனைகள் கட்டி, வீட்டுக்கு வீடு விளக்குகள் வைத்துப் பட்டணமெல்லாம் பட்டம் பகல் போலவே வேடிக்கைகளாயிருந்தது. பிற்பாடு ஏழு மணி துவக்கி எட்டு மணி மட்டுக்கும் வாணவித்தைகள் பார்த்துக்கொண்டிருந்தார்கள். இன்றையதினம் வந்து இந்தப் பட்டணத்தினுடைய அலங்காரமும் பட்டம்பகல்போலே பிரகாசத்திலே தெரியப்பட்ட மகர தோரணங்களும், வாழைகள்,

தென்னங்கீற்றுகள் அங்கங்கே கட்டியிருக்கிற அலங்கிருதமும், அங்கங்கே பார்க்கப்போனால் சுவாமிக்கே பிரீதியேயல்லாமல் மனுஷருக்கு ஒப்பிதமல்ல. இந்தப்படிக்குச் சம்பிரமமாய்ப் பண்டிகை கொண்டாடினார்கள். அதன்பேரிலே ஒன்பது மணிக்கு மேசை போட்டுப் பெரிய மேசையிலே குமிசெல்காரர், வெள்ளைக்காரர், பெரிய மனுஷர், வெள்ளைக்காரிச்சிகள் சமஸ்தமான பேரும் வந்து விருந்து சாப்பிட்டார்கள். அதன் பேரிலே, சாராய தித்திப்புப் பழவகைகள் மேசை போட்டு ஆனபிறகு வெள்ளைக்காரர் ஒருத்தருக்கொருத்தர் ஆடுகிறதும் பாடுகிறதும், வீணை வாத்தியங்களும், துரும்பேத்து ஊதுகிறதும் இந்தப்படியாக அவரவர்களுடைய சந்தோஷம்போலே வெகுநேரமட்டுக்கும் விளையாடிக்கொண்டிருந்தார்கள். இந்தச் சம்பிரமத்துக்கெல்லாம் மகம்மதாக்கலை கூட வைத்துக் கொண்டு சகல சம்பிரமங்களும் நடப்பித்தார்கள். சந்தா சாயபு மகனும், பெருமுக்கல் மீயாசாயபும், மீருகுலாமுசேன் தகப்பன் சாபர்சாயபு. இவர்களெல்லாம் கூடவைத்துக் கொண்டு சகல சம்பிரமங்களும் நடப்பித்தார்கள். படேசாயபு குமாரனை அழைத்து அனுப்புவித்ததற்குத் தங்கள் பாட்டன் காலம்பண்ணிப்போன வருஷம் சமீபித்தபடியினாலே தான் வரப்போகாதென்று சொல்லியனுப்பினான்.

மகாநாட்டார் சந்தித்தது:

| | | |
|---|---|---|
| கும்பினீர் வர்த்தகர் | மோகிரி | 21 |
| சேஷாசல செட்டியார் | ,, | 5 |
| டங்காசாலையார் | ,, | 21 |
| வாசுதேவபண்டிதர் | ,, | 5 |
| நயினார் | ,, | 7 |
| டங்காசாலை ரமணப்ப செட்டியார் | ,, | 19 |
| சல்து வேங்கடாசல செட்டியார் | ,, | 7 |
| மளிகை வர்த்தகர் | ,, | 15 |
| காசுக்கடை வர்த்தகர் | ,, | 5 |
| குண்டு கிராமத்தார் | ,, | 4 |
| அரியாங்குப்பத்தார் | ,, | 3 |
| புடவைக்கூட்டக்காரர் | ,, | 10 |

| | | |
|---|---|---|
| ஓமுகரையார் | மோகிரி | 7 |
| லக்ஷ்மணநாயக்கர் | ,, | 5 |
| செட்டி நாட்டாண்மைக்காரர் | ,, | 1 |
| கவரை பெத்துசெட்டியார் | ,, | 1 |
| கோமுட்டிகள் | ,, | 1 |
| கைக்களவர் | ,, | 1 |
| பாஞ்சாலத்தார் | ,, | 2 |
| சேடச்சேரியார் | ,, | 1 |
| நீலக்காரர் | ,, | 3 |
| சாராயக்கிடங்குக்காரர் | ,, | 3 |
| எழுத்துக்காரர் | ,, | 1 |
| வாணிய வகுப்பு (2 வகுப்பு) | ,, | 2 |
| சாணர் | ,, | 2 |
| பலசரக்குக்காரர் | , | 5 |
| முத்தியாலுப்பேட்டையார் | ,, | 1 |
| வண்ணர் | ,, | 5 |
| கொட்டினக்காரர் | ,, | 1 |
| குசவர் | ,, | 1 |
| | | 157 |

மோகிரி 1க்கு ரூபாய் 14 ஆகக் கூடின ரூபாய் 2198

1747 ஆ மார்ச்சு மீ 1 உ க்ரு அக்ஷய ஞு மாசி மீ 21 உ புதன்கிழமை

இற்றைநாள் காலமே பத்து மணிக்கு அசரத்து பெருமுக்கல் மியாசாயபு அவர்கள் துரையவர்கள் பேட்டிக்கு வந்தார்கள். வந்தவுடனே அவருக்கு வெகுமானம் சிகப்பு சகலாத்து சிப்பம் 1, பச்சை சிப்பம் 1, ஆகுதுங்கரி சீசா இதுகளெல்லாம் வெகுமானம் கொடுத்து ஐந்து பீரங்கியும் போட்டார்கள். அதன்பேரிலே அவர்களை அனுப்புவித்துக்கொண்டு விடுதிக்குப் போனர்.

பிற்பாடு இரண்டு மணிக்குச் சென்னப்பட்டணத்திலே யிருந்து துரையவர்களுக்கு ஒரு கடுதாசி வந்தது. அந்தக் கடுதாசி வந்தவுடனே என்னை அழைக்கச் சொன்னார்கள். அந்தச் சமயத்திலேயே நான் அப்பியங்கனம்பண்ணிக்கொண்டிருந்தேன். ஆனபடியினாலே, அழைத்தவுடனே போகிறதற்குக் கூடாமல் சீக்கிரம் சீக்கிரமாய் ஸ்நானம்பண்ணினேன். இதற்குள்ளே இரண்டு பேர், மூன்று பேர், நாலு பேர் வந்தார்கள். அதன்பேரிலே அங்கிபோட்டுக்கொண்டு துரையண்டைக்குப் போனேன். நான் போனவுடனே சென்னப்பட்டணத்திலே யிருந்துவந்த கடுதாசியை எடுத்துப் படித்துக்காண்பித்தார்கள். அந்தக் கடுதாசியிலே எழுதியிருந்த வயணமென்னவென்றால்: சென்னப்பட்டணத்திலே பண்டிகை கொண்டாடுகிறன்றைக்கு இங்கிலீசுக்காரர் கப்பல் ஒன்று சீர்மையிலேயிருந்து வைத்துப் பிடித்ததாகவும், அந்தக் கப்பல் தூரத்திலே வரச்சே இங்கிலீசுக்கொடி போட்டுக்கொண்டு வருகிறதைக் கண்டு கோட்டையின்பேரிலே பிரான்சுக்கொடி வாங்கிப்போட்டு, இங்கிலீசுக் கொடியை வாங்கிப்போட்டதாகவும், கப்பல்காரனுக்குச் சேதி தெரிந்துகொள்ளாதபடியினால் எப்போதையும்போலே பட்டணம் தங்களுடையதென்கிறதாய்ச் சந்தோஷமாய் ஓடிவந்து வைத்துப் பிடித்துப் பீரங்கிப்போட்டதாகவும் பதிலுக்குக் கோட்டையிலேயும் பீரங்கிப்போட்டுக் கட்டுமரம் விட்டதின் பேரிலே கட்டுமரத்திலே கப்பல்காரன் கடுதாசி எழுதினவயணம்: நானுனல் சீர்மையிலேயிருந்து புறப்பட்டு நாலு மாதத்திலே வந்து சேர்ந்தேன். கப்பலிலே வந்த மனுஷரிலே 36 பேர் செத்துப் போனார்கள். மற்றபேர்களெல்லாரும் வியாதியாய்க் கிடக்கிறார்கள். சீக்கிரமத்துக்கு மனுஷரையனுப்பியிருக்கிற வெள்ளி, சகலாத்து. ஈயம் மற்றச் சரக்குகள் இருக்கிறதெல்லாம் சீக்கிரமத்துக்கு இறக்கிக்கொள்ளவுமென்று எழுதி, சரக்குகள் வந்திருந்த லீஸ்துவையும், அவருக்கு வந்திருந்த கடுதாசிகளையும், கும்பினியார் கடுதாசியையும் ஏகத்துக்குக் கடுதாசிகட்டு மிறக்கி ஒரு ஒப்பிசியேலையும் இறக்கினார்களாம். அவனிறங்கி வந்தவுடனே கடுதாசி கட்டுகளை எடுத்து வைத்துக்கொண்டு, அது கொண்டுவந்த வெள்ளைக்காரனை காவல் பண்ணுவித்து மறுபடி ஒரு சலங்கை அனுப்பி, பிராஞ்சுக்காரர் கப்பலானல் மேலாகத் திரிகிறது. ஆனபடியினாலே கப்பலை தூரத்தில் வைத்திருக்கவேண்டா மின்னஞ் சமீபத்திலே கொண்டுவந்து

வைத்துப் பிடி என்றெழுதி அனுப்பினார்கள். அந்தப்படியே கிட்டே சமீபத்திலே கொண்டுவந்து வைத்துப் பிடித்ததாக வும், அதன்பேரிலே துறையிலேயிருந்த சலங்குகளெல்லாம் முஸ்தீதுபண்ணி, அதுகளிலே சொல்தாதுகளை நிறைபாரமாய் ஏற்றிக்கொண்டு, மருந்து ஏற்றி, சலங்குகளெல்லாம் போய் வைத்துப்பிடித்து ஒருமிக்கத் தள்ளினதாகவும், சலங்குகளெல் லாம் போய்ச் சொல்தாதுகளையெல்லாம் கப்பலின் பேரிலே ஏறி கப்பலைப் பிடித்துக்கொண்டு கப்பலிலேயிருந்த வெள்ளி பத்தாக்கும், மற்றச் சரக்குகளெல்லா மிறக்கிக் கொண்டுவிட்டதாகவும், அதிலேயிருந்த வெள்ளி லட்சத் தைம்பதினாயிரம் பத்தாக்கு இருந்ததாகவும், பின்னையுங் கப்பித்தான், சின்ன கப்பித்தான், பின்னை வர்த்தகர், மற்றப் பேர் அவரவரது வந்திருக்கிறதென்றும் எழுதியிருந்தது. அது இவ்வளவென்று தெரியாது. இந்தப்படி சென்னப் பட்டணத்திலேயிருந்து எழுதியிருந்த கடுதாசியிலே எழுதி யிருந்தது. அதையெல்லாம் படித்தபிற்பாடு அவருடைய சந்தோஷ மின்னமட்டு மினியமட்டென்று சொல்லிமுடியாது. அதன்பேரிலே என்னைப் பார்த்து, ரங்கப்பா, நீ சொல்லுகிற தெல்லாம் சரிப்பட்டு வருகுதென்று சொல்லி என் பேரிலே ரொம்ப சந்தோஷப்பட்டார்கள். அதற்கு நான் சொன்னது: ஐயா, நீங்கள் மெத்த யோகசாலியானபடியாலும், எல்லாம் உங்கள் கைவசப்படுகிற நாளானபடியினாலேயும் தற்செய லாய் பலவந்தமாய் வந்துசேரும். அதற்குத் திருக்கு என்ன விருக்குது? வரவர அதிக சிரேயசாய் நடக்கும்படி யிருக்கிறதற்கு இனிமேல் 1748-ஆம் வருஷம் பிறந்தால் மெத்தவுந் தவுலத்தாய் நடக்குமென்று சொன்னேன். அந்த மட்டிலே சந்தோஷப்பட்டு, மெய்தான், நீ சொல்லுகிற பேச்செல்லாம் திருஷ்டாந்தரமாய் வருகுதென்று சொன் னார். அந்தமட்டிலே தேவனாம்பட்டணம் கூட உங்கள் கைவசமாகுதென்று ரொம்பவும் உற்சாகப்படத்தக்கதாகச் சொன்னோம். அதன்பேரிலே அவர்களும் சந்தோஷப் பட்டுக்கொண்டிருந்தார்கள். அந்தமட்டிலே நான் புறப்பட்டுப் பாக்குக்கிடங்குக்கு வந்தேன்.

இந்த நாள் சாயங்காலமான பிற்பாடு ஒன்பது மணிக்குப் பெருமுக்கல் மியாசாயபு நம்முடைய வளவுக்கு வந்தார்,

அவருக்கு ஒரு சிப்பம் சிகப்பு சகலாத்து வெகுமானம் பண்ணினோம். அதை வாங்கிக்கொண்டு வெகு நேரம் பேசிக்கொண்டிருந்து அனுப்புவித்துக்கொண்டு காலமே ஊருக்குப்போகிறோமென்று சொல்லி அனுப்புவித்துக்கொண்டு போய்விட்டார்கள்.

இன்றையதினம் உசேன்சாயபு அவர்களுக்கு அனுப்பின வெகுமானம்:

| | | |
|---|---|---|
| இங்கிலீசு சட்டம் சகலாத்து 5 சிப்பம் | வராகன் | ... |
| பிரான்சு சட்டம் சகலாத்துக் கட்டு 5 சிப்பம் | ,, | ... |
| அச்சடி சகலாத்து சிப்பம் 1-க்கு | ,, | 30 |
| இரண்டு வர்ன சகலாத்து சிப்பம் 1-க்கு | ,, | 96 |
| சிகப்பு முகமல் கிசம் 18½க்கு | ,, | 74 |
| மஞ்சள் மொகமல் கிசம் 13½க்கு | ,, | 47¼ |
| தோம்புதோர் கிசம் 1-க்கு 18 வராகன் வீதம் 18 கிசம் | வராகன் | 324 |
| இசுப்பாஞ்சானுது பொன் கலாம் மார்க்கு 7-4க்கு அவுன்சு | வராகன் | 112½ |
| கண்ணாடி 2-க்கு | வராகன் | 5 |
| கண்ணாடி 4-க்கு | ,, | 7 |
| வேடிக்கை பூதக்கடுதாசியும் அது வைத்துப் பார்க்கிற கண்ணாடிக்கூண்டும் | ,, | 20 |
| பின்னை ஒரு விதம் கலாம் மார்க்கு 7 அவுன்சு 4-க்கு | ,, | 112½ |
| மடக்குக்கத்தி 12-க்கு | வராகன் | 12 |
| கத்திரிக்கோல் 12-க்கு | ,, | 6 |
| மெழுகு வத்தி வைக்கிற வீதர் 4-க்கு | ,, | 20 |
| இரட்டைக்குழாய் துப்பாக்கி 1-க்கு | ,, | 25 |
| சின்னக்குழாய் துப்பாக்கி 2-க்கு | ,, | 12 |
| பிஸ்தோல் சோடு 2-க்கு | ,, | 20 |
| பன்னீர் சீசா 12-க்கு | ,, | 12 |
| சீனத்துக் காசுவேலை செய்த பன்னீர்சொம்பு 1க்கு | ,, | — |
| பொன்கண்ட மார்க்கு 4-க்கு | ,, | 50 |
| ஆகுதே மெலிசு சீசா 20-க்கு | ,, | 10 |
| ஆகுதே இம்பீரியல் சீசா 20-க்கு | ,, | 10 |
| ஆகுதெங்குரி சீசா 20-க்கு | ,, | $2\frac{3}{4}$ |

சம்பதிராயனுக்குக் கொடுத்தனுப்பினது

| | | |
|---|---|---|
| இங்கிலீசு சட்டம் | வராகன் | — |
| சகலாத்து கட்டு 4-க்கு | ,, | — |
| பிரான்சு சட்டம் சகலாத்துகட்டு 4-க்கு | ,, | — |
| தோம்புதோர் கிசம் 8-க்கு | ,, | 144 |
| கண்ணுடி நாலுக்கு | ,, | 8 |
| கத்திரிக்கோல் 12-க்கு | ,, | 6 |
| கத்திரி 6-க்கு | ,, | 6 |

இதல்லாமல் அவ்விடத்திலேயிருக்கிற மாபூசுகான் தமையன் குமாரன் அன்வர்கான் என்கிறவனுக்கும் குலாப்சிங்கு, பிச்சா வாலா முதலான முசத்திகளுக்கும் கொடுக்கச் சொல்லி முசியே தெலார்சு கொடுத்தது:

| | | |
|---|---|---|
| சகலாத்துகட்டு சிப்பம் 6-க்கு | வராகன் | ... |

இதல்லாமல் அவ்விடத்திலே சோபுதாரர் மற்றப் பேருக்குக் கொடுக்கிறதற்காகச் செலவுக்கு ரொக்கத்திலாருசுவு:ம் ரூ 1000.

1747-ம் ஆ மார்ச்சு மூ 2 உக்கு அக்ஷய ஹூ மாசி மீ 22 உ துருவாரம்

இற்றைநாள் நடந்த அதிசயமென்னவென்றால்: இமாம் சாயபு மனுஷர் அவாய் சாயபும் சொக்கப்பமுதலியு மிரண்டு பேரும் துரையவர்களைக் கண்டுபேசி அனுப்புவித்துக்கொண்டு ஆற்காட்டுக்குப் போகவேணுமென்று சொல்லிக்கொண்டார்கள். அப்படியே மத்தியானத்துக்குமேல், நாலு மணிக்குமேல் துரையவர்களண்டைக்குப் போய் அழைப்பித்துவிட்டு இவர்களுக்கும் போகிறோமென்று சொல்லிக்கொண்டு போகத்தக்கதாக வந்தார்களென்று சொன்னோம். அதன்பேரிலே அவர்களது ஒரு சீட்டு சம்மதி ரூ. 25000. இதற்கு வட்டி கூட்டினது ரூ. 7688. சில்லரை ஆக வட்டி முதல் ரூ. 32688. சில்லரைக்கு நாலைந்து நாளைக்கு முன்னே மூசே துலாராம் பேருக்குச் சீட்டெழுதியனுப்பிக் கொடுக்கச்சொன்ன ரூ. 30000 போக மற்ற ரூ. 2688 சில்லரை அதையும் மூசே துலாராமைக் கொடுத்துவிடச்சொல்லிச் சீட்டெழுதிக் கொடுத்து வாங்கிக்கொள்ளச் சொல்லிப் பின்னையும் பேசவேண்டிய சம்மதிகளெல்லாம்

பேசிக்கொண்டு அனுப்புவித்துக்கொள்ளப் போகச்சே அவாய் சாயபுக்கு இரண்டு சிப்பம் சகலாத்தும் அவருடைய மருமகன்மார் இரண்டுபேருகரும் பேருக்கு நாலு நாலு கிசம் விழுக்காடு இரண்டு பேருக்கும் எட்டு கிசம் சகலாத்தும், சொக்கப்பமுதலிக்கு இரண்டு கிசம் சகலாத்தும் இந்தப்படிக்கு வெகுமானம் பண்ணினார்கள். அந்த வெகுமானத்தை வாங்கிக்கொண்டு அனுப்புவித்துக்கொண்டு இருபத்தையாயிரம் ரூபா சீட்டு ஆற்காட்டிலே யிருக்குது. ஆற்காட்டுக்குப் போனவுடனே அனுப்புவிக்கிறோமென்று சொல்லி அனுப்புவித்துக்கொண்டு நம்முடைய பாக்குக் கிடங்குக்கு வந்து ஸிமாசு பண்ணிக்கொண்டு, பிற்பாடு அவருடைய வீடு திக்குப் போனார். அவர் துரையவர்களுடனே சொல்லிக்கொண்டதென்னவென்றால்: தங்கள் வீட்டு பேச்சுக்குச் சொன்னார்கள். அதன்பேரிலே துரையவர்களிருந்துகொண்டு பட்டணத்திலே வர்த்தகர் வெகுபேருடைய சரக்கெல்லாம் உங்களுடையது உங்களுடையதென்றுசொல்லி அப்புறப்படுத்தியிருக்கிறீர்கள். அதுகளெல்லாம் உங்களை விடுகிறதில்லை என்று சொன்னார்கள். அதற்கவர்களிருந்துகொண்டு, நாங்கள் அறிந்ததில்லை. அவ்விடத்திலே யிருந்த மனுஷர் என்ன செய்தார்களோ நங்களறிந்ததில்லை. இனிமேலப்படி வராதபடிக்கு எழுதியனுப்புகிறோமென்று சொல்லி மார்க்கமாய்ச் சொன்னார்.

இற்றைநாள் ஸ்ரீ துரையவர்கள் மூசியே தெப்ரமேனிபேருக்குக் கடுதாசி யெழுதியனுப்பின வயணமென்னவென்றால்: நவாபு மாபூசுகானண்டையிலேயிருந்து தமக்குச் சிரொப்பா வெகுமானங் கொண்டுவந்த குதிரைக்காரர் ஆறு பேரும் பத்துப் பனிரெண்டு பேர் சேவகரும் நாளை வருகிறார்கள். அவர்கள் வரும்போது இரண்டு பேர் குமிசெல்காரரும் நாலத்து இரண்டு பேர் பெரிய மனுஷரும் மேளதாளத்துடனே எதிர்கொண்டுபோய் வெகுமானத்தைப் பல்லக்கிலே வைத்துக்கொண்டு சகல சம்பிரமத்துடனே அழைத்துக்கொண்டுவரச் சொல்லியும், கோட்டையிலே வந்தவுடனே பீரங்கிபோட்டு மரியாதை பண்ணச்சொல்லியும், அவர்களுக்கு விடுதி விடச் சொல்லியும், அவர்கள் வந்தவுடனே ஒரு கொத்தளத்தின் பேரிலே எட்டு நாளைக்கு அவர்கள் கொடிபோட்டிருந்து மறு

படி வாங்கிக்கொண்டு போவார்களென்று மிப்படியாக எழுதி யனுப்பினார்களிதல்லாமல், இந்த வயணம் முத்தியப்பிள்ளைக் குத் தெரிந்திருக்கத் தக்கதாக என்னை எழுதியனுப்பச் சொன் னார். அந்தப்படிக்கு முத்தியப்பிள்ளை பேருக்கு நாமும் ஒரு கடுதாசி யெழுதி இரண்டு கடுதாசியும் இன்னாசி கையிலே கொடுத்து முன்னே சேதியறியத்தக்கதாக இன்றைய தினம் சாயங்காலம் பயணம்பண்ணி அனுப்பினோம்.

இற்றைநாள் மகம்மதாக்கல் ஆற்காட்டுக்குப் பயணம் போகத்தக்கதாக துரையவர்களண்டைக்குப் போய் அனுப்பு வித்துக்கொண்டு போனார். அவர் அனுப்புவித்துக்கொள்ளுகிற போது நடந்தவயண மென்னவென்றால்: முன்னே அவருக்கும் பிரான்சுக்காரருக்கும் நடந்திருந்த உடன்படிக்கை என்ன வென்றால்: இந்த மோசுத்துமா பைசல் பண்ணினது உண்டா னால் ரூ 12000 கொடுக்கிறோமென்று பேசியிருந்தோம். அதற்கு முன்னாலே இரண்டாயிரம் ரூபாய்க்கு ஆற்காட்டுக்கு உண் டிகைக் கொடுத்துவிட்டோம். மற்றது இன்னங் கொடுக்க வேண்டிய ரூ 10000க்கு நானூறு ரூபாய் கையில் வாங்கிக் கொண்டு அனுப்புவித்துக்கொண்டு மற்ற ரூ 9600 க்கு இவ்வி டத்திலே புக்காஞ்சி காசிதாசு அவர்கள் கடையிலே செலுத்தி ஆற்காட்டிலே ஆசிஉசேன் பேசி அவர்பேருக்கு உண்டிகைவாங் கிக்கொண்டு அனுப்புவித்துக்கொண்டு காலமே சூரிய உதயத் துக்கு முன்னே பயணம் புறப்படத்தக்கதாக நம்முடைய பாக்குக்கிடங்குக்குவந்து எட்டுமணி மட்டுக்கும் பேசிக்கொண் டிருந்து பிற்பாடு அவருடைய விடுதிக்குப் போய்விட்டார். இதல்லாமல் உசேன் சாயபு சென்னப்பட்டணத்திலேயிருந்த வீட்டைப்பிடித்துப் போட்டார்களே பதிலுக்கு வீடு வேணு மென்று கேட்டார். அதற்குப் பதில் உசேன் சாயபு மனுஷருக் குச் சம்மதியான வீட்டை விடச்சொல்லி முசே தேப்பிரமேனிக்கு எழுதியனுப்புவிக்கிறோமென்று சொன்னார்கள்.

இற்றைநாள் நடந்த அதிசயமென்னவென்றால்: வக்கில் சுப்பய்யனுக்கு இந்த மட்டுக்குஞ் சொல்லி சம்பளம் ஆறு வராகன் நடந்துவந்தது. இப்போது இதுசமயமானபடியினாலே இன்றையதினம் துரையவர்களுடனே சொல்லி மீ 1-க்கு பத்து வராகன் வீதம் சம்பளம் பண்ணுவித்தோம். அதற்குத் துரை

யவர்களிருந்துகொண்டு ஆனல் பத்து வராகன் கொடுக்கிருப் போலேயாச்சுதே இதற்குள்ளே பல்லக்கு ஏறிக்கொண்டு திரி யச்சொல்விச் சொன்னர்.

அந்தமட்டிலே நம்முடைய பாக்குக்கிடங்கிலே வந்த வுடனே மகம்மதாக்கலைக் கூட வைத்துக்கொண்டு சுப்பய்யனுடனே இந்தச் சேதி சொன்னவுடனே பத்து வராகனிலே பல்லக்கு ஏறுகிறதெங்கே? என்னுடைய செல வுக்கு எப்படி நடக்குமென்று சொல்லிக்கொண்டான். ஆனல் சமயம் பார்த்துச் சொல்லிப் பார்ப்போமென்று சொன்னேன்.

பாச்சா அறக்காரர் சிங்கார் (Singar) என்கிறவனை துரை யவர்கள் பேட்டிக்கு அழைத்துப்போய் விட்டவிடத்திலே துரையவர்கள் அவருக்கு இரண்டு சிப்பஞ் சகலாத்து வெகு மானங் கொடுத்து அனுப்பினர்கள். அதை வாங்கிக்கொண்டு பயணம் அனுப்புவித்துக்கொண்டு வந்துவிட்டார். நாளை காலமே பயணம் போகிருர்.

இற்றைநாள் இவ்விடத்திலே நடந்த அதிசய மென்ன வென்ருல்: அப்துல் ஷா என்கிறவன் துலுக்கனுக்கும் முசியே லவிலேத்து (M. Lavillette) மகனுக்கும் இரண்டு பேருக்கும் வியாச்சியம் வந்து நம்முடனே சொல்லிக்கொண்டார்கள். அவர்கள் வியாச்சியம் என்னவென்ருல்: இரண்டு வருஷத்துக்கு முன்னே லவிலேத்து மகன் சாராயம் ஆற்காட்டிலே கொண்டு போய் விற்கப்போனவிடத்திலே கொஞ்ச நஞ்சம் விற்றது போக மற்றதை இந்த அப்துல் ஷா வென்கிற துலுக்கன் வசம் ஒப்புவித்துப்போட்டுவந்த சாராயச் சம்மதி ஒன்றும், லவிலேத்து மகன் அந்த துலுக்கன் கையிலே வாங்கி ஏறிக்கொண்டுவந்த குதிரையை மறுபடியும் ஆற்காட்டுக்கு அனுப்புவித்ததாகவும் அனுப்புவித்தவுடனே அந்தக் குதிரை போய்ச் சேர்ந்தவுடனே இரண்டு மூன்று நாளையிலே குதிரை செத்துப்போச்சுதென்று ஒரு வியாச்சிய மிப்படி இரண்டு வரு ஷமாய் வியாச்சியந் தீராமலிருக்க இவ்விடத்திலேயிருந்து ஸ்ரீ துரையவர்கள் கடுதாசி மீருதசல்லிகான் (Murtaza 'Ali) அவர்களுக்கு வாங்கி அனுப்புவித்ததின்பேரிலே அவனுக்கு அவ்விடத்திலே யிருக்கக்கூடாமல் மகம்மதாக்கல் வரச்சே

அவன் பிறகேகூட இவ்விடத்துக்கு வந்தான். ஆனபடியி னாலே இவ்விடத்திலே தீர்ந்த வயணம் நம்முடைய பாக்குக் கிடங்கிலே அவாசாயபும் மகம்மதாக்கல், லட்சுமநாயக்கன் இவர்கள் கூடியிருந்த வியாச்சியத்தை இருவர்மூலமுங் கேட்டு ஏகத்துக்கு 220 ரூ வியாச்சியத்தைக் கேட்டு நாலு பேருக்கும் சம்மதியானபடிக்கு ஆலோசனை பண்ணிக்கொண்டு தீர்ந்த வயணம் என்னவென்றால்: நூறு ரூபாய் தள்ளிப்போட்டு நூற்றிருபது ரூபாய் லவிலேத்து மகனுக்கு அப்துல் ஷாவை கொடுக்கச் சொல்லித் தீர்த்தார்கள், அதற்கு இப்பகையிலே ரொக்கம் கொடுத்த 58 மூன் ஆற்காட்டிலே செலவுக்குக் கொடுத்திருந்த ரூ 12 ஆக ரூ 70ம் நீக்கிக் கொடுக்கவேண்டிய ரூ 50-ம், மகம்மதாக்கல் ஆற்காட்டுக்குப் போனவுடனே அனுப்புவிக்கிறேனென்று சொல்லிக்கொண்டார். அந்தப்படிக் குச் சொல்லிக்கொண்டு வியாச்சியந் தீர்த்துப் பாரிக்த்துவாங் கிக்கொடுத்துத் தீர்த்துப்போட்டோம்.

1747 ஆ மார்ச்சு மீ 3 உ க்ஷ அக்ஷய ஞ மாசி மீ 23 உ சுக்கிரவாரம்

இற்றைநாள் காலமே ஆறு மணிக்கு இவ்விடத்திலே யிருந்து மகம்மதாக்கல் ஆற்காட்டுக்குப் போகத்தக்கதாகப் பயணம் புறப்பட்டார். அவர் பிறகே கூடப்போன வெள்ளைக் காரர் முசியே தெலார்சு, முசியே கையேர் (M. Cayerfourg), முசியே கேர்சாம் (M. de Kerjean) இவர்கள் மூன்று பேரும் கூடப் போனார்களிதல்லாமல் இவர்கள் பிறகே பாதிரி ஒருத்தன் கூடப்போனான். அந்தப் பாதிரி தம்முடைய வேஷத் தை விட்டுப்போட்டு வெள்ளைக்காரர் உடுப்பு உடுத்திக் கொண்டு கூடப்போனான். அந்தப் பாதிரி, ராச்சியங்களிலெல் லாம் திரிந்து வேடிக்கைப் பார்த்துக்கொண்டு திரிந்து வந்தவ னானபடியினாலே ஆற்காட்டிலேயும் வேடிக்கைத் தமாசு பார்க்கப்போனான்.

இன்றையதினம் பாச்சா அறக்காரர் சிங்கார் என்கிறவன் பயணம் புறப்பட்டுப்போய்விட்டான். அவன் பிறகே கூட வந் திருந்தவர்கள் கூடப் போய்விட்டார்கள். இமாம் சாயபு அவர் கள் மனுஷன் அவர் அவாயிசாயபுக்குத் துரையவர்கள் வெகு

மானங் கொடுத்ததுமல்லாமல் நம்முடைய சொந்தம் அவாயி சாயபுக்கு ஆறுகிசம் சகலாத்தும், சொக்கப்பமுதலிக்கு இரண்டு கிசமும், அவர் மருமகன் அம்மையப்பமுதலிக்கு இரண்டு கிசம் சகலாத்தும் வெகுமானங் கொடுத்தோம். அதை வாங்கிக் கொண்டு அவர்களனுப்புவித்துக்கொண்டு சின்னு முதலியண்டைக்குப்போய்ச் சொல்லிக்கொண்டு இற்றைநாள் ஊருக்குப் போய்விட்டார்கள்.

இற்றைநாள் வழுதாவூரிலேயிருந்து மீர் அசத்து கடுதாசி ஒன்று வந்தது. அந்தக் கடுதாசி வயண மென்னவென்றால்: துலுக்கருக்கு மிவருக்கும் சமாதானமானதற்கு முமார்க்கு (mortgage) பிரதியும் எழுதிச் சென்னப்பட்டணத்திலே இங்கிலீசுக்காரர் நாவியிலே ஆதியப்பநாயக்கன் தோட்டம் தமக்கு அடைமானமாக வைத்திருந்த சம்மதியும், இதல்லாமல் இசுபு அக்கீம் பேரிலே தமக்குப் பணங்காசு வரவேண்டியிருக்கு தென்று மிந்த வயணமெல்லா மெழுதியிருந்தது வாய் விசேஷம் சொல்லி நாலு பீரங்கி, ஒன்பது ராத்தல் குண்டு, ஓடுகிற பீரங்கி வேணுமென்று சொல்லி அனுப்பினுனிந்தப்படிக்கு என்பேருக்கு எழுதின காகிதத்திலெழுதி நானந்தச்சேதியும் துரையவர்களுக்குச் சொல்லி என்பேருக்கு மீருசத்து வேங்கடாசலநாயக்கன் தங்கள் கிராமங்களிலே கலாபம்பண்ணினுனென்றும், அவனுக்கு நீர் ஆசரா கொடுத்து நடப்பிக்கிறது நியாயமல்லவென்று எழுதியனுப்பினுர். அந்தச் சேதி துரைக்குச் சொன்னேன். அதற்குத் துரையவர்கள் சொன்னது: நானிந்தச் சேதியறியேன். வெளியிலே நடக்கிற சேதிகளெல்லாம் எங்கள் பேரிலேதானே சொல்லுகிறுர்கள். எதுக்கென்று நாங்கள் தப்பித்துக்கொள்ளுவோமென்று எப்படி எழுதவேணுமோ அப்படி எழுதச் சொன்னுர். அந்தப் படிக்கு அவருக்கெழுதின கடுதாசி வயணம்: ஆதியப்பநாயக்கன் தோட்டத்துச் சம்மதி அடகு சீட்டை அனுப்பிவைத்தாலதை பிராஞ்சுப்படுத்திப் பார்த்துக்கொண்டு சொல்லுகிறுமென்று எழுதியிருந்த அமுல் நடந்ததைச் சென்னப்பட்டணத்துக் கெழுதியனுப்பித் தெரிந்துகொள்ளுகிறுமென்றும், அக்கீம் யூசுப்பேரிலே வரவேணுமென்றும் எழுதினதற்கு அவன் வெகுபேருக்குக் கொடுக்கவேணும், அவனுக்கு யாராலே

யாகிலும் சென்னப்பட்டணத்துக்கெழுதி யனுப்புகிறோமென்று சமாதானமானதும் உமக்கு முபார்க்குமிருக்குது என்று எழுதி வந்த தேவராய பண்டிதன் முக வார்த்தையாய்ச் சொன்னது. நாலு பீரங்கி கேட்கச்சொன்னதாகச் சொன்னான். அந்தச் சேதி துரைக்குச் சொன்னதற்குக் கலாபம் விஸ்தாரமானால் அப்படியே கொடுத்தனுப்புகிறோமென்று சொல்லச்சொல்லிச் சொன்னபடிக்கு வந்த தேவராய பண்டிதனுடனே சொல்லி அனுப்புவித்தேன். என் காகிதமும் இது வயணத்துக்கு எழுதி பேதமுஷ்க்கு (Good Musk) அகப்படாதென்று ஒரு பன்னீர் சீசா மாத்திரம் கொடுத்தனுப்புவித்தேன்.

இற்றைநாள் நடந்த அதிசயமென்னவென்றால்: முன்னாலே துலுக்கருக்கு மிவருக்கும் சமாதானம்பண்ணிவந்திருந்த வக்கீல் மகமத்தாக்கல் என்கிறவன் இவ்விடத்துக் காரியங்களை யெல்லாம் சமாதானப்பட்டு ஆற்காட்டுக்குப் பயணமனுப்புவித்துக்கொண்டு போகிறபோது ஸ்ரீ துரையவர்களை ஒரு மனு கேட்டுக்கொண்டார். அதென்னவென்றால்: வீரராகுவ நாயக்கனென்கிறவனை யிந்தவூரிலேயிருக்க வொட்டாமல் குண்டுக்கு வெளியே போகச்சொல்லி அனுப்பிவிட்டார்களாம். அவனை இப்போது இந்த ஊருக்குள்ளே வந்திருக்கத் தக்கதாக என்னிடமிருந்து நியம் உத்தாரங் கொடுக்க வேணுமென்றும் மனுவாய்க் கேட்டுக்கொண்டார். அதன்பேரிலே துரையவர்களிருந்துகொண்டு அவனுடைய மகன் இவ்விடத்திலே திருடினான். அதனாலே அவனை இவ்விடத்திலே வைக்கலாகாதென்று துரத்திவிட்டோமென்று சொன்னார். அப்படியல்ல, எப்படியாகிலும் தயவுபண்ணவேணுமென்று கேட்டதின்பேரிலே நல்லதென்று சம்மதித்து, அவனுடைய மகனைமாத்திரம் விட்டுப்போட்டு அவனையும், அவனுடைய தம்பிமாரையும், பெண்டுகள் பிள்ளைகளுடனே வந்திருக்கச்சொல்லி உத்தாரங் கொடுக்கிறோமென்று சொன்னார்கள். அதைப் பரவசமாய்க் கேட்டுக்கொண்டு அவர் ஊருக்குப் போய்விட்டார். அதன் பிற்பாடு அந்த மகம்மதாக்கல் என்கிறவன் ஆற்காட்டுக்குப் போகச்சே நடு வழியிலேயிருந்து துரையவர்களுக்குப் பிராஞ்சு லிபியிலே மசியே நேலார் கவைக்கொண்டு காடுதாசி எழுதுவித்து அனுப்புவித்தார். அந்தக் கடுதாசியில் எழுதியிருந்த வயணமென்னவென்றால்:

வீராநாயக்கன் சம்மதிக்குச் சொல்லிக்கொண்டு வந்தேனே, அவனை யழைப்பித்து ஊரிலே இருக்கத்தக்கதாக உத்தாரங் கொடுக்கிறேமென்று சொன்னீர்களே, அந்தப்படிக்குத் தயவு பண்ணவேணுமென்று உபசாரமாய் எழுதுவித்து அந்தக் கடுதாசியிலே தம்முடைய நிசான்பண்ணியனுப்பினார். அந்தக் கடுதாசியைப் பார்த்துக்கொண்டவுடனே என்னையழைத்து வீராநாயக்கனையும், அவனுடைய அண்ணன் தம்பி மாரையும், குழந்தைகளையெல்லாம் வந்திருக்கச்சொல்லி யும், அவனுடைய மகனைமாத்திரம் வரவேண்டாமென்று இந்தப்படிக்கு நீ சொல்லியனுப்பி அழைப்பியென்று சொன்னார் கள். அந்தப்படியே வீராநாயக்கனுடைய பேருக்கு ஒரு கவி லோலை ( Cadjau ) பனைஓலை எழுதி அனுப்புவித்தோம். அந்த ஓலையிலே எழுதின வயணமென்னவென்றால் : உன்னுடைய குமாரனைமாத்திரம் அவ்விடத்திலே விட்டுவிட்டு நீரும், உம் முடைய தம்பிமார்கூட பெண்டுகள், பிள்ளைகளனைவரும் வந்து எப்போதும்போலே சுகமாயிருக்கவுமென்று சொல்லி கவுலா (Pass port) எழுதி அந்த ஓலையிலே கையெழுத்துப்போட்டு வழிக்குஞ் சீட்டெழுதிக் கொடுத்து அனுப்புவித்தோம்.

இற்றைநாள் சாயங்காலம் ஏழு மணிக்கு வீராநாயக்கனும் அவன் தம்பி திருவேங்கட நாயக்கனுமிரண்டுபேரும் வந்து நாம் பாக்குக் கிடங்கிலே இருக்கும்போது பேட்டிபண்ணிக் கொண்டார்கள். ஆனால், அவர்களுக்கு நம்முடைய கவுல் போனவுடனே அதைப் பார்த்துக்கொண்டு அந்தட்சணமே வீராநாயக்கனும் அவன் தம்பிமாரும் புறப்பட்டு மத்தியானம் சாப்பாட்டுக்கு வீட்டுக்கு வந்து சேர்ந்தார்கள். அவனுடைய குமாரனைமாத்திரம் ஆலங்குப்பத்திலே வைத்துவிட்டு வந்து விட்டார்கள்.

1747 ஆ மார்ச்சு மீ 4 உக்கு அக்ஷய ஞு மாசி மீ 24 உ சனிக்கிழமை

இற்றைநாள் சாயங்காலம் வடக்கே ஒருகப்பல் கண்டது, அதற்கு மேலாக சுலுப்பு ஒன்று கண்டது. அதன்பேரிலே அவ்விடத்திலேயிருந்து ஒரு சுலுப்பு பயணம்பண்ணி அந்த சுலுப்பின்பேரிலே ஐம்பதுபேர் சொல்தாதுகளை ஏற்றி அதிலே குண்டு மருந்து பீரங்கிகள் சகலமும் சண்டை முஸ்தீதாய்

ஏற்றிப் பயணம்பண்ணி அனுப்புவித்தார்கள். இனிமேல் நடக்கிற சேதியெழுதிவைக்கிறேன்.

இற்றைநாள் மத்தியான மிரண்டு மணிக்கு நடந்த அதிசயம் என்னவென்ருல்: ஆற்காட்டிலே சுன்னத்துப் பண்ணின சொல்தாது பிரான்சுக்காரர் ஒன்பது பேர் புறப்பட்டுப் பெருமுக்கலுக்கு வந்து சேர்ந்தார்கள் அவ்விடத்திலே முசியே தேலார்சு கையிலே கடுதாசி வாங்கிக்கொண்டு மூன்று பேர் மாத்திரமிவ்விடத்திலே வந்து சேர்ந்தார்கள். மற்ற ஆறு பேருமிவ்விடத்துக்கு வராமல் தேவனும்பட்டணத்துக்கு அப்படிதானே போகிருர்களென்று முசியே தேலார்சு எழுதியனுப்பினுன். அதன்பேரிலே துரையவர்கள் என்னை அழைத்தனுப்பினுர்கள் அந்தவேளையிலே பாக்குக்கிடங்கிலே நான் அப்பியங்கனம் பண்ணிக்கொண்டிருக்கும்போது அழைக்கத்தக்கதாக முன்னே ஒரு சேவகன் வந்தான். பிறகொருத்தன், இரண்டு பேர், மூன்று பேர், நாலு பேர், ஐந்து பேர் வந்தார்கள். இதற்குள்ளே நானும் அப்பியங்கனம்பண்ணிக்கொண்டு துரையவர்களண்டைக்குப் போனேன். நான் போனவுடனே இப்படியானுல் ஆறு பேர் சுன்னத்துப்பண்ணின வெள்ளைக்காரர் தேவனும் பட்டணத்துக்குப் போனுர்களாம். அவர்களை இந்தட்சணமே சேவகரை அனுப்பிப் பிடித்துக்கொண்டு வரச்சொல்லி உத்தாரங் கொடுத்தார்கள். அப்படியே நான் பாக்குக்கிடங்குக்கு வந்து கும்பினிச் சேவகரையும் மற்ற துலுக்கரையும் பயணம் பண்ணி அனுப்பிவிட்டு, சிவனுகரெட்டியாருக்கும் ஒரு கடுதாசி எழுதி அந்த ஆறு பேர் வெள்ளைக்காரரையும் வழிக்கூட்டி மறித்து அனுப்புவிக்கச்சொல்லி அனுப்பினேம்.

இற்றைநாள் சென்னப்பட்டணத்திலே யிருந்து கோபாலகிருஷ்ணய்யன் எழுதி அனுப்பின காகிதம் 20 உ 28 உ பிப்ரவரி மீ எழுதின காகிதம் இற்றைநாள் வந்து சேர்ந்தது. அந்தக்காகிதத்திலே எழுதின வயண மென்னவென்ருல்: இன்றையதினம் காலமே எட்டுமணிக்கு ஒரு கட்டுமரத்தின்பேரிலே இங்கிலீசுக்கப்பலுக்கு ஒரு கடுதாசி எழுதி அந்தக் கடுதாசியிலே ராத்திரிக்குச் சலங்கு அனுப்பிவைக்கிருேம் என்று எழுதி, கட்டுமரத்தை அனுப்பினேம். சமுத்திரம் ஓரமாயிருந்தபடியினுலே சலங்குகள் திரும்பியும் வந்து

போச்சுது. இப்பவுங் கப்பலைத் துறைக்குக் கொண்டுவந்து லங்கூரம் பண்ணினுப்போலே சலங்குள்மேலே மனுஷரையு மேற்றி அனுப்புவிக்கிறோமென்றெழுதினவுடனே அந்தட்சணமே கப்பலுக்குப் பாய்கட்டித் துறைக்குச் சலுப்புகள் பாறுகளி லிருக்கிறதைப் பார்க்கப் பின்னையும் கிட்டே கொண்டுவந்து லங்கூரம் பண்ணினுர்கள். லங்கூரம் பண்ணினவுடனே பன்னி ரெண்டு மணிக்குச் சலங்குகள்பேரிலே நூற்றியைம்பது பேர் சொல்தாதுகளை யேற்றிக் கப்பலுக்கனுப்பினுர்கள். அந்தக் கப்பலிலே வந்தவர்களை அந்தச் சொல்தாதுகள் போய்க் கப்ப லிலே சேர்த்தவுடனே கப்பலிலே யிருந்த ஒப்பிசியேலுகள் மருனேருகள் Marinees) எல்லாரையுமிறக்கினுர்கள். அந்தக் கப்பலிலே வந்தவர்கள் மருனேர்கள் கப்பித்தானுடனே கூட நூற்றி முப்பது பேர் புறப்பட்டது. இதிலே போனதுபோக இவ்விடத்திலே வந்தது எல்லாருங்கூட 80 பேர் இப்பவந்தது இவர்களெல்லாரும் நோயுடனிருக்கிறுர்களே அல்லாமல் ஒருத் தராகிலும் சுவஸ்தமாயிருக்கவில்லை. ஆனபடியினுலே, துரை கண்டால் போதுமென்று வந்தார்கள். எல்லாரையுமிறக்கி ஒப்பிசியேலுகளையும் கப்பித்தானையும் ஒரு வீட்டிலே வைத்து ஒரு சந்திவீரைக் காவல் வைத்தார்கள். மற்றப்பேரெல்லாரும் கஷோத்திலே போட்டார்கள். இரண்டு மணிக்கு முசியே பிரியேரும் முசியே பேனுவும் (M. Bruyères M. Panov) கப்ப லின்மேலே போனுர்கள். இதன் பேரிலே இரண்டு லட்சத்தி இருபதினுயிரம் வெள்ளி பத்தாக்கு வந்ததென்று சொல்லு கிறுர்கள். இன்றையதினம் சாயங்காலம் முசியே தெப்பிரமேனி அவர்களும் சகலமான பேரும் கோவிலுக்குப் போய் துறம் பேத்து முதலான வாத்தியத்துடனே பூசைகேட்டு அப்போது 21 பிரங்கிப்போட்டார்கள். பண்டிகை பண்ணினுர்கள். இந்த இங்கிலீசு கப்பலிவர்களுக்கு அகப்பட்டது. பிராஞ்சிலேயிருந்து இவர்கள் கப்பல் வந்தாலுமிந்தப் பிரகாரமிறக்கிக்கொண்டு வந்து கொடார்கள். இந்தக்கப்பல் அகப்பட்டது இவ்விடத்திலே யெல்லாரும் பிராஞ்சுக்காரன் அதிருஷ்டசாலியென்று சொல் லுகிறுர்கள். அது தாங்களறியவுமென்று எழுதிவந்தது.

1716 ஆ மார்ச்சு மீ 5உ க்கு அக்ஷய ஞு மாசி மீ 25 உ ஆதிவாரம்

இற்றைநாள் நடந்த சேதி: நேற்றைய தினம் சாயங்காலம் ஒரு சலுப்பின் பேரிலே ஐம்பது பேர் சொல்தாதும் குண்டு

ஆ.—39.

மிருந்தும் ஏற்றிக்கொண்டு அதற்கு எசமானனுய்ப்போன முசியே போர்ஷேர் பார்த்த இந்தநாள் சாயங்காலம் ஒரு வாரகு (craft)ப் பிடித்துக்கொண்டு வந்தார்கள். அந்த வாரகு கஞ்சத்திலேயிருந்து பந்தருக்கு அப்துல்ரயிமான் சாயபு அவர்களுக்குப் பந்தருக்குப் போகத்தக்கதாக லோபுல் சபுராய் வந்த படகை மாயேயிலே (Mahé) கண்டுபிடித்துக்கொண்டு வந்தார்கள். அதிலே அரிசி கரிசை 5-ம் வந்தது. அந்த அரிசியும் நெல்லும் கடையிலே விற்கிறபடிக்குப்போட்டு விற்றுக்கொள்ளச் சொல்லித் துரை அவர்கள் உத்தாரங் கொடுத்தார்கள்.

1747 ஆ மார்ச்சு மீ வெகுதான்ய அக்ஷய ஞு மாசி மீ 26 வ. திங்கட்கிழமை.

இற்றைநாள் சென்னப்:பட்டணத்திலேயிருந்து எழுதிவந்த சேதி என்னவென்றால்: முன் 22ந்தேதி (2nd March 1747) எழுதின கடுதாசி வயணமின்றையதினம் பட்டணத்திலே தமுக்குப்போட்டுவைத்த தென்னவென்றால்: இதுவரைக்கும் இரண்டு தமுக்குப்போட்டு வைத்ததற்கும் அவர்கள் சரக்கு சப்பட்டைகளிருக்கிறதை (Goods and Properties) எழுதி வையாமல் போனீர்கள். இப்பவும் ஆதிவாரத்துக்குள்ளாக மூன்று நாளைக்குள்ளே அவரவர்கள் எழுதிவைத்தால் ஆச்சுது. எழுதிவையாமற்போனால் அவரவர்கள் வீட்டைச் சோதித்திருக்கிற தட்டுமுட்டுச் சரக்கு சப்பட்டையெல்லாம் கும்பினீரிலெடுத்துக்கொள்ளுவோமென்று தமுக்குப்போட்டுவித்தார்கள். அது தாங்களறியவும். மதாமவர்கள் முகாந்திரம் முசியே பிறியேலும் ராமச்சந்திரபண்டிதர் வர்த்தகருடனே கண்டுபேசி அவ்விடத்துக்கு வருகிறது தீர்த்திருந்தார்களே அந்த வர்த்தகர் திரும்பி மறள் விழுந்து அதிலே சிறிது பேர் எங்கள் சரக்கை எடுத்துக்கொண்டுபோனாலும் போங்கள். அதுவே அல்லாமல் நாங்களவ்விடத்துக்கு வருகிறதில்லையென்று சொல்லிக்கொண்டிருக்கிறார்கள். அதறியவும், முத்தியப்பிள்ளையவர்களும் நாங்களெல்லாருந் துலுக்கருக்குச் சமாதானமானது தெரியப்படுத்துகிற நிமித்தியம் சுவாரி புறப்படச்சே சமாசாரமெழுதி அனுப்புவித்தேனல்லவா? அன்றையதினம் குருவப்பசெட்டியும் கூடவந்தவரல்லவா? முத்தாலுப்பேட்டையிலேயிருந்து வருகிறபோது செட்டித்

தெரு வழி நடந்தபடியினுலே செட்டிகள் கும்பல் கூட்டிக்கொண்டு கோமுட்டி எங்கள் தெருவழி குதிரை ஏறிக் கொண்டு வரக்காரியமென்ன? நாங்கள் துரையுடனே சொல்லு கிறுேமென்று மெத்தவுந் துருசாய் வந்து ராமச்சந்திரய்ய ருடனே சொன்னுர்கள். அதன்பேரிலே முத்தியப்பிள்ளை அவர்கள் ராமச்சந்திரய்யரை அழைத்து அடக்கிப்போட் டார். தங்கள் பேருக்கு அவர் கொஞ்சம் வைத்துக்கொண்டிருக் கிறபடியினுலே தங்கள் முந்தி வந்ததினுலேயும் தப்பிப்போச் சுது. பட்டணம் பாழற்றுச் செட்டித்தெருவுகளெல்லாம் பாழாய்க்கிடக்குது. அப்படியிருந்தாலும் தச்சாதிகம் பூர்விக சேஷ்டைகளிருக்குதென் றெண்பித்தார்கள். அதறியவும். இது வரைக்கும் பூந்தமல்லிமட்டுக்கும் ஆப்பமில்லாமலிருந்ததே இன்றையதினம் ஆப்பத்துக்கு மனுஷர் வந்தார்கள். மயிலாப் பூரிலே திவர்ணமில்லாமலிருந்ததே (Tax) அதற்கு யின்னம் இரண்டு மூன்றுநாளையிலே வருவார்களென்று சொல்லுகிருர் கள். அதறியவுமென்று யிந்தப்படியாக எழுதி வந்தது.

*1747*-ம் ஆ. மார்ச்சு மூ 7 உக்கு அக்ஷய ஞு மாசி மீ 27உ மங்களவாரம்

இற்றைநாள் சென்னப்பட்டணத்திலிருந்து எழுதிவந்த கடுதாசி வயணம்: இங்கிலீசு கப்பல் வந்ததை பிரான்சுக்காரர் பிடித்துக்கொண்டதற்கு நானெழுதியனுப்பவில்லையென் றெழு தினீர்களே, அந்தட்சணமே நானெழுதிக் கொடுத்தேன். இங்கே துரையவர்கள் தம்முடைய கடுதாசியேயல்லாமல் பின்னை வேறே ஒரு கடுதாசியுங் கொண்டுபோக வேண்டா மென்று திட்டம்பண்ணினபடியால் அன்றையதினம் நிறுத்தி மறுநாள் வருகிற டபாலிலே கொடுத்தனுப்பினேன். எனக்கு இதுவல்லாமல் வேறே வேலை என்னவிருக்கிறது. அந்தக் காகி தங்களும் சேர்ந்தேயிருக்கும். அந்த வயணம் பார்த்துக் கொள்ளவேண்டியது. இன்றையதினங் காலத்தாலே புதுச் சேரியிலேயிருந்து உத்தாரம் வந்தபிரகாரம் நாலு காகித மெழுதி, நாலு வாசலிலேயும் அடித்தார்கள். அந்த வயணத் திற்கு நக்கலும் வேறே ஒன்றெழுதி யிந்தக் காகிதத்திலே வைத்து மடித்து அனுப்பினேன். இதல்லாமல் நபாபு மகம் மதல்லிகான் பர்வாணு வந்தது அதில் எழுதியிருக்கிறது.

உமக்கும் நமக்கும் சமாதானமாகச்சே நம்முடைய மனுஷர் இவ்விடத்திலே வரவும், அன்னியோன்னியமாயிருந்து நடந்து கொள்ள வேண்டியதென்று உபசாரமாய் பர்வானு சிகாய் பண்ணி அனுப்புவித்தார். முசியே நேப்ராமேலி அவர்களுக்குச் சிரொப்பா இல்லாமல் வெறுங் கடுதாசி எழுதினதென்னவென்ருல்: உம் மனதிலே குறையாய்க் காணவேயில்லை. அது வயண மறிந்துகொள்ளவேண்டியது. இப்போது வாசற்படிகளிலே கடுதாசி யடித்தது, இது மூன்றுதரமானபடியினுலே இதைத் தொட்டு அறிந்து அறியாதவர்களெல்லாருக்குந் தெரியும். அப்படிக்குப் பிரசித்தமாய்த் தெரியும் நிமித்தியம் அப்படிச் செய்தார்கள். செய்தபடி, சென்னப்பட்டணத்து வாசற்படி யிலே அடித்த கடுதாசி வயணம்:

புதுச்சேரி மேலான கும்பினி கோன்சேல் சுப்பிரியேர் அவர்கள் கட்டளையாவது: வர்த்தகர் மற்றுமுண்டான சகல மான சனங்களும் எட்டு நாளைக்குள்ளாகப் புதுச்சேரிக்குப் போகிறது. இந்த எட்டு நாளைக்குள்ளே அவர்கள் சரக்கு சப் பட்டைகளெல்லாம் கோட்டையிலே கொண்டுவந்து சேர்க்கிறது. அந்தச் சரக்குகள் கப்பலிலே புதுச்சேரிக்கு ஏற்றி அனுப்புகிறோம். அவரவர் சரக்குகள் இங்கே வாங்கிக்கொள்ளலாம். இந்த எட்டு நாளைக்குள்ளே புதுச்சேரிக்குப் போகாமல் சரக்கு சப் பட்டையும் கோட்டையிலேயும் சேராமலும் யாரிருக்கிருர் களோ அவர்கள் சரக்கு சப்பட்டைகளெல்லாம் கும்பினீரிலே எடுத்துக்கொள்ளுவோமென்றெழுதி அடித்தார்கள் என்று மிப்படியாக அந்தக்கடுதாசி நக்கலெழுதி வந்தது. முன் மாசி ௴ 26 உக்கு மார்ச்சு ௴ 6 உ திங்கட்கிழமை மகாராசாவாகிய வஞ்சிவால் மார்த்தாண்டவர்மா என்கிற திருவாங்கோட்டு ராசா வுக்குக் காகிதம், துரையவர்கள் பேர்வைத்து எழுதி அவர்கள் மனுஷன் குந்திநாயக்கன் வசம் அனுப்புவித்தோம். அதற்கு நக்கல் மதனந்தபண்டிதர் கையிலே கட்டிவைத்திருக்கிறது

இந்த நாள் 27 உ நடந்த சேதி என்ன வென்ருல்:

1747-ம் ஆ மார்ச் ௴ 7 உக்கு அக்ஷய ௵ மாசி ௴ 27 உ

தேவனும்பட்டணத்துக்கு முந்தாநாள் சீர்மைக் கப்ப லொன்று வந்ததென்றும் அதிலே முப்பத்தொரு பெட்டி

வெள்ளி வந்ததென்றும், அதை யிறக்கிறுர்களென்று மிதல்லாமல் சாராயம்... ... ... ... ... ... இறக்குகிருர்களென்றும் சேதிவந்தது. சீர்மைக்கப்பல் ஒன்று வந்தது மெய்தான். அதிலே வெள்ளிபபெட்டி 31 வந்தது மெய்தான். மற்ற தினுசுகள் இம்மாத்திரம் இம்மாத்திரம் வந்ததென்று திட்டமாய்த் தெரியவில்லே. அதைத் தெரிந்து கொண்டு யுக்த கபுறு எழுதுகிறேம்.

இற்றைநாள் பறங்கிமலேயிலேயிருந்து தேவனும்பட்டணத்துக்கு கடுதாசி டபாவிலே போகச்சே வழியிலே கும்பினீர் சேவகர் கண்டுபிடித்துக் கொண்டுவந்தார்கள். அந்தக் கடுதாசியை வாங்கிக்கொண்டு அந்த சேவகரைக்கொண்டுபோய்க் கோட்டையிலே கஷோத்திலே போடச்சொல்லி உத்தாரங் கொடுத்தார்கள்.

கும்பினீர் சேவகரிந்த இங்கிலீசுக் காகிதத்தை வழியிலே பிடித்துவரச்சே நரேந்திர செட்டி குறுக்கே வந்தவனை வழியிலே கண்டுபிடித்துக் கொண்டுவந்தார்கள், அந்தச் சேதியை போய் துரையவர்களிடம் சொன்னவுடனே அவனை ஏன் பிடித்துக்கொண்டு வந்தார்கவென்று கேட்டார்கள். அதற்கு நான் சொன்னது: அவ்விடத்திலே ஒரு கிருஸ்துவன் கூட இருந்தான் என்று சொன்னேன். அவனிடத்திலே ஆராருக்குக் கடன் கொடுக்கவேணுமென்று கேட்டார். சம்பாகோவிலிலாருக்கும் பின்னேயும் வர்த்தகர் அவரவர்களுக்கும் கொடுக்கவேண்டியிருக்குதென்றும் சொன்னேன். அதன்பேரிலே சம்பாகோவிலாருடனே மார்க்கமாய்ச்சொல்லி அவர்கள் கையிலே ஒப்புவித்துப்போட்டேன் என்று சொன்னுர்கள் அப்படியே கோவிலிலேயிருக்கிற உபதேசியாகிய ஞாய்ப்பிரகாசனை அழைத்து அவன் கையிலே ஒப்புவித்துப்போட்டோம்.

1747 ஆ மார்ச்சு மீ 8 உக்கு அக்ஷய ஹு மாசி மீ 28 உ புதன்கிழமை

இற்றைநாள் காலமே சிவனுகிரெட்டி மங்கார்ப்பிள்ளையை அனுப்பி நம்முடனே ராசவட்டம் பேசச்சொல்லி அனுப்பின வயணமென்னவென்ருல்: பிராஞ்சுக்காரரென்பேரில் ரொம்ப அக்குசாயிருக்கிருர்களாம், என்னைத்தொட்டு ஒரு தப்பித

மில்லை. நானொரு பொல்லாப்புஞ் செய்ததில்லை. அப்படியிருக்க, என்பேரில் அவர்களுக்கப்படி கோபமிருந்ததானால் என்னாலே நிருவாகத்துக்கு இல்லை. இப்பவுமவர்கள் கையிலே ஒரு கவுல் வாங்கி அனுப்புவித்ததுண்டானால் அவர்கள் மனுஷனாயிருந்து அவர்கள் சொன்னபடி கேட்டு நடந்து கொள்ளுகிறோமென்று சொல்லி அனுப்புவித்தான். இந்தச் சேதி ஸ்ரீ துரையவர்களுடனே போய்ச் சொன்னேன். அதற்குத் துரையவர்களிருந்துகொண்டு, நல்லது, அவனை எப்படியாகிலும் மார்க்கப்படுத்தி நம்முடைய கைக்குள்ளே வைத்துக்கொண்டிருந்ததுண்டானால் தேவனும் பட்டணத்துமேலே நாசகாரியம் பண்ணப்போகிறதற் கனுகூலமாயிருக்கும். அதற்கெப்படி ஆளை கைக்குள்ளே போடவேணுமோ அது உனக்குத் தெரியுமென்றும், உன்னாலே ஒருதரம் பிரஸ்தாபம் வந்தபோது என்னுடனெ சொல்லியிருந்தார். அதை நான் மனதிலே வைத்துக்கொண்டேயிருந்து இன்றையதினம் போய் சிவனுகிரெட்டி சொல்லியனுப்புவித்த வார்த்தையைப் போய்ச் சொன்னவுடனே அந்தப்படிக்குத் தானே அவனை அழைப்பித்து ராசிப்படுத்தி நம்முடைய கைக்குள்ளே யிருக்கும்படியாய்ப் பண்ணிப்போடென்று சொன்னார்கள். அதுகளெல்லாம் நான் மனதிலே வைத்துக் கொண்டு அவனாகவே வழியே வந்து ராசவட்டம் பேசத்தக்கதாக நாளாயதிலே மனதிலே அவனுக்குப் பயம் வரத்தக்கதாக எப்படியுண்டோ அந்தப்படிக்கு அவன் காதிலே விழத்தக்கதாகத் துரையவர்கள் மனதிலேயிருக்கப்பட்ட கோபம் அவனறியும்படியாய், இலுப்பாமாயி விசேஷத்தை விட்டிருந்தோமதன்பேரில் அவனைத்தானே யோசனை பண்ணிக்கொண்டு இவர்களுடைய பொல்லாப்பிருந்தால் ஒரு வேளை, இல்லாவிட்டா லொருவேளை மோசம் வருமென்று சொல்லி அவனைத் தானே ராசவட்டமனுப்புவித்தான். அதற்கு நான் பதிலுத்தரவு சொன்னதை மங்காப்பிள்ளையுடனே சொல்லியனுப்பிவைத்ததென்னவென்றால்: நீரானால் துலுக்கருடனே கூடக் கூடிக்கொண்டு இங்கிலீசுக்காரருக்கனுகூலமில்லாத ராசகாரியமெல்லாம் பண்ணியிருக்கிறீர். துரையவர்களானாலும்முடையபேரிலே யிருக்கிற கோபம் ஒரு மிதத்திலே யில்லை. அதுகளெல்லாம் மார்க்கமாய்ச் சொல்லியிருக்கிறோம். இனிமேலாகிலும் அந்த நினைப்பைவிட்டு நாங்கள் சொன்ன

படிகேட்டு நடந்துகொண்டதுண்டானல் உம்முடைய காரியமெல்லாம் அனுகூலமாய் நடக்கும். ஏனென்ருல், நீரெப்போதும் பிராஞ்சுக்காரருடைய ஊருக்குச் சமீபத்திலே குடித்தனம் பண்ணுகிறவரெயல்லாமல் மற்றப்படியல்லவே. ஆனல், உமக்கும் நமக்குமிருக்கிற சிநேகத்தைக்குறித்து நாம் சொல்லியனுப்பினேமென்று மிப்படியெல்லாஞ்சொல்வி அனுப்புவித்தோம். அதன்பேரிலே சிவனுகி ரெட்டியாரிருந்துகொண்டு நானுனுலொருபாவமும் அறியேன். ஆனுலெல்லாத்துக்கும் நான் வந்து முகதாவிலே கண்டு பேசவேணும். வரச்சொன்னல் வருகிறேன் என்று சொல்லியனுப்புவித்தார். அதன்பேரிலே அந்தப்படிதானே அழைத்துக்கொண்டுவா என்று சொல்லி நம்முடைய கவிலொன்றெழுதிக்கொடுத்து மங்காப்பிள்ளையை யனுப்பிவைத்தேன். அவர் போய் இன்றையதினம் சாயங்கால மழைத்துக்கொண்டு வந்தார். வந்தவர் நம்முடைய தோட்டத்திலேயிருந்துகொண்டு சொல்லி அனுப்புவித்தார். அதன்பேரிலே துரையவர்கள் உடனே எச்சரித்துவிட்டு சிவனுகிரெட்டியண்டைக்கு நாம் போய்க் கண்டு பேசினவிடத்திலே அவர் சொன்னதானல் நானென்றும் அறியேன், அப்துல் சலீல் வந்தானே அவனே அழைத்தனுப்புவித்து அவனண்டைக்கு நான் போயிருந்தேன். அதுவேயல்லாமல் என்னைத்தொட்டு ஒரு காரியமும் நடந்ததில்லை என்று தப்பித்துக்கொண்டு பேசினன். அதற்கெல்லாம் உத்தரவு அவன் வாயினுல்தானே உண்டுவுண்டென்றெண்பித்து அவன்பேரிலே நேரத்தைச் சுமத்தினவுடனே. போனதெல்லாம் போகட்டுமினிமேல் நடக்கவேண்டியதென்ன வென்ருல்: நானுங்கள் காரியத்திலேயிருக்கிறேன். நீங்களெப்படி சொல்லுகிறீர்களோ அப்படி கேட்கிறேன். தேவனும்பட்டணத்திலே இருக்கிற ராணுவமெல்லாவற்றையும் கலைத்துவிடுகிறேன். தேவனும்பட்டணத்தின்பேரிலே நீங்களெத்தளம் பண்ணுகிற ராசகாரியத்துக்கு அளவு மற்றதும் அதுகளெல்லா மார்க்கமும் சொல்லுகிறேன். அதற்கேத்தபடிக்கு மித்திர பேதம் பண்ணி என்னுலே மட்டுக்கும் நடப்பிக்கிறேன். எனக்கு உபசாரமானதாயிருக்கத்தக்கதாகவும் எங்கள் குஞ்சுகுழந்தை இங்கே யனுப்புவிக்கிறதற்கு எனக்குப் பரவசமாயிருக்க, துரையவர்கள் கையில் ஒரு கவுல் கடுதாசி வாங்கிக்கொடுத்தால் நான் பரவசமாய் நம்பி மற்றக்காரியமெல்லாம் அனுகூல

மாயிருக்கும்படியாய் நடந்துகொள்ளுகிறோமென்று ரொம்பவும் வணங்கிச் சொன்னார்கள். அதன் பேரிலே நல்லதென்றிருக்கச் சொல்லிவைத்துவிட்டு, துரையவர்களண்டைக்குப் போய் நடந்த சம்மதியெல்லாஞ் சொல்லி உங்கள் கையெழுத்துப்போட்டுக் கடுதாசி வந்ததானால் அந்தக் கவுலன் நம்பி பெண்டு பிள்ளைகளையெல்லாம் இங்கே கொண்டுவந்து வைத்து அதன்பேரிலே அவ்விடத்து ராசகாரியத்துக்கு உளவு காரியமென்ன வுண்டோ அதுகளெல்லாஞ் சொல்லி நடந்து கொள்ளுகிறோமென்று சொன்னனென்று சொன்னேன். அதன் பேரிலே பிராஞ்சு லிபியிலேதானே தம்முடைய கையெழுத்துடன் ஒரு கவுல் கடுதாசி யெழுதி பார்சுனலே மொக்கர் முத்திரை போட்டுக்கொடுத்தோம். அந்தக் கடுதாசியை வாங்கிக் கொண்டு நாளைக்கு இருநூறு பேர் 200, மூன்னூறு பேர் 300, ராணுவத்தைச் சேர்த்து அனுப்பிவைக்கிறோமென்று சொல்லி விட்டு இற்றைநாள் சாயங்காலமே மறுபடியும் போய்விட்டார்.

1747 ஆ மார்ச்சு மீ 9௨க்கு அக்ஷய ௵ மாசி மீ 29 ௨ மங்களவாரம்.

இற்றைநாள் பறிங்கிக்காரன் (Portuguese) கப்பல் ஒன்று பங்காளத்திலே யிருந்து ஓடிவந்தது. அந்தக் கப்பலிலே கும்பினீர் சரக்கும் அரிசியும் வந்தது. இதல்லாமல் வர்த்தகர், இரண்டு மூன்று பேர் பட்டாணிகள், பட்டுநூல் முதலான பங்காளச் சரக்குகள் கொண்டுவந்தார்கள். இந்தக் கப்பல் காரன் சொன்னசேதி: இங்கிலீசுக்காரர் கம்மாண்டோர் பெத்தோன் (M. Peytou) முதலானவர்களுடைய கப்பல்கள் பங்காளத்திலேயிருந்து இந்த விடங்களுக்குப் பயணம் வரத்தக்கதாக லெஷ்த்தாயிருக்கிறதாகச் சொன்னார்கள். இந்தக் கப்பலிலே பங்காளத்திலே (Chandernagor) திரெக்தோராயிருந்த முசியே புராந்து, முசியே செம்போலே அந்த இடத்துக்கு வைத்து விட்டு வந்து கப்பலிலிருந்து இறங்கி குவர்னதோரைக் கண்டு பேசினான். இற்றைநாள் துரையவர்களென்னுடனே சொன்னதென்னவென்றால்: சேவகர் ஐந்நூறு (500) பேரும் மண்வெட்டிக்காரர் இருநூற்றைம்பது (250) பேரும், எருதுமாடுகளும் முஸ்தீதுபண்ணச் சொன்னார்கள். அந்தப்படிக்குச் சேவகர், மண்வெட்டிக்காரர், பொதிமாடு இதுகளெல்லாம்

முஸ்திதுபண்ணி வைத்தோம். இதல்லாமிவ்விடத்திலே இவர்கள் பண்ணுகிற முஸ்திதும் சம்பாதிக்கிற சாமானுமிவர்களுடைய ஆயத்தப்படும் பார்த்து அவரவர் யோசனைபண்ணிக் கொண்டு இவ்விடத்திலே ஒன்றுஞ் சொல்லாமலிருந்தாலும் வெளியிலே யெல்லாரும் சொல்லிக்கொள்ளுகிறதென்னவென்றால்: தேவனாம்பட்டணத்தின்மேலே சண்டைக்குப் போகிறார்களெல்லாருஞ் சொல்லிக் கொள்ளுகிறார்கள். ஆனாலிப்போதிவர்கள் தீர்ந்து சொல்லுகிறார்கள். துரையவர்கள் என்னுடனே பதினைந்து நாளைக்குமுன்னே சொல்லி, பின்னையுஞ் சாமான்கள் சேர்ந்ததெல்லாம் துரை சென்னபட்டணம் போகிறாரென்றெண்பித்து, இந்தச்சேதி ஆற்காடு சென்னபட்டணங்கூட ஓங்கப்பண்ணுவித்துச் சகல சாமானும் முஸ்திது பண்ணுவித்துத் துரைக்குச் சந்தோஷம் பண்ணிவைத்தேன். இதற்கு லாபமென்னவென்றால், தேவனாம்பட்டணங் கோட்டை கைவசமாகி வெள்ளைக்கொடி பறந்தால் அது என் கோரிக்கை யீடேறுமென்று சுவாமியைக் குறித்துப் பிரார்த்திக்கிறேன். ஆனாலிவர்களுடைய யோகத்தினாலே கோட்டைக் கைவசமாகிறதற்குச் சந்தேகமில்லை. ஆனால், சுறுக்கிலே ஆகவேணுமென்கிறதாய்ப் பிரார்த்திக்கிறது. இந்தநாள் நெல் படகு இரண்டு வடக்கேயிருந்தது காரைக்காலிலிருந்து ஒரு பாறிலே நெல்வந்தது. மாயேயிலிருந்து ட்பால் வந்தது. அந்தக் காகிதச் சேதி நன்றாய் வெளியாகவில்லை. நாளையதினம் விசிதப்படும். ஆனாலிந்தப் பிராமணர் வந்து வாய் விசேஷஞ் சொன்னது முன் இங்கே யிருந்துபோன சண்டைக்கப்பலொன்றும் மாயேயிக்கு வந்து சேர்ந்ததில்லையென்று சொன்னார்கள்.

இற்றைநாள் இராத்திரி சிவராத்திரி பண்டிகைக் கொண்டாடினார்கள். அதற்கு முப்பதாம் நாளும் சிவராத்திரி பண்டிகைக் கொண்டாடினார்கள். இந்தவிசை சிவராத்திரி இரண்டு பட்டது.

*1747* ஆ மார்ச்சு மீ *10*உ க்கு அக்ஷய ஹு மாசி மீ *30*உ குருவாரம்.

இற்றைநாள் காலத்தாலே ஆலத்தூர் பாளையக்காரன் வேங்கடாசல நாயக்கன் சமேது இருநூறுபேர் சேவகர் சரியா

யிருந்தது. கோட்டையிலே துரை காகிதப்படிக்கு இரு நூறு துப்பாக்கியும் பத்திரமும் வாங்கினதைக் கொடுத்து நம்முடைய சாராயக்கிடங்குக்கு வந்துசேரச் சொல்லி விராநாயக்கனைக் கூட்டிக்கொண்டுவரச்சொல்லச் சொல்லிவிட்டு குவர்னதோர் வீட்டுக்குப் போனவிடத்திலே குவர்னதோர் கோன்சேல் காரரையெல்லாம் அழைக்கச்சொல்லி, கோன்சேல் கூடி யோசனைபண்ணி, சண்டைக்குத் தேவனாம்பட்டணம் கோட்டையின்பேரிலே போய்ச் சண்டை பண்ணுகிறதற்குக் கோன்சேல் பண்ணித் தீர்த்து, அப்பால் படைக்குக் கொம்மாந்தேரிடுகிறதற்கு முசியே பரதீ (M. Paredis) அனுப்பவேணுமென்று குவர்னதோரும் கோன்சேலும் கூடி யோசனைபண்ணித் தீர்த்து முசே புரி, லந்தூர் முதலான பேர், ஒப்பிசியேல்மாரைக் கேட்டால் அவனெசமானாய் கொம்மாந்தேரிட, அவன் சொன்ன சொல்லின் கீழ் நாங்கள் உபதேசரிடுகிறதில்லை. இதல்லாமல் முன் மசுக்கரையிலே கூலிக்காரருக்கு ஆளோட்டியாயிருந்தான். அப்பால் மாயேயிலே இன்சினீர் உத்தியோகஸ்தன் கீழே அஸ்தகனாயிருக்கிறவனை முசியே தெரேமிசோம் (M. Tremisot) கொம்மாந்தானாயிருந்தவர் செத்துப்போனபடியினாலே அவன் பெண்சாதி ரூபத்துக்குள்ளே குரங்கு போலேயும் வயதிலே கிழவியானபடியினாலே பின்னை ஒருத்தருஞ் சீதாமலிருந்தாலும் பணம் விஸ்தாரமாயிருந்தபடியினாலே இவனுக்கு மவளுக்கும் சொணானுபந்தமிருந்தபடியினாலே இவன் பேரிலே யவளுக்கு வலப்பு உண்டாயிருந்து இவனைக் கலியாணம் பண்ணிக்கொண்டபடியினாலே அந்தப் பணங் கையிலே நடமாடுகையிலே வட்டத்துக்குக் கொடுகிருப்போலேயுஞ் சரக்குக் கொள்ளுகிருப்போலேயுஞ் சற்றுப் பேருண்டானதின்பேரிலே அந்த இன்சினீர் செத்துப்போனவுடனே அந்த விடமிவனுக்குக் கிடைத்தது. அப்பால் முசியே தும்மா குவர்னதோரிருக்கும்போது காரைக்கால் கோட்டைக் கட்டுவிக்கவேணுமென்று இவ்விடத்துக்கு அழைப்பித்த விடத்திலே முன் இன்சினீராயிருந்த பாதிரியாருக்குப் பெரிய வயதானபடியினாலே அவரை நிறுத்தி இவனை வைத்தார். அப்பால் காரைக்கால் கலாபத்தும்போது முசியே துய்ப்ளேக்ஸ் அனுப்பின விடத்திலே அங்கே செயமாச்சுது. அப்பால் முசியே பெப்வ்ரியே (M. Febverier) மருந்துக்கிடங்கிலே பற்றிக்கொண்டு செத்தான். அந்தவிடம் குவர்ன

தோர் முசியே துய்ப்ளேக்ஸ் இவன்பேரிலே பட்சமானபடியினலே இவனைத்தானே அடைந்தது. அப்பாலும் கொப்பாஞ்ஞியார் அறியவும் இவன் ஒப்பிசியேலாகப் போகவில்லை வெகு நாளாய் கும்பினீரைச் சேவித்த முசியே புரி லந்நூர் முதலான பேர்கள் கோன்சேலிலே பேசினதின்பேரிலே துரை எத்தனை விதமாய்ச் சமுதாயத்துச் சொன்னலும் சம்மதிக்கமாட்டோமென்ருர்கள். கோபத்தின்பேரிலேயும் எத்தனை சொன்னலுங் கேட்கமாட்டோமென்ருர்கள். அதன்பேரிலே முசியே லந்தூர் கொம்மாந்தாபானுக்கி முசியே பாதி யோசனை கேட்டுக் கொண்டு நடத்தச் சொல்லிக் நோன்சேலுந்தார மெழுதிக் கொடுத்துத்திர மணி பனிரெண்டு அடித்தது. அந்தமட்டுக்கும் துரையிருந்த கோபம் எழுதிமுடியாது. அப்பால் கோன் சேல் தீர்ந்துபோகச்சே முசியே பாதி முகம் மாகாசின்னம் பேரய் வீட்டுக்குப் போனன்.

அப்பால் துரை என்னை அழைத்து, ஆலத்தூர் பாளையக் காரன் தாலூக்காவுக்கு இரு நூறு பேர் சேவகர் முஸ்தீது பண்ணினீரா என்றும், மண்வெட்டிக்காரப் பள்ளிகள் எத்தனைபேரிருக்கிருர்கள் என்றும், எருது மாடுகள் எத்தனை லெஷத்தாயிருக்குதென்றும் கேட்டார். இரு நூறு சேவகர் ஆலத்தூர் பாளையக்காரர் தாலூக்காவுக்கு முஸ்தீதாயிருக்கிருர்கள். அவர்கள் வெளி மனுஷரானபடியினலே வீராநாயக்கனைக் கூடக் கூட்டி அனுப்புகிறேன் என்று சொன்னேன். உனக்குச் சம்மதியானபடிக்கு அனுப்பென்றும், மண்வெட்டிக் காரரை முசே நெகர் வசம் ஒப்புவிக்கச் சொல்லியும் எருதுமாடுகள் நூறு மாத்திரம் கோட்டைக்கு அரியாங்குப்பத்துக்கு அரிசி கொண்டுபோகிறதற்கு அனுப்பச் சொல்லியும், இரு நூறு மாட்டை வைக்கச் சொல்லியும் அத்துடனே கூட இன்னமிருநூறு மாடு அல்லது நூறு மாடாகிலும் சேகரித்துவைக்கச்சொல்லியுமிவ்விடத்திலேயிருந்து அறமாது (Armed) நாளை காலத்தாலே ஐந்து மணிக்குப் பயணம் போகுமென்றும் ஆலத்தூர் பாளையக்கார தாலுக்காவுக்கு இருநூறு பேர், மண் வெட்டிக்காரர் முன்னூறு பேரையும், ஐந்தாறு குதிரை அகப்பட்டது மனுப்பச் சொல்லியுஞ் சொன்னர். நல்லதென்று சொன்னேன். அப்பால் வேட்டவலத்துக்குச் சேவகர் நிமித்தியம் போனவர்கள் வரவில்லையா வென்று கேட்டார். மாபூசு

கான் செஞ்சியிலே நின்றபடியினலே பாளையக்காரன் முன் அவ்விடத்திலே கிராமங்களை லூட்டிப்பண்ணினவ னனபடி யினலே சேவகரனுப்பயோசனை பண்ணுவான். இப்போதுமாபூசுகான் திருச்சிராப்பள்ளிக்குப் பயணம் சாகிப்போனபடியினலே இனிமேல் சேவகரையனுப்பிவைப்பானென்று சொன்னேன். அப்பால் நாமொரு பிராமணனையும் ஆறு சேவகரையு மனுப்பி யிருந்தோமே வந்தார்களாவென்று கேட்டார். அவர்களுங்க ளோடு இப்படிக்கு வாலிகொண்டாபுரமட்டுக்கும் போய் மாபூசுகானப்பால்பட்டபிற்பாடு அவ்விடம் விட்டுப் புறப்பட்டு இப்போதுதான் வந்து சேர்ந்தார்கள். அவர்கள் சொன்ன கபுறுதான் மாபூசுகானிந்த மட்டுக்குத் திருச்சினப்பள்ளி சேர்ந் திருப்பானென்றுஞ் சொன்னது என்று சொன்னேன்.

ஆனல், இங்கிலீசுக்காரர் தாலூக்குக்கு இரண்டு வெள் ளைக்காரரும், ஒரு பிராமணனும், பத்து சேவகரும் செஞ்சியி லிருந்த வாக்கிலே திருச்சிராப்பள்ளிக்குக் கூடப் போனர்க ளென்று சொன்னேன். நீ முன்னே சொன்னது இங்கிலீசுக் காரர் மனுஷர் வந்து மாபூசுகானை அழைத்ததற்கு நான் திருச் சினப்பள்ளிக்குப் போய் வந்தபிற்பாடு உங்கள் காரியம் அனு கூலம் பண்ணித்தாரோமேயல்லாமலிப்போது கூடாதென்று சொல்லிவிட்டுத் திரும்பியுந் தொடர்ந்தாப்போலே போவா னேன் என்று கேட்டார். அப்படியா, ஒருவேளை அப்படி சொன்னலும், பின்னை ஒரு வேளை நல்லதென்று சொல்லானு? அல்லது சிறிது குதிரையாகிலுங் கூட்டானு?

இன்னுந் தொடர்ந்துபோனல் மனது இரக்கம் வராதா என்றுதான் பார்க்கிருர்களென்று அவர்களை பார்க்கவேண்டிய சாடை சரிதானென்று சொன்னதற்குத் துரையிருந்துகொண்டு அப்படியேதாகிலு மற்றது கூட்டுவானு? உன் புத்திக்கோர்க்க எப்படிதோற்றுதென்று கேட்டார். இனிமேல் பிராஞ்சுக்காரர் வழி தலைவைத்துப் படுத்துக்கொள்ளுகிறது கூட இல்லை. அறி யாமலிந்தக்காரிய மதற்குள்ளே வந்தோம். வந்தமட்டுக்கும் அவமானம் வந்தது. நிசாமுக்குக்கூட லாவகம் தோன்றிப் போய்விட்டார்களென்கிற அபகீர்த்தித் தராதரத்திற்கும் உண்டாச்சுது. நிசாமுக்குச் சுபையாயிருக்கிறவனேடிப்போய் விட்டானென்றும் மனதிலே அசனயம் பிறந்தது. இந்தச்சேதி

டில்லிபரியந்திரம் ஆச்சுது. இதனாலே உத்தியோகம் தகரா ருய்ப் போகிறது மல்லாமல் நாமுருதனென்கிற பேரைப் போக் கடித்துக்கொண்ட பேர் இதற்கெப்படி யிவர்களையுஞ் சயிக்க வும் கூடாது. இப்பந்தியிலே முழுகிப்போனோமென்று நாமாச் சமாதானம் பேசினால் வெட்கக்கேடென்று பார்த்துதான் அவர்களாய் எட்டு நாளை காரியத்துக்குச் சண்டா சென் னப்பட்டணத்திலே போட்டிருக்கவும் சமாதானம் அடையா ளத்துக்கு நீர் கொடுத்த வெகுமானத்தை வாங்கிகொள்ளு கிறோமென்று பலவந்தமாய் ராசவட்டம் விட்டுக்கொண்டு நாமழைத்த மாத்திரத்திலே சீக்கிரமத்துக்குவந்து சமாதானம் பண்ணிக்கொண்டது. இனிமேல் நிசாமவர்களுக்கு நம் முடைய சண்டாபோட்டோம்பாலவர்கள் பிரார்த்தித்துக் கேட்டார்கள். மறுபடி சென்னப்பட்டணங் கோட்டைவிட் டுப்போட்டோமென்கிற தெழுதுவார்கள். மீசத்து தக்கே சாயபு முதலான மனசுபுதார் கில்லேதார் இவனுக்குச் சத்துருவாயிருக்கிறவர்களே யல்லாமல் போகிறவனுக்குப் போய் காலிலே விழுந்து சமாதானம் பண்ணிக்கொண்டார்க ளென்று எழுதப்போகிறார்கள். அதன்பேரிலே என்னென்ன யோசனை பண்ணுவானென்றால்: கையிலே ஆகாதவன் வாங்கிப் போகிறதற்கு மார்க்கமும் சமயமும் பார்த்துக் கொண்டு இருந்து தள்ளிப்போட்டு வேறே வைப்பானென்றுச் சொல்லி யப்படியெல்லாம் அவர்கள் மனதிலேயிருக்க இனி மேல் இங்கிலீசுக்காரருக்கு மற்றது வராதேயென்று சொன் னேன். அது மெய்தானென்றொத்துக்கொண்டார். இதெல் லாம் நான் ஆறு மாதந்துவக்கி சொல்லிக்கொண்டு வந்தபடிக்கு நடந்ததா வேறே நடந்ததா வென்று கேட்டேன். மெய்தானென்று ஒத்துக்கொண்டார். உமக்கு நல்லகாலம் சுவாமி தயவுபண்ணியிருக்கும்போது சத்துரு எத்தனை பலத்து வந்தாலும் அவனுக்குப் பயந்தோற்றி ஓடிப்போகப்பண்ணு கிறதோ இனிமேல் துலுக்கன் வருகிறதேது. இங்கிலீசுக்காரர் இந்த வட்டங்களிலே யிருக்கிறதேது. அவ்ரீல் மீ பிறந்தால் நடக்கிற சேதி வேறே. 1748-ம் ஆ அவ்ரீல் மீ பிறந்தால் அப்போது மகத்தான யோகம் நடக்குமென்று சொன்னேன். அதற்கு நகைத்து இப்போது டில்லிப..யந்திரம் பிராஞ்சுக் காரருக்கு மகத்தான கீர்த்தி உண்டாச்சுது என்று சொன்னார்.

அதற்கு நான் முன்னே மயிலாப்பூரிலே முசியே பாதி சண்டை பண்ணப்போகிறது எப்படி பேராச்சுதோ அப்படி நூறத்தனை அதனமாய் உம்முடைய பேர் உண்டாச்சுது. இனிமேலின்னம் வெகு கீர்த்தி வெகுபேர் உண்டாக சுவாமி கடாக்ஷித்திருக்கிறார். இந்தப்படிக்கு வேணுமானால் நான் சீட்டெழுதித் தாரேனென்று சொன்னதற்கு முய்த்து மெற்சே, முய்த்து ஒபிரிகாது, உன்னுடைய பட்சத்துக்கும் நல்லமனதுக்கும் என்று சொல்லி ஆற்காட்டுக்குப் போன முசியே கிலார்சுக்கு எழுதி அனுப்பி எத்தனை நாளாச்சுதென்று கேட்டார். நாலு நாளாச்சுதென்று சொன்னேன். அப்பால் கூடலூர் தேவனும்பட்டணம் வழிகாட்டுகிறதற்கு அவ்விடத்தும் நம்மை யறிந்தவர்களான சிவனுகிரெட்டியண்டைக்குச் சொல்லி அனுப்பி அழைப்பிக்கச் சொன்னேனே அவர்களை முசியே லத்தூர் வசம் ஒப்புவித்துப்போடுமென்று சொன்னார். நல்லதென்று சொன்னேன். அந்தப்படிக்கு அவர்களிரண்டு பேரையும் வீரநாயக்கனையுந் துரை முன்பாக முசியே லத்தூருடனே இவர்களைக்கொண்டு கபுறு தெரிந்து கொள்ளச்சொல்லி முசியே லத்தூர் வசம் ஒப்புவித்தப்போட்டுத் துரைக்குஞ் சலாம் பண்ணிப்போட்டு பாக்குக் கிடங்குக்கு வந்தேன். நேற்றைய தினம் மாயேயிலேயிருந்து வந்த டபாலிலே சீர்மைக் கச்சேத்து வந்ததாகவும் அதிலே ஸ்பாஞ்சியா ராசா (Spain) ஐந்தாம் பிலிப்பேன் (Philip V.) என்கிறவர் லூய் கர்த்தோர்சு பேரப்பிள்ளை தோபேனுடைய இரண்டாம் பிள்ளை இப்போதிருக்கிற பிராஞ்சுராசா லூய் தேய்ஞ்சு (Louis XV) சாக்ஷா சிற்றப்பன் முன் பிராஞ்சுராசாவீட்டிலே தோபேனுக்குப் பிறந்தபோது (Dauphen) துய்க்தே ஆன்சு (Duke of Anjow) என்று பேர் கொண்டு இஸ்பான்சியா ராசாவுக்குப் பிள்ளையில்லாமல் போனபோது அவர் ஆசன்ன காலத்திலே துய்க்தெ பர்கோஞோம் (Duke of Burgandy) பிராஞ்சு ராச்சியத்துக்குப் பட்டமும் அதற்கு நேரேயிணைய துய்க்தெ ஆன்சு இஸ்பான்ஞ் (Spain) ராச்சியத்துக்கென்று நேமித்த விடத்திலே இஸ்பாஞ்சிய ராச்சியம் பறன மேஸ்துகள் மினிஸ்த்ருகள் சம்மதியில்லாமல் போனபோது இஸ்பாஞ்சிய ராசா செத்த பிறகு பிராஞ்சு ராசா லூய் கத்தோர்ஸ் என்கிறவர் எழு வருஷஞ் சண்டைபண்ணி இஸ்பாஞ்சிய ராச்சியத்தைச் செயித்து ஆயிரத்தெழுநூற்றி எட்டாமாண்டு கொண்டுபோய் துய்க்தே ஆன்சை (Duke

of Anjow) ஐந்தாம் பிலிப் என்கிற (Philip V.) இஸ்பாஞ்சிய ராச்சியத்துச் சட்டமாய்ப் பேரும் கொடுத்து இஸ்பாஞ்சிய ராச்சியத்துக்குப் பட்டங்கட்டினார். இவரிதுவரைக்கும் பட்டத்திலேயிருந்து தன் அண்ணன் மகனாகிய இப்போது பிராஞ்சு ராசாவாயிருக்கிற லூய் கேய்ன்ஸ் (Louis XV) மகனுக்குத் தன் மகளைக் கலியாணம் பண்ணிக்கொடுத்தும் தன்னிரண்டு பிள்ளைகளுக்கும் லூய் கேய்ன்ஸுடைய (Louis XV) துரந்திகளைக் கலியாணம் பண்ணிக்கொண்டு சம்பந்தமும் ஆதீனமும் பிறப்பு போகாமல் நடத்திவிட்டு 1746-ஆ போவிளங்கான் மாசம் (Month not known) தெய்விகமானானென்கிற கபுறு வந்ததாய்த் துரை சொன்னார். இதல்லாமல் லரேன் தெ ஒங்கோரி (The Lucen of Hungary) ராச்சியமும் பட்டணமும் பிராஞ்சு ராசா பிடித்தானென்று மிப்போது தேசத்திலே அந்தப் பட்டணத்துக்குச் சமானமான பட்டணமில்லையென்றும் கபினிமேல் வருகிற கப்பலிலே சண்டை நிறுத்தும் பாசெமுதி வருமென்றும், அதற்குள்ளே தேவனாம்பட்டணம் பிடித்துத் தீரவேணுமென்றும் சொன்னார். அதற்கு நான, நீர் நினைத்தபடியே முடிந்ததென்று எண்ணிக்கொள்ளு மிதனாலே கும்பினியார் ராசா விந்த ரெக்கொஞ்ஞேசிமேந்து அதற்கேற்ற பெரிய இடமும் இஷதாத்தும் உமக்குச் சமஸ்த மேன்பாடும் சீர்மையிலிருந்து வருகுது பாருமென்று சொன்னேன். மூயித்து மெற்சி என்று சொன்னாரிதிலே முசியே பாதி வந்தான். நானனுப்புவித்துக்கொண்டு பாக்குக் கிடங்குக்கு வந்தேன்.

1747 ஆ மார்ச்சு மீ 11 உ க்ரு அக்ஷய ளு பங்குனி மீ 1 உ சனிவாரம்

இற்றைநாள் மத்தியானம் மூன்று மணிக்கு முசியே லந்தூனும், முசியே பாதியும் வந்து துரையைக்கண்டு அவரனுப்புவித்துக்கொண்டு தேவனாம்பட்டணம் சண்டைக்குப் பயண்மாய்ப் புறப்பட்டு வாசற்படியிலே வந்து பல்லக்கு ஏறினப்போலே இதிலே துரையுடனே நான் மஞ்சகுப்பம், தோட்டம், பின்னையும் கூட ஊருக்குப் போகிற வழிகளிலே மருந்து புதைத்திருக்குதென்று கபுறுகேட்டேன். இவர்கள் போகிறவிடத்திலே சாக்கிரதையாய் விசாரித்துக்கொண்டு போகச்சொல்ல வேணு

மென்று சொன்னேன். நல்லதென்று சோபுதாருடனே முசியே லந்தார், முசியே பாரியை அழைக்கச்சொன்னர திலே நானிருந்துகொண்டு, அழைப்பானேன்? நான் சொல்லுகிறேன் என்று சொன்னேன். நீ சொல்லுகிறதல்லவென்றபோது சோபுதாரரை யழைத்துவந்தான். அப்போது என் மனதிலே தோற்றினது இன்னமொரு தாலுக்கு இடம் வைத்தானென்று தோற்றிற்று. ஆனல் சுவாமியினுடைய சித்தம் அறியக் கூடாது.

இற்றைநாள் காலத்தாலே ஐந்து மணிக்குப் பிரஞ்சுப் படை புதுச்சேரி கோட்டையிலிருந்து தேவனும்பட்டணம் கோட்டையின்பேரிலே சண்டைபண்ணப்போகிறதற்குப் புறப்பட்ட படை வயணம்:

| | |
|---|---|
| வெள்ளைக்காரர் சொல்தாது மத்லோத்து சட்டைக்காரர் வகையரா சனம் | 1000 |
| காப்பிரிகள் | 200 |
| கும்பினீர் சேவகர் | 70 |
| நயினர் சேவகர் | 80 |
| மாயே சிப்பாய்கள் | 600 |
| ஆலத்தூர் பாளையக்காரர் தாலூக்கு விராநாயக்கன் கூட சனம் | 200 |
| மண்வெட்டிக்காரர் | 305 |

இதல்லாமல் கூலிக்காரர், எடுகூலிக்காரர், மூட்டைக்காரர், வாளாக்காரர், எட்டு ஒட்டகம், எண்பத்தைந்து எருது, அரிசி நாலு.

தீக்குடுக்கை பீரங்கி ஐம்பது, ஏணி இருநூறு, பால் ஐந்து, பெரிய கூடாரம், மண்வெட்டி, கோடாலி குந்தாணி இது முதலாகிய சாமக்கிரிகைகள் சண்டைச் சாமான்களுக்கு அடுத்ததென்னென்னவுண்டோ அதுகளும் மருந்து குண்டுகள் தீக்குடுக்கைகள் முதலான சண்டை ஆயுதங்களும் முசியே லந்தூர் கொம்மாந்தாயை புறப்பட்டு அரியாங்குப்பத்திலே போய் சூரிய உதயவேளைக்கு இறங்கினர்கள். அப்பாலிவ்விடத்திலே சாப்பிட்டுப் பகலுக்குமேலாகப் போய் ராத்திரி நல்லமபாபு ரெட்டி சத்திரத்திலே இருந்தார்கள்.

இற்றைநாள் சாயங்காலம் உசேன் சாயபு அறக்காரன் ஒரு துலுக்கன் முசியே தேலார்சு காகிதங் கொண்டுவந்து துரைக்குக் கொடுத்தான். துரை படித்துப்பார்த்து என்னுடனே சொன்னது: அன்வருதிகானுக்கு சுபை தகராருய்ப் போனாலும் நீங்கள் மற்றது பண்ணுகிறீர்களாவென்று முசியே தேலார்சை அழைத்து உசேன் சாயபு கேட்டதற்கு நான் துரைக்கெழுதி அனுப்புவித்து உத்தாரஞ் சொல்லுகிறேனென்று சொல்லி எனக்கெழுதினான் என்றும், நாம் போகையிலே கிருமாம்பாக்கம், பூத்துரை, ஒதியம்பட்டு இந்த மூன்று கிராமம் கூடாமல்போனால் ஒரு கிராமமாகிலும் வாங்கச்சொல்லியுஞ் சொல்லியனுப்பினோமே, அந்த மூன்று கிராமமும் கொடுக்கிறப்போலேயும் வெகுமானம் பின்னையும் பதினாயிரம் ரூபாய்க்கு அதனங் கொடுக்கிறோமென்றும் பேசுகிறதாகவும், அதற்குச் சம்மதியாயிருந்தால் எழுதியனுப்பச்சொல்லி எழுதிவந்தது. அந்தப்படிக்குத்தானே தருகிறோமென்று கிராமங்களை வாங்கச்சொல்லி எழுதினோமென்றும் அன்வருதிகானுக்கு மற்றது பண்ணுகிறோமென்றும் சொன்னார். வந்தவனுக்கு பத்து ரூபாய் இனும் கொடுக்கச் சொன்னபடிக்குக் கொடுத்தேன்.

1747 ஆ. மார்ச்சு மீ 12 உக்கு அக்ஷய ளூ பங்குனி மூ 2உ

இற்றை நாள் நடந்த சேதியென்னவென்றால்: தேவனாம்பட்டணத்தின்பேரிலே சண்டைக்குப் போனவர்கள் நேற்று ராத்திரி நல்லமபாபுரெட்டி சாவடியிலிருந்தவர்கள் இற்றைநாள் காலத்தாலே புறப்பட்டுத் தேவனாம்பட்டணம் குண்டுக்குள்ளே நுழையும்போது மல்லயராசா தாளையம் சேவகரும், கடையம் வேங்கடாசல நாயக்கன் சமேத்து சேவகரும், சேருவைக்காரர் ஆதியப்ப நாயக்கன் சமேத்து சேவகரும், கொஞ்ச மிங்கிலீசுக்காரரும் சட்டைக்காரருமாய் வந்து எதிர்த்தார்களாம். அப்போது மாயே சிப்பாய்களும், கும்பினீர் சேவகரும், ஆலத்தூர் பாளையக்காரன் தாலுக்குச் சேவகர்களும் சண்டைபோட்டதின்பேரிலே அவர்கள் நிற்கமாட்டாமல் ஓடிப்போய் மஞ்சகுப்பம் சேர்ந்ததாய் இவர்கள் உச்சிமேட்டிலே பெண்ணையாற்றங்கரைக்கு இக்கரையிலேயிருக்கிற பண்டில் முத்தியாலுநாயக்கன் அக்கிராகரத்திலே

பிராஞ்சுக்காரர் படை போயிறங்கினார்கள். அதற்கடுத்த எதிர்கரையிலே யிருக்கிற சின்னப்பையன் சாவடியிலே இங்கிலீசுக்காரர், கர்நாடகராணுவம், சிறிது இங்கிலீசுக் காரருமாயிருந்தவர்கள் பேரிலே நம்முடைய பிராஞ்சுக் காரர் நாலு பீரங்கிச் சுட்டார்கள், அந்தக் குண்டு போய் விழுந்தவுடனே அங்கேயிருந்த இங்கிலீசுக்கார ராணுவம் ஓடிப்போய் மஞ்சகுப்பம் போய்ச்சேர்ந்தார்கள் என்று மப்போது பிராஞ்சுக்காரரிலே ஒரு சொல்தாது புறப் பட்டு இங்கிலீசுக்காரர் தளத்திலே நடக்கச்சே பார்த்து என்ன அழைத்தாலும் வராமல் அவர்களிடத்திலே யிருக்கிற கர்நாடகக் குதிரைச்சுவாரிலே ஒருத்தனை துப்பாக்கியினாலே போட்டாப்போலே அவன் விழுந்தானும். அப்பால் மூன்று பேர் கர்நாடகக்காரரை வெட்டிப்போட்டானுமிந்த ஒரு வெள்ளைக் காரன்பேரிலே அவர்களாயிரஞ் சனம் வந்துவிழுந்து தலையை வெட்டிப் போட்டும் அப்பால் குதிரைவால் கொத்தளத்தின் பேரிலேயிருந்தும் உப்பல்வாடி கொத்தளத்தின்பேரிலே யிருந் தும் விடாமல் ஆறு ராத்தல் குண்டு ஓடுகிற பீரங்கியினா லேயும், மூன்று ராத்தல் குண்டு ஓடுகிற பீரங்கியி னாலேயும், பனிரெண்டு மணிக்குத் துவக்கினது ஒன்பது மணி மட்டுக்கும் சுட்டுக்கொண்டேயிருக்கிறார்கள். இதற்குள்ளே விழுந்தவர்கள் குவாடுது வெள்ளைக்காரன் குதிரையின் பேரி லேயிருந்தவன் செத்தானு மிரண்டு வெள்ளைக்காரருக்குக் குண்டு காலிலே விழுந்து காயம்பட்டுதாம். ஒரு பீரங்கி மேஸ் திரி செத்தானும். மூன்று நாலு மாயே (Mahé) சிப்பாய்களுக் குக் காயமுமென்று கபுறு வந்தது. அவர்களிலே செத்த சேதி தெரியவில்லை. இந்தப்படிக்குக் கபுறுவந்துகொண்டேயிருந்தது, அவர்கள் சுடுகிற குண்டு இவர்கள் இருக்கிற விடத்திற்கு நூறடிக்கு இப்புறத்திலே விழுகிறதா மிவர்கள் சுடுகிற பீரங்கிக்குண்டு அவர்களிலே போய் விழுகிறதென்று கபுறு வந்தது. இதுகள் தாக்கீதாய் நாளையதினம் கபுறு வரும். வந்த பிற்பாடு எழுதுகிறேன். இற்றைநாள் துரை யழைத்து நாற் பது சேவகர்மாத்திர முஸ்தீதுபண்ணிவை. அதற்குத் துப் பாக்கி முசியே பெற்சே கிடங்கிலே வாங்கிக்கொடு என்று உத் தாரங்கொடுத்தார். அந்தப்படிக்கு நாற்பது துப்பாக்கியும் பத் திரமும் வாங்கி ஆலத்தூர் வேங்கடாசலநாயக்கன் தாலூக் கிலே வந்து இருபது பேர் சேவகரும் முத்துவேங்கடாசலரெட்டி

தாலூக்கிலே வந்தவர்களாகவும் பின்னையும் ஏகத்துக்கு நாற்பத்தி நாலு பேர் சேர்த்து அதிலே முப்பத்திநாலு பேரை துரை அவர்கள் உத்தாரப்படிக்கு மூசே துக்கேனண்டைக்கு அனுப்பி, பத்துபேரை கையிருப்பாய் வைத்துவைத்தேன். அந்த முப்பத்தி நாலு பேரையும் மூசே துக்கேன் அறமாதுக்குக் கொண்டுபோகிற அரிசி, மருந்து குண்டு முதலானதும் பிறகே அனுப்புவித்தான்.

இற்றைநாள் சாயங்காலம் நாலு பேர் இங்கிலீசுக்காரர் வெகுபேர் வேவுக்காரரென்றுமிதிலே மூர்த்திக்குப்பம், அழிசபாக்கம் தாலூக்கு கிராமமானத்திலேயிருக்கப்பட்ட தலையாரி சின்னசேவி, பெரியசேவி என்று அண்ணன் தம்பிமாரிரண்டு பேர் கலாப நாள்கொண்டு அதுமுதல் இவ்விடத்துச் சமாசாரமெல்லாம் இங்கிலீசுக்காரருக்குச் சொல்லிக்கொண்டு திரிந்தவர்களிலே சின்னசேவி என்கிறவனகப்பட்டன். அவன் கூட நாலு பேரையும் கடற்கரை சேவகர் பிடித்து அப்பால் மூசே பாதியுடனே இவர்களைப் புதுச்சேரிக்குக் கொண்டு போகிறதற்குச் சேவகரைக் கொடுக்கவேணுமென்றால் அவன் நாலு பேர் சேவகர்களைக் கூட்டினான். அவர்கள் கூட நாலு பேரையும் அழைத்துவந்து கூறு சொன்னார்கள். அப்போது மூர்த்திக்குப்பம் தலையாரி சின்னசேவி என்கிறவனை மாத்திரம் மேசையின்பேரிலே படுக்கவைத்து இருபத்தைந்தடி சூத்தின்பேரிலே அடித்துக் கேட்டவிடத்திலே நானொன்றும் அறியேன். என் அண்ணனுங்காட்டும் மூர்த்திக்குப்பம் தலையாரி, நான் மண்டகப்பேட்டைத் தலையாரி, அது பாகூர் சீர்மை என்னைத்தொட்டு ஒரு வேகும் நடந்ததில்லை என்றும், அவ்விடத்திலேயிருக்கிற இவ்வளவு என்று எனக்குத்தெரியாதென்றும் ஒரு சாதனையாய்ச் சாதித்துத் தீர்த்தான். இது கேட்கிறபோது பதினொரு மணியுண்டு. அப்பால் அவர்களை விலங்குப் போட்டுவிடச்சொல்லி உத்தாரங் கொடுத்தார்கள், அந்தப்படிக்கு அவர்களைச் சாவடியிலே கொண்டுபோய் விலங்குப் போடச்சொல்லி நயினார் பிறகே கூட்டி அனுப்பிவிட்டேன், அப்போது நம்முடைய பாளையத்திலிருந்து சேஷய்யன் எழுதின ஓலை, பெண்ணையாற்றிலேயிறங்கி இங்கிலீசுக்காரர் கர்நாடகச் சேவகர் கூடவந்து நம்முடைய பிரான்சுப் படையின்பேரிலே சண்டைக்கு வந்து சண்டை கொடுத்தார்கள் என்று இவர்கள்

படை முனைந்து நடந்ததென்றும், எதிரிகளதனம் பின்வாங்கிச் சின்னப்பையன் சாவடியை விட்டுவிட்டு அப்பாலே ஓடினார்கள் என்றும் அப்போது முசியே பாதி இருந்த காப்பிரிகளுக்குக் கொஞ்சம் சாராயத்தை வார்த்து உற்சாகம்பண்ணி உப்பன் வாடி கொத்தளத்தின்பேரிலே லக்கை ஏறச்சொல்லி அனுப்பின விடத்திலே இவர்கள் போய் லக்கை ஏறினவுடனே அதன்பேரிலே ஆயிரம் ராணுவ கர்நாடகத்தாரிருந்தும் திகைத்துக்கொடுத்தார்கள். பீரங்கிகளைக் கொளுத்தினால் கத்திரித்துப்போச்சுதா மிவர்களுக்குச் செயகாலமானபடியினாலே பீரங்கிகள் கத்திரித்துப்போனதும் ஆயிரம்பேரிருந்தும் முழித்துக்கொடுத்ததும் அப்பால் காப்பிரிகள் துப்பாக்கிப் பிடங்காலே அடித்தும், கோடாலியாலே வெட்டியும், பெயினட்டிலே குற்றங்காட்டியும், அங்கேயிருந்தவர்கள் எல்லாரும் ஓடிப்போனார்களப்போது உப்பல்வாடி கொத்தளத்தைப் பிடித்துக்கொண்டு வெள்ளைக்கொடி போட்டு அந்தக் கொத்தளத்தின்பேரிலேயிருந்த பீரங்கியிலே மூன்று பீரங்கிச் சுட்டார்களாம். அந்தச் சந்தோஷக் கபுறு எழுதிக் கொண்டுவந்தவனுக்கு ஒரு ரூபாய் உச்சிதம் கொடுக்கச் சொல்லி எழுதினான். பதினொன்றரை மணிக்கு இந்தக் காகிதங் கொண்டுவந்தார்கள். கொண்டுவந்து கொடுத்தவுடனே அப்போது துரையுடனே எச்சரிக்கவேணுமென்று போனவுடனே அவர் படுத்துக்கொண்டிருந்தவரை யெழுப்பிச் சொன்னவிடத்திலே அவர் சந்தோஷப்பட்டு நடந்த பூருவோத்திரம் எல்லாம் கேட்டார். அந்த வயணமெல்லாம் சொன்னவிடத்திலே வந்தவர்களுக்கு இரண்டு ரூபா யினும் கொடுக்கச்சொல்லி முசியே ரங்கப்பிள்ளை இந்தக்காரியம் தீருகிறமட்டுக்கும் இவ்விடத்திலேதானே படுத்துக்கொள்ளவேணுமென்று சொன்னார். இவ்விடத்திலெதானே சாப்பிட்டுக்கொள்ளவுமென்று சொன்னார். நல்லதையா, அப்படியே செய்கிறேன், சுவாமியினுடைய கடாட்சத்தினாலே யுமக்கு இந்தமட்டுக்கும் எசமானத்துவ மில்லாமலின்னஞ் சகல காரியமும் செயமாமென்று நான் சுவாமியைப் பார்த்துப் பிரார்த்தித்துக்கொண்டிருக்கிறேன் என்று சொன்னேன். ஏனென்றால், அடிக்கடி சமாசாரம் மனுஷர் வருகிறபடியினாலே நீர் இருந்து தீரவேண்டியிருக்கிறதென்றும், ஆனபடியினாலே இப்பவுந் தீக்குடுக்கை மருந்துகள் எல்லாம் முஸ்தீது பண்ணியனுப்புவிக்கிறார்களிதற்கு எருதுகள் கூலி

யாட்களும் இதற்கு என்ன சரஞ்சாமி வேண்டியிருக்கிறதோ அதுகளெல்லாம் சிக்கிரமாய் முஸ்தீதுபண்ணி யனுப்பிவையு மென்று சொன்னார். நல்லதென்று பாக்குக் கிடங்குக்கு வந்து அங்கேதானே யிருந்து சாப்பாடு அழைப்பித்துச் சாப்பிட்டு அங்கேதானே நித்திரை போய் அப்பால் ராத்திரி பனிரெண்டு மணிக்குமேல் ஸ்ரீ துரையவர்கள் புறப்பட்டுக் கொத்தளங்கள் பேரிலே ஏறி நீக்குடுக்கைகள் மற்றது முஸ்தீதுபண்ணுகிற விடத்துக்குப் போய் அதுகளெல்லாம் திட்டம்பண்ணிச் சீக்கிரமாய் முஸ்தீதுபண்ணச்சொல்லிவிட்டு மறுபடியு மிரண்டு மணிக்கு வந்து நித்திரை போனார்.

இதற்குள்ளே வந்த கபுறு யென்னவென்றால்; இங்கிலீசுக்காரர்கள் தளம் வந்தவர்கள் முறிந்து மஞ்சகுப்பத்திலே கும்பினீர் தோட்டத்தண்டையிலே ஆசுராபிடித்துக் கொண்டிருந்தவர்கள் பேரிலே நாங்கள் போய்க் கும்பினிர் தோட்டம் கைவசம் பண்ணிக்கொள்ளுகிறோமென்று எழுதிவந்தது. எப்போதிவர்களிதைப் பிடிக்க நடக்கத்துவக்கினார்களோ மற்ற மூன்று கொத்தளங்களிலே யிருந்தவர்களும் கொத்தளத்தை விட்டு ஓடிப்போனார்கள் என்று எழுதிவந்தது. இதல்லாமல் இவ்விடத்திலேயிருந்து கொண்டுபோன பீரங்கியிலே இரண்டு பீரங்கி வெடித்துப் போச்சுதென்றும் சேதி வந்தது. சுவாமியினுடைய தயவினாலேயும் செயகால மிவர்களுக்கிருக்கிறபடியினாலேயும் இங்கிலீசுக்காரருடைய பீரங்கி பதினெட்டுப் பீரங்கி இவர்களுக்கு அகப்பட்டது. ஆனால் இன்று பனிரெண்டுமணி துவக்கிச் சாயங்காலம் ஆறரைமணி மட்டுக்கும் ஓய்வில்லாமல் விபரீதமாய் விட்டதற்குப் பீரங்கிசப்தம் கேட்கப்பட்டது. அப்பாலே ஏழுமணிக்குத் துவக்கிப் பத்துமணி மட்டுக்கும் பொறுத்துப் பொறுத்துச் சாடையாய் சப்தம் கேட்டுக்கொண்டிருந்து பத்து மணிக்குமேல் பீரங்கி நின்றுபோய் பனிரெண்டு மணிக்கு இரண்டொரு பீரங்கிக் கேட்டது. பொழுதுவிடிய காலத்தாலேயுமிரண்டொரு சப்தம் கேட்டது. அந்தமட்டிலே நடந்த சேதியல்லாமல் ராத்திரி எட்டு மணியிலே ஒரு பேய் ராசபுத்திரன் உத்தியோகமில்லாமலிருந்தவன், அவ்விடத்திலே நம்முடைய பிராஞ்சுக்காரர் தண்டிலே போயிருந்து இங்கிலீசுக்காரர் சுட்ட பீரங்கி குண்டிலே எட்டுகுண்டு ஆறு ராத்தல் குண்டு மூன்றும், மூன்றுராத்தல் குண்டு ஐந்தும் ஆக

எட்டு குண்டையும் கொண்டுவந்தநின்பேரிலே ஸ்ரீ துரையவர் களிந்தக் குண்டுக்கு ஒரு ரூபாய் விழுக்காடு கொடுக்கச்சொல்லி அவனுக்கு எட்டு ரூபாய் கொடுக்கச்சொன்னார். அந்தப்படி கொடுத்தார்கள்.

இற்றைநாள் சாயங்காலம் நாலு மணிக்கு ஆற்காட்டிலே யிருந்து முசியே தெலார்சு கடுதாசி ஸ்ரீ துரையவர்களுக்கும் மமு தாக்கல் கடுதாசி துரை பேருக்கும், என் பேருக்கும், வக்கில் சுப்பய்யன் கடுதாசியையுங் கொண்டுவந்தார்கள். சுப்பய்யன் நமக்கெழுதின கடுதாசி வயணம் மாசி மீ 29 உ சுக்கிரவாரம் நாள் சூரிய உதயத்துக்கு ஆற்காடு போய்ச்சேர்ந்து அன்றையதினம் உசேன் சாயபு அவர்களுடனே யெச்சரித்து நவாபு அவர்களுக்கு வந்த வெகுமானத்தைக் கொண்டுபோய் முன்னேவைத்து லீஸ்துவைக் கையிலே கொடுத்துச் சகலாத்து கட்டெல்லாம் ஒருபுறமாக அடுக்கி மற்றத் திணுசுகளெல்லாம் அவிழ்த்து முன்னே வைத்தவிடத்திலே பார்த்து ரொம்பவும் சந்தோஷப்பட்டார்களென்றும், அந்தமட்டிலே சகலாத்தும் திணுசுகளும் எல்லாவற்றையும் கொட்டடியிலே சேர்த்தார்கள் அந்த மட்டிலே புறப்பட்டு உசேன்சாயபு அவர்கள் வீட்டுக் குப் போய் அவரைக்கண்டு பேசி இரண்டு நாழிகை மட்டுக்கும் முசியே தெலார்சு அந்தரங்கமாய்ப் பேசிக்கொண்டிருந்தார்கள். நபாபு அவர்களுக்குக் கொண்டுபோய்க் கொடுத்தவெகுமானச் சேதியும் சொன்னவிடத்திலே அவர்கள் ரொம்ப சந்தோஷப் பட்டுப் பின்னையுஞ் சற்றுநேரம் லோகாபிராமமாய்ப் பேசி யிருந்து பிற்பாடு உசேன் சாயபு சொன்னதென்னவென்றால்: சென்னப்பட்டணத்திலே நம்முடைய வீட்டையிடித்துப் போட் டார்களே, அதென்ன வென்கிறதாய் மனஸ்தாபம் பண்ணின விடத்திலே அதற்கு முசியே தெலார்சு இருந்துகொண்டு சென்னப்பட்டணம் கோட்டையைச் சுற்றிலுமிருக்கிற வீடெல்லாம் இடித்துப் போடச்சொல்லிக் குவர்ன தோர் சாயபு அவர்களுடைய உத்தாரமானபடியினாலே இடித்துப்போட்டார்கள். இப்பவும் உங்களுக்குச் சென்னப்பட்டணத்திலே பதிலெந்த வீடு வேணுமென்று சொல்லுகிறீர்களோ அந்த வீட்டைத் தருகிறோமென்று சொன்னார். அதற்கு உசேன் சாயபு சொன்னது: எங்கள் வீடுபோனமட்டுக்கும் இனிமேல் வீடென்ன செய்ய? அந்த

வீட்டுக்கு ஏழாயிரம் வராகன் சென்றிருக்கிறது என்று சொன்னூர். நல்லது அப்படியே குவர்னதோர் சாயபு அவர்களுக்கு எழுதியனுப்புவிக்கிறேமென்று சொல்லிவிட்டு அனுப்புவித்துக்கொண்டு வந்துவிட்டோ மிதல்லாமல் ழசியே புரிகுமாரன் சேதிக்குப் பிரஸ்தாபம் நடந்ததென்றும், அதற்கு நபாபு அவர்களிருந்துகொண்டு அப்படியே மகமது சரீபுக்குக் காகிதமு மெழுதி ஒரு குதிரைக்காரனையு மனுப்புவித்து அழைத்தனுப்பிவிடுகிறேமென்றும், அல்லவென்றுல் அவனனுப்பாமல் அப்படிப்பண்ணினது உண்டானுல் அவனுடைய பெண்டுகள் பிள்ளைகள் ஆரணிக்கோட்டையிலேயிருக்கிற பேரை கவாத்துபண்ணுவித்து அதன்பேரிலே எப்படியும் பிரயத்தனம் பண்ணி அழைப்பித்தனுப்பிவிடுகிறேமென்று சொன்னூர்களென்றும் ழசியே கையோர் நபாபு அவர்களுக்குத் தாதுவைப்பிடித்துப் பார்த்து இரண்டு மூன்று நாளையிலே மருந்து கொடுக்கிறதா யிருக்கிறுர்களென்று மிப்படியாக எழுதி, பின்னையும் குலாப்சிங்கு அபாசிபண்டிதர் ரத்னுசி பண்டிதரிவர்களுக்கு வெகுமதி பண்ணவேணுமென்று சொன்னதற்கு ழசியே தெலார்சு இருந்துகொண்டு துரையவர்களானுல் நம்முடனே ஒன்றும் சொல்லவில்லை என்று சம்மதியில்லாத விசேஷமாய்ச் சொன்னூர். அவர்கள் மூன்று நாலு பேரும் நம்முடைய காரியத்திலே ரொம்பவுமனுகூலமாயிருக்கிறது அவர்களுக் கென்னமாகிலும் விசாரிக்கவேணுமென்று எழுதின ரிதல்லாமல் இற்றைநாள் ஆற்காட்டிலேயிருந்து வந்த வயண மென்னவென்றுல்: மகம்மதாக்கல் சொல்லுகிறது, இவ்விடத்திலே அவர்கள் வாங்கிக்கொண்ட சிரொப்பா சம்மதி ரூபாய் கேட்கப்போனுல் மாபூசுகான் திருச்சிராப்பள்ளிக்குப் போயிருக்கிறுரே, அவருக்கெழுதியனுப்புவிப்போம்; வரட்டு மென்கிறதாய்க் காலகரணமான விசேஷமாய் ஆற்காட்டுப் பேச்சாய் சொல்லுகிறுர்களேயல்லாமல் புதுச்சேரியிலே பேசின பேச்சாயிருக்கவில்லை என்றும் ஆனபடியினுலே நம்முடைய லாலாபேட்டை மளிகைக்கு அவர்பேருக்கு உண்டிகை எழுதிக்கொடுத்த பணத்தை அட்டிபண்ணிக்கெண்டு அத்தொகைக்கு வருகிறமட்டுக்கும் பார்த்துக் கொண்டிருக்கிறேமென்றும் இப்படியாக எழுதி அனுப்புவித்தார்.

இதல்லாமல் சுப்பய்யன் எழுதியனுப்புவித்த தென்ன வென்றல்: டில்லியிலேயிருந்து ஆற்காட்டுக்கு எழுதிவந்த சமாசாரமறிந்து அந்தக் காகிதப்படி எழுதிவந்த நகல் வயணமென்னவென்றல்: டில்லியிலே ஓந்தறுல் முலுக்கு அமீர்கான் பகதூரவர்கள் (Umda'-ul-mulk Amirkan Bahadur) சிலேயு மீ (2௳ செப்தம்பர் மீ 1746) பாதுஷா அவர்கள் பேட்டிக்குப் போனர்கள். போகும்போது அலி தர்வாசா (Ali-Darwaja' gate) என்கிற வாசற்படியிலே சிப்பந்திக்காரர் கலாபம் பண்ணிக் கட்டாரியினலே அவனைக் குத்திப்போட்டார்கள். குத்தினவனையும் பதிலுக்கு அங்கேதானே குத்திப்போட்டார்கள். இந்தச் சேதி பாதுஷா அவர்கள் கேட்டு அவர்பேரிலே ச அனுபாதுயிலா சுபாது சுபாவுகள் (Subhas of Jehanabad) நிலுவைப் பணம் மூன்று கோடி ரூபாய் அவர்கள்பேரிலே வர வேண்டியதிருக்குதென்றும், அவர் வீடுவாசல் தட்டுமுட்டெல்லாம் மறிக்கச்சொல்லி உத்தாரங் கொடுத்தார்கள். இந்தச் சேதி அந்தச் சிப்பந்திக்காரர் அறிந்து அந்தப் பணத்தை ஒரு பெட்டியிலேபோட்டு அவர்கள் வீட்டிலேதானே பத்திரமாய் வைத்து வீட்டைச் சுற்றிலும் வீட்டின்பேரிலும் பீரங்கிகளும் உச்சால்களும் வைத்துக்கொண்டு சண்டைக்கு ஆயத்தமாயிருந்தார்கள். இந்தச் சமாசாரம் பார்சா அவர்கள் கேட்டு மூன்று நாள் தகத்து மேலேயிருந்து பெரிய பெரிய அமீர்களையெல்லாம் அழைப்பித்து ஆலோசனைபண்ணி அந்தச் சிப்பந்திக்காரரையெல்லாம் அடித்துத் துரத்திவிடச்சொல்லி உத்தாரங் கொடுத்தார்கள். அப்போது காசத்தின் கான்பகதூர் பெரோசிங்கு அவர்கள் பாதுஷாவுடனே அரசுபண்ணினது. பட்டணத்திலே ஏழை சனங்கள், வர்த்தகர், சவுகார்கள் வெகுபேர் இருக்கிறர்கள். அவர்களிப்படி கலாபம் நடக்கிறதினலே அவர்கள் கெட்டுப்போவார்கள். வெகுசனங்கள் மடிந்துப்போமென் றெச்சரித்தபடியினலே பாதுஷா அவர்கள் நல்லதென்று சம்மதித்து, செத்துப்போனவனுடைய தட்டுமுட்டெல்லாம் விற்றுச் சிப்பந்திக்காருக்குக் கொடுக்கச்சொல்லி உத்தாரங் கொடுத்தார்கள். அப்போது அப்துல் மன்சூர்கான் சபத்தர்சிங்கு பகதூர் அவர்கள், பெரிய பெரிய அசாமிகளும் சமேதார்களையும் மத்தியஸ்தமாயனுப்புவித்து, சிலேயு மீ 22 உக்கு நாளது ஹூ (17 Novembre 1746) கார்த்திகை மீ த்திலே நாலு நாழிகைப் பொழுது இருக்கும்போது அந்தப் பிணத்தை யெடுத்துக்

கொண்டுபோய் மீருசலின்கான் அவர்கள் மசித்திலே புதைத்துப்போட்டார்கள். அப்போது சிறிது அமீர்கள் பெரியமனுஷர்கள் செத்துப்போனவன் வீட்டுக்குப் போய் விசாரிக்கப் போனவிடத்திலே அந்தச் சிப்பந்திக்காரர் அவர்களை மறித்துக்கொண்டு நீங்களானால் பிணத்தைக் கொண்டுபோய்ப் புதைத்துப் போட்டீர்களே; எங்கள் பணத்தை சம்மதிபண்ணிப்போட்டுப் போங்களென்று சொன்னார்கள். அப்போது அந்தப் பெரிய மனுஷரெல்லாரும் கூடிக்கொண்டு செத்தவன் வீட்டிலேயிருந்த தட்டுமுட்டு எல்லாம் முப்பத்தேழு லக்ஷத்துக்கு விற்றுச் சிப்பந்திக்காரர்களுக்குக் கொடுத்துவிட்டார்கள். பார்சா அவர்களுக்குச் செத்தவன்பேரிலே வரவேண்டிய மூன்று கோடி திரவியமும் மாப்புப்பண்ணிப்போட்டார்கள். இதல்லாமல் நிசமான்முலுக்குத் தண்டு சமாசாரம் கொசானுமதுல்லாகானவர்கள், பூர்ணச்சந்து திவான் மூகாந்திரமாய் 30, 35, 40, 45 லக்ஷம் ரூபாய் மட்டுக்கும் மத்தியஸ்தம் நடப்பித்து வர்த்தகர் கையிலே உடன்படிக்கைப் பண்ணிவைக்கிறோமென்று நிலுவை சம்பந்தம் நாலு லக்ஷம் ரூபாய்க்கு மிரண்டு பங்கு பணமும் சீர்மை தங்கள் வசம் பண்ணி, ஒரோப்பா கொடுத்தவுடனே கொடுக்கிறோமென்று உடன்படிக்கைப் பண்ணின சேதி பூர்ணச்சந்து அவர்கள் நிசாமுடனே அரசு பண்ணினதற்கு நிசாமவர்கள் அவரைக் கிட்டே அழைத்துக்கொண்டு இரண்டு நாழிகை மட்டுக்கும் அந்தரங்கமாய்ப் பேசிக்கொண்டு அதன்பேரிலே பூர்ணச்சந்து அவர்களுக்கு அவுதாவுடனே கூட ஒரு ஆனை வெகுமானம்பண்ணி இரண்டாயிரம் ரூபாய் சம்பளம் உசத்தி பண்ணினார்கள்.

இதல்லாமல் சீரங்கப்பட்டணத்து மேலே எழுபது லக்ஷம் ரூபாய்க்கு எழுதிக்கொடுத்தார்கள். அந்தப்படியே மைசூரார் பேருக்கு ஒரு காகிதமும் எழுதி இந்தப் பண மனுப்புவித்தாலாச்சுது இல்லாவிட்டால் நம்முடைய மனதுப்படிக்கு ராச்சியமெல்லாம் பாழ்கடித்துப் பணமும் வாங்குவோமென்று மிப்படியாக எழுதி நாறு பேர் குதிரைக்காரரையும் கூட்டி மைசூருக்கு அனுப்புவித்தார்கள். தாமும் பிறநாலே மைசூர் நிலுவைக்கும் சீரப்பைக்கும், தஞ்சாவூரின் பேரிலே பாக்கி விஸ்தாரமாய் வரவேண்டியிருக்குதென்றும், அந்தப்படி அந்தப் பிராந்தியத்திற்குப் போகிறோமென்றும் இந்தப்படியாக நிசாமன்முலுக்கு அவர்கள் தர்பார் நிறைந்திருக்கச்சே

சொன்னார்கள். நிசாமன்முலுக்கு சின்ன குமாரன் மீரு நிசாமல்லிகான் பகதூர் அசந்தசிங்கு அவர்கள் பாலாடா என்கிற சீர்மைக்கு வருகிறானென்கிற சேதி றகோகி கேட்டு, தேவகோட்டை சாந்தா அந்தப் பிராந்தியத்துக்குப் போனானென்கிற சமாசாரம் நிசாமவர்களுக்கு எழுதிவந்தது இப்போது நிசாமவர்கள் கிருஷ்ணையனண்டைக்கு வந்தார்கள். சபர் மீ 15உ க்கு மாசி மீ கிருஷ்ணைக்கப்புறம் வருகிறாரென்கிற சேதி. இந்தச் சேதி சபர் மீ 14உ எழுதின காகிதம் ஆற்காட்டுக்கு வந்தது. ஆனபடியினாலே. ஆற்காட்டிலே நபாபு அன்வருதிகான் சாயபு அவர்கள் தங்கள் கணக்கு வழக்கு என்ன கேட்பாரோவென்று அதுகளுக்கெல்லாம் முஸ்திது பண்ணுகிறார்கள். நிலுவைகள், சலுவைகள் சீர்மைகள் பேரிலே வரவேண்டிய பணமிதுகளெல்லாம் வெகு சுருக்கிலே தஷத்துப் பண்ணுகிறார்கள்.

1747 ஆ மார்ச்சு மீ 13 உக்கு அக்ஷய ஸ்ரீ பங்குனி மீ 3 உ

இற்றைநாள் நடந்த சமாசாரமென்னவென்றால்: நம்முடைய படையுடனே கூடப் போன வீரநாயக்கன் வந்து சொன்ன சமாசாரம் என்னவென்றால்: கேற்றைய தினம் ஆதிவாரம் நாள் ராத்திரி போய் உப்பிலவாடி கொத்தளம் பிடித்தவுடனே மற்ற மூன்று கொத்தளத்தின்பேரிலே இருந்தவர்களும் ஓடிப்போனார்களென்று எழுதியிருக்கிறோமே, அதன் பிற்பாடு பத்து மணிக்கு அவ்விடத்திலேயிருந்து முத்தாலு நாயக்கன் தோட்டமும், சத்திரமுமிருக்கிறதைக் கிட்ட நம்முடைய சோத்துப்பாளையமும் அதற்கு எசமானாயிருக்கிற முசியே வியாசாமும், முசியே செம்மடுத்தேனையும், வீரநாயக்கன் தாலுக்கு சேவகரையும் வைத்துப்போட்டு முசியே பாதீ முதலான பேரும், சொல்தாதுகளும், மாயே சிப்பாய்களுமாய் பதினொரு மணிக்கு அவ்விடத்திலேயிருந்து சாகி அப்புறம் மஞ்சகுப்பத்திலேயிருக்கிற கும்பினீர் தோட்டத்தைப் போய்ப் பிடித்தார்கள். அதன்பேரிலே அவ்விடத்திலே கொஞ்சம் நஞ்சமிருந்த ராணுவமெல்லாம் ஓடிப்போய்விட்டார்களாம். அந்தமட்டிலே கும்பினீர் தோட்டத்திலேதானே டிகானிபண்ணி அவ்விடத்திலேயிறங்கி நம்முடைய வெள்ளைக்காரர் சேவகர் தோட்டத்தைச் சுற்றிலும் மெத்தைமேலேயுஞ் சந்திரினேர்வைத்து எல்லாம் வேஷத்துப்பண்ணிவைக்கிறதற்குள்ளே சூரிய உதயமாச்சுது. சூரிய உதயமானவுடனே சோத்துப்பாளையத்தின்பேரிலே யிருக்கிற முசியே வேசாமுக்கும், முசியே செம்மடுத்தேனுக்கும் எழுதிவந்தது அவர்களும் நாங்களும் எல்லாருங் கூடப் பயணப்பட்டு மஞ்சகுப்பத்திலே யிருக்கிற கும்பினீர் தோட்டத்தைப் போய் எட்டு மணிக்குச் சேர்ந்தோம். அவ்விடத்திலே யிருந்து படை

யெல்லாம் சேகரித்துக்கொண்டு அப்பால் வண்ணாரப்பாளை யத்து ஒட்டு பிடித்துக்கொண்டு கோட்டையின் பேரிலே ராச காரியம் நடத்துகிறதற்குத் தோட்டத்துக்குக் கிழக்கு வாசற் படியண்டையிலே நம்முடைய ராணுவ சொல்தாதுகள், காப் பிரிகள், மாயே சிப்பாய்கள் சமஸ்தமான பேரும் வரிசைவைத் துக்கொண்டு அப்பால் சாகி நடக்கிறதற்கு அயத்கமாயிருக் கையிலே மெத்தையின்பேரிலே சந்திரனேறிருந்துகொண்டு ஏழுகப்பல் ஓடிவருவதைக்கொண்டு இந்தக் கப்பல் இங்கிலீசுக் காரரதுதான் என்று நிஷ்கரிஷை ஏற்படுத்தி, பிற்பாடு இறங்கி வந்துஇந்தப்படைக்கு எசமான்களாய்ப்போன படைத்தலைவர் மார் முசியே பரதீ, முசியே லந்தூர், முசியே சன்ழாக்கு, முசியே செம்மடுந்தேன் முசியே வேன்சான், முசியே சன்முவியாக்கு முத லான படைத்தலைவர்மார் எல்லாருமாய் குமிசேல்கூடி அவர் களுக்கானால் கப்பல்வந்து போச்சுதே ஒருவேளை இந்தக்கப்பலை யெல்லாம் கொண்டுபோய்ப் புதுச்சேரி துறையிலே வைத்துப் பிடித்துதானால் அவ்விடத்திலே ராணுவமில்லையே இனிமேல் நாமிங்கேயிருக்கிறது காரியமில்லையென்று சொல்லி, பத்தரை மணிக்கு அவ்விடத்திலேயிருந்து சோத்துப்பாளையத்தையும் அதன்பிறகே நம்முடைய ராணுவங் கூட்டி அதன் பிறகே இரண்டு வெண்கலப் பீரங்கியும், பின்னையும் நான்கு மூன்று பீரங்கிகளையும் இழுத்துக்கொண்டு இதுகளையெல்லாம் மேல் புறமாய் வாகூருக்குக் கிழக்கு வழியாய்ப் புறப்பட்டுப் போகச்சொல்லி, அப்புறஞ் சிறிது சாமான்களெல்லா மெடுக் கிறதற்குக் கூலி ஆட்களில்லாமல் மருந்து பெட்டிகளையெல் லாந் தண்ணீரிலே போட்டு அவ்விடத்திலேயிருந்த பீரங்கி களை யெல்லாம் ஆணியடித்து அதுகளையுமிழுத்துத் தண்ணீ ரிலே போட்டு, அரிசி சாக்குகளை அறுத்துக் கிணறுகளிலேயும் குளத்திலேயும் கொட்டிப்போட்டு, சாராயப் பீப்பாய்களை யெல்லாம் உடைத்து ஊத்திப்போட்டு, தோட்டத்திலே யிருக்கிற நாற்காலிகள், பெட்டிகள், மேசைப்பலகை, வீடு வாசல்களெல்லாம் உடைத்து இடித்துத் தகர்த்துப்போட்டு, ஏணிகளையெல்லாம் கொளுத்திப்போட்டுத் தாம்தூம் பண்ணி, அவ்விடத்திலேயிருந்த வீடுகளையும் கொளுத் திப்போட்டு, அவ்விடத்திலேயிருந்து பயணம் புறப்பட்டு வரும்போது குதிரைவால் கொத்தளத்திலே வந்து ஏறி கொடி மரத்தையும் வெட்டிப்போட்டு, அதிலேயிருந்த பீரங்கிகளை ஆணியடித்துத் தண்ணீரிலே இழுத்துப்போட்டுவிட்டு, அதிலே யிருந்த மருந்து குண்டுகளையெல்லாம் எடுத்துத் தண்ணீரிலே போட்டுவிட்டு, அவ்விடத்திலேயிருந்த குடிசைகளையும் கொளுத்திப்போட்டு, மரிகிருஷ்ணபுரத்துவழியே புறப்பட்டு வரும்போது இதற்குள்ளே தேவனாம்பட்டணத்துக் கோட் டைக்குக் கபுருகி அவ்விடத்திலேயிருந்து இருநூறு பேர் வெள்ளைக்காரரும் ஐம்பது குதிரையுமாகப் பின்தொடர்ந்து

வந்தார்கள். நாங்கள் முன்னும் அவர்கள் பின்னுமாய் மரி கிருஷ்ணாபுரம் பட்டிக்கும் வந்தபிற்பாடு நம்முடைய ராணுவம் திருப்பிக்கொண்டு துரத்தினார்கள். அந்தபட்டியிலே அவர்கள் புறப்பட்டு ஓடிப்போனார்கள். அந்தச் சமயத்திலே நம் மூட்டையவர்களுக்குள்ளே ஒரு மூட்டைக்காரனை வெட்டிப்போட்டார்கள். அந்த மூட்டைக்காரன் பிறகே வந்த நம்முடைய சேவகன் வேங்கடாசலமென்கிறவனைப் பிடித்துக்கொண்டு அவனுடைய கத்தி, துப்பாக்கி, புடவை சீலைகளெல்லாம் பிடுங்கிக்கொண்டுவிட்டார்கள். அவன் மாத்திரம் பிராணன் தப்பித்துக்கொண்டு ஓடிவந்துவிட்டான். இதல்லாமல் ஒரு வெள்ளைக்காரன் சாராயத்தைக் குடித்துவிட்டுத் தண்ணீர் தாகத்தினாலே பின்னே நின்று டனைமரத்தோரமாய் வரச்சே கண்டு அவனைத் தேவனாம்பட்டணத்துக் குதிரைக்காரர் அவன் தலையை வெட்டி எடுத்துக்கொண்டு போய்விட்டார்கள். அவர்களைத் துரத்திக்கொண்டு விடப்போய் ஆற்று மட்டும் விட்டுவிட்டு மறுபடி புறப்பட்டு இப்புறம் வந்துவிட்டார்கள். அங்கேயிருந்து புறப்பட்டுப் பயணம் அரியாங்குப்பத்திலே வந்து நின்றார்கள். அதன்பேரிலே இவ்விடத்திலேயிருந்து துரையவர்கள் கடுதாசி வந்து பார்த்துக்கொண்டு அவ்விடத்திலேயிருந்து இன்று சாயங்காலம் ஏழு மணிக்கு ராணுவப் படைகள் சமஸ்தமானபேரும் வந்து புதுச்சேரி தாக்கலானார்கள்.

இதல்லாமலிவ்விடத்திலே நடந்த அதிசயமேதென்னவென்றால்: இன்றையதினம் பகலிரெண்டடித்து ஒரு மணிக்குத் தேவனாம்பட்டணத்திலே யிருந்து இரண்டு கப்பல் ஓடிவந்தது. அது வரச்சே முகத்துவாரத்தண்டையிலே கண்டவுடனே இவ்விடத்திலே இருக்கப்பட்ட துரைத்தனக்காரர் கொமிசேல்காரர் மற்றுமுள்ள பெரிய மனுஷர் முதலான பேரெல்லாரும் இடுப்பில் கட்டிக்கொண்டு, பீரங்கிகளிலே மருந்து குண்டுகளெல்லாம் போட்டு, நேரா எடுத்துக்கட்டி, யெல்லாரும் நெருப்பு கயிறுகூட கொளுத்தி வைத்துக்கொண்டு லேஷத்தாயிருந்தார்கள். சமுத்திரக்கரை யோரத்திலேயிருக்கிற அலங்கங்கொத்தளங்களெல்லாம் நிறைந்திருந்தார்கள். துரையவர்களானால், வெகு வேலுத்துடனே புறப்பட்டுத் துவாரண்டையிலே போய் அலங்கத்து மேலே ஏறி வடக்குக் கடைசி கொத்தளந் துவக்கித் தென்னண்டை கடைசி கொத்தள மட்டுக்கும் உலாத்திக்கொண்டு நிற்கச்சே அந்த இரண்டு கப்பலும் கரை நெருங்கி ஓடிவந்தது. செம்மையாய் வடக்காக ஓடிப்போச்சுது. அது அப்புறப்பட்டு ஓடிப்போன பிற்பாடு இவ்விடத்திலே அலங்கத்தின்பேரிலே நின்று துரைகளெல்லாரும் இறங்கி வந்துவிட்டார்கள். இந்த இரண்டு கப்பலும் வடக்கே என்ன நிமித்தியம் போகுதென்றால், சென்னப்பட்ட

ணத்திலே பிடித்துக்கொண்ட இங்கிலீசு சிர்மைக் கப்பல் ஒன்றும் நெப்த்தூன் என்கிற கப்பலொன்றும் அந்த இரண்டு கப்பலிலேயும் சரக்குகளேற்றி இவ்விடத்துக்கு ஒடிவரச்சே அந்தச் சேதி தேவனாம்பட்டணத்தார் அறிந்திருப்பார்கள். அந்தச் சேதி கேட்டு அந்த இரண்டு கப்பலையும் பிடிக்கிற நிமித்தியம் இந்தக் கப்பல் போகுதென்று சொன்னார்கள். இந்தக் கப்பல் கண்டவுடனே இவ்விடத்திலே கூடி சென்னப்பட்டணத்துக்குக் கடுதாசி எழுதிச் சேருவைக்காரன் வசங் கொடுத்து ஒரு கட்டு மரத்தைப் பயணம்பண்ணி வடக்கே சென்னப்பட்டணத்துக் கனுப்பினார்கள்.

ஆனாலின்னமிரண்டு நாளைக்குமாத்திரமிந்தக் கப்பல்வராமலிருந்தானாலிவர்கள் போன முஸ்தீதும் சபுருசஷத்துக்குமிரண்டு நாளையிலே கோட்டையைப் பிடித்துக் கோட்டையிலே வெள்ளை நிசானும் பறக்கும். ஆனால், இன்னஞ் சிறிது நாளைக்கு அந்தக் கோட்டையிலே இங்கிலீசுக்கொடி பறக்கத் தக்கதாகப் பிராப்தியிருக்கிறபடியினாலே சுற்றுக் கொத்தளமெல்லாம் கைவசப்பட்டுக் கோட்டை பிடிக்கப்போகிற சமயத்திலே இங்கிலீசுக்காரருக்குக் கப்பல் வந்து கைக்கொத்திகையாச்சுது. ஆனபடியினாலே, மனுஷ எத்தனத்திலே எத்தனை பிரயத்தனம் பண்ணித் தன் புத்தியினாலே என்னதானடப்பித்தாலும் தெய்வ சங்கல்பம் உள்ளபடி நடக்குமேயல்லாமல் அதுக்கொருக்காலும் திருக்கு வரத்தக்கதில்லை.

இற்றைநாள் சாயங்காலம் சென்னப்பட்டணத்திலேயிருந்து சேதிவந்ததென்னவென்றால்: இன்று மூன்று நாளைக்கு முன்னே சனிக்கிழமையன்று சென்னப்பட்டணத்திலேயிருந்த நெப்த்தூனென்கிற கப்பலும் இங்கிலீசுக்காரருடைய சிர்மைக் கப்பலை சென்னப்பட்டணத்திலே இவர்கள் பிடித்துக்கொண்டார்களே, அந்தகப்பலுமா இரண்டு கப்பலும் பயணம் புறப்பட்டுக் கோவளத்துமட்டுக்கும் ஒடி வந்து இப்புறம் வருகிறதற்குக் காற்றில்லாமல் அந்தத் துறையிலேதானே வைத்துப் பிடித்துக் கிடக்கச்சே தெற்கே இருந்து வடக்கே ஒடிப்போகிற சமயினகாரன் ஒருத்தன் கோவளத்துத் துறையிலே வைத்துப் பிடித்திருக்கிற இரண்டு கப்பல்காரருடனேயும் சும்மாய்த் தானே தப்புக் கபுருகி தேவனாம்பட்டணத்துத் துறையிலேயானால் ஐந்தாறு கப்பல் வந்திருக்கிறதாகவும் அந்தக் கப்பலானால் இங்கிலீசுக்கொடி போட்டிருக்குதென்றும் தப்பு சமாசாரம் ஒடிக்கொண்டே போகிறவன பாடிக்கொண்டே போனான். அந்தச் சேதி கப்பல்காரர் கேட்டவுடனே அந்தச்சணம் பாய்தூக்கிச் சென்னப்பட்டணம் போய்ச் சேர்ந்தார்களென்று சேதிவந்தது. ஆனாலிவர்களுக்கு யோககாலமானபடியினாலே தப்புக் கபுருய்ச் சொன்னதும் நல்லவேளைக்

குத் தக்கதாய் அநுகூலத்துக்காச்சுது, நல்லவேளைக்குத் தக்க தாய் தற்செயலாய் எல்லாம் நலமாய்த்தானே நடக்குமிதுக ளெல்லாம் தெய்வ எத்தனமே யல்லாமல் மனுஷ ரெத்தனத் திலே ஆகுதென்று ஒருக்காலு மெண்ணத் தேவையில்லை.

1747-ம்ஆ மார்ச்சு மீ 14 உ க்கு அக்ஷய ஞூ பங்குனி மீ 4 உ மங்களவாரம்.

இற்றைநாள் நடந்த அதிசய மென்னவென்றால்: முன் னாலே வேட்டவலம் பண்டாரத்தாருக்கு எழுதியிருந்தோமே அவரனுப்புவித்த ராணுவத்தார் சாயங்காலம் ஐந்து மணிக்கு வந்தார்கள். அவர்கள் வந்த சேவகர் எத்தனை பேருண்டென் றால் இருநூறு பேர் துப்பாக்கிக்காரரு மிருபது பேர் குண்டு கோலிக்காரரும். பத்துப் பேர் சவுக்கைக்கதிக்காரரும் இது களுக்கு எசமானும் நாலு குதிரைக்காரர் நாலு குதிரையின் பேரிலேயுமாக ஏகத்துக்கு 200 ராணுவம் வந்து சேர்ந்தார்கள். அவர்கள் கையிலே வேட்டவலத்துப் பண்டாரத்தார் எழுதி யனுப்புவித்தது என்னவென்றால்: இப்போது இருநூறு பேரை அனுப்புவித்தோமென்றும். குதிரை முன்னூறுங் கூட்டி வீர ராகுவய்யன்பிறகே அனுப்பிவிக்கிறோமென்றும். எழுதி யனுப்புவித்தார். அதைப் பார்த்துக்கொண்டு இந்த இருநூறு பேர் ராணுவத்தையும் ஆலத்தூர் வெங்கடாசல நாயக்கன் தாலூக்கா ராணுவம் 245 பேரையு மிரண்டு தாலூக்கா ராணு வத்தையு மிரண்டு வரிசையாய்த் துரையவர்கள் வீட்டண்டை யிலே போய் நின்றது. துரையவர்களுக்கு முசுராபண்ணச் சொல்லி அனுப்புவித்தோம் அந்தப்படியே இந்த ராணுவங்க ளெல்லாம் துரையவர்கள் வீட்டண்டை போனவிடத்திலே துரையவர்களந்நேரம் வடவண்டை சவாரி போயிருந்தபடி யினாலே அவர்கள் வருகிறவழியிலே செட்டித்தெருவிலே இரண்டு தாலுக்கு ராணுவ மிரண்டு பாரிசமாய் வரிசையாய் நின்றுகொண்டார்கள் அந்தவழியே துரையவர்கள் வரச்சே பார்த்து இவர்கள் யாரென்று கேட்டார்கள். அதன்பேரிலே இந்த வயணமெல்லாஞ் சொன்னோம். அனுலவர்களெல்லாருக் கும் விடுதி அமைத்துவித்து, படி பந்தலை விசாரிப்பும் படி சனம் 1-க்கு நித்தம் ஒரு பணம் விழுக்காடுபடி கொடுக்கச்சொல்லு. இனிமேலவர்களுக்குச் சம்பளம் நிர்ணயம்பண்ண வேண்டிய தற்கும் அவர்கள் எசமானுக்கும் வெகுமான மனுப்புவிக்க வேண்டியதற்கும் யோசனை பண்ணிக்கொண்டு நாளைக்குச் சொல்லுகிறோமென்று சொன்னார்கள். அந்த மட்டிலே வேட்டவலத்துப் பண்டாரத்தார் ராணுவங்களுக்குக் கெவு னிக்கு வெளியே நம்முடைய தோட்டத்திலே விடுதி விட்டுப் போயிருக்கச்சொல்லி அனுப்பிவிட்டோம். அவர்களு மனுப்பு வித்துக்கொண்டு எழு மணிக்கு அவரவர் விடுதிக்குப் போனார்கள்,

இற்றைநாள் சாயங்காலம் தென்னண்டையாய் ஒரு கப்பல் ஓடிவருகிறதைக்கண்டு அந்தக் கப்பலும் இங்கிலீசுக் கொடி போட்டுத்தானிருந்தது. அந்தக் கப்பல் உசங்தோடி வருகிறது. வந்து வீராம்பட்டணத்துத் துறையிலே வைத்துப் பிடித்தான்.

இற்றைநாள் தேவனும்பட்டணத்திலே நடந்த சமாசாரம் விசாரித்துக்கொண்டு வரத்தக்கதாக வேவுக்காரரை, ஆறு பேர் பிராமணரைப் பயணம்பண்ணி ஆறு பேருக்கும் இருபது ரூபாய்க் கொடுத்து அனுப்புவித்தோம். துரையவர்களிருந்துகொண்டு தேவனும்பட்டணத்துக் கபுறு அடிக்கடி வரவேணுமென்றும், அதற்கேத்த பேரை, கெட்டிக்காரரை அனுப்புவித்துக் கபுறு தெரிந்துகொண்டு சொல்லென்று சொன்னார்கள். இதல்லாமல் பின்னையுந் துரையவர்கள் சொன்னதென்னவென்றால்: பார்த்தாயா ரங்கப்பா, நாம் பண்ணின பிரயத்தனம் என்ன! நாம் நடப்பித்த காரியமென்ன! கொத்தளங்களெல்லாம் பிடிபட்டுக் கோட்டை பிடிக்கப்போகிற சமயத்திலே இந்தக் கப்பல் வரவேணுமா! இனி இரண்டு மூன்று நாளைக்குமாத்திரம் இந்தக் கப்பல்கள் வராமலிருந்துதானால் சுளுவாசமாய்க் கோட்டையைக் பிடித்து வெள்ளைக்கொடி போட்டுவிடலாம்; அதனாலே எனக்கு ரொம்ப கீர்த்திவரும். அதுகளெல்லாம் வீணாய் நாம் பண்ணின பிரயத்தனமெல்லாம் விருதாவாய்ப் போய்விட்டதே பார்த்தாயா! என்று மனதிலே இருக்கிற துயரத்தை அடக்கக்கூடாபவிப்படியாக என்னுடனே சொன்னார்கள். அதற்கு நானிருந்துகொண்டு நீங்கள் பிரயத்தனம்பண்ணின காரியம் வீண்போகிறதில்லை. இப்போது இல்லாவிட்டாலும் இன்னமிரண்டு மாசம் பொறுத்தபிறகாகிலும் அந்தக் கோட்டை உம்முடைய வசமாகிறதற்குச் சந்தேகமில்லை. ஆனால் என் மனதிலேயிருக்கிறதாபந்தம் என்னவென்றால்: இப்போது இந்தக் கப்பல் வந்தபடியினாலே தேவனும்பட்டணத்துக் கோட்டையிலேயிருக்கிற சரக்கெல்லாம் ஏற்றிக்கொண்டு போய்விடுவார்களே, இந்தக் கப்பல் வருகிறதற்கு முன்னேதானால் கோட்டையைப் பிடித்துக்கொண்டவுடனே இருக்கிற சரக்கையெல்லாம் எடுத்துக்கொள்ளலாமே அது தப்பிப்போச்சுது என்கிற தாபந்தமேயல்லாமல் கோட்டையைப்பிடியாதே போனோமே யென்கிற தாபந்தம் இல்லை. அதேனென்றால் கோட்டை இரண்டு நாள் ஏறக்குறைய நம்முடைய கைவசமாகிறது சித்தம். அதற்கொன்றும் திருக்கில்லை. அந்தப்படி வேணுமென்றால் நான் சீட்டெழுதிக் காட்டுகிறேன். ஆனாலின்னஞ் சிறிது நாளைக்கு அவர்கள் வசமாயிருக்கத்தக்கதாகப் பிராப்தியிருக்கிறபடியினாலேதான், நாம் மூனறு நாலு தரம் பிரயத்தனம்பண்ணியுந் தட்டிப்போச்சுது. ஆனாலுமென்னமாயாச்சுது. மாயு மாதம் பிறந்துதானால்

அப்புறமந்தக் கோட்டையைக் கைவசம்பண்ணுகிறதுமல்லாமல் பின்னேயும் அநேகங் காரியம் எல்லாம் அனுகூலப்படத் தக்கதாக ஏவியமிருக்கிறது. அந்தப்படிக்கெப்படியும் கெட்டியாயிருக்கிறது. நீங்களிதை யோசனைபண்ணத் தேவையில்லையென்று சொன்னேன. அது மெய்தானென்று ஏற்றுக்கொண்டு நீ சொல்லுகிறதெல்லாம் சரிப்பட்டு வருகுது. ஆனாலிதொன்று மாத்திரம் சரிப்படாதே போச்சுதென்று சொன்னார். அதற்கு நான் சொன்னது: சென்னப்பட்டணம் பிடித்தவுடனே தேவனாம்பட்டணத்தைப் பிடித்துப்போடவேணும். அது இருக்கலாகாதென்று கூடியும் தலையாட்டுப்பாம்பாயிருக்குமென்றும் உடனே பிரயத்தனம் பண்ணினதுண்டானால் அனாயசமாய் எளிதத்திலே வாங்கிப்போடலாமென்று நானப்போதானே சொல்லிக்கொண்டு வந்தேனே, அப்போது பராமுகமாயிருந்தீர்களே, அப்படியிருந்தும் நம்முடைய கப்பலிருக்கச்சே தானே போய்ப் பிடிக்கவேணுமென்று சொன்னதற்கு அந்தக் கோட்டையைப் பிடிக்கிறதற்கு இந்தக் கப்பலையும் அஞ்சாங்கல் தலைச்சேரிக்கு அனுப்பிவிட்டீர்களென்றும், ஆனாலென்னமாயாச்சுது. இந்தமாதமும் பிறக்கிறமாதமும் போனால் அப்படியே கைவசம் படுகுதென்று சொன்னேன். நான் சொன்னதின் பேரிலே அவருக்குச் சற்றே மனது குதிர்பட்டு, அதுவுமெய்தானென்று சொல்லிப் பின்னேயும் வெகுநேரமட்டாய் அந்தப் பேச்சாய்தானே பேசிக்கொண்டிருந்தார்கள். அவர்கள் சொல்லுகிறதற்கெல்லாம் சவுத்திரவாய்த்தானே அவர் மனதுக்குச் சந்தோஷம் வரும்படியாகச் சொன்னோம். நாம் சொன்னபடிக்குத்தானே சுவாமி தயவு பண்ணி வைப்பாரென்று சொல்லிவிட்டு அனுப்புவித்துக்கொண்டு பாக்குக் கிடங்குக்கு வந்தேன்.

அப்போது இன்னமொரு வார்த்தைச் சொல்லியிருந்தேன்: உமக்கு அவ்ரீல் மீ பிறந்தால் அப்பால் நாளுக்குநா ளதிசெயமாய் நடக்கும். இதல்லாமல் ராசாவிடத்திலேயிருந்து உமக்கு நோபிலேசு முத்திரையும் வருமென்று சொன்னேன். அதெப்படி யென்றார். முன்னாலே ஒரு பிராமணன் சோசியம் சொல்லியிருந்தபடிக்கு அவ்ரீல் பிறந்தால் மாயு மாசத்துக்குள்ளே வருமென்று சொன்னதற்கு நகைத்துக்கொண்டு உள்ளே போனார். இது சமாசாரம் பின்னொன்று மதிசயமில்லை.



சிதானந்தம் பிரிண்டிங் ஒர்க்ஸ், புதுவை.

